நினைக்கவில்லை. த்யானம் செய்யவில்லை. ஆவாஹனமோ அர்ச்சனையோ செய்தறியேன். பாடவும், துதிக்கவும் வணங்கவும் உம் நாம ஜபம் செய்யவுமில்லை. பிழை பொறுத்தருள்வீர். உம்மைப் போன்ற கருணைக் கடலும், என்னைப் போன்ற பாபியும் இல்லை. உம்மிடம் தவறிழைத்தவனுக்கு நீரே புகலிடம். பூமியில் நடப்பவனுக்கு பூமி தானே ஆதாரம்? உமது சீடன் நான்.

## दकारादि- श्रीदत्ताष्टोत्तरशतनाम स्तोत्रम्

दत्तं वन्दे दशातीतं दयाब्धिं दहनं दमम्।
दक्षं दरघ्नं दस्युघ्नं दर्शं दर्पहरं दवम् ॥ ५४

दातारं दारुणं दांतं दास्यादं दानतोषणम्।
दानं दावप्रियं दावं दासत्रं दारवर्जितम्॥ ५५

दिक्पं दिवसपं दिक्स्थं दिव्ययोगं दिगम्बरम्।
दिव्यं दिष्टं दिनं दिश्यं दिव्याङ्गं दितिजार्चितम्॥ ५६

दीनपं दीधितिं दीप्तं दीर्घं दीपं च दीप्तगुम्।
दीनसेव्यं दीनबन्धुं दीक्षादं दीक्षितोत्तमम्॥ ५७

दुर्ज्ञेयं दुर्ग्रहं दुर्गं दुर्गेशं दुःखभंजनम्।
दुष्टघ्नं दुग्धपं दुःखं दुर्वासोऽग्र्यं दुरासदम्॥ ५८

दूतं दूतप्रियं दूष्यं दूष्यत्रं दूरदर्शिपम्।
दूरं दूरतमं दूर्वाभं दूराङ्गं च दूरगम्॥ ५९

देवार्च्यं देवपं देवं देयज्ञं देवतोत्तमम्।
देहज्ञं देहिनं देशं देशिकं देहिजीवनम्॥ ६०

दैन्यं दैन्यहरं दैवं दैन्यदं दैविकांतकम्।
दैत्यघ्नं दैवतं दैर्घ्यं दैवज्ञं दैहिकार्तिदम्॥ ६१

दोषघ्नं दोषदं दोषं दोषित्रं दोर्द्वयान्वितम्।
दोषज्ञं दोहपं दोषेड्बन्धुं दोर्ज्ञं च दोहदम्॥ ६२

दौरात्म्यघ्नं दौर्मनस्य-हरं दौर्भाग्यमोचनम्।
दौष्ट्यत्रं दौष्कुल्यदोष-हरं दौर्हृद्यभञ्जनम्॥ ६३

दण्डज्ञं दण्डिनं दण्डं दम्भघ्नं दम्भिशासनम्।
दन्त्यास्यं दन्तुरं दंशिघ्नं दण्ड्यज्ञं च दण्डदम्॥ ६४

अनन्तानन्तनामानि सन्ति तेऽनन्तविक्रम।
वेदोऽपि चकितो यत्र नुर्वाग्हृदूर का कथा॥ ६५

*தகாராதி தத்த அஷ்டோத்தர சதநாமாவளி*

ओं दत्ताय नमः । दशातीताय । दयाब्धये । दहनाय । दमाय । दक्षाय । दरघ्नाय । दस्युघ्नाय । दर्शाय । दर्पहराय । दवाय । दात्रे । दारुणाय । दान्ताय । दास्यादाय । दानतोषणाय । दानाय । दावप्रियाय । दावाय । दासत्राय नमः । २०

*தன்னைத் தானே அனஸூயைக்குத் தந்தவர், நிலைகளைத் தாண்டியவர், தயைக் கடல், எரிப்பவர், அடக்குபவர், ஆற்றல் மிக்கவர், பயம் நீக்குபவர், திருடரை அழிப்பவர், பித்ருக்களை மகிழ்விக்கிற அமாவாஸ்யையானவர். திமிரை அடக்குபவர், காடாயிருப்பவர், வள்ளல், கொடியவர், அடங்கியவர், அடிமைத் தனத்தைப் போக்குபவர், தானத்தால் மகிழ்பவர், நன்கொடையாயிருப்பவர். காட்டில் வசிக்க விரும்புபவர். காட்டுத் தீ, அடியாரைக் காப்பாற்றுபவர். (20).*

दारवर्जिताय नमः । दिक्पाय । दिवसपाय । दिक्स्थाय । दिव्ययोगाय । दिगम्बराय । दिव्याय । दिष्टाय । दिनाय । दिश्याय । दिव्याङ्गाय । दितिजार्चिताय । दीनपाय । दीधितये । दीप्ताय । दीर्घाय । दीपाय । दीप्तगवे । दीनसेव्याय । दीनबन्धवे नमः । ४०

மனைவியில்லாதவர், திசைகளைக் காப்பவர், ஸூர்யன், திக்குகளில் பூமியைத் தாங்குகிற யானைகளாயிருப்பவர். தெய்வத் தன்மை தரும் யோகமுறையானவர். திசைகளை ஆடையாகக் கொண்டவர். (ஆடையற்றவர்). தேவத் தன்மை பெற்றவர். காலவடிவினர், பகல் வடிவினர் திக்குகளில் தோன்றுபவர், தெய்வத் தன்மை மிக்க வடிவினர், அஸுரர்களால் வழிபடப் பெற்றவர். எளியவரைக் காப்பவர், ஒளிக் கதிர், ஒளிர்பவர், நீண்டவர், ஒளி தருபவர், ஒளிமிக்க நோக்குள்ளவர். எளியவரால் பணிவிடை செய்யத் தக்கவர். எளியவரின் உற்றார். (40).

दीक्षादाय नमः । दीक्षितोत्तमाय । दुर्ज्ञेयाय । दुर्ग्रहाय । दुर्गाय । दुर्गेशाय । दुःखभञ्जनाय । दुष्टघ्नाय । दुग्धपाय । दुःखाय । दुर्वासोऽग्र्याय । दुरासदाय । दूताय । दूतप्रियाय । दूष्याय । दूष्यत्राय । दूरदर्शिपाय । दूराय । दूरतमाय । दूर्वाभाय नमः । (६०)

தீக்ஷை தருபவர், தீக்ஷை பெற்றவரில் சிறந்தவர், அறிய வொண்ணாதவர், புரிந்துகொள்ள இயலாதவர். எளிதில் அடைய இயலாதவர். கோட்டையின் (துர்கையின்) தலைவர், துயர் நீக்குபவர், கெட்டவரை அழிப்பவர், பால் பருகுபவர், துயர் வடிவினர், துர்வாஸரின் அண்ணன், அணுக இயலாதவர். தேவர்களின் தூதுவர். தூதரின் அன்பர், ஆடை வீடுபோன்று மறைப்பவர், பாபிக்கும் உதவுபவர். அறிஞரைக் காப்பவர். எட்ட இருப்பவர், எளிதில் நெருங்கமுடியாதவர். அருகம்புல் வண்ணர். (60).

दूराज्ञाय नमः । दूरगाय । देवाच्र्याय । देवपाय । देवाय । देयज्ञाय । देवतोत्तमाय । देहज्ञाय । देहिने । देशाय । देशिकाय । देहिजीवनाय । दैन्याय । दैन्यहराय । दैवाय । दैन्यदाय । दैविकान्तकाय । दैत्यघ्नाय । दैवताय । दैर्घ्याय नमः । (८०)

தூரத்தில் காணப்படுபவர், தூரத்தில் உள்ளவர். தேவர்களால் வழிபடப் பெறுபவர். தேவர்களைக் காப்பவர். தேவர், நேரமறிந்து

*தருபவர். தேவர்களில் சிறந்தவர். உடற் கூறு அறிந்த க்ஷேத்ரஜ்ஞர், உடலுடன் உள்ளவர். (அவதரிப்பவர்), இடம், வழி காட்டுபவர், உயிரினத்தை வாழ்விப்பவர், எளிமை, ஏழ்மையைப் போக்குபவர், விதி, ஏழ்மையை நீக்குபவர், தாபத்தை நீக்குபவர், அஸுரர்களை அழிப்பவர், தேவதை, எட்டாதவர் (நெடியவர்) (60).*

**दैवज्ञाय नमः । दैहिकार्तिदाय । दोषघ्नाय । दोषदाय । दोषाय । दोषित्राय । दोर्द्वयान्विताय । दोषज्ञाय । दोहपाय । दोषेड्बन्धवे । दोर्ज्ञाय । दोहदाय । दौरात्म्यघ्नाय । दौर्मनस्यहराय । दौर्भाग्यमोचनाय । दौष्टचत्राय । दौष्कुल्यदोषहराय । दौर्हृद्य भञ्जनाय । दण्डज्ञाय । दण्डिने । दण्डाय । दम्भघ्नाय । दम्भिशासनाय । दन्त्यास्याय । दन्तुराय । दंशिघ्नाय । दण्डचज्ञाय । दण्डदाय नमः । (१०८)**

*விதியை அறிந்தவர், உடல் நோயகற்றுபவர், குறையகற்றுபவர். விதியாக நோய் தருபவர், குறை வடிவினர், பாபிகளிடமிருந்து காப்பாற்றுபவர். இருகைகள் உள்ளவர், குறையறிந்தவர், கூட்டத்தைக் காப்பவர், சந்த்ரனின் சகோதரன், கையெல்லையறிந்தவர், பசுக்களின் கறவையைத் தருபவர், முரட்டுத் தனத்தை நீக்குபவர், மனநோயகற்றுபவர், துர்பாக்கியத்தை நீக்குபவர், துஷ்டத் தனத்திலிருந்து காப்பவர், கெட்ட குலப் பிறப்புக் குறையகற்றுபவர். உள்ளக் கேட்டை நீக்குபவர், தண்டனை முறையறிந்தவர், தண்டமேந்தியவர், அடக்குபவர், வீண் பெருமை அகற்றுபவர், வீண்பெருமையுடையவரை அழிப்பவர், யானை முகத்தோன், கொடூரன், கடிக்கிற ப்ராணிகளை அழிப்பவர், தண்டனைக் குரியவரை அறிந்தவர். தண்டனை தருபவர். (108)*

இவ்வாறு கணக்கற்ற நாமங்கள் உமக்கு உள்ளன. வேதமும் இவ்விஷயத்தில் தயங்கும். மனிதனின் வாக்குக்கும் உள்ளத்திற்கும் எட்டாதவர் நீர்.

प्रार्थना

नामरूपगुणातीत भेदसङ्गविवर्जित ।
एक एवाद्वितीयोऽसि परमात्मन् हि नाकवत् ।। ६६

नामरूपगुणा भेदा मायासक्तिरनेकता ।
कल्पिता स्थूलधीभिस्ते महाकाशादिवद्विभो ।। ६७

बहुरूपाप्रमेया ते मायैषा जगदीश्वर ।
मन्यते मेऽहमित्यस्या रममाणो गुणेष्वसौ ।। ६८

कारणं त्विदमेवात्र जगद्विपरिवर्तने ।
येषां नाव्यक्तगम्योऽसि त्वमेव परमा गतिः ।। ६९

आसत्यलोका लोकास्ते पुनरावर्तिनोऽक्षर ।
तस्मात्त एव धन्याः स्युर्गृहीतं धाम यैस्तु ते ।। ७०

नानुमानेन ते धाम ग्रहीतुं शक्यते ह्यतः ।
मृग्योऽसि पुरुषेणैव बुद्ध्यादिगुणहेतुभिः ।। ७१

पुंस्त्वेऽप्यर्क इवान्धानां गोकल्पानामतीन्द्रिय ।
स्वप्नेऽपि नैव ते वार्ता पुनः प्रत्यक्षता कुतः ।। ७२

प्रेष्ठत्वद्भक्तसंयोग-विवेकामलदृष्टिभिः ।
साङ्ख्ययोगपरैर्धीरैः क्रमात्ते धाम गम्यते ।। ७३

तस्माद्दत्तं नृजन्मेदं त्वया दिष्ट्याऽमृतक्षमम् ।
सद्दृष्टिदानाद्भगवंस्तत्साफल्यं कुरु प्रभो ।। ७४

***ப்ரார்த்தனை-*** நாமங்களுக்கும், குணங்களுக்கும் அப்பாற்பட்டவரே ! வேற்றுமையும் ஒட்டுதலுமற்றவரே ! நீர் ஒருவரே ஆகாயம் போல் இரண்டாவதற்றவராக உள்ளீர். பரமாத்மாவே ! நாமமும், ரூபமும், குணங்களும் மாயையால் உம்மிடம் தோன்றுகின்றன. ஸ்தூல அறிவுள்ளவர் ஆகாசத்தை

குடத்தில் உள்ள வெளி என்றவாறு பிரித்துக் காண்கின்றனர். உமது இந்த மாயை பல வடிவங்கள் கொண்டது. சிறு சிறு தன்மைகளில் பொழுது போக்குபவன் 'எனது' 'நான்' எனக் காண்கிருன். உலகம் இயங்க இது பயன்படுகிறது. வெளிப்படையாகப் புலப்படாத நீர் தான் அடைய வேண்டிய கடைசி நிலே. பிரும்ம லோகம் வரை எல்லாம் மறைந்து பின் தோன்றி வாழ்பவையே. உம் நிலே யறிந்தவர் மட்டுமே பாக்யசாலிகள். உம் நிலே ஊகத்தால் உணர இயலாதது. நீர் அறிவால் ஆராய்ந்து தேடத்தக்கவர். அவ்வாறு தேடுபவனும் உணர்வால் பசுவே. கனவிலும் உம்மைக் காண இயலாது. நேரில் காண்பது எப்படி? உமக்கு மிகப் ப்ரியமான உம் சிறந்த பக்தர்களுடன் இணேதல், பகுத்தாராய்வு, அப்பழுக்கற்ற நோக்கம், ஸாங்க்ய யோக சாஸ்த்ர அறிவு, முழு அறிவாய்ந்த முயற்சி இவற்ருல் மட்டுமே உம் நிலே உணர முடியும். நீர் அளித்த இப்பிறவி தற்செயலாக அமைந்தது. மேன்மை தரவல்லது. உமது நற்பார்வையால் பயனுள்ளதாகச் செய்வீர். (74)

त्वत्प्रेमभक्त्यैव सदा मदात्मा धिया धियं दृष्टिमपीश दृष्ट्या।
अङ्गैः सदाङ्गानि दृढं दयाब्धे हरे निबध्नात्विति मेस्ति याच्ञा॥ ७५

पादौ त्वदीयालयतीर्थयात्राविहारिणावर्चनतत्परौ मे।
करौ रसज्ञापि भवत्वजस्रं सत्त्वत्कथोद्घातरसज्ञतोत्का॥ ७६

त्वत्पादपद्मच्युतपुष्पगन्धं नासा भजत्वक्षियुगं गुणात्मन्।
त्वन्मूर्तिमासेचनकां श्रुती मे श्राव्यास्त्वदीया भगवन्कथाश्च॥ ७७

त्वदीयभक्ताङ्घ्र्यमलाब्जपूतां धूलिं मदङ्गानि सदा वहन्तु।
मनस्तुरङ्गो निवसत्वजस्रं त्वय्येव दीपोऽङ्ग यथा निवाते॥ ७८

शिरो नमत्वीश्वर तेऽङ्घ्रिपद्मं देहः सदाऽऽलिङ्गयतु त्वदर्चाम्।
एष त्वदीयैव तनुस्त्वमेव सम्बन्धिनो मे नहि केऽद्वितीय॥ ७९

கருணேக் கடலே! ஹரே! உம்மிடம் அன்பும், பக்தியும் கொண்டு உம்மோடு ஆத்மாவும் அறிவோடு அறிவும் கண்ணோடு கண்ணும் அவயவங்களோடு அவயவங்களும், திடமாக

இணையுமாறு வேண்டுகிறேன். உமது ஆலயங்களையும், புண்ய தீர்த்தங்களையும் கண்டுவருவதில் கால்களும், வழிபடுவதில் கைகளும் உமது கதை கூறுவதில் வாக்கும் உமது திருவடித் தாமரைகளை முகர்வதில் மூக்கும், காண்பதில் கண்களும் உமது பெருமையைக் கேட்பதில் காதுகளும், உமது திருவடித் தூசைப் பூசுவதில் உடற் பகுதிகளும் முனையட்டும். மனமாகிற குதிரை, காற்றில்லாத இடத்தில் உள்ள தீபம் போல் அசையா திருக்கட்டும். தலை உமது திருவடிகளை வணங்கட்டும். உமது விக்ரஹத்தை உடல் கட்டியணைக்கட்டும். இது உமது உடல்; நீரே எனது உற்றார் உறவினர். (79)

नूनं भवानृषिर्नैव न वर्णाश्रमलिङ्गभाक् ।
निर्मितं भवतैवेदं विश्वं स्वांशांशतोऽखिलम् ।। ८०

न जानन्ति भवन्मायामोहिता दिव्यमुत्तमम् ।
भवद्धामात एवैते भ्रमन्त्यसुरभावगाः ।। ८१

कर्ता भर्तासि हर्ता त्वं प्रत्यक्षं तत्त्वमस्यपि ।
भो सर्वं खल्विदं ब्रह्म त्वमस्यात्मासि केवलम् ।। ८२

त्वदुदेति रमत्येतद्विश्वं त्वय्येव लीयते ।
अष्टमूर्तिभिराभिस्त्वमाभासीव जगन्मयः ।। ८३

दिक्पाला लोकपालाश्च श्रूयते दृश्यतेऽखिलम् ।
चराचरं जगल्लोका विष्णो तेऽवयवा अमी ।। ८४

निगूढतत्त्व ते ज्ञातं यत्किञ्चिल्लोकदुर्ग्रहम् ।
चेष्टितं ते प्रसादोऽयं प्राक्पुण्यैर्मय्युपस्थितः ।। ८५

सुखमैन्द्रियकं क्वापि न कांक्षे ते पदाश्रितः ।
नाकादीन्न प्रशंसामि नैव निन्दामि नारकान् ।। ८६

यथेच्छं क्वापि मां कर्म-योगात्स्थापय विश्वभृत् ।
मां यत्र क्वापि ते भक्तिर्न जहात्विति काङ्क्षितम् ।। ८७

स्तुवन्तु निन्दन्त्वपि ताडयन्तु मां पूजयन्त्वत्र जना न वापि ।
देहः पतत्वद्य युगान्तरे वा न किञ्चिदिष्टं न च मेऽप्यनिष्टम् ।।

हृद्ध्यात्मेन्द्रियवाक्कायैः सदा प्रकृतिभावतः ।
यद्यत्करोम्यर्पयामि परात्मन्दत्त सर्वं ते ।। ८९

*நீர் முனிவரல்ல. நான்கு வர்ணங்களைச் சார்ந்தவரல்ல. உம்மிடமிருந்து நீரே இவ்வுலகை உருப்பெறச் செய்தீர். உமது மாயையால் மயங்கியவர் உம்மை உணராமல் அஸுரத் தன்மையுடன் பழகுகிறார்கள். செயலாற்றுபவரும், தாங்குபவரும் பறிப்பவரும் ஆதார தத்துவமும் நீரே. நீரே பரம் பொருள். ஆத்மா. உம்மிடம் தோன்றிய உலகம் உம்மிடமே வாழ்ந்து உம்மிடம் மறைகிறது. பஞ்ச பூதங்களும் ஸூர்ய சந்த்ரர்களும் ஜீவனும் உமது வடிவங்கள். நீரே உலகம். திக்பாலகர்கள், ப்ரஹ்மா முதலானோர், என வேதம் முதலியவற்றால் உணரப் பெற்றவர் அனைவரும் உம் உடற் பகுதிகளே. உம்மை உம் அருளால் சிறிதுணர்ந்தது என் முன் புண்யங்களால் நேர்ந்தது. இந்த்ரிய இன்பத்தையோ ஸ்வர்க்கம் முதலியவற்றையோ புகழவும், நரக வாசிகளை இகழவும் மாட்டேன். உம் விருப்பப்படி ஏதோ ஒரு கர்ம யோகமுறையில் என்னை ஈடுபடுத்துவீர். உம்மிடம் பக்தி அகலாதிருப்பதே என் விருப்பம். என்னை மற்றவர் துதிக்கட்டும், நிந்திக்கட்டும், அடிக்கட்டும், மதிக்கட்டும். உடல் இப்போதே விழட்டும். நீண்டு வாழட்டும். இதில் எனது விருப்பமோ, வெறுப்போ இல்லை. தத்த பகவானே ! உள்ளத்தாலும் இந்த்ரியங்களாலும், வாக்காலும், உடலாலும் இயல்பாகவோ, செயற்கையாகவோ நான் செய்வதனைத்தையும் உம்மிடம் அர்ப்பணம் செய்கிறேன். (89)*

लीलात्मना योऽत्रिगृहेऽवतीर्णो दत्ताख्य उन्मत्तपिशाचवद्यः ।
बालो युवा क्वापि जरन् जटाभृत् कचिदृषिर्व्यक्तपरीक्षितश्च ।।९०

त्यागी सुभोगी कचिदस्ति सङ्गी योगी सुवासाः कचिदस्ति नग्नः ।
तुष्टः कृशः पुष्ट इह कचिद्यो दण्डी च भिक्षुः कचिदस्ति वर्णी ।। ९१

गृही वनी वर्णविरुद्धचेष्टः कचिच्च वर्णाश्रमधर्मयुक्तः ।
इत्यादयो यस्य विचित्रचेष्टा देवर्षिहृद्वागयनं व्यतीताः ।। ९२

यो भक्तरक्षाक्षण एव यस्य वै सेवा स्मृतिर्भोज्यनिवेदनं धिया।
पूजाफलं योऽर्पयतीह दुर्लभं भक्तस्मृतौ संनिधिकृत्क्षणे क्षणे ।। ९३

அத்திரியின் வீட்டில் லீலையாகத் தத்தராகத் தோன்றினீர். பித்தனாக, பிசாசாக, பாலனாக, வாலிபனாக, முதியவராக, கிழவராக, சடை தரித்த ருஷியாக, பலரால் வெளிப்படையாக ஆராயப்பட்டவராக, த்யாகியாக, போகியாக, பற்றுபவராக, யோகியாக, அழகிய ஆடையுடுத்தியவராக, ஆடையற்றவராக, நிறைந்தவராக, இளைத்தவராக, புஷ்டிமிக்கவராக, தண்டமேந்தி பிக்ஷுவாக, ப்ரஹ்மசாரியாக, இல்லானாக, வானப் ப்ரஸ்தராக, வர்ண நியமங்களுக்கு மீறியவராக, அவற்றிற்குக் கட்டுப்பட்டவராக, இப்படி வியக்கத்தக்கவாறு மாறுபட்ட தோற்றங்கள் தேவராலும், ருஷிகளாலும் கண்டு கொள்ள இயலாதுள்ளன. தன் பக்தரைக் காப்பாற்றுவதில் உற்சாகம், தன்னை நினைப்பதே வழிபாடு, அவனவன் தான் உண்பதை, அவரிடம் காட்டுவதே நிவேதனம், எனக் கொண்டு வழிபாட்டின் பயனைத் தந்து பக்தன் நினைத்ததும் தோன்றுவதும் உமது தனிச் சிறப்பு (93).

यस्यास्ति माहुरे निद्रा निवासः सह्यपर्वते।
भागीरथ्यां सदा स्नानं ध्यानं गन्धर्वपत्तने ।। ९४

कुरुक्षेत्रे चाचमनं धूतपापेश्वरे तथा।
विभूतिधारणं संध्या करहाटे श्रियः पुरे ।। ९५

भिक्षा विट्ठलपुर्यस्य सुगन्धिद्रव्यधारणम्।
भुक्तिः सारपुरे सायं-सन्ध्या पश्चिमसागरे ।। ९६

स एष भगवान्दत्तः सदा वसतु मे हृदि।
हृद्धीन्द्रियादिव्यापारे सदा तत्स्मृतिरस्तु मे ।। ९७

पादादि मूर्धपर्यन्तमेतद्वै भौतिकं वपुः ।
परिरक्षतु विश्वात्मा सदा सर्वत्र सर्वतः ।। ९८

மாஹூரில் தூக்கம், ஸஹ்ய மலையில் வாசம், கங்கையில் ஸ்நானம், கந்தர்வ பத்தனத்தில் த்யானம், குருக்ஷேத்ரத்தில் ஆசமனம், தூதபாபேச்வரத்தில் விபூதி இடுதல், கரஹாடத்தில் ஸந்தியாவந்தனம், ஸ்ரீபுரத்தில் (கரவீரத்தில்) பிக்ஷை, விட்டலபுரியில் சந்தனம் முதலியதன் பூச்சு, ஸாரபுரத்தில் (பாஞ்சாலேச்வரத்தில்) உண்பது, மேற்குக் கடலில் ஸாயங்கால ஸந்த்யாவந்தனம், என்று அலைபவர் என் உள்ளத்தில் தங்கட்டும். உலகமே உருவான அவர் எங்கும் எப்போதும் என் கால் முதல் தலைவரையான பூத உடலைக் காக்கட்டும். (98)

अपाणिपादो जवनो ग्रहीता पश्यत्यदृग्योपि शृणोत्यकर्णः ।
यो वेत्ति वेद्यं न हि यस्य वेत्ता सोऽग्र्यः प्रधानः पुरुषो हि दत्तः ।। ९९

आधारभूतः स्थिरजङ्गमानां क्षमास्वरूपस्थितिरस्ति नित्यम् ।
आप्यायते यो जगदप्स्वरूपी सर्वाघहृत्स्थास्नुचरिष्णु जीवः ।। १००

वैश्वानरात्माखिलदेहसंस्थः पचत्यसौ प्राणसखः सदान्नम् ।
यो भास्वदात्माखिलकर्मसाक्षी विश्वं सदा चेतयते स्वभासा ।। १०१

योऽब्जो रसात्मा सकलौषधीर्वै पुष्णाति सन्तापहरोऽखिलेड्यः ।
क्षेत्रेषु भूत्वा दशधाखिलेषु प्राणात्मको यः पवतेऽखिलात्मा ।। १०२

आकाशरूपोऽखिलगोऽपि सौक्ष्म्याद्योऽभेदसङ्गः किल शब्दसंस्थः ।
भुनक्ति चोत्क्रामति तिष्ठतेऽपि मूढा विदुर्यं न सदात्मरूपम् ।। १०३
यः सर्वहृत्स्थोऽस्य यतः स्मृतिर्विद् वेदान्तकृद्योऽपि च वेदवेद्यः ।
समौ यदंशौ सयुजौ सुपर्णौ वृक्षाश्रितौ भुक्त्यवलोकनोत्कौ ।। १०४

स त्वं परात्मा पुरुषोत्तम श्रुति-ख्यातः समाविश्य जगत्त्रयं सदा ।
ईशाव्ययानन्त बिभर्षि दत्त ते पादाब्जयुग्माय नमोऽस्तु सर्वदा ।। १०५

கால்களும், கைகளுமற்றவர். ஆனால் வேகமாகச் செல்வார். பிடித்துக் கொள்வார். கண்ணற்றவர் பார்ப்பார். காதற்றவர் கேட்பார். அறியத் தக்கதை அறிவார். அவரை எவரும் அறிய

இயலாது. அந்த தத்தரே முக்ய புருஷர். (பிரக்ருதியும்) புருஷருமாவர். அசையும் பொருளுக்கும், அசையாப் பொருளுக்கும் ஆதாரம். பூமியாகித் தாங்குபவர், நீராகி நிரப்புபவர். எல்லாப் பாபங்களையும் போக்குபவர். நிலைத்ததும் நிலையாததுமானவர். அனைவரின் உடலில் வைச்வாநரராகி உண்டதைப் பக்குவம் செய்கிறார். ப்ராணனுக்கு நண்பர். ஸூர்யனாகி உயிரினம் செய்வதனைத்தையும் கண்காணிப்பவர். தன் ஒளியால் செயலில் தூண்டுபவர். சந்த்ரனாகி நீரின் குணமான ரஸமாகி பயிர்களை ஊட்டம் பெறச் செய்து தாபத்தைக் குறைத்து அனைவராலும் துதிக்கப் பெறுபவர். இந்த க்ஷேத்ரமெனும் உடற் கூட்டில், ப்ராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன், நாகன், கூர்மன், க்ருகரன், தேவ தத்தன், தனஞ்ஜயன் என்ற வாயுக்களாகப் பரவி உயிர் வாழச் செய்பவர். ஆகாயமாகி ஒலியில் நின்று எங்கும் எதிலும் ஸூக்ஷ்மமாகப் பரவி, வேற்றுமையும், ஒட்டுதலுமின்றி இருப்பவர். ஜீவனாகி வாழவைத்தும் பிரிந்து கிடத்தியும் பிறர் உணராவண்ணம் இருப்பவர். அனைவரது உள்ளத்திலும் துலங்குபவர். இவரிடமிருந்தே நினைவும், உணர்வும் உண்டாகின்றன. வேத முடிவினை வாழ்முறையில் கொணர்ந்தவர். வேதத்தால் உணரப் பெறுபவர். ஒரே மரத்தில் ஒரே தோற்றமுள்ள இரு பறவைகள். ஒன்று பெற்றதை அனுபவிக்கும். மற்றது இதனைச் சாட்சியாகக் காணும். அந்த ஜீவாத்மாவும், பரமாத்மாவுமானவர். மூவுலகிலும் பரவி நிற்பவர். அத்தகைய ஈசனே ! விலகாதவரே ! முடிவற்றவரே ! தத்தரே ! உமது திருவடிகளில் எப்போதும் வணங்குகிறேன். (105).

वज्राङ्कुशध्वजाब्जाङ्क-युग्रक्ताब्जाभपत्तलः ।
गूढगुल्फः कूर्मपृष्ठोल्लसत्पादोपरिस्थलः ॥ १०६

जानुपूर्वकजङ्घश्च विशालजघनस्थलः ।
पृथुश्रोणिश्च काकुत्स्थश्चारुनाभिर्दलोदरः ॥ १०७

अररोरा मांसलांसो युगव्यायतबाहुकः ।
सुचिह्नचिह्नितकरः कम्बुकण्ठः स्मिताननः ॥ १०८

स्नैग्ध्यधावल्ययुक्ताक्षश्चलत्-पिङ्गजटाधरः ।
चन्द्रकान्तिः प्रभुः कृष्ण-भ्रूःश्मश्रुकनीनिकः ।। १०९

भावशुद्धद्विजाकीर्ण-स्वास्याब्जोऽभीवरप्रदः ।
दत्तात्रेयः स भगवान्सदा वसतु मे हृदि ।। ११०

कलौ द्विराविरासीत्स दीनान्त्रातुं जनान्कलौ ।
सद्धर्मगुप्त्यै श्रीपाद-नरहर्यभिधानतः ।। १११

उड्डीयन्ते यथाशक्ति यथोच्चावचपक्षिणः ।
अनन्तेऽनन्तलीलां तन्न्यायाद्वक्ष्ये यथामति ।। ११२

*इति पूर्वपीठिका*

*உள்ளங்காலில் வஜ்ரம், அங்குசம், கொடி, தாமரை முதலிய ரேகைகளுள்ள திருவடிகளுள்ளவர். மறைந்த கணுக்காலுள்ளவர். ஆமை முதுகு போன்ற புறங்காலுள்ளவர். கணைக்காலின் முன் நிற்கிற முழங்கால் மூட்டுள்ளவர். விரிவு மிக்க இடுப்பும், பெரும் புட்டமு முள்ளவர். அழகிய தொப்புள், இலை போன்று வயிறு, கதவு போன்ற மார்பு, சதைப் பற்றுள்ள தோள். நீண்ட கைகள், நல்ல ரேகைகள் உள்ள உள்ளங்கை, சங்கு போன்ற கழுத்து, புன் சிரிப்புள்ள முகம், நெய்ப்பும் (அன்பும்) பளபளப்பும் மிக்க கண்கள், சிவந்த சடை, சந்த்ரனைப் போன்ற மேனி வண்ணம். கருத்த புருவமும் மார்பும் மீசையும் கடைக் கண்ணும், இயல்பாகவே தூயப் பற்கள், அழகிய முகம், அபயமும் வரமும் அளிக்கின்ற தோற்றம், இந்த வடிவழகு கொண்ட தத்தர் என் இதயத்தில் எப்போதும் வசிக்கட்டும். இவரே கலியில் ஸ்ரீ பாதர் நரஸிம்ஹர் என்ற பெயர்களுடன் எளியவர்களைக் காக்கவும், நல்லறத்தைக் காக்கவும் அவதரித்தார். பறவைகள் தம்மால் இயன்ற அளவு மேலும், கீழும் பறப்பது போல் அனந்தரின் கணக்கற்ற லீலைகளை சுய அறிவுக் கேற்பக் கூறுவேன். (112)*

**முன்னுரை முற்றிற்று.**



# श्रीगुरुचरितम्

# ஸ்ரீ குருசரிதம்

## प्रथमोऽध्यायः

नौम्युदेति यदज्ञानाज्जगद्रज्ज्वहिवत्पुनः ।
यत्तत्वं मीलति ज्ञानां तं चिदानन्दसद्गुरुम् ।। १

### *அத்தியாயம்—1*

*பேருணர்வும் பேரானந்தமுமான ஸத்குருவைத் துதிக்கிறேன். இவரை உணராததால் கயிற்றில் பாம்பு வெளிப்படுவது போல் உலகம் வெளிப்படுகிறது. இவரை உணர்ந்ததும் இவருள் உலகம் மறைகிறது. (1)*

बोद्धुं भूत्वाऽत्रिपुत्रः स्वपदरसपरान्दिव्ययोगेन बालान्
दत्ताख्यः कार्तवीर्यं यदुमपि च समान्स्वाश्रितानुद्दधार ।
भूयोऽन्यान् श्रीपदाख्यः पुनरपि नृहरिः संज्ञया स्वीयभक्तान्
कृष्णाभीमातटस्थो जयति परगुरुः स्मर्तृगाम्येष दत्तः ।। २

*தன் நிலையை உணர்த்துவதற்கென அத்திரியின் புதல்வராகத் தோன்றிய தத்தர் என்ற பெருமான் தன் திருவடிகளின் இனிமையை உணர்ந்த தன்னை அண்டிய கார்த்தவீர்ய அர்ஜுனன், யது மஹாராஜன் முதலிய சிறுவர்களை திவ்ய யோகமுறையில் மேனிலை பெறச் செய்தார். மறுபடியும் ஸ்ரீபாதராகவும், நரஸிம்ஹராகவும் தோன்றித் தமது பக்தர்களை மேனிலை பெறச் செய்தார். க்ருஷ்ணா - பீமா நதிக் கரைகளில் அமர்ந்த பரம குரு தத்தர் நினைத்தவுடன் முன் தோன்றி அருள் புரிபவராக விளங்குகிறார். (2)*

भात्यनेकवदेकं सद्धीभेदादेकरूपया ।
विदास्यैक्यं परं ब्रह्म तत्सत्यं दत्तसंज्ञितम् ।। ३

ஒன்றே அறிவின் குழப்பத்தால் பலவாகத் தோன்றுகிறது. இது ஒன்றே என்று உணர்வதால் ஒன்றுகவே உணரப் பெறுகிறது. அதுவே ஸத்யமான தத்தர் என்ற பரம் பொருள். (3)

**योऽजोऽक्रियोऽस्पृहोऽप्येको बहु स्यामिति तृष्णया।**
**प्रकृत्या गुणमय्येदं ततानेशो जगत्प्रभुः ॥ ४**

பிறப்பற்றவரும், செயலற்றவரும் எந்த இச்சையுமின்றித் தனித்திருந்தவர், ஏகனுன நான் பலவாக ஆவேன் என்ற ஸங்கல்பத்துடன், தனது இயல்பான மாயையால் வேறு மூலப் பொருளின் உதவியின்றி இவ்வுலகைப் படைத்து அதன் உட்புகுந்து உலகின் ஆளுனராக ஆனுர். (4)

**आब्रह्मस्तम्बपर्यन्तं देहबुद्धीन्द्रियात्मकम्।**
**सृष्टं चराचरं तत्र संवित्पात्रं नरोत्तमः ॥ ५**

உடல் புத்தி இந்த்ரியம் என்று விரிந்து, ப்ரஹ்மா முதல் புல் பூண்டுவரை அசைவதும் அசையாததுமான உலகத்தைப் படைத்தார். அதில் உணர்வைப் பெற்றவன் மனிதன். (5)

**इन्द्रियार्थे स्थितौ रागद्वेषौ येन जितौ स तु।**
**दैवीसंपल्लभेन्मोक्षं तदर्थं संभवत्यजः ॥ ६**

இந்த்ரியங்களால் புலப்படுகிற பொருளில் நாட்டத்தையும், நாட்டமின்மையையும் வெல்பவனே தெய்வீகச் செல்வத்தையும், முக்தியையும் பெறமுடியும். அதற்கு உதவவே பிறப்பற்ற ஈசன் அவதரிக்கிருர். (6)

**गाढं प्रियोऽस्य भगवांस्तस्यायमपि तादृशः।**
**गुप्त्या अवतरत्यस्य लीलाधाम्नाप्यजोऽव्ययः ॥ ७**

இந்த ஜ்ஞானியிடம் ஈசனும், ஈசனிடம் ஜ்ஞானியும் பேரன்பு கொள்கின்றனர். இந்த ஜ்ஞானியைக் காக்கவே லீலையாக ஏற்ற வடிவத்துடன் தோற்றம் எதுவுமற்றவரும் எதனை விட்டும் நீங்காதவருமான ஈசன் தோன்றுகிருர். (7)

युगे युगेऽवतीर्यापि कार्यान्ते व्यसृजत्तनूः ।
एवं ब्राह्मेऽह्नि संप्राप्तो युगाष्टाविंशपर्ययः ।। ८

दारुणेऽस्मिन्कलौ प्राप्ते ज्ञात्वा स्वांशांशजोतयः ।
दयोना इत्याविरासीद्दत्तस्तु भगवान्स्वयम् ।। ९

स कृष्णामरजातीर-विहारी लोकपावनीः।
भिक्ष्वात्मनाऽत्र सल्लीलाः कृत्वाऽदृश्योऽस्ति तत्र हि ।। १०

*இவ்வாறு ஒவ்வொரு யுகத்திலும் அவதரித்துத் தர்மத்தையும், தன் பக்தர்களையும் காப்பாற்றிய பின் தான் லீலையாக எடுத்த உருவத்தை விலக்கிக் கொள்கிறார். ப்ரஹ்மாவின் பகல் பொழுதில் இருபத்தெட்டாவது சதுர்யுகத்தில் கொடுமைமிக்க கலியுகத்தில் தன் அம்சமாகத் தோன்றிய தேவர்களும் மற்றவையும் காட்டிய அசட்டையால் மக்கள் துன்புறும்போது தத்த பகவான் தானே தோன்றினார். க்ருஷ்ணா-அமரஜா நதிக் கரைகளில் சுற்றிவந்த அவர் பிக்ஷுவாக உலகைத் தூயதாக்கத்தக்க லீலை களைப்புரிந்து அங்கேயே மறைந்துள்ளார். (10)*

ओङ्कारोच्चारणं जातमात्रेण नयनं तथा ।
स्वर्णतामयसोऽभ्यासमृतेऽपि ब्रह्मपाठनम् ।। ११

तत्त्वोपदेशनं पित्रोर्बाल्ये तीर्थाटनं तथा ।
योगाख्यापनसंन्यास-वर्त्मसंस्थापनेऽन्यथा ।। १२

कथं भाव्यं द्राग्धरणं प्रतीपाचरणै रुजः ।
तथाऽवाचोऽपि विद्वत्ता-दानं स्राग्विप्रदुर्गतेः ।। १३

हरणं त्रिस्थलीयात्राचरणं मृतजीवनम् ।
वशागोदाहनं विश्व-रूपाविष्करणं यतौ ।। १४

विद्वद्गर्वापहरणं निन्द्यास्याद्वेदवाचनम् ।
विश्वस्ताया अवैधव्यदानं कर्मप्रकाशनम् ।। १५

जरदेधःपल्लवतां नयनं निष्कलस्त्रियै ।
सुप्रजस्त्वार्पणं कुष्ठ-हरणं दृष्टिमात्रतः ।। १६

क्षणेऽष्टग्रामगमनं छिन्नसस्यविवर्धनम् ।
इत्यादिकं कृतं दिव्यं करोति च करिष्यति ।। १७

*பிறந்தவுடனேயே ஓங்காரத்தை உச்சரித்தது, தொட்டவுடன் இரும்பைத் தங்கமாக்கியது, குருமுகமாகப் பயிலாமலேயே வேத மோதியது, பெற்றோருக்குத் தத்துவ உபதேசம் செய்தது, பால்யத்திலேயே புனிதத் தீர்த்த யாத்ரை செய்தது, யோக முறை வெளிப்படுத்தியது, துறவு பூண்டது, ப்ரயாகை, காசி, கயை சென்றது, இறந்தவனை உயிர்ப்பித்தது, மலட்டுப்பசுவிடம் பால் கறந்தது, விச்வரூபம்காட்டியது, அறிஞனின் செறுக்கை அடக்கியது, கீழ்மகனை வேதமோதச் செய்தல், தன்னை நம்பியவளின் விதவை நிலையை மாற்றியது, கடமையாக ஆற்ற வேண்டிய சடங்குகளை வெளியிட்டது, பட்டுப் போன மரத்தைத் துளிர்க்கச் செய்தது, மலடிக்கு நன்மகப் பேறு அளித்தது, பார்வையால் குஷ்டநோய் நீக்கியது நொடியில் எட்டுக் க்ராமங்களில் தோன்றியது, வெட்டப்பட்ட பயிரைத் துளிர்க்கச் செய்தது, இவ்வாறு லீலைகளைப் புரிந்தார். இனியும் புரிவார். (17)*

भपार्थिवरजोऽम्ब्वंश-गणकाः सन्तु कुत्रचित् ।
भूयोऽगणेयोरुगुणगुणान्गुणयितुं ह्यलम् ।। १८

लीलाप्रादुष्कृतगुणरूपोऽरूपोऽगुणोऽप्यरम् ।
श्रवःसृत्या प्रविश्यान्तर्भक्तस्याघं धुनोत्यजः ।। १९

तदेकनिष्ठः पूतात्मा जीवन्मुक्तो भवेत्ततः ।
निर्द्वन्द्वस्यारब्धभुजो देहः पततु वा न वा ।। २०

(तत्राज्ञानसमुत्पन्न-द्वन्द्वाभावः प्रवर्तते ।
प्रारब्धान्ते स यात्येव कैवल्यं पदमुत्तमम् ।।)
अयं हि ब्रह्मभूयास्ति-सत्पथो नाक्षिगोचरः ।
मोहान्धानामसत्सङ्ग-विवेकानां कुसंपदाम् ।। २१

कृतस्ववर्णाश्रमदृष्टकर्मा विद्वान् सदिष्टो गुरुदेवभक्तः ।
इहैव भुक्तिं च लभेत मुक्तिं संन्यासनेनैव पथा स योगी ।। २२

நக்ஷத்ரங்களையும் பூமியிலுள்ள தூசித்துகள்களையும் எண்ணுபவர் இருக்கலாம். எண்ண இயலாத தத்தரது குணக் குவியலை எண்ண இயலாது. லீலையால் வெளிப்படுத்துகிற குணச் சிறப்புகளையே வடிவமாகக் கொண்ட அவர் உருவமும் குணமுமற்றவராயினும் குணச் சிறப்புகளின் மூலம் காதுகள் வழியே உள்ளத்தினுட்புகுந்து, பாபத்தை நீக்குகிறார். அவரிடமே உள்ளத்தைப் பதித்தவன் தூய்மை பெற்று ஜீவன்முக்தனாகிறான். சுக துக்க வேற்றுமை காணாமல் பயன் கொடுக்க ஆரம்பித்த (பிராப்த) வினைப்பயனை அனுபவிப்பவனாகி உடல் இருந்தாலும் விழுந்தாலும் அறியாமையால் ஏற்படுகிற சுக துக்க உணர்வின்றி, ப்ராரப்த வினையின் இறுதியில் முக்தி பெறுகிறான். இந்தப் ப்ரஹ்ம நிலை, கெட்ட சேர்க்கையும் மதிக்கேடும் முறை தவறிச் சேமித்த செல்வமும் விளைவித்த மதிமயக்கத்தால் குருடானவருக்கு புரியாததொன்று. தன் வருணாச்ரம நிலைகளுக்கேற்ப கர்மங்களைப் புரிந்து நல்லோரிணக்கம் பெற்று குரு தேவரிடம் பக்தியுடன், யோக முறையில் ஆத்ம ஸாதனைக்காகத் துறவு பூண்டவன் முக்தி பெறுவான். (22).

एवं सुवृत्तं महिमानमीशितुः श्रुत्वास्य भीमामरजागमे ययौ ।
कश्चिद्भवभ्रष्टमनाः स्तुवन्गुरुं तप्तः शरण्यं श्रितकल्पशाखिनम् ।। २३

गणेशं शारदां नत्वा श्रीगुरुं नामधारकः ।
द्विजस्तुष्टाव घोरेऽत्र नृधाम्ना विश्रुतं हरिम् ।। २४

இந்த ஈசனின் பெருமையைக் கேட்டறிந்த ஒருவர் (ஸரஸ்வதீ பந்த் என்று பெயர் பெற்றவர். கங்காதரர் என்பவரின் புதல்வர். இங்கு பெயரளவில் கூட அபிமானத்தைத் தவிர்க்க நாமதாரகர் (பெயருள்ளவர் எனினும் பெயர் தெரியாதவர்) எனக் குறிப்பிடப் பெறுகிறார்). ஸம்ஸாரத்துயருற்றவராக - பீமா அமரஜா நதிக் கரையில் பாதுகை வடிவிலிருந்த குருவை நாடினார். அந்த குரு சரணடைந்தவருக்கு இதமளிப்பவர். அண்டியவரின்

விருப்பத்தை நிறைவுறச் செய்வதில் கற்பக விருக்ஷம். கணேசரையும் ஸரஸ்வதியையும் வணங்கி நரஸிம்மர் என்று புகழ் பெற்ற பாதுகையை அடைந்து துதித்தார். (தத்தர் ஸ்ரீபாதர் நரஸிம்ஹர் இவர்களைப் பாதுகைகளில் பக்தர்கள் வழிபடுவது வழக்கம்). 24.

सर्वज्ञ मां न जानीषे विश्वसाक्षिन्न चेक्षसे ।
विलापो न श्रुतो विष्णो मम श्रुत्वाऽप्युपेक्षसे ।। २५

चेज्ज्ञातेऽत्र क्व वैक्लव्यं कथं दैन्यं त्वयेक्षिते ।
श्रुते चेच्छुकुतोऽप्यर्हा त्वय्युपेक्षा दयानिधे ।। २६

सर्वदेवेश्वरोऽपि त्वं त्वं नोऽपि कुलदैवतम् ।
त्वां हित्वा कतमं याचे वेत्सीशन्त्वाऽपि वेत्सि माम् ।। २७

सर्वोऽपि वेत्ति भूपं न भूपः सर्वं तथोचितम् ।
अज्ञे तु त्वयि सर्वज्ञे कथं श्लाघ्यमिदं प्रभो ।। २८

नासेवकायादात्रेऽपि चेद्दास्यस्युचितं न तत् ।
सेवेच्छुः श्रीश किं दाता तद्वत्प्रत्युपकार्यपि ।। २९

ज्योतिर्द्योतमिहाब्दोम्बु सेवोनेऽर्पयति ध्रुवे ।
पदं विभीषणेऽदात्रोर्दत्तं मे देह्यतः प्रियम् ।। ३०

निधयस्तेऽनुगा दास्यः सिद्धयः श्रीस्तु किङ्करी ।
तत्ते किं भगवन्देयं किं कार्यं परिपूर्णं ते ।। ३१

எல்லாமறிந்தவரே ! உலகின் சாட்சியே ! என்னைப் புரிந்துகொள்ள மாட்டீரா ! பார்க்கமாட்டீரா ? எங்கும் பரவியவரே ! என் புலம்பல் காதுகளில் விழவில்லையா ? கேட்டும் அசட்டை செய்கிறீரா ? என்நிலையை நீர் உணர்ந்திருந்தால் என்னிடம் இந்தத் தளர்ச்சியும், இயலாமையும் எவ்வாறு வந்தது? காதில் விழுந்திருந்தால் துயரம் ஏன் வந்தது? தயையின் இருப்பிடமான உம்மிடம் அசட்டை ஏன் வந்தது? எல்லா

தேவர்களுக்கும் ஈசஞன நீர் எமக்கும் குல தெய்வம். உம்மை விட்டு வேறு எவரிடம் வேண்டுவேன்? உம்மை ஈசஞக அறிவேன். என்னை நீர் அறிவீர். எல்லோரும் அரசரை அறிவர். அரசன் எல்லாவற்றையும் அறியாதவரானதால் எல்லோரையும் அறிவதில்லை. எல்லாமறிந்த நீர் என்னை அறியாவிடில் அது பாராட்டத் தக்கதா? ஸேவை புரிந்தாலோ, எதனையாவது கொடுத்தாலோ நீர் அருள் புரிவதாயிருந்தால் அது உமக்கு ஏற்றதல்ல. அவ்வாறு அருள்பவர் தாழ்ந்தவராவார். எதனையும் எதிர் பார்க்காமல் ஸூர்யன் ஒளியையும், மேகம் நீரையும் தருவது போல் நீர் துருவனுக்கும், விபீஷணனுக்கும் எதனையும் எதிர்பார்க்காமல் நலம் வழங்கினீர். அதஞல் நான் விரும்புவதைத் தருவீர். ஒன்பது நிதிகளும் எட்டு ஸித்திகளும் உம்மை அண்டியவர்கள். லக்ஷ்மீ உமது ஏவலாள். இந்நிலையில் நான் உமக்கு எதனைத் தருவேன்? *(31)*

**स्वसेवककुलं भूमौ पालयन्ति नृपा अपि ।**
**कुतो मोपेक्षसे दीनं मत्पूर्वार्चित विश्वभृत् ।। ३२**

**देवेश मेऽपराधैश्चेदायास्यन्तर्विषादताम् ।**
**पत्ताडितार्भकैः किं नु प्रसू रुष्यति मानुषी ।। ३३**

**जीवनं पितरौ यत्र भिन्नावन्यतराच्छिशोः ।**
**त्वं तूभयं मे किं कार्यं निर्गुणे विश्वभृत्त्वयि ।। ३४**

**साहसं कुरु मेत्युक्त्वा यथा दारु भिनत्ति विः ।**
**तथा साहजिकैर्दोषैर्निन्दाम्यंहः करोम्यहम् ।। ३५**

பூர்ணரே ! அரசர்களும் தமது பணியாட்களை வாழவைக்கின்றனர். நான் உம்மை வழிபடாவிடினும் என் முன்ஞேர் வழிபட்டுள்ளனர். உலகைத் தாங்குகிற உமக்கு என்னிடம் ஏன் இந்தப் பராமுகம்? தேவர்களுக்கும் ஈசனே ! நான் புரிந்த பிழைகளால் உமக்கு வருத்தமெனில், மனிதத் தாய் தான் பெற்ற சிசு தன் கால்களால் உதைத்ததென அதனிடம் கோபிப்பாளா? அங்கு தாய் தந்தையர் இருவர். சிசுவிடமிருந்து

வேறுபட்டவர். சிசு தன்னைக்காட்டிலும் வேறுபட்ட அவ்விருவருள் எவரேனும் ஒருவரிடமிருந்து வாழ்வு பெறலாம். எனக்குத் தாயும், தந்தையும் நீரே ! என்னைக் காட்டிலும் வேறுபடாதவர். உலகைத் தாங்குபவரே பரிவற்றிருந்தால் என் செய்வேன்? ஸாஹஸச் செயல் புரியாதே எனக் கூறிக் கொண்டே மரங்கொத்திக் குருவி மரத்தைத் துளைக்கிறது. அது போன்று இயல்பாக நான் தவறு செய்கிறேன். அதற்காக என்னை நொந்து கொள்கிறேன். *(35)*

**आघे पुण्यवतः प्रोक्तं प्रायश्चित्तमवेक्ष्य माम् ।**
**आरात्पलायते भीत्या शार्दूलमिव शृङ्गिणि ।। ३६**

**मालिन्यदोषभीत्या तु माषराशेः पृथक्किमु ।**
**कार्यं जपो मदङ्गाघात्किं करोति पृथग्घरे ।। ३७**

**मादृक्पापो हरे नास्ति भवादृङ् नास्ति पापहा ।**
**पाह्यनन्याश्रयं दीनं त्यक्त्वौदासीन्यमीश माम् ।। ३८**

**द्रवन्त्यपि शिलाः श्रुत्वा मद्विलापं दयानिधे ।**
**कारुण्यं ते कुतो यातं म्रियमाणं न वेत्सि यत् ।। ३९**

**एवं विलाप्य मार्गेऽसौ गुरुध्यानैकतानहृत् ।**
**तस्थौ प्रायोपवेशेन दैवात्स्वप्नस्तदाभवत् ।। ४०।।**

**धेनुर्वत्सं यथाऽपैति भगवान् भक्तवत्सलः ।**
**प्राप्यावधूतवेषेण स्वप्नेऽमुं पर्यतोषयत् ।। ४१ ।।**

**।। इति श्रीगुरुचरिते चरितानुसन्धानं नाम प्रथमोऽध्यायः ।।**

*புண்ணியம் நிறையச் செய்து அற்ப பாபங்கள் புரிந்த பாபத்திற்காக விதிக்கப் பெற்ற கழுவாய் என்னைக் கண்டதும் சிறுத்தையைக் கண்ட பசுபோல் மிரண்டு ஓடுகிறது. அழுக்கு ஏறும் என்று பயந்து உளுந்துக் குவியலிருந்து தள்ளி நிற்பது போல, ஜபம் முதலியவையும் பாப மூட்டையான என்னிடமிருந்து தள்ளி*

நிற்கும், என்னைக் காட்டிலும் சிறந்த பாப இல்லை. உம்மைப் போன்று பாபத்தை நீக்குபவருமில்லை. என்னிடம் பராமுகத்தைக் கைவிட்டு வேறு பிடிப்பற்ற என்னைக் காப்பீர். தயா நிதியே ! என் புலம்பலைக் கேட்டுக் கல்லும் உருகும். உமக்கேன் பரிவில்லை? நான் சாகவிருப்பதை அறியீர் !'' இவ்வாறு வழி முழுவதும் குருவை நினைத்தவாறே புலம்பிச் சாகும்வரை உண்ணாவிரத மிருந்த நாமதாரகரது கனவில், கன்றை நோக்கி ஓடிவருகிற தாய்ப் பசுபோல், பக்தரிடம் அன்பு பூண்ட தத்த பகவான் அவதூதர் வேடத்தில் வந்து மகிழ்வித்தார். (41)



## अथ द्वितीयोऽध्यायः

तत उत्थाय नालोक्य स्वप्ने दृष्टं द्विजोऽभितः ।
ध्यात्वा व्रजन्ददर्शाग्रे दयार्द्रं योगिनं समम् ॥ १

अभिवाद्य स तं हर्षपुलकोद्गमशोभितः ।
प्रेमगद्गदया वाचा वक्तुं समुपचक्रमे ॥ २

माता पितोपदेष्टा भीहर्ता भर्ताऽपि मे भवान् ।
क्वायातोऽस्ति कुतो गन्ता दिष्ट्या मेऽद्याक्षिगोचरः ॥ ३

कालेऽनुकूले प्रतीपे ना स्वैः सद्भिश्च युज्यते ।
निःसङ्गस्य मुमूर्षोर्मे सर्व एवाद्य वै भवान् ॥ ४

नामधारकशर्माहं विप्रस्तप्तोऽत्र सद्गुरुम् ।
द्रष्टुकामोऽयने क्लेशान्मुमूर्षुरभवं प्रभो ॥ ५

इन्द्रियोच्छोषणं शोकं कोऽपि हर्तुं न मे प्रभुः ।
जाने त्वमेव शक्नोषि हर्तुं दृष्ट्वैव हृद्धि मे ॥ ६

सिद्ध उवाच -
योगिध्येयस्त्रिमूर्त्यात्मा यद्भक्ता भुक्तिमुक्तिगाः ।
योऽस्ति भीमातटेऽसौ तच्छिष्यः सिद्धो धराचरः ॥ ७

## அத்தியாயம்—2

கனவிலிருந்து விழித்தெழுந்த நாமதாரகன் கனவில் கண்டவரைக் காணவில்லை. அவரைத் த்யானித்துத் தேடியவன் தன் எதிரே கருணை மிக்கவரும் ஸுகதுக்கங்களில் ஸம நிலையிலுள்ளவருமான யோகியைக் கண்டு வணங்கி புல்லரிப்பு கொண்டு, அன்பால் தழதழத்த குரலுடன் அவரிடம் சொன்னான். ''நீரே தாய், தந்தை, வழி காட்டுபவர். பயத்தைப் போக்குபவர், தாங்குபவர். எங்கிருந்து வருகிறீர்? எங்கு செல்கிறீர் ? தற்செயலாக என் பார்வையில் பட்டீர். காலம் அனுகூலமானால் உற்றாருடனும் ப்ரதிகூலமானால் நல்லோருடனும் இணக்கம் கிட்டும். எதிலும் ஒட்டாமல் சாகவிருந்த எனக்கு நீரே எல்லாம். நான் நாமதாரகன் என்ற அந்தணன். உடலிலும், உள்ளத்திலும், வெளியிலும் தாபமடைந்த நான் குருவைக் காணவிரும்பி வழியில் களைப்பால் சாக விருந்தேன். இந்த்ரியங்களை வரளச் செய்கிற தாபத்தை நீக்க எவராலும் இயலவில்லை. உம்மைக் கண்டதும் உள்ளம் அமைதி பெறுவதால் உம்மால் தாபத்தை நீக்க முடியுமென உணர்கிறேன்.

ஸித்தர் கூறினார் :— பீமா நதிக் கரையில் யோகிகளாலும் த்யானிக்கத் தக்க மும்மூர்த்தி வடிவினரான யோகி உள்ளார். அவரிடம் பக்தி கொண்டவர் புக்தியும், முக்தியும் பெறுவர். அவரது சீடரான நான் பூமியை வலம் வருகிறேன். (7)

**नामधारक उवाच-**

**सद्गुरुः सोऽपि भगवानस्माकं कुलदैवतम् ।**
**श्रद्धाभक्त्या भजे तं मां कष्टाब्धौ मज्जयत्यहो ।। ८**

**सिद्ध उवाच-**

**स सद्गुरुस्त्रिमूर्त्यात्मा रुष्टेष्वन्येष्वयं प्रभुः ।**
**कोऽपि नास्मिन्लौकिकेऽपि नेष्टोऽस्यासीति भाति मे ।। ९**

**संशयात्माऽश्रद्धधानः कापि कैर्नैव गोप्यते ।**
**त्वय्यात्मश्री गुरुत्यक्तसंशयात्मेश्वरोऽत्र कः ।। १०**

नामधारक उवाच—

रुष्टेऽपि लौकिके नेशः कोऽपीत्युक्तं वदस्व चेत्।
प्राग्वृत्तं चैष त्र्यात्मा कथं मे छिन्धि संशयम्।। ११

நாமதாரகர் சொன்னார் - அந்த குரு பகவானே எமது குரு .குலதைவமும் கூட. ச்ரத்தையும், பக்தியும் கொண்டு அவரை வழிபடுகிறேன். அவர் என்னைத் துயரக் கடலில் ஆழ்த்துகிறாரே!

ஸித்தர் சொன்னார்- மும்மூர்த்தி வடிவினரான அந்த ஸத்குரு, மற்றவர் கோபித்துள்ள போது காப்பவர். அவர் கோபம் கொண்டால் மற்றவரால் காக்க இயலாது. அதனால் நீர் குருவின் அன்புக் குரியவரல்ல என நினைக்கிறேன். நம்பிக்கையும் ச்ரத்தையு மில்லாதவனை எவரும் சீடனாக ஏற்கமாட்டார். மும்மூர்த்தி வடிவிலுள்ள குருவால் கைவிடப்பட்ட ஸந்தேஹப்படுகிற சீடனை எவரும் காப்பாற்ற மாட்டார்.

நாமதாரகர் கேட்டார்- உலக ரீதியில் குருவானவர் கோபித்தால் காப்பதற்கு வேறு ஒருவரில்லை எனில், அவ்வாறு எங்கேனும் நிகழ்ந்துள்ளதா? குரு மும்மூர்த்திவடிவினர் என்பது எப்படி? விளக்குவீர். (11)

सिद्ध उवाच—

पुरा निराशिषोऽप्येको बहु स्यामित्यभून्मतिः।
या योगनिद्रितस्यैषा विष्णोर्मायाऽनया जगत्।। १२

सृष्टं प्राङ्नाभिकमलादभवच्चतुराननः।
ददौ तस्मै विनीताय वेदांस्तैरसृजज्जगत्।। १३

कृतं त्रेतां द्वापरं च सधर्मं व्यसृजत्कलिम्।
वर्णाश्रमविभागेन मनुष्यस्थितिहेतवे।। १४

वैराग्यज्ञानवान्सत्यः सत्यवाग्यज्ञसूत्रभृत्।
यज्ञसंभारधृक्त्रेता द्वापरस्तु सुशास्त्रभृत्।। १५

पुण्यपापोग्रताशान्ति-दयानैष्ठुर्यसंयुतः ।
कलिस्तु लिङ्गजिह्वाभृत्कचरोऽसन्पिशाचवत् ।। १६

एकैकं यतकालं कौ प्रेरयद्विश्वहेतवे ।
प्रयाणकाले कलये प्रोक्तां गुरुकथां शृणु ।। १७

*ஸித்தர் கூறினார். முன்பு (கல்பம் தொடங்குகையில்) பரம் பொருள் தான் மட்டுமிருந்தது. விருப்பமேதுமற்றிருந்த அதன் உள்ளத்தில் பலவாக ஆவேன் என்ற எண்ணம் உதித்தது. யோக நித்திரையிலிருந்த விஷ்ணுவின் மாயை அது. அவளால் உலகம் படைக்கப்பட்டது. விஷ்ணுவின் தாமரை போன்ற தொப்புளிலிருந்து ப்ரஹ்மா தோன்றினார். தன்னை வணங்கிய அவருக்கு விஷ்ணு வேதங்களை அளித்தார். அவற்றின் உதவியால் ப்ரஹ்மா உலகைப் படைத்தார். மனிதன் வாழ்வதற்காக க்ருதம், த்ரேதா, த்வாபரம், கலி என்ற நான்கு யுகங்களையும் அந்த காலப் பிரிவிற்கேற்ற தர்மங்களையும் வர்ணம் ஆச்ரமம் என்று நிலைகளையொட்டிய பிரிவுகளுக்கேற்பப் படைத்தார். ஸத்யம் வைராக்யம் ஆத்ம ஜ்ஞாநம் கொண்டு யஜ்ஞோபவீதம் தரித்தவர் அடங்கியது க்ருதயுகம். வேள்விகளுக்குரிய ஸாதனம் பெற்றது த்ரேதாயுகம். நல்ல ஆயுதங்களை ஏற்றது த்வாபர யுகம். புண்யமும் பாபமும், உக்ரத் தன்மையும் அமைதியும், பரிவும் கொடூரமும் கலந்த காலநிலை அது. ஆண் குறி - பெண் குறி, நாக்கு இவற்றின் ஆளுகைக்கு உட்பட்ட காலம் கலியுகம். துஷ்டனும் பிசாசும் உலவும் காலம் அது. க்ருதம் 17,28,000, ஆண்டுகள். த்ரேதா 12,96,000 ஆண்டுகள். த்வாபர யுகம் 8,64,000 ஆண்டுகள். கலி 4,32,000 ஆண்டுகள் என குறிப்பிட்ட காலவரை கொண்டதாக அவற்றை அமைத்துப் பூமிக்கு ப்ரஹ்மா அனுப்பிவைத்தார். கலியை அனுப்பும் போது ப்ரஹ்மா கலியிடம் குருவைப் பற்றிய செய்தி கூறினார். (17)*

कलिरुवाच—
कथं यास्ये वृषपरप्रशान्तजनसेविताम् ।
भुवं श्रुत्वापि मे चेतः खिद्यतेऽङ्गं च तप्यते ।। १८

छेत्ताहं धर्मसेतोः शुक्लहृद्वेषतापकृत्।
भ्रातान्यस्त्रीस्वहर्ता मे षड्- द्विड्भाक्प्राणवल्लभः ।। १९

क्षतव्रतोऽपि मे प्राणो नास्तिकोऽधार्मिकोऽपि मे।
ये स्थिता भारते वर्षे धार्मिकास्ते ममारयः ।। २०

गुर्वीशदेवसद्विप्र- पितृधर्मपरेक्षणात्।
बहिर्यान्त्यसवो मेऽपि योगिज्ञानीक्षणात्क्षणात्।। २१

*கலி கேட்டான் - பூமியில் அறவழி செல்பவரும் அமைதி மிக்கவருமான மக்கள் நிறைந்துள்ளனர். அங்கு நான் எப்படிச் செல்வேன்? இதனைக் கேட்டதும் என் உள்ளம் துயருற்று வதங்குகிறது. நான் தர்ம அணையை உடைப்பவன். துயரமும் கலகமும் வெறுப்பும் தாபமும் உண்டாக்குபவன். என் சகோதரனோ பிறர் மனைவியைப் பறிப்பவன். உயிர் நண்பன் காமம், கோபம், லோபம், மோஹம், மதம் மாத்ஸர்யம் என்ற குணங்கள் நிரம்பியவன். கட்டுப்பாடுகளை மீறியவனும் நாஸ்திகனும் அதர்ம வழி செல்பவனும் எனக்கு உயிர். பாரத வர்ஷத்தில் உள்ள தர்ம வழி செல்பவர் அனைவரும் எனக்கு எதிரிகள். குரு, ஈசன், தேவர், நல்ல அந்தணர், முன்னோர் சென்ற வழியைப்பின் தொடர்பவர், யோகிகள், ஜ்ஞானிகள் இவர்களைக் கண்டாலேயே என் உயிர் நீங்கிவிடும். அங்கு எப்படிச் செல்வேன்? (21)*

ब्रह्मोवाच——

आसुर्या संपदा गच्छ वशा लोका भवन्ति ते।
शतायुर्हि नरः कोऽपि धन्यो भूयान्न तं जहि ।। २२

गुर्वीशदेवसद्विप्र- पितृधर्मपरो नरः ।
त्वद्दोषैर्लिप्यते नैव गुरुभक्तो विशेषतः ।। २३

नाम्बुनाऽब्जदलं यद्वल्लिप्यतेऽघैर्गुरुप्रियः ।
नैव जेतुं गुरोर्भक्तं देवा अपि न शक्नुयुः ।। २४

ப்ரஹ்மா கூறினார் :- கலியே ! அஸுர நிலை ஏற்றுச் செல்வாய். மாந்தர் உன் வசப்படுவர். மாந்தரின் பூர்ண ஆயுள் நூறாண்டுகளே. அதில் யாரோ ஒருவனே நற்பிறவி பெறுவான். அவனை வெல்வாய். குரு, ஈசன், தேவர், நல்ல அந்தணன், முன்னோர் இவர்களிடம் பக்தி பூண்டவனிடம் உன்னால் குறையேதும் நிகழாது. அதில் குருவிடம் பக்தி கொண்டவனிடம் நீரின் மேல் தாமரை போல் பாபம் ஒட்டாது. குருபக்தனைத் தேவர்களும் வெல்ல இயலாது. (24)

कलिरुवाच——

गुरुर्वरोऽमरेभ्योऽपि कथं वद हि यत्प्रियः ।
केनाप्यजेय इत्येतत्प्राग्वृत्तं क्वापि चेद्वद ॥ २५

ब्रह्मोवाच——

ज्ञानं गुरुं विना न स्याद्यस्य कस्यापि निर्जराः ।
गुरुभक्त्यैव सिद्धार्थाः स्युस्ततोऽप्यधिको गुरुः ॥ २६

पुरा गोदावरीतीरे वेदधर्मैकदा मुनिः ।
बहुशिष्यप्रशिष्यस्तन्निष्ठां ज्ञातुमिदं जगौ ॥ २७

तपसा क्षालितं पापं बहु प्रारब्धमस्ति मे ।
तद्भोग्यं व्याधिरूपेण काश्यां कस्तत्र रक्षकः ॥ २८

गलत्कुष्ठाभिभूतस्य मम दंशादिवारणैः ।
क्षालनैरन्नदानैश्च प्रेम्णा कस्तत्र रक्षकः ॥ २९

इति तस्य वचः श्रुत्वा तूष्णीं तस्थुर्भियाऽखिलाः ।
तत्रैको दीपको नाम शिष्य ऊचेऽभिवाद्य तम् ॥ ३०

न शेषयेद्दोषशेषं मोक्षविघ्नं भवत्कृतम् ।
ममात्मनैव भोक्ष्येऽहमनुज्ञां दातुमर्हसि ॥ ३१

குரு தேவர்களை விடச் சிறந்தவரா? குரு பக்தனை எவராலும் வெல்ல முடியாதா? இவ்வாறு முன் நிகழ்ந்துள்ளதா? எனக் கலிகேட்டதும் பிரும்மா கூறினார்.

குருவின்றி அறிவு பெற இயலாது. தேவரும் குரு பக்தியால் தான் மேன்மை பெற்றனர். முன்னர் கோதாவரிக் கரையில் வேத தர்மா என்ற முனிவர், அவருக்குப் பல சீடர்கள். அவர்களுக்கும் பல சீடர்கள். சீடர்கள் குருவிடம் நடந்து கொள்ளும் முறை பற்றிச் சீடர்களிடம் அவர் கூறியதாவது - சீடர்களே ! நான் முன் பிறவியில் சேமித்த பாபத்தைத் தவத்தால் பெருமளவு நீக்கி விட்டேன். இன்னமும் தொடங்கிய வினை மீதமுள்ளது. அது நோய் வடிவில் காசியில் அனுபவிக்கத் தக்கது. அங்கு என்னைக் காப்பாற்ற எவர் உள்ளார்? அழுகிச் சொட்டுகிற குஷ்டத்தின் மீது மொய்க்கும் ஈக்களை விரட்டுவது தொடங்கிப் புண்ணை அலம்பி உணவிட்டு அன்புடன் பாதுகாக்க யார் முன் வருகிறீர்கள் !'' என்று குரு கேட்டதும், சீடர்கள் பயந்து ஒன்றும் பேசாது நின்றனர். அவர்களில் ஒருவன் தீபகன். அவன் குருவை வணங்கி விண்ணப்பித்தான். குருவே ! முக்தி பெற இடையூறாக உள்ள பாபத்தை மீதம் வைக்கக் கூடாது. நான் அதனை அனுபவிக்கிறேன்''. (31).

गुरुरुवाच——

भोक्तव्यं स्वयमेवाघं नान्यद्वारेण तत्क्षयः ।
अतः कष्टेन तद्भोक्ष्ये काश्यां शक्तोऽसि चेदव ।। ३२

इत्युक्तं गुरुणाऽऽश्रुत्य काशीं तेन समं ययौ ।
कुष्ठी भूत्वापि सोऽन्धोऽयं बुभुजे भेज एष तम् ।। ३३

गुरुर्गलद्व्रणत्रस्तः कार्याकार्याज्ञ एव सन् ।
प्रतीपाचरणैः शिष्यं शश्वद्व्यर्थं व्यताडयत् ।। ३४

स सेवावसरे भिक्षां सेवां भिक्षाक्षणेऽपि तम् ।
ययाचेऽहनदप्राप्तौ नाखिद्यत सदाऽप्यसौ ।। ३५

दत्तां याचितकां भिक्षां मुनिस्तद्दोषकीर्तनात् ।
भूमौ प्रक्षिप्य रुष्टोऽन्नं स्वाद्वानीहीत्युवाच तम् ।। ३६

भिक्षार्थमपि गच्छन्तं निवर्त्योचे कृता न मे ।
विण्मूत्रोत्सर्गसंशुद्धिः क यास्यश्नन्ति मक्षिकाः ।। ३७

यथोक्तं कर्तुमुद्युक्तं निवार्योचे न वेत्सि माम् ।
क्षुधा कण्ठगतप्राणं देह्यन्नं पाप मे द्रुतम् ।। ३८

भुक्त्वा याचितकान्नं स कदाचित्तात पुत्रक ।
श्रान्तोऽसि मे स्वपेत्युक्त्वा सुप्तेऽस्मिन्क्षुधितोऽब्रवीत् ।। ३९

एवं संछलितोप्येष भेजेऽखेदोऽनिशं गुरुम् ।
विस्मृतस्वात्मयात्रोऽपि मत्त्वा सर्वामरेश्वरम् ।। ४०

गाङ्गाम्भो गुरुपादाम्भः साक्षाद्विश्वेश्वरं गुरुम् ।
सर्वानन्दनिधिं बुद्ध्वा मनो न काप्यचोदयत् ।। ४१

குரு கூறினார். "அவனவன் செய்த பாபத்தை அவனவனே அனுபவிக்க வேண்டும். பிறர் மூலம் அது குறையாது. அதனால் கஷ்டப்பட்டுக் காசியில் நானே அனுபவிப்பேன். உன்னால் முடியுமானால் அங்கு என்னைப் பாதுகாப்பாய்". அவ்வாறே நடப்பதாகக் குருவிடம் வாக்களித்து அவருடன் காசிக்குச் சென்றான். குரு குஷ்ட நோயாளியாகிப் பார்வையிழந்தார். தீபகன் அவரை உபசரித்தான். அழுகிச் சொட்டுகிற புண்களால் வேதனையுற்ற குரு, தக்கது தகாதது உணராமல் சீடனுக்கு எதிராக நடந்து கொண்டார். வீணே அவனை அடித்தார். பணிவிடை செய்யும் போது பிக்ஷை எடுத்து வரச் செய்யவும் பிக்ஷை எடுக்கச் செல்லும் போது பணிவிடை புரிய ச் செய்யவும் கட்டளையிட்டார். அவர் கேட்டது கிட்டாவிடில் சீடனை அடித்தார். சீடன் இதனால் வருந்தவில்லை. ஊராரிடம் யாசித்துப் பெற்ற பிக்ஷை உணவில் குறை கண்டு தரையில் எறிவார். கோபத்துடன் மறுபடி இனிய உணவு பெற்று வரக் கூறுவார். பிக்ஷை எடுக்கக் கிளம்பியவனைத் தடுத்து நிறுத்தி மல மூத்திர சுத்தி என் செய்து வைக்கவில்லை? ஈக்கள் மொய்க்கின்றனவே? என்பார். அதில் முனைந்த சீடனைத் தடுத்து "பசி உயிர் போகிறது. பாபி ! உணவை விரைவில்

கொண்டு வா'' என உத்தரவிடுவார். பிக்ஷை உணவை உண்டவர் சிலஸமயம். ''குழந்தாய்! என் பொருட்டு நீ மிகவும் உழைத்துக் களைத்துள்ளாய். ஓய்வெடுப்பாய் எனக் கூறுவார். படுக்க விருப்பவனை'' எழுந்திரு ! எனக்குப் பசிக்கிறது. உணவு தருவாய்'' என அதட்டுவார். இவ்வாறு துன்புறுத்தப்பட்டும் வருந்தாமல் குருவிற்கு இனிய முகத்துடன் பணிவிடை செய்து வந்தான். குருவை ஈசனுக்கும் ஈசனாக உணர்ந்து தனது உடல் நலனைப் பேணுவதையும் மறந்தான். குருவின் திருவடி நீரே கங்கை ! குருவே விசுவேச்வரர். அவரே எல்லா ஆனந்தத்திற்கும் வைப்பிடம் என உணர்ந்ததால் மற்ற எண்ணங்கள் எழாமல் காத்தான். (41)

गुरुभक्तिसुपूतोऽभूज्ज्ञात्वा विश्वेश्वरोऽप्यमुम्।
प्राप्योचे वरदोऽस्मीष्टं वरं वरय तेऽस्तु शम्।। ४२

दीपकोऽप्याह किं कार्यं वरेण गुरवस्तु मे।
रुक्शान्त्यै वरमिच्छन्ति यदि पृष्ट्वा वृणोमि तत्।। ४३

इत्युक्त्वैत्य शशंसास्मै गुरुस्ततोऽब्रवीत्स तम्।
भोगादेव क्षयं नेष्ये सेवायां मे बिभेष्यपि।। ४४

तच्छ्रुत्वा स तथेत्युक्त्वा शिवमेत्याब्रवीद्वरम्।
न गुर्वसंमतं काङ्क्षे तच्छ्रुत्वाऽगात्स दुर्मनाः।। ४५

निर्वाणमण्डपं गत्वा प्राह विष्णुमुखामरान्।
चण्डो मुनिर्वेदधर्मा रुग्णस्तच्छिष्य उत्तमः।। ४६

गुरुभक्तः कम्बलाश्वतरासन्नोऽस्ति दीपकः।
वरं दातुमगां प्रेम्णा नाददे स गुरूद्यतः।। ४७

इति श्रुत्वेशवाक्यं तं द्रष्टुकामो हरिर्ययौ।
विष्णुर्दीपकमाहाङ्ग वरदोऽस्मि वरं वृणु।। ४८

तपसाष्टाङ्गयोगैश्च सूपायैर्मननादिभिः ।
उपवासैर्व्रतैर्योगैर्धर्मैर्गम्योऽस्मि नो नृणाम् ।। ४९

गुरुसद्विप्रभक्तस्य मन्मयाभ्यन्तरात्मनः ।
निर्द्वन्द्वस्याऽपि साध्व्याश्च विष्णुर्दृश्योऽस्मि सर्वदा ।। ५०

तस्मात्कष्टेन सुभग सद्गुरुः सेवितस्त्वया ।
तेनैव परितुष्टोऽस्मि वरं वरय मत्प्रिय ।। ५१

தீபகன் குரு பக்தியால் நன்கு தூய்மை பெற்றுள்ளதை உணர்ந்த விச்வேச்வரர், இவன் எதிரில் தோன்றி வரம் கேட்கும்படி கூறினர். தீபகன் கூறினன். ''வரத்தால் எனக்கு ஆவதொன்றுமில்லை. நோய் தீரக் குரு ஒருக்கால் விரும்பலாம். அதையறிந்த பின் வரம் கேட்பேன் எனக் கூறிவிட்டுக் குருவிடம் சென்று கேட்டான். வேதனையால் வாடிய குருவோ நோயை அனுபவித்தே வினையைப் போக்குவேன். எனக்குப் பணிவிடை புரியப் பயப்படுகிறாயா? என்றார். தீபகன் அதனை ஏற்று சிவனிடம் வந்து குரு விரும்பாத வரத்தைக் கேட்க மாட்டேன் என்றான். ஈசன் மனமொடிந்தவர் போல் அகன்று நிர்வாண மண்டபம் வந்து விஷ்ணு முதலானோரிடம் கூறினர்- முரடனான வேத தர்மா என்ற முனிவர் நோயுற்றுள்ளார். அவரது சிஷ்யன் மிகச் சிறந்தவன். இருவரும் கம்பளாச்வதர ஸந்நிதியில் உள்ளனர். அன்புடன் நான் வரம் தரச் சென்றேன். குருவிடம் பெரும் பக்தி கொண்ட தீபகன் அதனை ஏற்கவில்லை. விஷ்ணு அதனைக் கேட்டதும் தீபகனைக் காண விரும்பி அவனிடம் சென்று, தீபக ! வரம் கொடுக்க வந்துள்ளேன். விரும்பியதைக் கேட்பாய். நான் தவத்தாலோ, யோகத்தாலோ மந்த்ரத்தாலோ உபவாஸம் வ்ரதம் முதலியவற்றாலோ அடையத் தக்கவனல்ல. குருவிடமும் நல்ல அந்தணர்களிடமும் பக்தியுள்ளவனுக்கும் என்னிடம் உள்ளத்தைப் பதித்துக் கொண்டவனுக்கும் ஸுகதுக்கங்களில் மனம் செலுத்தாதவனுக்கும் பதிவ்ரதைக்கும் புலப்படுவேன். நீயோ சிறப்பாக உழைத்து குருவிற்குப் பணிவிடை புரிந்துள்ளாய். அதில் மகிழ்ச்சியுற்ற என்னிடம் வரம் கேட்பாய் என்றார். (51)

दीपक उवाच—

श्रीसद्गुरुर्देवदेवो यतो ज्ञानं ततोऽमृतम्।
अतोऽधिकं किमस्माकं भवन्ति त्वादृशा वशाः ॥ ५२

चेद्विश्वेशो यथा यातस्तथा गन्तुं न रोचते।
गुरावेवाचलां भक्तिं देह्यन्यन्न वृणेऽध्रुवम् ॥ ५३

श्रद्धाभक्तिः सदा तेऽस्ति दास्येऽप्यन्यदयाचितम्।
दत्ता भुक्तिश्च ते मुक्तिः सत्कीर्तिः स्मर्तृतापहृत् ॥ ५४

यः स्तौति सद्गुरुं भक्त्या वेदोपनिषदादिभिः।
तुष्टिर्मे तेन दास्यैश्च सान्निध्यं तस्य मे सदा ॥ ५५

कालादपि भयं नास्ति कुतोन्यस्मात्तु सिद्धयः।
स्युस्तद्दास्योऽधिकं नात इत्युक्त्वान्तर्दधे हरिः ॥ ५६

*தீபகன் கூறினான் - ஸ்ரீ குருவே தேவர்களுக்கும் தேவன். அவரிடமிருந்துதான் ஜ்ஞானம் பெற முடியும். அந்த ஜ்ஞானமே மோக்ஷம் தரும். உம்மைப் போன்ற தேவரும் குருவருளால் வசமாவர். இதைவிட வேறு என்ன வேண்டும்? விச்வேசுவரர் போல் திரும்பிச் செல்ல மனமில்லையானால் குருவிடம் அசையாத பக்தியை அருள்வீர். நிலையற்ற மற்ற வரங்களைக் கேட்கமாட்டேன்'' என. விஷ்ணு கூறினார் - குருவிடம் உனக்கு நம்பிக்கையும், பக்தியும் உள்ளது. அதனால் போகமும், முக்தியும் கிட்டும். உன்னை நினைப்பவரின் தாப மகலும். நீ யாசிக்காமலே புகழ் பெருகும். குருவை வேதம் உபநிஷதம் முதலியவற்றால் துதிப்பவனிடமும் எனக்குப் பிரியமதிகம். நினைத்தவுடன் அவன் முன் தோன்றுவேன். யமனிடமிருந்து அவனுக்குப் பயமில்லை. வேறு எவரிடமிருந்து பயம் நேரும் ? அணிமாதி ஸித்திகள் அவன் ஏவலாளர்கள். வேறுஎன்ன வேண்டும். எனக் கூறி விஷ்ணு மறைந்தார். (56)*

शिष्योऽपि गुरवे सर्वं शशंस स तु तत्क्षणम्।
प्रीतः सुखाकरकरं दधौ तन्मूर्ध्नि सद्गुरुः ॥ ५७

तेन सद्योऽभवच्छिष्यो वेदवेदाङ्गपारगः ।
कुशलः स्मर्तृतापघ्नो जीवन्मुक्तोऽखिलप्रियः ।। ५८

काशीप्रभावमादेष्टुं शिष्यभावं परीक्षितुम् ।
वेदधर्माऽभवत्कुष्ठी पापशङ्का कुतो मुनेः ।। ५९

इत्याद्या भूरिशो वृत्ताः कले गुरुकथा भुवि ।
वक्तृश्रोतृमलघ्न्योऽतो भक्तं मा प्रेक्ष्य गां व्रज ।। ६०

इत्यादिष्टः कलिर्धात्रा भुवमेत्य तथाऽकरोत् ।
महिमा लौकिकस्यायं किं पुनस्त्र्यात्मसद्गुरोः ।। ६१

तत्सात्विकीं धृतिं लब्ध्वा दृढभक्त्यैव सद्गुरुम् ।
भजन्ति कृतकृत्यास्ते भवन्ति न ससंशयाः ।। ६२

तस्माद्यदीच्छसि श्रेयः श्रद्धयाऽसंशयं भज ।
गुरुं नृधाम्ना क्रीडन्तं भवाब्धेः पारमेष्यसि ।। ६३

*इति श्री गुरुचरिते गुरुशिष्यचरितानुकथनं नाम द्वितीयोऽध्यायः*

*தீபகன் குருவிடம் நிகழ்ந்ததைத் தெரிவித்தான். அவர் உடன் இன்பம் தருகிற கையை அவன் தலை மீது வைத்தார். தீபகன் உடன் வேதத்திலும் அதன் அங்கங்களிலும் தேர்ச்சி பெற்றான். அவனை நினைத்தவரின் தாபம் உடன் அகன்றது. ஜீவன்முக்தனாகி அனைவரின் அன்புக்குரியவனானான். காசியின் பெருமையை விளக்கவும், சிஷ்யனின் பக்தியைப் பரீக்ஷிக்கவும் வேத தர்மா குஷ்ட நோயாளியானார். ஸித்தரான அவருக்குப் பாபமேது? கலி புருஷனே! குருவைப் பற்றிய வரலாறுகள் பல உண்டு. அவற்றைச் சொல்பவன் கேட்பவன் இருவரது பாபத்தையும் நீக்குபவை. பூமியை அடைந்து குரு பக்தனாக என்னைக் காண்பாய். இவ்வாறு ப்ரஹ்மாவால் வழிகாட்டப்பட்ட கலி பூமிக்கு வந்தான். நாமதாரகரே ! குரு என்று பெயரளவில் உள்ளவருக்கே இந்தப் பெருமை உண்டு. ஸாத்விகமான மன உறுதியுடன் திடபக்தியுடன் ஸத்குருவை வழிபடுபவர் நிறைவு பெறுவர்.*

*ஸந்தேஹமுள்ளவரோ மேனிலை பெற மாட்டார். மேன்மையை விரும்பினால் குருவை ச்ரத்தையுடன் அணுகுவாய். குரு மனித வேடத்தில் விளையாடுகிறதைவம். ஸம்ஸாரக் கடலை அவர் அருளால் தாண்டுவாய் (63).*



## अथ तृतीयोऽध्यायः

नामधारक उवाच—
त्र्यात्मासौ कुतो जातो भूमौ नर इवेश्वरः ।
यं ब्रवीषि परं ब्रह्म तन्मे शुश्रूषवे वद ।। १

सिद्ध उवाच–
धन्योऽस्यनुगृहीतोऽसि यत्ते भक्तिरधोक्षजे ।
संजाता भवबन्धघ्नी हर्षो मेऽतीव वर्धते ।। २

कोऽपि गां पर्यटन्तं मां न पृच्छति गुरोः कथाम् ।
त्वयाद्य भक्तचन्द्रेण बोधाब्धिर्मे प्रपूरितः ।। ३

अनन्ताः सन्त्यनन्तस्य लीलाः प्रश्नमृतेपि ताः ।
न वक्तुर्यान्ति निजधीपरिणामावधिं स्मृतिम् ।। ४

कलौ तु नास्तिका मर्त्यास्तत्कथाश्रवणात्मकम् ।
प्लवं तर्तुं भवाब्धिं नो विदुर्मज्जन्त्यतोऽत्र ते ।। ५

यत्राम्ब्वविन्तु तृष्णोर्मिर्ग्रहाः कामादयो ध्वनिः ।
भोगोऽपारेऽत्र नौस्त्वेषा गुरुर्नेता कृपामरुत् ।। ६

तस्माद्दिष्ट्या साधनानि प्रास्यान्यत्राप्ययत्नतः ।
तरिष्यसि भवाब्धिं स्वागतो वक्ष्ये कथाः शृणु ।। ७

அத்தியாயம்-3

நாமதாரகர் ஸித்தரிடம் கேட்டார் – "மும்மூர்த்தி வடிவினரான ஈசனுன தத்தர் ஏன் மனிதனைப் போல் பூமியில் பிறந்தார்? அவர் பரம் பொருள் என்றீர். கேட்கவிரும்புகிற எனக்கு அதனை விளக்குவீர்" என. ஸித்தர் கூறினூர். "நீ பாக்யசாலி. அருள் பெற்றவன்.அதனுல் ஸம்ஸாரக் கட்டை நீக்குகிற விஷ்ணு பக்தி ஏற்பட்டுள்ளது. எனக்கு மிகவும் மகிழ்ச்சி. பூமியைச் சுற்றி ஸஞ்சரிக்கிற என்னிடம் எவரும் குருவைப் பற்றிக் கேட்கவில்லை. பக்தனுகிய சந்த்ரனைக் கண்டதும் என் அறிவுக் கடல் பொங்கி எழுகிறது. எல்லை காணு ஈசனது லீலைகள் யாரேனும் கேட்டாலன்றி சொல்பவனின் அறிவில் வெளியாகி நினைவிற்கு வருவதில்லை. கலியில் நாஸ்திகர்கள் ஸம்ஸாரக் கடலைத் தாண்ட குரு சரித்திரம் என்ற ஓடம் இருப்பதை அறியார். அதனுல் அக்கடலில் மூழ்கியுள்ளனர். ஸம்ஸாரக் கடலில் அறியாமையே நீர்; ஆசையே அலை; காமம் முதலிய ஆறும் முதலைகள். இன்ப துன்பங்களை அடையும் போது எழும்பும் கூச்சலே அலையோசை. ஈசனின் கதை ஓடம்; குரு ஓடக்காரர். ஈசனின் கருணையே அனுகூலமான காற்று. இந்த ஸாதனங்களை எளிதில் நீ அடைந்துள்ளாய். ஸம்ஸாரக் கடலை நீ தாண்டுவாய். உடனே அந்தக் கதையைச் சொல்கிறேன். கேட்பாய் (7)

इत्युक्त्वाऽमरजाभीमासङ्गमे ह्युपविश्य सः ।
गुर्वधिष्ठितकल्पद्रुमूलेऽस्मै प्राह सत्कथाः ॥ ८

मुमुक्षुभेषजं मुक्तजीवनं विषयीष्टदम् ।
श्रीगुरोश्चरितं वाग्हृद्दूरत्वाद्वच्मि तेऽल्पकम् ॥ ९

जगत्येकार्णवीभूते शेषतल्पश्रितोऽस्पृहः ।
नारायणो जगत्स्रष्टुं मायामुद्राव्य सोऽण्डजम् ॥ १०

स्रष्टारं व्यसृजत्सृष्ट्यै सप्तर्षीन् सोऽपि मानसान् ।
तत्रैकोऽत्रिस्तपस्वीशो यस्याभूद्भगवान्सुतः ॥ ११

ऋषेरत्रेस्तपोऽर्थस्य पातिव्रत्यविभूषिता।
आसीद् भार्याऽनसूयाख्या त्रिलोक्यां विश्रुता सती ।। १२

जातोर्वी मृदुलार्काग्नी शीतौ मन्दो मरुद्भिया।
तस्या देवाः पदापायभ्रान्त्याऽऽपुः शरणं हरिम् ।। १३

*ஸித்தர் அமரஜா - பீமா நதிக் கூடலில் குரு அமர்ந்திருந்த அரச மரத்தடியில் அமர்ந்து நாமதாரகருக்கு நல்ல வரலாற்றைச் சொன்னார். ஸ்ரீ குருவின் சரிதம் முக்தி நாட்டமுள்ளவருக்கு அருமருந்து. முக்தர்களின் உயிர், வெளிப் பொருள் நாட்டமுள்ளவருக்கு விரும்பியதைத் தருவது. அது வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதாகையால் உனக்குச் சிறிதளவு கூறுகிறேன். உலகம் கடலாகக் கரைந்திருந்தது. நாராயணன் எதிர்பார்ப்பு ஏதுமின்றி ஆதிசேஷப் படுக்கையில் அமர்ந்து தன்னுள் மறைந்த உலகைப்படைக்க மாயையை வெளிப்படுத்திப் ப்ரஹ்மாவைப் படைத்தார். ப்ரஹ்மா படைப்பைத் தொடர ஏழு முனிவர்களை மனத்தால் படைத்தார். அவர்களில் ஒருவர் தவத்தில் சிறந்த அத்திரி. அவரது புதல்வராக தத்தர் தோன்றினார். தவத்தில் ஈடுபட்ட அத்திரிக்கு பதிவ்ரதைச் சிறப்பு பெற்ற அனஸூயை என்ற பத்தினி. மூவுலகிலும் பதிவ்ரதை எனப் பாராட்டப் பெற்றவள். அவளிடம் பயத்தால் பூமி மென்மை பெற்றது. ஸூர்யனும், அக்னியும் குளிர்ச்சி பெற்றனர். வாயு மந்தமானது. தேவர்களும், தன் பதவிக்கேடு நேரும் என்ற பயத்தில் விஷ்ணுவைச் சரணடைந்தனர். (13)*

एकदा नारदोऽप्येत्य तद्धर्मान्ब्रह्मविष्णवजान्।
प्राब्रवीन्नेदृशी साध्वी सर्वदाऽभ्यागतप्रिया ।। १४

इत्यृषेर्वाक्यमाकर्ण्य विषीदन्त्य उपस्थिताः।
तद्देव्योऽसहमाना द्राग्बभूवुर्मूर्छिता भृशम् ।। १५

पतिव्रतामानिनीस्ताः सावित्रीश्रीश्वरीस्त्रयः ।
आश्वास्यातिथिवद्भूत्वा रोषाच्छप्तुं सतीं ययुः ।। १६

पतिव्रताऽपि तान्दृष्ट्वा स्वाश्रमाभ्यागतान्सुरान्।
प्रत्युद्गत्वा समानीय स्वासने संन्यवेशयत्॥ १७

वीजितान्कृतपच्छौचान्सूपविष्टान्जगौ सती।
स्वागतं वोऽद्य किं कार्यं मुनिस्तु तपसे गतः॥ १८

त ऊचुः साध्वि नो विघ्नस्तपःसक्तमना मुनिः।
कदाऽऽयातीत्यतो देहि क्षुधितेभ्योऽन्नमाश्वलम्॥ १९

इति श्रुत्वा गिरस्तेषां तथेत्युक्त्वा गृहं गता।
पात्राण्यासाद्य तेभ्योऽन्नं परिविष्टं न्यवेदयत्॥ २०

ஒரு ஸமயம் நாரதர் மும்மூர்த்திகளை அணுகி அனஸூயையின் நடைமுறைகளை விளக்கி இவளைப் போன்று தன் வீடு தேடி வருபவர்களை உணவு முதலியவற்றால் அன்புடன் உபசரிக்கிற பதிவ்ரதை உலகில் இல்லை என்றார். அருகிலிருந்த மும்மூர்த்திகளின் தேவியர் இதனைக்கேட்டுக் கலக்க முற்று பொறுக்காமல் மயக்கமடைந்தனர். தான் தான் பதிவ்ரதை என்று இறுமாப்பு கொண்டிருந்த ஸரஸ்வதியையும் லக்ஷ்மியையும் கௌரியையும் ஆறுதலடைவித்து மும்மூர்த்திகளும் கோபத்துடன் அந்தபதி வ்ரதையைச் சபிக்க அத்திரியின் ஆச்ரமத்திற்கு அதிதியாக வந்தனர். அனஸூயையும் தன் ஆச்ரமம் வந்த அவர்களை வரவேற்று ஆச்ரமத்தினுள் அழைத்துவந்து ஆஸனங்களில் அமர்த்திக் காலலம்பச் செய்து களைப்பு தீர விசிறினாள். உங்களுக்கு நல்வரவாகுக! இப்போது என்ன செய்ய வேண்டும் ? முனிவர் தவம் புரிய வெளியே சென்றுள்ளார்'' என்றாள். பதிவ்ரதையே ! தவத்தில் ஈடுபட்ட முனிவர் எப்போது வருவார் என்பதை அறியோம். பசியால் வாடிய எமக்கு உடன் உணவளிப்பாய் என மும்மூர்த்திகள் கூறினர். இதனைக் கேட்ட அனஸூயை வீட்டினுள் சென்று உணவேற்கப் பாத்திரங்களை வைத்து உணவு வழங்கப்பட விருப்பதை அவர்களிடம் தெரிவித்தாள் (20).

त आहुः साध्वि नो देहि नग्ना भूत्वेत्यपेक्षितम्।
नेदं चेद्रोचतेऽन्यत्र गच्छामः क्षुधिता इतः॥ २१

तच्छ्रुत्वापि प्रहस्यैषा ऋषेः सङ्गात्तपस्विनः ।
पूताया मम कामेन किं भवेच्चेत्तथाऽकृते ।। २२

शप्त्वा गच्छन्ति विमुखा महान्तोऽमी ममात्मजाः ।
इति स्वगतमुद्भाव्य तथेत्युक्त्वांशुकं जहौ ।। २३

तदैव तेऽभवन्बाला निर्विकारा अपीश्वराः ।
जगत्सृडीश्वरहराः पातिव्रत्यप्रभावतः ।। २४

तान्सा तथाविधान्प्रेक्ष्य सचित्राऽभूद्धृतांशुका ।
पयः प्रसूत्या इवास्यास्तदालं स्तनतोऽस्रवत् ।। २५

सपद्येवाद्भुताविष्टा प्रेम्णा हृष्टतनूरुहा ।
प्रत्येकं पाययामास क्षीरं तेऽपि पपुर्मुदा ।। २६

जगदुत्पत्तिकरणसुश्रान्त इव विश्वसृट् ।
पीत्वा पतिव्रतास्तन्यं परमां शान्तिमाययौ ।। २७

विश्वम्भरो विश्वरक्षाक्रियात्रस्त इवामलम् ।
पतिव्रतापयः प्राश्य पीनां विश्रान्तिमाविशत् ।। २८

हरस्तु विश्वसंहारकर्मतष्ट इव क्षणात् ।
सत्यौधस्याशनात्तृप्तः पुष्टिवर्धनतां ययौ ।। २९

*''பதிவ்ரதையே ! ஆடையின்றி நாங்கள் விரும்பியதைத் தருவாய். வேறு விதமாக உணவிடுவதில் எமக்கு உவப்பில்லை. அவ்வாறு உணவு வழங்காவிடில் பசிமிக்க நாங்கள் வேறிடம் செல்வோம் என்று அவர்கள் கூறினர். தவமிக்க முனிவருடன் வாழ்ந்ததால் புனிதமடைந்த எனக்குக் காம பாதிப்பு நேராது, அதிதி விரும்பியபடி நான் உணவிடாவிடில் இந்தப் பெரியோர்கள் என்னைச் சபித்துவிட்டு மனம் நொந்து செல்லக் கூடும். இவர்கள் நான் பெற்ற பிள்ளைகள்'' எனத் தனக்குள் கூறிக் கொண்டே ''அப்படியே ஆகட்டும்'' எனக் கூறி ஆடைகளை நீக்கிக்*

*கொண்டாள். வந்த மூவரும் சிசுக்களாக மாறி ஆடைகளற்ற அவளைக் கண்டதால் மாறுதல் எதுவுமின்றி உணவேற்றனர். உலகைப் படைப்பவரும் காப்பவரும் லயமடையச் செய்பவருமே பேதைச் சிறுவர்கள் ஆனுர்கள் என்பது பதிவ்ரதைத் தன்மையின் பெருமை. அவர்களைக் குழந்தைகளாகக் கண்டதும் தாய்மை உணர்வு மிகுந்து மார்பில் பால் சுரந்து கசிந்தது. உடன் வியப்படைந்த அநஸூயை புல்லரிப்புற்று அன்புடன் ஒவ்வொருவரையும் தனித் தனியாகத் தாய்ப் பால் பருகச் செய்தாள். உலகாகப் படைத்ததால் ஏற்பட்ட களைப்பு நீங்க ப்ரஹ்மா அவளது பாலைப் பருகி பேரமைதி பெற்ருர். உலகைக் காக்கும் பணியில் பயந்தவர் போல் உலகைத் தாங்கும் விஷ்ணு பாலைப் பருகிப் பெரும் ஓய்வு பெற்ருர். உலகை ஒடுக்குவதால் இளைத்த ஹரனும் பதிவ்ரதையின் ஸ்தன்யத்தைப் பருகி புஷ்டியடைந்து புஷ்டிவர்த்தனனென்ற வேதம் குறிப்பிட்ட நிலையைப் பெற்ருர். (29)*

स्वधर्मज्ञाततत्सत्त्वा पाययित्वाऽपि तान्पयः ।
सा जगौ तत्कथोद्धातं प्रेम्णा विन्यस्य पालके ।। ३०

अत्रान्तरे वनादेत्य श्रुतगीतः सतीमुखात् ।
सर्वं श्रुत्वेश्वरान्ज्ञात्वा ध्यानान्नत्वाऽस्तुवन्मुनिः ।। ३१

विश्वसर्गस्थितिप्रान्तनिदानं विश्वसाक्षिणम् ।
विष्णुं विश्वमयं वन्दे विश्वाद्यं विश्वसंग्रहम् ।। ३२

तपस्तप्तं यदर्थं स त्वमेकोऽपीश लीलया ।
त्रिधा भूत्वाऽऽत्मनाऽऽत्मानं स्वैर्गुणै रमयस्युत ।। ३३

अध्यारोपापवादाभ्यां समुद्भूतं जगत्ततः ।
अहं ममाभिमानेन पार्थक्यं तस्य नापरम् ।। ३४

इति स्तुवति तस्मिंस्ते पालके बालरूपतः ।
स्थिता अप्याद्यरूपैः स्वैः स्थित्वोचुस्तं वरं वृणु ।। ३५

*தன் பதிவ்ரதா தர்மத்தால் அவர்களின் உண்மை நிலையை உணர்ந்த அனஸூயை பாலூட்டிய பின் அன்புடன் தொட்டிலிலிட்டு ஆட்டி அந்தக் கதையைப் பாடினாள். இதனிடையே காட்டிலிருந்து திரும்பிய அத்திரி பாட்டைக் கேட்டபடி உள்ளே வந்தவர் அந்தப் பதிவ்ரதையின் வாயால் நிகழ்ந்ததை அறிந்து அவர்கள் மும்மூர்த்திகள் எனத் த்யானத்தால் அறிந்து வணங்கித் துதித்தார். ''படைப்பிற்கும், காப்பிற்கும் ஒடுக்கத்திற்கும் காரணமானவரும், உலகின் நடைமுறையின் ஸாக்ஷியும், உலகமானவரும், உலகின் ஆதியும் உலகை ஒடுக்குபவருமான விஷ்ணுவை வணங்குகிறேன். உம்மைக் காணவே தவம் புரிந்தேன். நீர் ஒருவரே லீலையால் மூவரானீர். தன்னைத் தானே தன் இயல்புகளால் உணர்ந்து களிப்படைகிறீர். தத்துவமறிவதற்கென உலகம் உம்மீது ஏற்றிவைக்கப்பட்டுப் பின் அந்நிலை மறுக்கப்பட்டது. உம்மை விட்டுத் தனியே உலகமில்லை. மாயையால் 'நான்' 'எனது' பாவனையால் ஏற்பட்ட மதிமயக்கத்தால் உலகம் தனித்துப் புலப்படுகிறது. அத்திரியின் இந்தத் துதியைத் தொட்டிலில் பாலர் வடிவிலிருந்த மும்மூர்த்திகள் கேட்டதும் உணர்வு பெற்று முன் நிலையடைந்து அத்திரியை வரம் கோரக் கூறினர். (35)*

**स प्राह साध्वीं सुभगे ब्रह्मविष्णुमहेश्वराः ।**
**त्वद्भक्त्याप्ता मनोदूरा अतोऽभीष्टं वरं वृणु ।। ३६**

**साऽप्याह सुतपः सृष्ट्यै त्रिधाभूतेन वै भवान् ।**
**सृष्टोऽमुनाऽमुमेवातः पुत्रत्वेन वृणोत्वजम् ।। ३७**

**ऋषिः सोऽपीदमेवेष्टं मत्वा वव्रे तदेव हि ।**
**विष्णुः सर्वात्मनाऽहं ते मया दत्तः किलाब्रवीत् ।। ३८**

**पतिव्रताप्रभावोऽयं बाला भूत्वेश्वराः स्थिताः ।**
**स्वस्वप्राग्रूपतोऽप्येते स्वं स्वं स्थानं ययुस्त्रयः ।। ३९**

**पृथङ्नामानि बालेभ्यो ददौ तेभ्योऽर्थविन्मुनिः ।**
**पूर्णत्वेन मयाऽहं ते दत्त इत्युक्तवान् स्वयम् ।। ४०**

भगवानिति नाम्नैनं मुनिर्दत्तं चकार सः ।
ब्रह्मांशं चन्दनाच्चन्द्रमौग्रं दुर्वाससन्तथा ॥ ४१

त्रयाणामप्ययं साक्षाद्दत्तस्तु भगवान्स्वयम् ।
श्रुत्यन्विष्टाङ्घ्र्यब्जरेणुः सच्चिदानन्दविग्रहः ॥ ४२

सदेष्टयोगसंविद्दः स्मर्तृगामी क्षणे क्षणे ।
चण्डोऽप्यन्योऽनुग्रहाशीश्चन्द्रो जननवर्धनः ॥ ४३

*அத்திரி அனஸூயையிடம் கூறினார். ஸௌபாக்ய முள்ளவளே! மனத்திற்கெட்டாத ப்ரஹ்மாவும், விஷ்ணுவும், ஈச்வரனும் உன் பக்தியால் இங்கு வந்துள்ளனர். அதனால் நீ விரும்பியதைக் கோருவாய் என. அவளோ அத்திரியிடம் கூறினாள். ''நல்ல தவம் செய்தவரே ! படைப்பைத் தொடரவே மூவரான, இவரால் படைக்கப்பட்டீர். அதனால் இந்த மூவரான விஷ்ணுவே உமது புதல்வராக வரம் கேட்பீர் என்றாள். இதுவே தனது விருப்பமும் என்று எண்ணிய முனிவர் அதனையே கோரினார். விஷ்ணுவோ என்னையோ முழுவதும் உமக்கு அளித்துவிட்டேன் பதிவ்ரதையின் சக்தியால். என்றார். ஈசர்கள் பாலர்களாயினர். அவர்கள் மறுபடி தன் நிலை பெற்றுத் தன் தன்னிடம் சென்றனர். பொருளறிந்த முனிவர் பாலர்களுக்குப் பெயரிட்டார். தன்னையே தந்ததாக (தத்தராக) பகவான் சொன்னதால் விஷ்ணுவின் அம்சமான பாலனுக்கு தத்தர் எனப் பெயரிட்டார். ப்ரஹ்மாவின் அம்சமான பாலன் குளிர்வித்ததால் சந்த்ரன் எனவும், சிவனின் அம்சமான பாலன் துர்வாஸர் எனவும் பெயர் பெற்றனர். இவர்களில் தத்தர் பகவானான விஷ்ணுவே. வேதத்தால் தேடப் பெறுபவர். பேரிருக்கையும் பேருணர்வும் பேரானந்தமுமானவர். யோக ஸித்தியை அருள்பவர், நினைத்த நொடியில் முன் நிற்பவர். துர்வாஸர் கோபமுள்ளவரானாலும் அருள் புரிபவர். சந்த்ரன் உலகைப் போஷிப்பவர். (43)*

दुर्वासःशापमाश्रुत्य भूदेवार्थमनन्तशः ।
धृत्वावतारान्कार्यान्ते लीलाकायान्जहात्यजः ॥ ४४

परानुग्रहकार्यार्थमवतीर्णः स्वयं किल।
दत्तरूपेण कार्यस्य नित्यत्वान्नामुमत्यजत्॥ ४५

नामधारक उवाच—
कुतो दुर्वाससा शप्तः शापोऽव्यक्ते कथं वद।
लग्नः परावरेऽमुं मे संशयं छेत्तुमर्हसि॥ ४६

सिद्ध उवाच—
भक्ताधीनतया त्वेष भगवान् भक्तिभावनः।
अव्यक्तोऽप्यस्ति सुव्यक्तः पूर्णाऽतोऽत्र सहिष्णुता॥ ४७

*பகவான் பிறப்பற்றவர். எனினும் துர்வாஸரின் சாபத்தை ஏற்று பூமியையும் தேவர்களையும் காப்பதற்காகப் பல அவதாரங்களை எடுக்கிறார். லீலையால் ஏற்ற வடிவங்களுக்கான பணிகள் முடிந்ததும் வடிவங்களைக் களைந்து விடுகிறார். பகவான் பக்தருக்கு அருள் புரியவே தத்தர் வடிவில் தோன்றினாலும் பிறருக்கு நல்வழி காட்டுகிற பணி தொடர்ந்து நடப்பதால் தான் ஏற்ற லீலை வடிவைத் துறப்பதில்லை.*

*துர்வாஸர் சாபமிடக் காரணம் என்ன? எல்லா வற்றிற்கும் அப்பாற்பட்ட பகவானிடம் அந்த சாபம் எப்படி ஒட்டியது? இதனை விளக்குவீர்'' என நாமதாரகர் கேட்க ஸித்தர் கூறுகிறார். பகவானாயினும் பக்தரிடம் அடங்கி நடப்பவரே. பக்தியை மதிப்பவர். எவ்வகையிலும் வெளிப்படாதவர். எனினும் பக்தருக்குக் காட்சி தருபவரே. இவரது சகிப்புத் தன்மை பூர்ணமானதே. (47)*

पुराऽम्बरीषनामैको भक्तो भागवतोत्तमः।
एकादशीव्रतपर आसीदभ्यागतार्चकः॥ ४८

एकदा व्रतभङ्गाय पारणाहे तदालयम्।
चण्डः प्राप्याह दुर्वासा भोजनं मेऽर्पयेति च॥ ४९

दास्यामीत्युक्तवत्यस्मिन्गत्वा स्नातुं नदीमरम् ।
छिद्रान्वेषी तत्र तस्थौ तरितुं पारणाक्षणम् ।। ५०

सोऽप्यभुक्ते मुनौ भोज्यं नान्यथा व्रतभङ्गभीः ।
तीर्थात्तूभयसिद्धिर्मे इति मत्वा पपौ जलम् ।। ५१

तदैत्याह मुनिः पीतं हित्वा मां क्षुधितं यतः ।
दुर्भगानेन दोषेण भ्रमिष्यसि भवे भवे ।। ५२

इत्युक्तः सोऽप्यजं भीतो दध्यौ स्वकुलदैवतम् ।
स्वदासजीवनं विष्णुं सोऽप्यागत्याह तं मुनिम् ।। ५३

मुने मोघं न ते वाक्यं शापं देहि तमेव मे ।
नायं सोढुं प्रभुर्भक्तवात्सल्यान्मे सहिष्णुता ।। ५४

*முன்னர் அம்பரீஷன் என்ெருரு பக்தர் பகவானைச் சார்ந்தவர்களில் சிறந்தவர். ஏகாதசி வ்ரதம் கடைபிடிப்பதில் முனைந்தவர். தன்னை நாடிவந்தவரைப் பூஜிப்பவர். ஒருநாள் அவரது வ்ரதத்தைக் கெடுப்பதற்கென பாரணை நாளில் அவரது வீட்டிற்கு வந்த முரடரான துர்வாஸர் உணவளிக்க வேண்டிஞர். அம்பரீஷன் அதனை ஏற்றதும் துர்வாஸர் வேகத்துடன் நீராடச் சென்ருர். அங்கு சென்றதும் வ்ரதத்தைக் கெடுக்க வழிதேடியவர் பாரணை வேளை முடியும் வரை ஆற்றங்கரையில் தங்கிஞர். முனிவர் உணவேற்பதற்கு முன் தான் உணவேற்கக் கூடாது. உணவேற்காவிடில் வ்ரதம் முறிந்து விடும். நீரைப் பருகுவது இரு நிலைகளுக்கும் பொருந்தும் என்று கருதி அம்பரீஷன் நீரைப் பருகிஞர். அப்போது அங்கு வந்த முனிவர் பசியால் வாடிய என்னை மதிக்காமல் நீர் பருகியதால் ஒவ்வொரு பிறவியிலும் சுழன்று துயருறுவாய் எனச் சபித்தார். இதனைக் கேட்ட அம்பரீஷர் தன் குலதைவமான நாராயணனைத் த்யானித்தார். நாராயணன் தன் அடியார்களை வாழ்விப்பவரல்லவா? நாராயணன் முனிவர் முன் தோன்றி ''முனிவரே ! உமது சொல் வீணுகாது. அந்தச் சாபத்தை எனக்குத் தருவீர். உம் சாபத்தை இவன் தாங்கமாட்டான். பக்தனிடம் உள்ள அன்பால் என்ஞல் அதைத் தாங்க முடியும் என்ருர். (54)*

इत्याकर्ण्य मुनिर्मत्वा भुव्ययं दुर्लभो नृणाम् ।
अम्बरीषप्रभावेण शापसम्बन्धकारणात् ।। ५५

भविष्यत्यत्र सुलभस्तच्छपाम्येनमित्यसौ ।
तं शशापाप्यजः शापाद् बहुधावतरत्यजः ।। ५६

अस्यावतारा मत्स्याद्याः पुराणोक्ता हि विश्रुताः ।
द्विवारमाविरासीत्स दीनान् त्रातुं जनान् कलौ।। ५७

अद्यापि तौ कामदौ स्तः पामरागोचरौ कलौ ।
यतकालकलौ द्राक्शं सिद्ध्येन्नान्यदतोऽवितः ।। ५८

*इति श्रीगुरुचरिते ज्ञानयोगे दत्तावतारकथनं नाम तृतीयोऽध्यायः।*

இதனைக் கேட்ட முனிவர் நினைத்தார். மாந்தருக்கு இவ்வாய்ப்பு கிடைத்தற்குரியது. அம்பரீஷனின் பெருமையால் சாபத்தொடர்பின் காரணமாக விஷ்ணு பூமியில் எளிதில் கிட்டுவார். அதனுல் அவரைச் சபிக்கிறேன் என. அவரது சாபத்தால் பிறப்பற்ற பகவான் பூமியில் பல தடவை அவதரிக்கிறுன். மத்ஸ்யர் முதலான அவதாரங்கள் பல பூமியில் நிகழ்ந்துள்ளன. கலியில் இருமுறை எளிய மக்களைக் காக்க அவதரித்துள்ளார். கலியில் பாமரர்கள் இந்த இரு அவதாரங்களைப் புரிந்து கொள்ளாவிடினும் அவ்விரு அவதாரங்களும் இன்று பக்தர் விரும்பியதைத் தருகின்றன. இக்கலியின் நற்செயல் செய்ய நினைத்ததும் பலனளிக்கிறது. கெட்ட செயல் முடித்தால் மட்டும் பலன் தருகிறது. அதனுல் தான் கலியை அடக்கவில்லை. (58)



## ।। अथ चतुर्थोऽध्यायः ।।

।।यदुरुवाच ।।

श्यायुःकीर्त्यृद्धिहेतुर्ना न्रर्थसक्तोऽन्यथा भवान् ।
कल्पः स्वज्ञो ज्ञोऽप्यकर्ता कुतोऽत्रातृट् समुत्विति ।। १ ।।

श्रीदत्तो यदुना पृष्टस्तं पुंसां श्रेयसेऽब्रवीत्।
परं ध्युपाश्रितगुरु-शिक्षितज्ञानमात्मनः ॥ २ ॥

न दैवानुगभूतार्तः क्ष्मेव धीरः सृतेश्चलेत्।
सदा परार्थोद्भवेहो नगाच्छिक्षेत्परात्मताम्॥ ३ ॥

## அத்தியாயம் 4

*(யயாதியின் புதல்வர் யது. பயமின்றி பற்றின்றி மக்கள் நடமாட்டமற்ற காட்டில் தரையில் அவதூதராகப்படுத்திருந்த தத்தரைக்கண்டு வியந்து அவரிடம் கேட்கிறார். இந்த வரலாறு ஸ்ரீமத் பாகவத்தில் (11-7,8,9) அவதூத கீதையாக வந்துள்ளது).*

யது கேட்கிறார்-செல்வத்தையும் ஆயுளையும் புகழையும் வேண்டி, மனிதன் அறம், பொருள், இன்பம், முக்தி என்ற பொருளை நாடுகிறான். நீரோ மாறுபட்டுள்ளீர். (திறமையின்மையாலோ, இயலாமையாலோ அறியாமையாலோ செயலற்றவராகத் தோன்றவில்லை) நீர் திறமையுள்ளவர். எல்லாம் வல்லவர். பேரறிஞர். ஆயினும் செயல்படாதவர். எதிலும் பற்றற்றவர். ஆயினும் ஆனந்தம் நிரம்பியவர் இதுஏன்? யது இவ்வாறு கேட்டதும், உலக நன்மைக்காக உள்ளத்தினுள் துலங்குகிற குருவால் உபதேசிக்கப்பட்டுத் தான் உணர்ந்ததைத் தத்தர் கூறினார்.

விதியையொட்டி நடக்கிற உயிரினத்தால் துயருற்ற போதும் மனிதன் பூமிபோல் பொறுத்து தன் வழி வழுவாமல் உறுதியுடன் இருக்கவேண்டும். பிறருக்காகவே தான் தோன்றியுள்ளதை உணர்ந்து, தானும் அதனையே விரும்பிப் பிறருக்காக வாழ்வதைக் மலையிடமிருந்து கற்கவேண்டும். (3)

प्राणवृत्त्याक्षिप्तहृद्वाग्विद्धृत्तुष्येन्न गोप्रियैः ।
तद्धुग्दोषगुणास्पृग्विधर्मासक्तश्च देहगः ॥ ४ ॥

गुणाश्रयो गुणैर्युज्येन्न गन्धैर्वायुवत्स्वदृक्।
कालोत्थगुणतेजोऽब्भूमयभावास्पृगित्पुमान्॥ ५ ॥

वायूत्थाब्दास्पृक्खवच्चान्तःस्थेनाभिदसङ्गती।
भाव्ये सर्वान्वयव्याप्त्या ब्रह्मात्मत्वात्ततात्मनः ॥ ६ ॥

रस्यः स्निग्धः प्रकृत्याच्छो ज्ञोऽब्वद्धाम्ना पुनाति नॄन्।
छन्नः स्पष्टोऽपि काम्यर्च्यः प्रागुदग्दात्रघं दहन् ॥ ७ ॥

क्वापि भुङ्क्ते तपस्तेजोदीप्तोऽक्षोभ्योऽपरिग्रहः।
मलास्पृक्सर्वभक्षोऽपि ज्ञोऽग्निवच्चेन्धसीयते ॥ ८ ॥

तत्तद्रूपः स्वमायोत्थोच्चसत्स्थेशोऽग्निहेतिवत्।
कालान्नित्येऽपि दृश्येते नात्मभूतोद्भवक्षती ॥ ९ ॥

உள்ளமும் வாக்கும் நிலைமாறுதிருக்க உயிர்(பிராணவாயு) போல் உணவென்று ஒன்றை ஏற்பதாலேயே நிறைவு பெறவேண்டும். புலன் விரும்புவதைப் பெற அல்ல வாழ்வது. வாழத் தேவையானதைச் சுவைக்கும் போது, அதன் குணத்தையும் குறையையும் காணக்கூடாது. காற்றைப்போல நறுமணத்தையோ கெட்டமணத்தையோ சுமந்தாலும் அதில் ஒட்டாமல் வாழவேண்டும். இதன் நடைமுறையைத் தானே தன்னுள் ஆராயவேண்டும். ஆகாயத்தில் வாயு அக்னி ஜலம் பூமி என்ற நான்கும் இருந்தாலும் ஆகாசம் ஒட்டாமல் அவற்றிற்கு இடம் தருவதுபோல் இருக்கவேண்டும். கனத்த மேகம் வாயுவால் இங்குமங்கும் விரட்டப்படும் போது ஆகாயம் அசைவற்றிருப்பதுபோல் வெளியில் பல மோதல்களிருந்தாலும் அதனுல் சலனமடையக்கூடாது. உள்ளே உள்ள ஆத்மாவிடமிருந்து வேறுபடாமையும் வெளிப்பொருளுடன் ஒட்டுதலின்மையும் கற்கவேண்டும். மனிதன் நீரைப்போல் தெளிந்து வெளிப்படாத இனிமையுடன் தன்னேடு ஒட்டியதையும் தூய்மைப்படுத்த வேண்டும். நெருப்பு மூடப்பட்டாலும் தொடப்பட்டாலும் சுடும். சூட்டை விரும்புபவருக்கு இதமானது. முன்னிட்டதையும் பின் இட்டதையும் சாப்பிடும். நேரமும் இடமும் கருதாமல் சாப்பிடும். எதனைச் சாப்பிடுகிறதோ அதன் வடிவத்தை ஏற்கும். அதுபோல் இந்த ஆத்மா, தேவர் மனிதர் மிருகம் என எந்த உடல் பெற்ருலும்

அதுவேயாகிக் காணப்படும். அதற் கேற்ற உணவைத் தனதாகக் கொள்ளும். உடலுக்கேற்றவேடமே இது. உண்மை நிலையல்ல. ஆத்மாவுடன் காலத்தின் நிர்பந்தத்தால் கூடிய உடலின் தோற்றமும் அழிவும் ஒவ்வொரு நொடியிலும் நிகழ்ந்தாலும் அது உண்மையல்ல. நெருப்பு கொழுந்துவிட்டெரிகிறதெனில் நெருப்பு எரியவில்லை. நெருப்பால் எரிக்கப்படுவதே எரிகிறது. எரிகிற பொருளின் தோற்றத்தையே எரிக்கிற நெருப்பின் தோற்றமாகக் கொள்வது அறியாமையால் (9)

देहः कलावद्विकारी कालेनात्माब्जवद् ध्रुवः ।
भात्यात्मा तत्स्थवद्व्यक्तौ न स्वस्थो बुध्यतेऽर्कवत् ॥१०॥

स्थूलबुद्ध्याऽर्कवद्गोभिर्गा यथास्वं गुणैर्गुणान् ।
आदत्ते विसृजत्यत्र सदा योगी न युज्यते ॥ ११ ॥

உடல் சந்திரகலை போல் காலத்தால் மாறுபடுடையது. ஆத்மாவோ மாறுபாடற்ற நித்தியப்பொருள். குடத்திலுள்ள நீர் குடவடிவடைவது போல் ஆத்மா தான் ஏற்ற உடலின் வடிவில் தெரிகிறது. நீரில் பிரதிபிம்பமாகத் தெரிகிற ஸூரியன் போல் வானிலுள்ள சூர்யன் காணப்படுவதில்லை. ஸூரியன் தன் ஒளிக்கதிர்களால் பூமியிலுள்ள நீரை உறுஞ்சி எடுத்து உரிய காலத்தில் திருப்பியளிப்பான். அதில் தனதென்று தான் கொடுத்ததென்று உரிமை கொண்டாடுவதில்லை. ஜ்ஞானியும் அவ்வாறே கெட்டதை எடுத்து நல்லதாக மாற்றித் திரும்பித்தருவார். அதில்உரிமைபாராட்டமாட்டார். (11)

नाऽतिस्नेहप्रसङ्गात्को नश्येद्दीनः कपोतवत् ।
कश्चित्कपोतः कपोती क्रीडादौ चेरतुर्वने ॥ १२ ॥

प्रेम्णाऽशङ्कं मिथोबद्धध्यक्ष्यङ्गौ पाति स श्रमात् ।
तर्पयन्ती साऽसूताभांस्तांस्तौ पुपुषतुर्मुदा ॥ १३ ॥

कदाचिल्लुब्धको नीडाद् बहिःस्थांस्ताञ्छिचाददे ।
क्रोशन्तीं पतितां दुःखात्-तां तं चापस्मृतिं तथा ॥ १४ ॥

द्वन्द्वारामः प्रियाऽशान्तो गृहासक्तो विवन्नरः ।
क्रान्तापावृतमुक्तिद्वार्-नृजन्मच्युत एव सः ॥ १५ ॥

*அதிக அன்புப் பாசத்தில் கட்டுப்பட்டுப் புறு போல் அழியக் கூடாது. ஆண்புறுவும், பெண்புறுவும் காட்டில் அன்புடன் கவலையற்றுத் திரிந்தன. உள்ளத்தாலும் உடலாலும் இணைந்தன. பெண்புறு பல குஞ்சுகளைப்பெற்றது. இருவரும் மகிழ்ச்சியுடன் அவற்றை வளர்த்தன. ஒரு வேடன் கவலையற்றுத் திரிந்த அவற்றை வலையில் பிடித்தான். மனிதனும் அந்தப்பறவையைப் போல் ஸுகதுக்கங்களைப் பெரிதுபடுத்தி இனிய பொருளில் நாட்டம் குறையாமல் வீட்டில் குடும்பத்தில் ஈடுபாடு மிகுந்து வெளியேற வழியின்றி மனிதப்பிறவியை வீணடிக்கிறான். (15)*

काप्यस्त्यैन्द्रियसौख्यं तन्नेच्छेदाजगरोऽक्रियः ।
यदृच्छयाप्तं महान्तं ग्रासं वाल्पं रसारसम् ॥ १६ ॥

भक्षेच्चेन्नाप्तोऽनशनो दैवभुक्सर्पवत्स्वपन् ।
विनिद्रोऽक्रियबल्यङ्ग-धृग्गोमानपि नेहते ॥ १७ ॥

पूर्णो हीनोऽप्यजपरो न सर्पति न शुष्यति ।
ज्ञोऽब्धिवत्सिन्धुभिर्निम्नोऽनन्तपारो दुरत्ययः ॥ १८ ॥

सदाऽक्षोभ्यो दुर्विगाह्यः प्रसन्नः स्तिमिताब्धिवत् ।
नाऽवशोऽग्नौ विवन्नश्येत् स्त्रीलीलारूपमोहतः ॥ १९ ॥

*ஸுகமெங்கே எனத் தேடக்கூடாது. செயல்படாமல் தானே கிடைத்ததில் மலைப்பாம்பு போல் நிறைவு காணவேண்டும். கிடைத்தது பெரிதா, சிறிதா? ருசி மிக்கதா, ருசியற்றதா எனச் சீர்தூக்கிப்பார்க்காமல் வாயருகே வந்ததைச் சாப்பிடவேண்டும். உணவு கிட்டாவிடினும், விதி தானே உணவைக் கொண்டு சேர்க்கும் என்ற கருத்தில் மலைப்பாம்பு போல் தூங்கவேண்டும். பொறிகள் கூர்மையுடன் இயங்கினாலும் முயற்சியின்றி வலிவுமிக்க உடலைத்தாங்கி கண் முதலியவற்றைக் கூட இயக்காமல் அமைதி காக்கவேண்டும். ஈசனை நம்பியவன் நிறைவுற்ற நிலையிலும் குறைந்தாலும் கடல்போல் எல்லை மீறாமலும் வரளாமலும்*

இருக்கவேண்டும். பள்ளத்தில் தன்னைத் தாழ்த்தியும் அக்கரை தாண்டாமலும் கடக்கமுடியாமலும் இருக்கவேண்டும். அலைமோதாத கடல்போல் அசைவற்றிருக்க வேண்டும் பெண்ணின் அழகில் மயங்கி தன்னிலை இழந்த ஆண்மகன் நெருப்பில் விழுந்த ஈசல் போல் அழிவான். *(19)*

**गृह्णीयात्सर्वतः सारं रमेन्नैकत्र चाल्पभुक्।**
**संग्रहे नाशबीजेऽपि मधुकृद्वन्मुनिः सदा ॥ २० ॥**

**बध्येत नाङ्गनास्पर्शाच्छूरैर्हन्येत वेभवत्।**
**अन्योऽकात्सञ्चितं लुब्धैर्न भुक्तं नार्पितं धनम् ॥ २१ ॥**

தேனீ போல் பூவிலிருந்து தேனைப்போல் எல்லாப் பொருட்களிலிருந்தும் ஸாரமானதை எடுத்துக்கொள்ளவேண்டும். அற்பத்தை எதிர்பார்த்து ஓரிடத்தில் தங்கக்கூடாது. சேமித்ததில் சிறிதளவே அனுபவிக்கவேண்டும். தாமரையில் தேன் சேமிக்க வந்த தேனீ மாலையில் தாமரை சுருங்கும் போது மது மயக்கத்தால் நிலை உணராமல் கட்டுப்படும். அதுபோல் அழிவு தருவதில் மனத்தைச் செலுத்தக் கூடாது. பெண் யானையைத் தன்னை மறந்து தொடர்கிற ஆண்யானை பிடிபட்டுக் கொல்லப்படுவது போல் மனிதன் பெண்ணாசையால் அழியக் கூடாது. தேனீ தான் கஷ்டப்பட்டுச் சேமித்த தேனைத் தானும் அனுபவிக்காமல் பிறருக்கும் கொடாமல் தேன் சேமிப்பவரிடம் பறி கொடுப்பது போல் கருமி சேமித்ததைத்தானும் அனுபவிக்காமல் பிறருக்கும் கொடுக்காமல் வேறொருவன் அனுபவிக்கப்பறி கொடுப்பான். *(21)*

**भुङ्क्तेऽकार्जितगृह्यन्नं प्राग्भिक्षुर्मधुहेव च।**
**ना बध्येतैणवद्गीतात्-नृत्याद्वाप्यृष्यशृङ्गवत् ॥ २२ ॥**

**प्रमाथिजिह्वया नैति बडिशैर्मत्स्यवल्लयम्।**
**जय्याल्पभुज्या साऽसक्त्या जितं सर्वं जिते रसे ॥ २३ ॥**

**वेश्यैकार्थदकान्ताशाध्वस्तनिद्रा सुखावहम्।**
**चिन्ताहेतुं हि निर्वेदं गत्वाऽत्मस्थं रतार्थदम् ॥ २४**

रामं हित्वा कुवृत्त्यान्यं भीशुङ्मोहदमध्रुवम्।
काङ्क्षे धिङ्मात्मनात्मानं रमे क्रीत्वाऽमुनेति सा ।। २५ ।।

मत्वा तथाऽभूद्व्याशाऽकं नैराश्यं परमं सुखम्।
परिग्रहोऽकाय तज्ज्ञोऽस्वोऽप्यनन्तसुखायते ।। २६ ।।

இல்லறத்தான் கஷ்டப்பட்டுத் தயாரித்த உணவை முதலில் ஆண்டி சாப்பிடுவான். தேனீ சேமித்த தேனைச் சேகரிப்பவன் போல். பாட்டில் ஈடுபடும் மனிதன் மான் போல் கட்டுப்படுவான். நடனத்தில் ஈடுபடுபவன் ருச்ய ச்ருங்கர்போல் கட்டுப்படுவான். தூண்டிலில் மீன் போல் அடிமைப்படுத்துகிற உணவில் ஈடுபட்ட நாக்கால் மனிதன் பிடிபட்டு அழிவான். காதலன் நிறைய செல்வம் தருவதாக எதிர் பார்த்துத் தூக்கமிழந்து வாசலில் நின்று எதிர் பார்க்கிற பிங்களை எனும் வேசி கவலை மிகுதியால் வெறுப்பேற்பட்டுத் தன்னையே நொந்து கொண்டாள். காதல் வசப்பட்டுப் பெறுகிற உடலுறவு முதலியவற்றின் இன்பம் தன்னுள் உள்ள ஆத்மாவின் கூட்டால் பெறப்பட்டது. காதலனின் கூட்டால் அல்ல. இன்பம் தருகிற ஆத்மாவுடன் தான் கூடுவேன். தவருன வழியில் பயமும் சோகமும் மயக்கமும் தருகிற அழியக்கூடிய ஜாரபுருஷனை நான் நாடுவது நிந்தைக்குரியது. அதனுல் இது வரை இந்த உடலை ஜாரபுருஷனிடம் விற்றதைப்போல் என் உள்ளத்து ஆத்மாவிற்குவிற்று அடிமைப்படுத்தி அவருடன் களிப்பேன் என்று உறுதியுடன் வீட்டின் உள்ளே சென்று நன்கு தூங்கினுள். நாட்டம் தான் துன்பம் தரும். நாட்டமின்மை பெரும் சுகம். நாடிச் சேமித்த பொருள் இருந்தாலும் அழிந்தாலும் துன்பம் தரும். நாட்டமின்றி அமைதியாயிருப்பதே மிக மிக நல்லது. (26)

सामिषं कुररं हन्ति शूरोऽतो व्यामिषः सुखी।
मानावमानचिन्तोनः स्वक्रीडः स्वरतिः सुखी ।। २७ ।।

बालवद्धि जडोऽज्ञोऽर्भ श्चात्मानन्दो गुणातिगः।
भङ्क्त्वैकैकं महारावान् रणन्तौ द्वौ कुमार्यपि ।। २८ ।।

पाण्योर्धृत्वैकैकशङ्खं रहःकृत्येऽलभत्सुखम्।
कलिर्भूम्नि द्वयोर्वार्ता ह्येकस्तच्छङ्खवच्चरेत्॥ २९॥

கொழுத்த கழுகை சூரன் அடித்துக் கொல்வான். சதைப்பற்றின்றி இளைத்தகழுகைச் சூரன் நாடமாட்டான். மதிப்பு, அவமதிப்பு, கவலை எதுவுமின்றி தன்னேடு விளையாடி, தன்னிடமே ஆர்வம் காட்டுகிற குழந்தை இன்பம் பெறும். ஜடமாக, முயற்சியின்றிப் பேதையாகக் காட்சி தருகிற குழந்தை தன்னைத் தானே கண்டு ஆனந்தமடையும். இயற்கைக்கு அப்பாலுள்ள ஆத்மாவே ஆனந்தம். இதனைப் பயிற்சியால் பெறலாம். ஒரு சிறுமி ரகசியச் செயலில் ஈடுபட்டவள், தன் தனிமையை ஒலியால் கலைக்கிற வளையல்களை அகற்றினள். இரண்டு வளைகளை மட்டும் போட்டுக் கொண்டாள். அப்போதும் ஒலி எழுந்ததால் இரண்டாவது வளையையும் கழற்றினள் தனிமையை இனிது அனுபவித்தாள். பலருடன் வாழ்வது கலகத்திற்கு இடம். இருவராக வாழ்ந்தாலும் பேச்சிற்கு இடமுண்டு. அதனல் ஏகாகியாகவே தவம் புரியவேண்டும். (29)

एकचार्यप्रमत्तोऽल्पवाग्गुहास्थोऽगृहो मुनिः।
एकोऽहिवद्रत्यलक्ष्यो गृहारम्भोऽध्रुवात्मनः॥ ३०॥

विफलोऽकाय सर्पोऽन्य कृतधाम्न्येधते सुखम्।
जितश्वासासनेनेशे वैराग्याभ्यासबद्धहृत्॥ ३१॥

संयुक्तं वासनां मुक्त्वा सत्त्ववृद्ध्यैत्यनिन्धनम्।
निर्वाणं वेत्त्यतो नान्त र्बहिःस्थं मुनिरात्मदृक्॥ ३२॥

यथेष्वितात्मेषुकृन्नो वेदेनं यान्तमग्रतः।
प्रेम्णाऽप्यचलहृद्ध्यानाद् विष्णोः सारूप्यमेति ना॥ ३३॥

கவனம் சிதையாமல், தனியே வாழ்ந்து, மௌனத்துடன், தங்க இடம் தேடாமல் குகையில் தங்கி, பாம்பு போல் பிறர் கண்களில் படாமல் முனிவன் வாழ்வான். பாம்பு தனக்கு இடம் தேடுவதில்லை. எலிவளையில் தங்கும். பிறர் கண்களில் படாமல்

ஊர்ந்து செல்லும். மூச்சடக்கி ஓரிடத்தில் அமர்ந்து பற்றின்மை பழகி மனத்தை அடக்கி ஒட்டியுள்ள துர்வாஸனைகளை அகற்றி ஸத்வகுணத்தை வளர்த்து வாழும் போது எரிபொருளற்ற நெருப்பு போல் வாஸனை தானே அணைந்து சாம்பலாகிவிடும். தன்னைத் தவிர உள்ளும் புறமும் வேறு பொருளிருப்பதை உணரமாட்டான். அம்பு எய்ய முனைந்த வீரன் குறியிலேயே உள்ளத்தைப்பதித்து எதிரில் பெரும்பரிவாரத்துடன் வருகிற அரசனைக் கூடக் காணமாட்டான். கூட்டில் அடைக்கப்பட்ட புழு கொட்ட வருகிற குளவியை மட்டும் நினைத்து முடிவில் குளவியாகவே மாறும். அசையாத சித்தத்துடன் விஷ்ணுவிடம் பதிந்தவன் அதே எண்ணத்தால் விஷ்ணுவாகவே ஆகிவிடுவான். *(33)*

**प्राग्रूपमुत्सुजन्पेशस्कृद्ध्यानात्कीटवद्गतम् ।**
**यथोर्णनाभिस्ततोर्णां विहार्यान्तेऽत्ति तां तथा ॥ ३४ ॥**

**प्राक्स्वमायासृष्टमेकः संहृत्याभूत् क्षयेऽद्वयः ।**
**शक्त्याऽखिलाश्रयः सर्वेट् कालेनात्मानुभावतः ॥ ३५ ॥**

**साम्येतसत्त्वादिशक्तिः प्रधानपुरुषेडजः ।**
**व्युपाधिः परमानन्दो मोक्षाख्यः सपरावरः ॥ ३६ ॥**

சிலந்தி வேறொரு பொருளையும் எதிர்பாராமல் தன்னிடமிருந்து நூலை வெளிப்படுத்தித்தானே வலையைத் தன்னுள் பின்னி அதில் வாழ்ந்து தானே ஒவ்வொரு நூலாக விழுங்கி வலையைத் தன்னுள் ஒடுக்கி விடுகிறது. அவ்வாறே ஈசன் தன்னிடமிருந்து தானே மாயையால் தானுகிய உலகைப்படைத்து அதில் வாழ்ந்து விளையாடித் தானே அதனைத் தன்னுள் ஒடுக்கிக் கொள்கிறுன். அப்போது அவன் ஒருவனே மீதமாக உள்ளான். தன் சக்தியான மாயையையே கருவியாகக்கொண்டு காலத்தால் ஸத்வம் முதலிய குணங்களை ஸமநிலைக்குக் கொணர்ந்து பிரகிருதி எனும் இயற்கையை ஒய்வு பெறச் செய்து புருஷனுன ஜீவனைத்தன்னுள் கலக்கச் செய்து படைப்பும் காப்பும் ஒடுக்கமுமின்றி பேரானந்த நிலையில் உள்ளான். *(36)*

गुणात्मिकां स्वमायां स क्षोभयन्स्वानुभावतः।
तया सृजति सूत्रं सा त्रिगुणा शक्तिरासृजत्॥ ३७
विश्वं यस्मिन्प्रोतमेतद् येन संसरते पुमान्।
देहात्स्तो बोधवैराग्ये पारक्यात्सोद्भवक्षयात्॥ ३८॥

आत्मेष्टभृत्सृष्टबीजः प्रियेच्छुर्नश्यति द्रुवत्।
गावः स्वार्थे सपत्नीवत्तं लुनन्ति हि दुर्लभम्॥ ३९॥

मत्वा नृजन्मात्तवित्क्ष्मां चरे मुक्तोऽनहंकृतिः।
तच्छ्रुत्वा समचित्तोऽभून्मुक्तसङ्गो यदुर्द्रुतम्॥ ४०॥

*பின் தன் பெருமையால் முக்குண ஸமநிலையை மாயையால் வெளிப்படுத்தி ஸமநிலைமாற அதனைக் கடைந்து குழப்பி உலகின் மூல காரணமான ஸூத்ராத்மாவை வெளிப்படுத்தி முக்குணங்களைக் கொண்டே உலகைப்படைக்கிறார். விரிவுற்றுப்பரவிக் கொண்டேயிருக்கிற (ஸம்ஸாரநிலைபெற்ற) உலகினுள்ளும் வெளியிலும் ஊடும்பாவும் போல் பின்னியிருப்பது ஈசன் மட்டுமே. தன்னுர்வமின்றி வேறு வெளிப் பொருளை ஒட்டியே வாழ்கிற உடலான உலகம் உற்பத்தியும் தேய்வும் கொண்டது. இந்நிலையை உணர்ந்தால் ஜ்ஞானமும் பற்றின்மையும் உண்டாகும். தன் விருப்பத்தை நாடித் தான் விரும்பியதைப் பெற்றதால் புஷ்டிபெற்று வேறு உடலைப்பெறுவதற்கான விதையான வினையைப்படைத்து விட்டு மரம் போல் மனிதன் அழிகிறுன். அவனுக்கு உதவ வந்த இந்திரியங்களோ தான் விரும்பியதை நாடி வெளியே செல்கின்றன. சக்களத்திகள் போன்று அவர்களுள் போட்டி ஏற்பட்டு யஜமானனை மனிதனை அழிவிற்கு இட்டுச் செல்கின்றன. இத்தனை கேடுகள் கொண்டதாயினும் மனிதப் பிறவி கிடைப்பதற்கரிது. அதனுல் அதனை நல்ல வழியில் பயன்படுத்தக்கற்று, ஒட்டுதலும் அகந்தையுமின்றி, உலகைச் சுற்றிவா. இவ்வாறு அந்த தத்தராகிய ஆண்டி கூறியதைக் கேட்டு சித்தத்தின் ஸமநிலையடைந்த யது உடன் அமைதி பெற்றுர். (40)*

कष्टसंसारादिहेतु-प्राणार्थेहापनुत्तये।
वैराग्यतोषदमधुकृन्महाहिसुशिक्षितम्।। ४१ ।।

प्रह्लादायाप्यात्मतत्त्वं प्राहेदं भगवान् परम्।
स्वरूपं सुखमीहोपरतिस्तनुरशाश्वतान्।। ४२ ।।

दृष्ट्वा भोगान्संविशन्सन् स्वपेन्नेतः परं हितम्।
हुनेद्विकल्पं चित्तौ तां मनस्यर्थभ्रमे तु तत्।। ४३ ।।

वैकारिके तं मायायां तां स्वस्मिन्विरमेत्ततः।
इत्युक्त्वा विरराामाजः प्रह्लादोऽप्यभवत्तथा।। ४४ ।।

பிரஹ்லாதனுக்கு தத்த பகவான் ஆத்மதத்வத்தை உபதேசித்தார். இந்திரியங்களும் மனமும் வெளியுலகில்பரவி விரிந்து எல்லாவற்றையும் தானும் தனதுமாக்குகிற ஸம்ஸாரம் எனும் கடல் எளிதில் கடக்க இயலாதது. தேனீயையும் மலைப்பாம்பையும் பார்த்துக் பெற்ற விவேகத்தால் பற்றின்மையும் ஆனந்தத்தையும் பெறலாம். ஆசையை அடக்கித்தன் நிலை உணர்வதால் ஆத்மாவே ஸுகம் என்பது உணரப்பெறுகிறது. வேறு பொருளால் ஏற்படுவதும் ஏற்றத் தாழ்வு கொண்டதும் நிலைத்திராததுமான இன்பத்தை ஆராய்ந்து அவைகளை எதிர்பார்க்காத நிலையே இன்பமாயிருப்பதை உணர்ந்து அமைதியுடன் உறங்குகிறேன். இதனைவிட இதமானது வேறொன்றில்லை. இதுவா அதுவா என்ற விகல்பத்தை, வேற்றுமையை உணர்த்துகிற மனப்போக்காகிய நெருப்பிலிடுவாய். மனப்போக்கு என்ற சஞ்சல நிலையை நிலைத்த மனத்திலிடுவாய். வேற்றுமை காண்கிற அஹந்தையில் அந்த மனத்தை இடுவாய். பிறகு அகந்தையும் தன்னிலை இழக்க, எல்லாம் மாயை எனும் பேரறியாமையில் இடுவாய். அதனைப் பேரறிவே வடிவான ஆத்மாவாகிய நெருப்பில் ஹோமம் செய்வாய். தத்தர் கூறியதைக் கேட்ட பிரஹ்லாதர் அவர் உபதேசித்தவாறு நடந்து மேனிலை பெற்றார். (44)

देवोऽर्जुनायापि योगं प्राहाष्टाङ्गं निवृत्तये।
सद्वाच्याविद्याशबल-ब्रह्मातोऽव्यक्तकं महत्।। ४५ ।।

ततस्ततोऽहङ्कारोऽस्मात् पञ्चतन्मात्रखाद्यतः ।
जगत्सकार्यविकृत-भूतान्युर्वात्मवर्ष्म तत् ।। ४६ ।।
जागृतिर्गोभिरर्थाप्तिर्विश्वस्तदभिमानवान् ।
सकार्यशुद्धभूतानि लैङ्गात्मात्मा स भौतिकः ।। ४७ ।।
हिरण्यगर्भः स्वप्नः स्यात् करणोपरमेऽर्थयुक् ।
प्राक्संस्कारोत्थानुभूतिस् तैजसोऽत्राभिमानवान् ।। ४८ ।।
द्विहेत्वात्मावित्साभासाऽव्याकृतं ज्ञानसंहृतिः ।
धीहेत्वात्मस्थितिः सुप्तिर्मानी प्राज्ञोऽत्र तत्परम् ।। ४९ ।।

*தத்ததேவர்(கிருதவீர்யரின் புதல்வஞன) அர்ஜுனனுக்கு சித்தத்தை விஷயங்களிலிருந்து திருப்புவதன் பொருட்டு அஷ்டாங்கயோகத்தை உபதேசித்தார். பரம் பொருளான ப்ரம்ஹம் ஸத் என்ற அவித்யை(மாயை)யுடன் கலந்தது. அதிலிருந்து வெளிப்படுகிற நிலைக்கு வராத அவ்யக்தம் எனும் பிரகிருதியும் அதிலிருந்து மஹத்தத்துவமும் அதிலிருந்து அஹங்காரமும் தோன்றின. அதிலிருந்து பஞ்சபூத தன் மாத்திரைகளும் பஞ்சபூதங்களும் உலகமும் வரிசையாகத் தோன்றின. ஐந்து பூதங்களும் தன் தன் நிலையிலிருந்து விலகி மற்றவற்ருேடு கலந்து வெளிப்பாடடைந்து விராட் என்ற நிலைக்கு வந்தன. ஆத்மாவின் ஸ்தூல சரீரம் இது. பஞ்ச பூதங்களின் ஸூக்ஷ்ம நிலையான இந்திரியங்களால் வெளிப்பொருள் (விஷயம்) உணரப்பட்ட அதை ஜாக்ரத் என்ற விழிப்பு நிலை என்பர். அது 17 தத்துவங்கள் இணைந்த லிங்க சரீரம். இந்திரியங்கள் பணியற்ற நிலையில் விழிப்பு நிலையில் பெற்ற ஸம்ஸ்காரத்தால் கனவு தோன்றுகிறது. இது ஸ்தூலஸூக்ஷ்ம சரீரா பிமானம் கொண்ட ஹிரண்யகர்ப்ப நிலை. ஸூக்ஷ்ம சரீரத்தையும் கனவையும் தனதாக நினைப்பவன் தைஜஸன். இவ்விரண்டு சரீரத்தின் காரணமான அஜ்ஞானம் இன்னதெனச் சுட்டிக்காட்ட முடியாத அவ்யாக்ருத(உருப்பெருத) சரீரம். எல்லா உணர்வுகளுக்கும் மூலவடிவமும் புத்தி காரணவடிவில் இருக்கும் நிலையும் ப்ராஜ்ஞன். ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரத்தைத்தனதாகக் கொண்ட ஆழ்ந்த தூக்க நிலை(ஸுஷுப்தி) ஆகும்.(49)*

शुद्धादिलक्ष्मचिन्मात्रं ब्रह्म वाक्येन लक्ष्यते।
यमादिवान्पीठवित्सद्गुरूक्त्याऽऽपूर्य चेडया ।। ५० ।।

प्राणं कुम्भितमन्यातो रेचयेदन्यमन्यथा।
जिते प्राणेऽर्थतो गाश्च मनसोपाहरेन्मनः ।। ५१ ।।

धारयेदात्मन्यचलं विक्षिप्तं शश्वदात्मनि।
स्थिरीकुर्वन् श्रुतं ध्यायेच्छ्रुतियुक्त्या निरासतः ।। ५२ ।।

विजातिप्रत्ययस्यान्यप्रवाहीकरणं भजेत्।
गुरूक्तं षड्लिङ्गवित्तं तं भागत्यागलक्षितम् ।। ५३ ।।

तत्त्वमस्यादिवाक्यार्थं सोऽहमात्मेत्यभेदतः ।
नादेयं नश्वरं चित्तं लये सम्बोधयेत्पुनः ।। ५४ ।।

विक्षिप्तं शमयेज्जह्यात् सकषायं समं वरम्।
नास्वादयेद्रसं तत्र निःसङ्गः प्रज्ञया भवेत् ।। ५५ ।।

निवातदीपवच्चित्तो ब्रह्मात्मा शून्यवृत्तिकः ।
कृतकृत्यः क्षीणकर्मा भिन्नहृद्ग्रन्थिसंशयः ।। ५६ ।

प्रारब्धभोक्तात्मारामो जीवन्मुक्तो भवेद्ध्रुवम्।
इत्युक्त्वोपररामेशः कार्तवीर्यस्तथाभजत् ।। ५७ ।।

इति श्रीगुरुचरिते ज्ञानयोगे दत्तलीलाकथनं नाम चतुर्थोऽध्यायः

இந்த மூன்று சரீரங்களுக்கும் அப்பாற்பட்ட சுத்தம் நித்யம் புத்தம் என்ற லக்ஷணங்கள் கொண்ட பிரும்மம் தத்வமஸி என்ற மஹாவாக்யத்தால் உணரக் கூடியது. யமம் நியமம் பழகி, ஆஸனமுறை அறிந்து அமர்ந்து, குரு வழிகாட்டியபடி இடை நாடியால் வாயுவை நிரப்பி கும்பகம் செய்து, பிங்களையால் காற்றை வெளியிட்டதும் முறைமாற்றி பிங்களையால் நிரப்பி கும்பகத்துடன் இடையால் வாயுவை வெளியிடவும். இவ்வாறு பழகிப் பிராண வாயுவை அடக்கியதும், மனத்தால்

வெளிப்பொருளை நாடுவதை நிறுத்தி, சித்தத்தை சலனமடையாமல் ஆத்மாவில் நிலைக்கச் செய்யவும். அது சலித்தால் மறுபடி ஆத்மாவில் நிலைக்கும்படி மஹாவாக்யங்களை மனனம் செய்து அதில் குறிப்பிட்ட பிரும்மத்தைத் தியானிக்க வேண்டும். இதில் ஒட்டாத ஒவ்வாத எண்ணங்கள் எழுவதைத் தடுத்து இதனையொட்டிய சிந்தனையில் ஈடுபடவேண்டும். குரு உபதேசித்தபடி மஹாவாக்கியப் பொருளுணர்ந்து அதில் உறுதி கண்டு நானே ஆத்மா (ஸோऽஹமாத்மா) என்று தனக்கும் ஆத்மாவிற்கும் வேற்றுமையின்மையை உணரவேண்டும். நிலையாக அணிமாதி ஸித்திகளில் ஈடுபடக்கூடாது. சித்தம் உணர்வற்றிருந்தால் எழுப்பவேண்டும். அலைந்தால் அடக்கவேண்டும். சிந்தனையில் அழுக்கிருந்தால் தியானத்தையே நிறுத்தவேண்டும். ஸமநிலை அடைந்ததைக் கலைக்கக் கூடாது. ஆனந்தத்தைத் தனிப்படுத்திச் சுவைக்கக்கூடாது. பேருணர்வால் எதனோடும் ஒட்டாதிருக்கவேண்டும். காற்றடிக்காத அறையில் உள்ள தீபம் போல் சித்தமசையாது ஒளிர்ந்தால் சித்தவிருத்திகள் எழாதிருந்தால் பிரும்ம நிலை அடைவான். அப்போது எண்ணியது நிறைவேறியதால் நிறைவை உணர்வான். வினைகள் அழிந்து விடும். இதயம் வெளி விஷயங்களுடன் பெற்ற முடிப்பு அவிழும். பிராரப்தம் முடியும் வரை ஆத்ம ஜ்ஞானியாக ஜீவன் முக்தனாக விளங்குவான். இது ஸத்தியம். இவ்வாறு தத்த பகவான் வழிகாட்ட கார்த்தவீர்யார்ஜுனன் குரு கூறியபடி முக்தி பெற்றான். (57)



# ॥ पंचमोऽध्यायः ॥

नामधारक उवाच—

पुराणोक्तावतारास्तु श्रुता यद्भवतोच्यते ।
तन्मे शुश्रूषवे व्यासाच्छंस त्वन्याश्च तत्कथाः ॥ १

सिद्ध उवाच—

साधु पृष्टं त्वया वत्स शृणुष्वावहितोऽमलाः ।
तत्कथा याः पुनन्त्यत्र श्रोतॄन्वक्तारमप्यघात् ॥ २

धर्मं गोप्तुं सतस्त्रातुं दुष्टान्हन्तुं युगे युगे ।
लीलाधाम्नाऽवतरति नाऽन्यत्किञ्चित्प्रयोजनम् ।। ३

दीनान्हीनमतीञ्ज्ञात्वा दुर्बलान्नॄन्स कच्चरे ।
आविरासीत्समुद्धर्तुं प्रेम्णा भक्तिविधित्सया ।। ४

पीठापुरे पूर्वदेशे राजा नाम द्विजो वधूः ।
सुमतिस्तावुभौ नित्यं श्रीदत्तार्चनतत्परौ ।। ५

அத்தியாயம்-5

*புராணங்களில் கூறப்பட்டுள்ள அவதாரங்களைப் பற்றிக் கேட்டறிந்து ஸ்ரீ தத்தரின் அவதாரங்களைப்பற்றிக் கேட்ட நாமதாரகரிடம் ஸித்தர் கூறுகிருர்.*

*ஸ்ரீ தத்தரின் அவதாரக் கதைகள் கேட்பவரையும் சொல்பவரையும் பாபங்களிலிருந்தும் மீட்கும். தர்மத்தையும் நல்லோர்களையும் காக்கவும், துஷ்டர்களை அழிக்கவும் அவ்வப்போது லீலை எனும் பேரருளால் அவர் தோன்றுகிருர். வேறு பயனேதுமில்லை. அறிவுகுன்றிய எளியவர்களை மேனிலைக்குக் கொணரவும் பக்தியை வளர்க்கவும் அன்பு மிகுதியால் அவர் தோன்றிஞர். பீடாபுரம் என்ற கிழக்குப்பகுதியில் ராஜா என்ற அந்தணன். அவனது மனைவி ஸுமதி இருவரும் தத்தரை வழிபடுபவர். (5)*

एकदैत्यास्य वेश्मार्थिवेषेणान्नं स्म याचते ।
दत्तः श्राद्धेऽकृतेऽप्यस्मै श्राद्धाहेऽन्नं ददौ सती ।। ६

तदा ज्ञात्वा स तद्भावं सर्वात्मा भगवान्विभुः ।
प्रीतः स्वरूपं साध्व्यै तत्करं धृत्वा व्यदर्शयत् ।। ७

स्रक्कुण्डीडमरूच्छूल-शङ्खचक्रधरोऽब्रवीत् ।
व्याघ्रचर्मावृतस्त्र्यास्यो जटिलो भस्मभूषितः ।। ८

मातर्द्विजेष्वभुक्तेषु श्राद्धाहेऽन्नं त्वयार्पितम् ।
हव्यकव्यादबुद्ध्या मे तत्तुष्टोस्मि वरं वद ।। ९

ஒரு நாள் அவர்கள் வீட்டில் சிராத்த நாளில் அதிதியாக வந்த ஸ்ரீ தத்தர் சிராத்தம் தொடங்கு முன்னரே உணவிடவேண்டினர். ஸுமதி அவருக்கு அன்னமிட்டாள். அவளது உள்ளத்தை உணர்ந்த தத்தர் அவள் முன் காட்சியளித்தார். மாலை, கெண்டி, உடுக்கு, சூலம், சங்கு, சக்கிரம் ஏந்தி, புலித்தோலை உடுத்தியவராக மூன்று முகங்களுடன் சடை தரித்து விபூதி பூசி, நின்றார். சிராத்தத்திற்கு வரிக்கப்பெற்ற அந்தணர் உண்ணுமுன்பே, சிராத்தநாளில் நீ அளித்த உணவு, தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் இட்ட உணவானது. நான் மகிழ்ந்தேன். வரம்கேள்'' என்றார் (9)

ब्राह्मण्युवाच -

धन्यास्मि सर्वे पितरोऽपि धन्या यद्यो भवान्योगिमनोविदूरः ।
भूत्वाद्य मे दृग्विषयोऽपि पित्र्यं स्वाद्वाददेऽन्नं किमुताधिकं सत् ॥१०
सृष्ट्यादिहेतो जगतोऽसि भक्त-पुमर्थकल्पद्रुरतोऽर्पयाशु ।
मे सुप्रजस्त्वं जनसेवि मातरित्युक्तसम्बोधनसिद्धिपूर्वम् ॥ ११
एवं श्रुत्वाऽत्रिवद्याच्चां प्राह भूयात्तथैव ते ।
पुत्रस्ते भविता मादृक्तदुक्तिं मा तिरस्कुरु ॥ १२
इत्युक्त्वाऽन्तर्दधे दत्तः सापि वेश्मैत्य हर्षिता ।
पत्ये शशंस तत्सर्वमुभावपि ननंदतुः ॥ १३

ब्राह्मण्युवाच—

मयापराद्धमद्यान्नं दत्तं श्राद्धेऽकृतेऽप्यहो ।
दत्तात्रेयाय तन्नाथ क्षन्तुमर्हस्यशेषतः ॥ १४

विप्र उवाच—

पित्रर्थं भोजयित्वाऽन्नैर्यैद्विजान्विष्णवेऽर्प्यते ।
कर्माभूत्स स्वयं तद्भुक्तत्कृतं सत्सुदुष्करम् ॥ १५
रूपान्तरेण मध्याह्ने दत्तोऽटत्यर्थिवत्स्वकान् ।
उद्धर्तुं भगवांस्तस्मात्तदाऽर्च्यो नान्यथाऽऽप्यते ॥ १६

तस्माद्भद्रे कृतं भद्रं धन्ये नः पावितं कुलम्।
वरोऽपि दुर्लभो लब्धो लोकस्यापि हितं यतः ॥ १७

इत्युक्त्वा लौकिकं श्राद्धं शेषान्नेनाकरोद् द्विजः।
साऽप्यथो गर्भिणी भूत्वा कालेऽसूतामुमप्यजम्॥ १८

*ஸுமதி கூறினுள் :— ஐயனே! யோகிகளின் சித்தத்திற்கும் எட்டாதவரே! என் கண்களுக்குப்புலப்பட்டீர். பித்ருக்களுக்காக இருந்த உணவை ஏற்றீர். நான் பாக்யம் பெற்றேன். எங்கள் முன்னோர்களும் பாக்கியமடைந்தனர். நீர் உலகம் தோன்றுவதற்கான ஆதி காரணம் பக்தர்கள் நாடுகிற மேன்மைகளை வழங்குபவர். நற்புதல்வனைப் பெற எனக்கு அருள்வீர். என்னை அம்மா என அழைக்கச் செய்வீர் "இவ்வாறு அத்திரி முனிவர் போன்று இவள் வேண்டியதைக் கேட்ட தத்தர் என்னைப் போன்ற மகன் உன்னிடம் தோன்றுவான். அவன் கூற விருப்பதை மறுக்காதே என்று கூறி அவர் மறைந்தார். அவள் தன் கணவரிடம் இதைக் கூற இருவரும் மகழ்ச்சியில் ஆழ்ந்தனர். ஸுமதி தன் கணவரிடம் சிராத்தநாளன்று சிராத்தம் முடியுமுன் வேறொருவருக்கு உணவிட்டதவறுன செயலை மன்னிக்க வேண்டினுள். அவரோ "பித்ருக்களாக அந்தணர்களை வரித்து உணவிட்டு அந்த நற்பணியை விஷ்ணுவிற்கு அளிப்பர். இங்கோ விஷ்ணுவே நேரில் அதனை ஏற்றுள்ளார். இது மிக அரிய செயல். தத்தர் தினமும் நடுப்பகலில் ஆண்டி வேடமிட்டுத் தன்னைச் சார்ந்தவர்களைக்காக்க உலாவுவார். அப்போது தான் அவரை வழிபட இயலும். மற்ற நேரத்தில் அவர் கிட்டுவதில்லை. மங்களமானவளே! நீ மங்களமானதைச் செய்தாய். நம் குலம் உன்னுல் காக்கப்பெற்றது. கிடைப்பதற்கரிய வரத்தைப் பெற்றுய். அது உலகத்திற்கே நன்மை புரிவது" என்றுர். சிராத்தம் முறைப்படி மீதியுள்ள உணவுப்பொருளைக் கொண்டு நிறைவுற்றது. அவளும் கருவுற்று தத்தரையே மகனுகப் பெற்றுள். (18)*

मर्त्याकृतिं तदोद्वीक्ष्य तं दैवज्ञा जगुर्द्विज।
ततपुण्यौघकल्पद्रु-फलं लब्धं सुदुर्लभम्॥ १९

अयं हि साक्षाद्भगवान्दत्तात्रेय इवार्चितः ।
अवतीर्णोऽत्र भक्त्यर्थमित्युक्त्वा ते मुदं ययुः ।। २०

श्रीपादः स्वङ्कितांघ्रित्वान्नाम्नोक्तः पितृलौल्यतः ।
स्वङ्गैरृद्धिं पुपोषारं सौरांश्वाप्तेः शशीव सः ।। २१

संस्कृतेनोपनीतेन स्वयं त्रय्यपि पाठिता ।
स्वोद्वाहार्थं समुद्युक्तः पिताऽनेन निवारितः ।। २२

*மனித உருவில் தோன்றிய அவரைப்பற்றிச் சோதிடர்கள் ''புண்யக்குவியலால் பெற்ற கல்பகமரத்தின் பழம் இவர். இவர் தத்தாத்ரேய பகவானே! உமது பக்தியின் காரணமாக இங்கு தோன்றியுள்ளார்'' என்றனர். குழந்தையின் உள்ளங்கால்களில் லக்ஷ்மீகரமான ரேகைகள் காணப்பட்டதால் ஸ்ரீ பாதர் என்று பெயரிட்டனர். பெற்றோரின் அரவணைப்பில் நல்ல அழகிய உடல்வளம் பெற்று ஸௌரிய ஒளி பெற்ற சந்திரன் போல் புஷ்டியுடன் வளர்ந்தார். உபநயனம் செய்விக்கப்பட்டதும் வேதம் முழுதும் ஓதித் தன் சிஷ்யர்களுக்கும் ஓதுவித்தார். அவருக்குத் தந்தை மணம் செய்விக்க முற்பட்டதும் ஸ்ரீ பாதர் அதனைத்தடுத்தார். (22)*

श्रीपाद उवाच—

मया प्रव्रजतोद्वाह्या योगश्रीरेव नापरा ।
ममैव सुलभा सा तु यतः श्रीवल्लभोऽस्म्यहम् ।। २३

इत्युक्त्वा प्रव्रजन्तं तं दृष्ट्वोभौ साश्रुलोचनौ ।
ऊचतुस्त्वयि याते क्व जीवावोऽब्जा इवाम्बुनि ।। २४

त्वं साक्षाद्भगवान्विष्णुः पुत्रत्वेनाप्यतीन्द्रियः ।
प्राक्पुण्यैर्गोचरीभूतः कुतोऽकाब्धौ जहासि नौ ।। २५

पङ्ग्वन्धाभेक्षणान्नित्यं भवपाशविमोचनी ।
स्मृतिः प्रवयसोर्नौ ते हरे दूरतरा भवेत् ।। २६

इति वाक्यं सकारुण्यं श्रुत्वारं भ्रातृमस्तके ।
सुखाकरं निजकरं तद्वात्सल्याद्दधौ हरिः ॥ २७

तदैव सहसा तौ तु स्वङ्गौ ज्ञौ च बभूवतुः ।
लीलाविहारिणीदन्नो चित्रं भगवतीश्वरे ॥ २८

''நான் துறவு பூண உள்ளேன் யோகலக்ஷ்மியை மணப்பேன். அவள் எனக்கு எளிதில் கிட்டுவாள். நான் ஸ்ரீ வல்லபன். (லக்ஷ்மியின் அன்புக்கணவன்) அதனுல் அவள் எளிதில் கிட்டக்கூடியவளே என்று கூறி வீட்டைத் துறந்து வெளியேறுகிற அவரைக் கண்ட பெற்ருேர் கண்ணீர் மல்க வேண்டினர். நீ வெளியேறினுல் நீரிலிருந்து அகற்றப்பட்ட மீன்கள் போல் உயிர் இழப்போம். நீர் புலனுக்கெட்டாத ஸ்ரீ விஷ்ணு பகவாஞயினும் முன் பிறவிகளின் புண்யத்தால் எமக்குப் புதல்வரானீர். இன்று எம்மைத் துயரக்கடலில் ஆழ்த்துகிறீர். ஹரே! ஸம்ஸாரக் கட்டிலிருந்து விடுவிப்பது உமது ஸ்மரணம். ஆனுல் (உம் கூடப்பிறந்த) நொண்டியும் குருடனுமான இவர்களைத் தினமும் காணும் போது உம் நினைவு அகலுமா? நாங்களும் முதுமை அடைந்து விட்டோம்.'' என்று அவர்கள் புலம்புவதைக் கேட்ட ஸ்ரீபாதர் அவ்விருசகோதரர்களின் தலையில் ஸுகம் தருகிற தன் கைகளை அன்புடன் வைத்தார். உடன் அவ்விருவரும் முடமும், குருடும் நீங்கி அழகும் அறிவும் பெற்று விளங்கினர். ஈசனின் விளையாட்டில் இது அற்புதமல்லவே. (28)

माताप्यदृष्टपूर्वं तद्रूपमाश्चर्यवत्तदा ।
दृष्ट्वा दत्तोदितं स्मृत्वा प्राह गद्गदया गिरा ॥ २९

माया दुरत्यया दैवी तव तन्मोहिता भृशम् ।
सत्वं रूपं न जानेऽतस्त्वयि मे पुत्रकल्पना ॥ ३०

ब्रह्माण्डलेखा यत्कुक्षौ स मत्कुक्षिज इत्यदः ।
जगद्विडम्बनं दत्त माया मां नावृणोतु ते ॥ ३१

*தாயான ஸுமதியும் இதுவரை காணப்பெறாத ஸ்ரீபாதரின் உருவத்தைக் கண்டு வியப்புற்று தத்தர் முன் கூறியதை நினைவிற் கொணர்ந்து தழதழக்கின்ற குரலில் கூறினார். "தத்த பகவானே! உமது மாயை எவராலும் மீற முடியாதது. அதனால் மயங்கிய நான் உமது ஆற்றலையும் உருவையும் அறியேன். அதனால் உம்மிடம் புத்திரன் என்ற எண்ணம் பதிந்தது. இந்த பிரும்மாண்டவரிசை எவரது வயிற்றினுள் அடங்கியுள்ளதோ அதனிடம் என் கருவில் தோன்றியதென்றஎண்ணம் உண்டானது. உம் மாயை உலகை மயக்கும். அது எனது அறிவை மறைக்காதிருக்கட்டும்.(31)*

श्रीपाद उवाच—

अदो रूपं त्वया दृष्टं नित्यं हृद्यवधारय।
मायासिन्धुं द्रुतं तीर्त्वा मत्सायुज्यं गमिष्यसि॥ ३२

शतायुषौ सुतौ तेऽपि पितृशुश्रूषणोत्सुकौ।
विद्याश्रीपुत्रपौत्राढ्यौ मातर्मंक्षु भविष्यतः॥ ३३

स्तुतोऽपि भ्रातरौ प्राह प्रव्रजाम्यधुना सदा।
संसेव्यौ पितरौ तौ हि गृहिसत्पुत्रदैवतम्॥ ३४

इत्युक्त्वा त्रिः परिक्रम्य प्रणम्य पितरौ स तु।
जगाम तदनुज्ञातः काशीं च बदरीवनम्॥ ३५

साधूनुद्धर्तुकामोऽथ गोकर्णं सज्जनाश्रयम्।
ययौ यत्र गणेशेन शैवं लिङ्गं प्रतिष्ठितम्॥ ३६

इति श्रीगुरुचरिते श्रीपादावतारो नाम पञ्चमोऽध्यायः

*ஸ்ரீபாதர் கூறினார்- தாயே! நீ இப்போது கண்ட என் உருவை எப்போதும் மனத்தில் இருத்திக் கொள்வாய். மாயைக்கடலைத்தாண்டி என்னுடன் இரண்டறக்கலப்பாய். இந்த உனது இரு புதல்வர்களும் நூறாண்டுகள் வாழ்ந்து பெற்றோரின் பணிவிடையில் ஆர்வமிக்கவராக கல்வியும் மக்கள்த் தொடரும் பெற்று உலகம் போற்ற நல்வாழ்வு பெறுவர்" என்று ஆசி வழங்கி,*

தன்னை வணங்கிய ஸகோதரர்களையும் தான் துறவறம் பூணுவதால் பெற்றோரைப் பேணிக்காக்க ஆசிகூறி, தன் பெற்றோரைத்தானும் மூன்று முறை வலம் வந்து வணங்கி அனுமதி பெற்றுக் காசிக்கும் பத்ரீவனத்திற்கும் சென்றார். பின் நல்லோருக்கு நல்வழிகாட்ட நல்லோர்கள் வாழ்கின்ற கோகர்ணம் சென்றார். அங்கு தான் கணபதி கோகர்ணேச சிவலிங்கத்தை ஸ்தாபித்துள்ளார். (36)

# षष्ठोऽध्यायः

नामधारक उवाच—

शैवं तत्र गणेशेन कुतो लिङ्गं प्रतिष्ठितम्।
सज्जनाश्रयमेतत्तु कथं श्रावय मे मुने ॥ १

सिद्ध उवाच—

विष्णवाज्ञया गणेशेन रावणात्तं प्रतिष्ठितम्।
शैवं लिङ्गं ततोऽत्रासन्देवाः संतोऽप्यदः शृणु ॥ २

भजन्तीं मृन्मयं लिङ्गं कैलासास्यै तु रावणः।
प्रसूं निषिध्य सेशाद्रिं श्रीमानाहर्तुमाययौ ॥ ३

हठात्कैलासमुद्धर्तुमुत्कमोजस्विनं शिवः।
लोकोत्पातभिया गौर्या स्तुतोऽगाधोऽवरोधयत्॥ ४

सोऽपि मृत्यून्मुखीभूतो ध्यानतुष्टेन शम्भुना।
समुद्धृतो दशमुखस्तत्तुष्ट्यै साध्वगायत ॥ ५

सुस्वरं साङ्गरागाढ्यं माधुर्यं स्वर्णमुत्तमम्।
कालोचितं जगौ गीतं ततानद्धघनारयुक् ॥ ६

प्राणिमात्रमनोहारि दिव्यं गानं स शंकरः।
प्रीतोऽब्रवीत्साधु गीतं रावणेष्टं वरं वृणु ॥ ७

அத்தியாயம்-6

கோகர்ணத்தில் கணபதி சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்த வரலாறு பற்றி நாமதாரகர் கேட்க ஸித்தர் விளக்குகிறார். விஷ்ணுவின் ஆணையால் கணபதி ராவணனிடமிருந்த சிவலிங்கத்தை இங்கு நிறுவினார். அதனால் தேவர்களும் நல்லோரும் இங்கு தங்கி உள்ளனர். ராவணன் தன் தாய் கைலாஸமடைய மண்ணால் லிங்கத்தை அமைத்து வழிபடுவதைக் கண்டு அதனைத் தடுத்து சிவனுடன் கைலாஸத்தை இங்கு கொணரமுயன்றான். வலிவில் கைலாஸத்தை அகற்ற ஈடுபட்ட அவனைக் கண்ட கௌரி உலகத்திற்குக் கேடு விளையுமெனப்பயந்து சிவனைத்துதித்தாள். அண்ட இயலாத ஈசன் அதனைத்தடுத்தார். சாவிற்குத் துணிந்த ராவணன் ஈசனைத் தியானித்து இனிய குரலில் ராகம் ததும்ப எழுத்துகளை ஸ்பஷ்டமாக உச்சரித்துத் தக்கவாத்ய ஒலிகளுடன் துதித்தான். உயிரினமனைத்தையும் கவர்கிற அந்த திவ்யகானத்தைக் கேட்டு மகிழ்ந்த ஈசன் ராவணனை விரும்பியதைக் கேட்கச் சொன்னார். (7)

रावण उवाच—

पूर्मेऽन्यदुर्लभा हैमी श्रीर्दासी दैवविद्विधिः ।
मृत्युर्दासोऽनुगा देवास्तन्मे न क्वापि दुर्लभम् ।। ८

मात्राज्ञप्तोऽस्मि कैलासमानेतुं भो त्वयान्वितम् ।
देहि मे वरणीयार्थं भगवन्वरदोऽसि चेत् ।। ९

शिव उवाच—

कैलासेन तु किं साध्यं प्राणलिङ्गं ततोऽधिकम् ।
गृहाणानेन माद्दत्त्वं पूस्ते कैलासवद्भवेत् ।। १०

स्थाप्यते यत्र तत्रैव सुस्थिरं प्रतितिष्ठति ।
तस्मात्स्थापय पुर्येव धृत्वेदं कर्म मा कुरु ।। ११

इत्युक्त्वा तत्करे लिङ्गं भक्त्याकृष्टमना ददौ ।
रावणोऽप्यतिसन्तुष्टो ययौ लङ्कां खलाग्रणीः ।। १२

ज्ञात्वैतन्नारदो योगी शशंस ब्रह्मणेऽपि सः ।
विष्णवे द्राक् त्रयोऽपीशं गत्वोचुः किं कृतं त्विदम् ।। १३

बद्धाः सर्वेऽमरा येन प्रसिद्धो लोककंटकः ।
राक्षसः प्राणिमात्राशी त्वत्समःस कथं कृतः ।। १४

*சிவன் கூறினார்- கைலாஸத்தை விடப் பெருமை மிக்கது எனது பிராணலிங்கம். இதைப்பெற்று எனக்குச் சமமாவாய். உன் நகரமும் கைலாஸம் போல் விளங்கும். எங்கு இதனை வைக்கிறாயோ அங்கு அது நிலைத்திருக்கும். அதனால் உன் நகரத்திலேயே இதனைக் கீழே வைப்பாய். இதனை கையில் வைத்துக்கொண்டு வேறு பணி புரியாதே'' என்று கூறி அவனது கையில் பிராணலிங்கத்தை வைத்தார். ராவணனும் பெருமகிழ்ச்சியுடன் லங்கை நோக்கிச் சென்றான். இதனை அறிந்து நாரதர் பிரும்மாவிடம் கூற, பிரும்மா விஷ்ணுவிடம் கூறி மூவரும் சிவனிடம் சென்று ஏன் இப்படிச் செய்தீர்! தேவர் அனைவரையும் சிறையிலிட்டு உலகிற்கே கேடு விளைவிக்கிற இந்த ராக்ஷஸன் உயிரினமனைத்தையும் அழிப்பவன். அவனை உமக்கு ஈடானவனாக்கியது ஏன்? என்று முறையிட்டனர். (14)*

शिव उवाच—

भक्त्याकृष्टं मनो मेऽद्य तेन गानादिना ततः ।
दत्तं लिङ्गं मया हर्षात्स नाद्यापि पुरं गतः ।। १५

व्याजेनैव खलो जय्य इत्युक्त्वा प्रेरयन्मुनिम् ।
विघ्नेशं च तदा विष्णुर्लिङ्गाहरण हेतवे ।। १६

नारदस्त्वञ्जसा योगी गत्वाऽग्रे रक्षसोऽब्रवीत् ।
आयातोऽसि कुतो ब्रूहि रावण द्राक् क्व गच्छसि ।। १७

रावणस्त्वब्रवीद् ब्रह्मन् तोषयित्वाऽद्य शंकरम् ।
लब्ध्वा लिङ्गं पुरं यास्ये पश्येदं शैवमुत्तमम् ।। १८

சிவன் கூறினார்- அவனது பக்தி ததும்புகிற கானத்தால் கவரப்பட்டேன். அதனால் லிங்கத்தைத் தந்தேன். அவன் இன்னமும் தலை நகரம் செல்லவில்லை. அவனை ஏமாற்றித் தான் வெல்லவேண்டும். இவ்வாறு சிவன் கூறியதும் நாரதருடன் கணபதியையும் லிங்கத்தை அவனிடமிருந்து பறிக்கும்படி விஷ்ணு தூண்டினார். யோகியான நாரதர் விரைவில் சென்று ராவணனின் எதிரே நின்றார். எங்கிருந்து வருகிறாய்? எங்கு செல்கிறாய்? என நாரதர் கேட்க, சங்கரரை வழிபட்டு லிங்கத்தைப் பெற்று லங்கை சென்று கொண்டிருப்பதாக ராவணன் கூறி இதுதான் அந்த சிவலிங்கமென்று அவருக்குக் காட்டினான். *(18)*

**तत्प्रेक्ष्योचे मुनी रक्षः शृण्वेकः सैरभाशनः ।**
**मृगयायां हतो ब्रह्महरीशैर्दुर्धरो मृगः ।। १९**

**तैस्त्रीण्यासानि लिङ्गानि तच्छृङ्गेभ्यस्तदात्मवत् ।**
**मतान्यैशं त्विदं दैवाल्लब्धं सायुज्यदं विभोः ।। २०**

**सोऽप्याह नाद्य श्रोतव्यं गन्तव्यं सत्वरं मुने ।**
**कातीत्य संध्यां यासीति मुनिनोक्त उपाविशत् ।। २१**

நாரதர் கூறினார்- காட்டெருமைகளை அழிக்கின்ற ஒரு கொடிய மிருகத்தை பிரும்மாவும் விஷ்ணுவும் ஈசனும் கூடி வேட்டையாடி அழித்தனர். அதன் கொம்புகளிலிருந்து மூன்றுலிங்கங்களை உருவாக்கினர். அவை ஈசனே என ஆத்மலிங்கங்களாயின. இந்தச் சிவலிங்கம் ஈசனுடன் ஸாயுஜ்யம் தருகிற உத்தமலிங்கம். உன் அதிருஷ்டவசமாக இது உனக்குக் கிட்டியது என. இதனைக் கேட்கப் பொறுமை இல்லை. நான் வேகமாகச் செல்லவேண்டுமென்று கூறி ராவணன் அகலமுயன்றதும், ஸந்தியாவந்தனத்தின் நேரம் நெருங்கியுள்ளதால் அதனை இங்கு நிறைவுறச் செய்து பின் இலங்கை செல்வாய் என நாரதர் தடுத்தார். அவன் தரையில் அமர்ந்தான். *(21)*

**अत्रान्तरे गणेशोऽपि वर्णिलिङ्गचाययौ स तम् ।**
**करे कृत्वाऽब्रवीत्कोऽसि कस्य पुत्रः क्व गच्छसि ।। २२**

सोऽप्याहोमाशंकरौ मे पितरौ देयमस्ति ते।
किं ताभ्यां भो न चेत्पाणिं मोचयाशु बिभेम्यहम्॥ २३

रावणोऽप्याह नादेयं ताभ्यां लिङ्गं क्षणं वह।
हैर्मी मे गौरवाल्लङ्कां दर्शयामि सुखं वस॥ २४

बालेनैवोरु लिङ्गं नो धार्यतेऽपि न गम्यते।
लङ्का घोरेत्यपि प्रोक्तः स तमाश्वास्य तद्ददौ॥ २५

*இதனிடையே கணேசரும் பிரும்ஹசாரி வேடத்தில் ராவணனின் அருகில் வந்தார். ராவணன் அவரைக் கைகளால் பற்றி அன்புடன் நீயார்? எவருடைய புதல்வன்?'' என விசாரித்தான். ''உமையும் சிவனும் என் பெற்றோர். உனக்கு அவர்கள் ஏதேனும் கடன் பட்டுள்ளனரா? இல்லாவிடில் கைகளை விடுவிப்பாய். எனக்குப் பயமாக உள்ளதென்று கணபதி தெரிவித்தார். எனக்குத் தரவேண்டியது ஒன்றுமில்லை. இந்த லிங்கத்தைக் கணநேரம் சுமப்பாய். பெருமையுடன் உன்னை இலங்கைக்கு இட்டுச் சென்று தங்கமாக ஒளிர்கிற அதனை உனக்குச் சுற்றிக் காட்டுகிறேன். நீ அங்கேயே வசிக்கலாம் என்று வேண்டினான். கணபதியோ நான் சிறுவன். இதுவோ கனம் மிக்கது. இதனை தாங்க இயலாது. இலங்கை கொடுமை மிகுந்த நகரம். அங்கு வருவதும் இயலாது என்று முரண்பட்டதும் ராவணன் கணபதியை ஸமாதானப்படுத்தி லிங்கத்தை அவரது கையில் தந்தான். (25)*

दत्तलिङ्गोऽब्धितीरे स सांध्यां कर्तुं क्रियां ययौ।
बालोऽप्याह त्रिराहूय नागते स्थापयामि कौ॥ २६

इत्युक्त्वा किञ्चिद्विश्रम्य स्वः पश्यत्सु सुरेषु तम्।
त्रिराहूय हरिं स्मृत्वा लिङ्गं सोऽस्थापयद्भुवि॥ २७

सोऽपेत्य स्थापितं दृष्ट्वा सन्ताड्यार्भं भुजैस्तु तत्।
उद्धर्तुमैच्छत्क्ष्मा तेन चकम्पेऽप्यचलं तु तत्॥ २८

महाबलेश्वर इति लिङ्गं तत्संज्ञितं ततः।
गोकर्णवद्बलोद्धृत्या जातं तत्संज्ञितं स्थलम्॥ २९

कैलासोऽयं क्षितौ साक्षाद्यत्रेशः परिवारयुक् ।
सदा जागर्त्यतस्तत्र स्थिता देवर्षिसज्जनाः ।। ३०

देवर्ष्यसुररक्षोनृ-तिर्यग्भिर्यत्र शंकरात् ।
लब्धोऽभीष्टो वरो नान्यदितः सत्पावनं स्थलम् ।। ३१

*லிங்கத்தைத் தந்த ராவணன் கடற்கரையில் ஸந்தியை வழிபாட்டைச் செய்தான். மூன்று தடவை நான் கூப்பிட்ட பிறகும் நீ வராவிடில் நான் இதனைப் பூமியில் வைப்பேன் என்று கூறிவிட்டு ஓய்வுடன் கணபதி அமர்ந்திருந்து தேவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போது மும்முறை ராவணனைக் கூப்பிட்டு, ஹரியைத் த்யானித்து லிங்கத்தைப் பூமியில் வைத்தார். ராவணன் திரும்பி வந்து பூமியில் லிங்கம் வைக்கப்பட்டுள்ளதைக் கண்டு சிறுவனை அடித்துக் கைகளால் லிங்கத்தைத் தூக்க முயன்றான். பூமி ஆடியது. அது அசையவில்லை. மஹாபலேச்வரர் என்று அது பெயர் பெற்றது. அது பசுவின் காது போல் நீண்டு விட்டதால் கோகர்ணம் என அவ்விடத்தை அழைத்தனர். இதுவே பூமியிலுள்ள கைலாஸம். இங்கே பரிவாரங்களுடன் சிவபெருமான் அருள் புரிகிறார். அதனால் தேவர்களும் நல்லோரும் இங்கு கூடுகின்றனர். தேவரும் முனிவரும் மற்றவரும் இங்கு ஈசனிடம் கோரியதைப் பெற்றனர். மிகப் புனிதமான இடம். (31).*

शृणु किञ्चिद्वसिष्ठेन शप्तोऽज्ञानकृतागसः ।
राक्षसत्वं द्वादशाब्दं प्राप मित्रसहो नृपः ।। ३२

तदाऽहनद् द्विजं तत्स्त्री शापान्ते नृप पूर्ववत् ।
भूत्वाप्येष्यसि मच्छापाद्रतेऽन्तमिति तं जगौ ।। ३३

अथैष पूर्ववद्भूत्वा स्वं राज्यं प्राप्य दुःखितः ।
स्मरातुरायै महिष्यै साध्वीशापं शशंस राट् ।। ३४

ततः खिन्नावुभौ तीर्थ-यात्रासक्तौ यदृच्छया ।
आयान्तं गौतमं दृष्ट्वा सर्वं तस्मै शशंसतुः ।। ३५

गौतमोऽप्याह भो मा भीर्गोकर्णेऽघौघहारिणि।
कामिकल्पद्रुमे क्षेत्रे किं भवेद्ब्रह्महत्यया ।। ३६

तीर्थानि सर्वतोयानि शैवलिङ्गानि ताः शिलाः ।
लिङ्गतीर्थमये तत्र दिव्ये किं दुर्लभं नृणाम् ।। ३७

*மித்ரஸஹன் என்ற அரசன் அறியாமல் செய்த பிழைக்காக வஸிஷ்டரின் சாபத்தால் பன்னிரண்டாண்டுகள் ராக்ஷஸனானவன் ஒரு அந்தணரைக் கொன்றான். வஸிஷ்டரின் சாபம் முடிந்ததும் அரசனாகி மனைவியுடன் இன்புறக் கூடும் போது மரிப்பாய் என அந்தணனின் மனைவி சபித்தாள். அவ்வாறே ராக்ஷஸநிலை நீங்கி அரசனானதும் காமத்தால் அவனது மனைவி அவனை அணுக அரசன் பெண் சாபத்தை நினைவுபடுத்தினான். துயருற்ற இருவரும் தீர்த்த யாத்ரையை மேற் கொண்டனர். தற்செயலாக அவ்வழியே வந்த கௌதமரிடம் தம் நிலையைத் தெரிவித்தனர். அவ்விருவரின் பயத்தைப் போக்கி கோகர்ணம் அருகிலுள்ளதால் ப்ரஹ்மஹத்தி பாபம் இனித் தொடராது என்றார். கோகர்ணத்திலுள்ள ஒவ்வொரு நீர் நிலையும் தீர்த்தமாகும். கற்கள் லிங்கங்களே. அங்கு கிட்டாதது எதுவுமில்லை. (37)*

शृणु तत्र मया दृष्टा चण्डाल्येका मृता तु ताम् ।
शिवदूता विमानेन कैलासं नेतुमागताः ।। ३८

मया पृष्टास्तु ते प्रोचुः प्राग्वृत्तं शृणु गौतम ।
प्राग्भवे विप्रकन्येयं बाल्येऽभूद्विधवा विधेः ।। ३९

तन्वी कामपरा नित्यं युवसौन्दर्यमोहिता ।
वृत्वा कान्तं विशं भेजे सौपपत्यं रहोऽपि तत् ।। ४०

जातं लोकप्रसिद्धं हि मलो नाच्छाद्यतेऽपि कैः ।
सम्बन्धिनस्तु तां त्यक्त्वा प्रायश्चित्तं तदाऽभजन् ।। ४१

ततो रेमेऽपशङ्कं सा पानासक्ता मदोद्धता ।
विशः कुटुम्बिनी भूत्वा कन्दर्पहतचेतना ।। ४२

प्रमत्ता सैकदा वत्सं मेषभ्रान्त्या निहत्य कम्।
स्थापयित्वाऽत्तुमन्येद्युः शेषं पक्त्वा चखाद ह ॥ ४३

ज्ञात्वाऽथ गोशिरो जारभीत्या निक्षिप्य तद्भुवि।
व्याघ्रेणापहृतो वत्सः शिवेत्थं पर्यदेवयत् ॥ ४४

इत्याद्यवाच्यपापानि कृत्वा प्रेत्य स्वकैः समम्।
दारुणां दुर्गतिं भुक्त्वा जातेदृश्यघशेषतः ॥ ४५

*(கௌதமர் கூறுகிறார்) கோகர்ணத்தில் செத்த ஒரு சண்டாளப் பெண்ணைச் சிவதூதர்கள் கைலாயத்திற்கு இட்டுச் செல்ல விருந்தனர். அவர்களிடம் கேட்டதும் அவர்கள் சொன்னார்கள். இவள் முன் பிறவியில் அந்தணப் பெண். இளமையில் கணவனை இழந்தாள். யௌவனமும் அழகும் கொண்ட இவள் காமத்தால் ஒரு வைச்யனை மயக்கி அவனுடன் வாழ்ந்தாள். உறவினர் இதனையறிந்ததும் இவளை விலக்கிப் ப்ராயச்சித்தமும் செய்து கொண்டனர். அதற்குப் பிறகு அவள் கவலையற்று குடி வெறியால் அந்த வைச்யனின் மனைவியானாள். குடி வெறியில் பசுவின் கன்றை ஆடு என நினைத்துக் கொன்று அதன் தலையை உரியில் வைத்து மற்றதைச் சமைத்து உண்டாள். மறுநாள் அதன் தலையைக் கண்டு தன் தவறு உணர்ந்து ஊராருக்குப் புலி கன்றுக் குட்டியை அடித்துச் சென்றதாகப் பொய்க் கண்ணீருடன் அழுதாள். இவ்வாறு பல பாபச் செயல்களைச் செய்ததால் சண்டாளப் பெண்ணாகப் பிறந்தாள். (45)*

जन्मतोऽस्या गलत्कुष्ठ आन्ध्ये सत्यपि रक्षिता।
पितृभ्यां तावपि मृतौ ततोऽनाथा रुरोद सा ॥ ४६

संगत्य यात्रिकैः सत्रा माघे दैवादिहागता।
क्षुधिता शिवरात्रौ सा ययाचेऽन्नं सुदुःखिता ॥ ४७

जनैस्तदाऽशनाभावात्प्रसारितकरेऽर्पितम्।
बिल्वमाघ्राय तत्याज मत्वाऽभक्ष्यं सुदुःखिता ॥ ४८

लिङ्गे त्यक्तं तु तत्पूजा श्रुतमह्नीशकीर्तनम्।
उपवासोऽशनाभावाद् दुःखाज्जागरणं निशि ।। ४९

एवं साङ्गं व्रतं चीर्णं तेन भूत्वा सुनिर्मला।
मृताऽद्यात्र शिवाज्ञप्ताः स्म आनेतुमिमां द्रुतम् ।। ५०

तैरित्युक्त्वाऽमृतं सिक्त्वा विमानाग्र्ये निधाय ताम्।
जग्मुः कैलासं सहोत्थ-क्रियागतिरियं त्विह ।। ५१

विदुषस्तु फलाधिक्यं ज्ञात्वेदं गच्छ मुच्यसे।
तच्छ्रुत्वा द्राङ् नृपो गत्वा क्षणान्मुक्तो बभूव ह ।। ५२

गोकर्णमीदृशं क्षेत्रं सत्तमं सज्जनाश्रयम्।
अतस्तत्रैव तस्थौ हि श्रीपादः साधुजीवनः ।। ५३

मोचयित्वा सतोऽब्दांस्त्रींस्तत्रोषित्वा गतागतात्।
कृष्णातटे कुरुपुरं प्राप्याद‍ृश्योऽभवत्स तु ।। ५४

*इति श्रीगुरुचरिते ज्ञानयोगे गोकर्णवर्णनं नाम षष्ठोऽध्यायः ।। ६*

இப்பிறவியில் குருடியாக, குஷ்ட நோயால் அழுகிச் சொட்டும் உடலுடன் பெற்றோரின் அரவணைப்பில் வாழ்ந்தாள். பெற்றோர் இறந்தனர். காப்பாற்றுபவரின்றி வழிப்போக்கருடன் கலந்து, துயரும் பசியும் வதைக்க சிவராத்ரியன்று கோகர்ணத்தில் தங்கினாள். மக்களிடம் உணவு தர வேண்டினாள். உபவாஸ தினமானதால் உணவு தர இயலாததால் விரித்த கையில் வில்வக் காயை இட்டனர். அது அவளுக்குப் பிடிக்கவில்லை. அதனைத் தரையில் எறிந்தாள். அது சிவலிங்கத்தின் மீது விழுந்தது. அதுவே சிவ வழிபாடானது. பகல் முழுவதும் சிவபஜனம் காதுகளில் விழுந்தது. உணவு கிட்டாததால் அது உபவாஸமாகிறது. பசி வேதனையால் தூக்கம் வரவில்லை. இரவு கண் விழிப்பு. இவ்வாறு விரதம் எல்லா வழிகளிலும் நிறைவுற்றது. அவளது பாபம் நீங்கியது. உயிரும் பிரிந்தது. இவளை அழைத்துவர சிவ பெருமான் ஆணையிட்டார் என்று கூறிச் சிவதூதர்கள் சண்டாளப் பெண்ணின்

மீது அமுதத்தைத் தெளித்தனர். அவனை விமானத்தில் ஏற்றிக் கைலாஸம் சென்றனர். அறிவு பூர்வமாகச் செய்யாததற்கே இது பலன். அறிந்து செய்பவனுக்குப் பலன் அதிகம். அதனால் அங்கு செல்வாய் எனக் கௌதமர் கூற மனைவியுடன் கோகர்ணம் சென்ற அரசன் பிரும்ம ஹத்தியிலிருந்து விடுபட்டான். ஸ்ரீபாதரும் மூன்று ஆண்டுகள் அங்கு தங்கி மக்களுக்கு நல்வழி காட்டி க்ருஷ்ணா நதிக் கரையிலுள்ள குருபுரத்தில் மறைந்தார். (54).



# सप्तमोऽध्यायः

साधूनुद्धर्तुकामोऽथ कुतो लीलाविहार्यभूत् ।
अदृश्यो भगवांस्तत्तु श्रोतुमिच्छामि सादरम् ।। १

सिद्ध उवाच—
अतीन्द्रियोऽपि दृश्योऽत्र भूत्वा लीलात्मना पुनः ।
अवतारप्रसङ्गेन जातोऽदृश्य इदं शृणु ।। २

तत्राभूच्छान्दसः कश्चिदम्बिका नाम तद्वधूः ।
कुपुत्रं सुषुवे दैवात्स्तब्धं हीनमतिं जडम् ।। ३

वर्णधर्मोपनीतं तं सावित्र्युच्चारणाक्षमम् ।
ताडयन्तं निवार्याह स्वपतिं वैदिकं वधूः ।। ४

भो जडोऽर्भोऽश्मवद्योनेरेवालं खेदहेतुना ।
ताडनेन त्यजाम्यस्मिंस्ताडितेऽसून्सुधीरिति ।। ५

सोऽप्यजाकण्ठकुचवत्तं मत्वाश्रुत्य तद्वचः ।
तूष्णीं तस्थौ ततो विप्रः कालेनाल्पीयसा मृतः ।। ६

तत्र पुत्रान्विता माता जीवनं याच्ञयाऽकरोत् ।
काले याते कियत्येवं निन्दां चक्रुर्द्विजोत्तमाः ।। ७

सूर्यर्च्यजैषा वृत्तिस्ते गर्ह्याऽस्माकं न रोचते ।
इतो व्रज त्यजासून्वा तैरित्युक्तो नदीं ययौ ।। ८

कृष्णाविष्टं समं मात्रा मर्तुकामं विलोक्य तौ ।
निषिध्योचेऽनुकम्पार्द्रः श्रीपादस्तीरवास्यसौ ।। ९

साहसं मा कुरु ब्रह्मन्नात्महत्या हि दुर्वहा ।
भवे भवेऽप्यतोऽत्रैव सम्प्राप्तसहनं वरम् ।। १०

ब्राह्मण्युवाच—
प्राज्ञोद्भूतकुपुत्रत्व-हेतुनैवाखिला हि माम् ।
धिक्कुर्वन्त्यपि नेक्षन्ति तत्किं कार्यमतः परम् ।। ११

அத்தியாயம்-7

*நல்லோர்களை மேனிலைக்குக் கொணர விரும்பிய ஸ்ரீ பாதர் மறைந்ததற்கான காரணம் கேட்ட நாமதாரகனுக்கு ஸித்தர் விளக்கினார். புலனுக்கெட்டாதவர் லீலையால் காட்சிக்கு உட்பட்டார். வேறொரு அவதாரம் ஏற்பதற்காக மறைந்தார். க்ருஷ்ணா நதிக்கரையில் ஒரு வைதிக அந்தணனின் மனைவி அறிவற்ற ஜடனான மகனைப் பெற்றாள். எட்டு வயதானவனுக்கு உபநயனம் செய்வித்த அவனது தந்தை காயத்ரியைக் கூடச் சொல்ல இயலாத அந்த ஜடனை அடிக்க முற்பட்டார். அவனது தாய் அவரைத் தடுத்து பிறவியிலேயே ஜடனாகப் பிறந்த இவனை அடித்துப் பயனில்லை. இவனை இனி அடித்தீரேயானால் நான் உயிரை விடுவேன் என்றாள். ஆட்டின் கழுத்தில் தொங்கும் சதைபோல் வீணான இவனை நினைத்து வருந்திய தந்தை இறந்தார். தாய் இவனுடன் பிச்சை எடுத்துக் காலத்தைக் கழித்தாள். அந்தணர்கள் அவளை நிந்தித்தனர். அறிஞரின் மகனே ! உனக்கு பிச்சை எடுப்பது ஏற்றதல்ல. இங்கிருந்து வெளியேறு. அல்லது உயிரை விடு என்று அவர்கள் நிந்திக்க, அவன் தாயுடன் க்ருஷ்ணா நதியில் இறங்கினான். அவனைக் கரையிலமர்ந்திருந்த ஸ்ரீபாதர் தடுத்து நிறுத்தினார். ''அடாத செயலைச் செய்யாதே. ஆத்ம ஹத்தி பெரும் பாபம். அதைவிட இப்பிறவியில் நேர்ந்த துயரங்களைப்*

*பொறுத்துக் கொள்வது நல்லது'' என்றார். அந்தப் பெண்மணி பிள்ளை அசடென்று நிந்திக்கிற மக்கள் என்னை அருவருப்புடன் பார்க்கக் கூட விரும்பவில்லையே ! என்ன செய்வேன்? என்று அழுதாள். (11)*

श्रीपाद उवाच—

हत्यया लिप्स्यसेऽग्रेऽतो दुःखं निस्तीर्य दैविकम्।
शिवतोषात्सुपुत्रस्ते भविष्यति भवान्तरे ।। १२

ब्राह्मण्युवाच—
त्वयोक्तं साध्वहं कुर्यां तथैव तु कथं भवेत्।
शिवतोषः पुरा केन कृतं श्रावय विस्तरात्।। १३

श्रीपाद उवाच—
उज्जयिन्यां पुरा चन्द्र-सेनराजसखोऽलभत्।
मणिभद्रः शिवाच्छैवश्चिन्तामणिमभीष्टदम्।। १४

तं ज्ञात्वाऽर्घादिनाऽलभ्यं युद्धायाभ्यागतान्नृपान्।
श्रुत्वाऽप्येकाग्रचित्तोऽसौ प्रदोषेऽपूजयच्छिवम्।। १५

मन्दानङ्गप्रदोषे तं मणिं भूपं तथाविधम्।
दृष्ट्वा गोपसुतास्तद्वत्स्वाङ्गणे चक्रुरर्चनम्।। १६

गोप्यो निवार्य पत्राद्यैर्लिङ्गकल्पनयोपलम्।
भजतो निन्युरत्तुं तांस्तस्थौ तत्रैकबालकः ।। १७

प्रसह्याप्युद्धृतोऽर्चां स मात्रोद्वास्यापतद्भुवि ।
शम्भुपूजाभङ्गभिया निर्विण्णो मर्तुमुद्यतः ।। १८

तद्भावं विश्वसाक्षीशो ज्ञात्वाऽविष्कृत्य शोभनम्।
स्वं रूपं बालमाश्वास्य वरं वृण्विति तं जगौ।। १९

बालोऽपि दिव्यरूपं तं नत्वोचे भुवनेश्वर।
मात्रोत्सृष्टाऽत्र ते पूजा तन्मन्तुं क्षन्तुमर्हसि ।। २०

''தற்கொலையால் மறுபிறவியிலும் இந்தப் பாபம் தொடரும். விதியால் வந்த இந்தத் துயரைப் பொறுத்துக்கொள். சிவனை வழிபடு. மறு பிறவியில் நல்ல புதல்வன் பிறப்பான் என்று ஸ்ரீபாதர் கூற, அதனை ஏற்ற அந்தப் பெண் இவ்வாறு நிகழ்ந்துள்ளதா எனக் கேட்டாள். ஸ்ரீபாதர் கூறினார் – முன்னர் உஜ்ஜயினியில் சிவபக்தனான மணிபத்ரன் சந்த்ரஸேன அரசரின் நண்பன். சிவனை வழிபட்டு அவரருளால் விரும்பியதைத் தருகிற சிந்தாமணியைப் பெற்றான். விலை கொடுத்துப் பெற இயலாத அதனைப் பெற்ற மணிபத்ரன் தன்னோடு எதிரி அரசர்கள் போரிட வந்துள்ளதை அறிந்தும் ஒருமுனைப்பட்ட உள்ளத்துடன் சனிப் ப்ரதோஷ காலத்தில் சிவனை அரசனுடன் வழிபட்டான். அவர்களிருவரும் வழிபடுவதைக் கண்ட இடைச் சிறுவர்களும் தன் தன் இருப்பில் வழிபட்டனர். மண்ணால் லிங்கமமைத்து இலை முதலியவற்றால் வழிபடுகிற சிறுவர்களை அவர்களின் தாய்கள் பூஜையை நிறுத்தித் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். ஒரு சிறுவன் மட்டும் தாயால் வலிவில் இழுத்துச் செல்லப்பட்டும் சிவபூஜை தடைபடுவதில் பயந்து உயிரிழக்க முற்பட்டான். உலகின் ஸாக்ஷியான ஈசன் இதனைக் கண்டு சுய உருவில் அவன் முன் தோன்றி, சிறுவனை ஸமாதானப்படுத்தி வரம் கேட்கச் சொன்னார். பாலன் அவரை வணங்கித் தன் தாய் பூஜையைத் தடை செய்த பிழையை மன்னிக்கக் கோரினான். (20).

शिव उवाच——

भक्त्या सायुज्यभाङ्मेऽसि कृतं मात्रा त्वबोधतः ।
नायं मन्तुः सापि भूयाद्विष्णुमाताऽर्चनेक्षणात् ।। २१

इत्युक्त्वाऽन्तर्दधे सोऽभूद्भास्वल्लिङ्गं य आगताः।
त ऊचुः पुण्यश्लोकार्थं दोषाऽप्यर्कोऽत्र तिष्ठति ।। २२

धन्येन सह योद्धव्यं नास्माभिरिति ते नृपाः ।
निश्चित्य स्निग्धभावेन तौ द्रष्टुं सर्व आययुः ।। २३

पूजां कृत्वापि राट् द्योत-हेतुं निश्चित्य तैः सह।
नृपैर्गोपाङ्गणं गत्वा प्राप लिङ्गेक्षणान्मुदम्।। २४

श्रुत्वा गोपमुखात्सर्वं तुष्टास्तस्मै नृपाः श्रियम्।
दत्वा गोपाधिपत्यं च स्वं स्वं स्थानं ययुर्मुदा।। २५

सा तु प्रेत्य यशोदाख्या गोपी भूत्वा हरिं सुतम्।
प्रापेशतोषात्तस्मात्ते तथा भूयाच्छिवार्चनात्।। २६

"பக்தியால் நீ என்னுடன் இரண்டற இணையத் தகுதி பெற்றுள்ளாய். உன் தாய் அறியாமையால் தடுத்தாள். அதனுல் இது குற்றமல்ல. நீ செய்த வழிபாட்டை அவள் தரிசித்ததால் அடுத்த பிறவியில் விஷ்ணுவின் தாயாவாள்" என்று அருள் புரிந்து மறைந்தார். சிறுவன் பூஜித்த சிலேயே மஹாகாலேச்வர லிங்கமானது. இரவிலும் இங்கு ஸூர்யனும் இந்த அரசனுக்காகவே ஒளிர்கிறுன் என்பதைக் கண்ட எதிரி அரசர்கள் இவனுடன் போரிடக் கூடாதெனக் கண்டு, அவ்விருவரையும் நட்புடன் காண அங்கு வந்தனர். பூஜை முடிந்ததும் எழுந்த அரசனும் இரவிலும் ஸூர்ய ஒளியைக் கண்டு வியந்து அதற்குக் காரணமான இடையச் சிறுவன் வழிபட்ட இடத்திற்கு மற்ற அரசர்களுடன் வந்து கோபர்கள் மூலம் எல்லாவற்றையும் அறிந்தனர். அந்த இடையச் சிறுவனே இடையர்களின் அரசனுக ஆக்கி பெருஞ் செல்வமளித்துத் தன் இருப்பிடம் திரும்பினர். அந்த சிறுவனின் தாயே மறுபிறவியில் யசோதையாகி க்ருஷ்ணனின் தாயானுள். உனக்கு அதே மேன்மை கிட்டும் என்றுர் ஸ்ரீபாதர். (26).

ब्राह्मण्युवाच—

कष्टाद्दैवाच्छिवे तुष्टे फलं भाव्यधुनाऽमुना।
कष्टेनायुः कथं लङ्घ्यं मातृत्वेनाव मामतः।। २७

इत्यशाठ्यं सकारुण्यं श्रुत्वा प्रीतो दयार्द्रधीः।
ओमित्युक्त्वा दधौ पाणिं दुष्प्रापं मूर्खमूर्धनि।। २८

सहसा गीष्पतिसमो बभूव श्रुतिशास्त्रवित् ।
मातृभक्तौ विनीतं तं नियुज्याहाम्ब मे शृणु ।। २९

विस्मृत्याऽकमनेनेशपूजयायुः क्षयं कुरु ।
पुत्रो भाविभवे मादृक्ते भविष्यति वा इति ।। ३०

साऽप्यत्यर्थं प्रहृष्टा तदाज्ञया सह सूनुना ।
ग्रामं गत्वेशमानर्च विद्वन्मान्यसुतान्विता ।। ३१

मादृङ्नान्यो भवेयं चेन्नास्याः पुत्रो मृषा वचः ।
अतोऽवतीर्य तत्कुर्यामित्यमंस्ताज ईश्वरः ।। ३२

कृतावतारसङ्कल्पः कार्यानन्त्यान्न सोऽत्यजत् ।
लीलाङ्गं तत्र भजतामदृश्योऽप्यस्ति कामदः ।। ३३

*அந்த அந்தணப் பெண் ஸ்ரீபாதரிடம் ''தைவ உதவியால் சிவன் மகிழ்ந்தாலும் அதன் பலன் அடுத்த பிறவியில் கிட்டும். அதுவரை எப்படி வாழ்வேன். தாயாக நின்று காப்பீர்'' என வேண்டினுள். கபடமற்ற அவளது சொல்லைக் கேட்ட ஸ்ரீபாதர் அந்த ஜடச் சிறுவனின் தலையில் கை வைத்தார். உடன் ப்ருஹஸ்பதி போன்ற பேரறிஞனும் பேச்சாளனுமானுன். அவனைத் தாய்க்குப் பணிவிடை செய்ய வழிகாட்டி,'' துயரத்தை மறந்து ஈசவழிபாட்டில் ஆயுளைக் கழிப்பாய் ! அடுத்த பிறவியில் என்னைப் போன்ற புதல்வன் பிறப்பான் எனத் தாய்க்கும் அருள் புரிந்தார். அவளும் மகனுடன் தன்னிருப்பிடம் வந்து ஈசனை வழிபட்டாள். 'என்னைப் போன்று வேறு ஒருவருமில்லை. என் சொல் பொய்க்காது. நானே அவதரித்துச் சொன்ன சொல்லைக் காப்பாற்றுவேன்'' என்று ஈசனும் எண்ணினுர். ஈசன் எவரையும் கைவிடுவதில்லை. அவதரிக்க ஸங்கல்பித்த பின்னரும் புரிய வேண்டிய பணிகள் எண்ணற்றிருப்பதால், லீலைகளை விடுவதில்லை. புலப்படா நிலையிலும் அண்டியவர் விரும்பியதை அளிக்கிறுர். (33)*

नामधारक उवाच—

सङ्कल्पवान्कथं कार्येऽपूर्णेऽप्यन्योऽभवत्कथम्।
स्थित्वाऽऽद्यधाम्नाऽदृश्योऽपि भजतां कामदः कथम्।। ३४

सिद्ध उवाच—

कार्यानन्त्याद्विश्वबीजे सङ्कल्पानन्त्यमव्यये।
नृणां कलिमलान्धानां स प्रत्यक्षोऽप्यदृश्यवत्।। ३५

*ஒரு பணி செய்து முடிக்க ஸங்கல்பம் செய்தபின் அது நிறைவுறாத நிலையில் வேறு அவதாரமெடுக்க ஸங்கல்பித்தது ஏன்? பழைய வடிவிலிருந்து கொண்டும் மற்றொரு வடிவோடு இருப்பது எப்படி? மறைந்த நிலையிலிருந்தபடி பக்தர்கள் விரும்பியதைத் தருவது எப்படி? என்று கேட்ட நாமதாரகரிடம் ஸித்தர் கூறினார். "தேய்வுறாத ஈசன் விதை போன்று உலகக் காரணப் பொருள். அவரது பணிகள் எண்ணற்றவை. அதற்கேற்ப ஸங்கல்பங்களும் எண்ணற்றவை. பக்தர்களுக்கு நேரில் தோன்றி விரும்பியதைத் தரும் நிலையிலும் பாபிகளின் குருட்டுக் கண்களுக்குப் புலப்படாதவர்.*

प्राग्वृत्तं शृण्वदृष्टेऽस्मिन्द्विजः कश्चित्कुटुम्ब्यभूत्।
धीमान्द्यात्स वणिग्वृत्तिः श्रीपादाङ्घ्र्यर्पितान्तरः।। ३६

व्यापारे मेऽधिलाभश्चेद्भूयात्तदनुसारतः।
कुर्यां कुरुपुरे विप्र-भोजनं श्रीशतुष्टये।। ३७

इत्युक्त्वाऽगात्स्मरन्श्रीशं व्यापारार्थं ततो धनम्।
लेभे भूरि तदादाय ययौ सङ्कल्पसिद्धये।। ३८

मार्ग एकाकिनं यान्तं तं सार्थं प्रेक्ष्य तस्कराः।
सुहृत्तया तदनुगा भूत्वा तं विजनेऽहनन्।। ३९

तदैव सहसा तत्र श्रीपादः शूलपात्रधृक्।
प्राप्य तान् शितधारेण त्रिशूलेन जघान सः।। ४०

एकस्तमेत्य शरणं प्रोचे चोरधिया तु नो।
सञ्जीभूतोऽस्मि मां ज्ञात्वा यथेष्टं कुरु भो प्रभो।। ४१

श्रीपादोऽपि सकारुण्यां श्रुत्वोक्तिं विमलान्तरम्।
ज्ञात्वा तं योजयामास तद्रक्षायै कृपार्द्रधीः ।। ४२

*ஒரு அந்தணர் குடும்பி. அறிவுமந்தத்தால் வியாபாரியாக வாழ்ந்தார். ஸ்ரீபாதரிடம் பக்தர். வியாபாரத்தில் அதிக லாபம் பெற்று அதனைக் கொண்டு ஸ்ரீபாதரின் பக்தர்களுக்கு உணவளிக்கலாம் என்று திட்டமிட்டு வெளியூர் சென்று பெருந் தனம் சம்பாதித்து அதனை எடுத்துக் கொண்டு குருபுரம் சென்றார். மாலையில் தனித்துச் செல்கிற அந்த வியாபாரியைத் திருடர்கள் நண்பர்கள் போல் அணுகி இரவில் கொன்றுவிட்டனர். அப்போதே அங்கு சூலமும், கமண்டலுவும் ஏற்று ஸ்ரீபாதர் தோன்றி சூலத்தால் குத்தி அவர்களை அழித்தார். அவர்களில் ஒருவன் ஸ்ரீபாதரைச் சரணடைந்தான். கெட்ட எண்ணத்துடன் தான் வரவில்லை. அதனால் காப்பாற்றுவீர் என வேண்டினான். அழுது புலம்புகிற அவன் கபடமற்றவன் என உணர்ந்து அந்தணனைக் காப்பாற்றுகிற பணியில் அமர்த்தினார். (42)*

कबन्धे तच्छिरः कृत्वा भस्माक्तं जलमन्त्रितम्।
सजीवं तं द्विजं कृत्वा क्षणादन्तर्दधे स तु।। ४३

स सुप्तोत्थितवद्बुद्ध्वा दृष्ट्वा चोरान्मृतान् द्विजः।
हतशेषमुखात्सर्वं श्रुत्वा खिन्नान्तरोऽभवत्।। ४४

कृत्वा तु मत्कृते कृच्छ्रं जातोऽयं चोरगोचरः।
सर्वदाऽऽराधितो दैवान्नायं मे दृष्टिगोचरः ।। ४५

इत्युक्त्वा धनमादाय गत्वा कुरुपुरं द्विजः।
चतुःसहस्रसद्विप्रभोजनं श्रद्धया व्यधात्।। ४६

ततः श्रीशप्रसादात्स सिद्धिं प्रापोभयीं द्विजः।
इत्याद्या भूरिशो वृत्ताः सत्यदृश्येऽपि तत्कथाः ।। ४७

प्रत्यक्षस्तु सतां तत्र कच्चराणां त्वगोचरः ।
सोऽप्यन्यत्रावतीर्यात्र स्वरूपेणेष्टकामदः ॥ ४८

वेदयज्ञतपोदान-प्रदिष्टफलतोऽधिकम् ।
श्रीपादाधिष्ठितस्थान-वासिनां द्राक्फलं लभेत् ॥ ४९

यत्र कुत्रापि ये केचिच्छ्रीपादाङ्घ्रिसरोरुहे ।
संस्मरन्त्यपि तेभ्यः स कामानिष्टान्ददात्यलम् ॥ ५०

*इति श्रीगुरुचरिते ज्ञानयोगे श्रीपादमहिमवर्णनं नाम सप्तमोऽध्यायः ॥ ७*

அந்தணனின் உடலில் அவனது தலையைச் சேர்த்து ஸ்ரீபாதர் விபூதி பூசி மந்திரித்ததும் அவன் உயிர் பெற்றான். உடன் ஸ்ரீபாதர் மறைந்தார். உயிர் பெற்றுத் தூக்கத்திலிருந்து எழுந்தவன் போன்று எழுந்த அந்தணன் திருடர்கள் அழிக்கப்பட்டுள்ளதைக் கண்டு கொல்லாமல் விட்டவனிடமிருந்து நிகழ்ந்ததை அறிந்தான். என்னைக் காக்க வந்தவர் திருடர்களுக்குத் தரிசன மளித்தார். தினமும் வழிபடுகிற எனக்கு ஏனோ தரிசனம் தரவில்லை என்று புலம்பிக் கொண்டே தன் செல்வத்துடன் குருபுரம் சென்று நாலாயிரம் அந்தணர்களுக்கு உணவிட்டான். ஸ்ரீபாதரருளால் இம்மையிலும் மறுமையிலும் மேன்மை பெற்றான். கண்களுக்குப் புலப்படாமலே ஸ்ரீபாதர் நிகழ்த்திய லீலைகள் பல உண்டு. நல்லோருக்குப் புலப்படுவார். பாபிகளுக்குப் புலப்படமாட்டார். வேறு ஒரு இடத்தில் அவதரித்துள்ள போதே இங்கு நலம் புரிவார். ஸ்ரீபாதர் இருந்த இடத்தில் வசிப்பதாலேயே வேதம் ஓதுவதாலும் வேள்வி புரிவதாலும், தவமிருப்பதாலும், தானம் தருவதாலும் கிட்டுவதைவிட அதிக நலம் பெறலாம். ஸ்ரீபாதரின் திருவடியை எங்கிருந்தேனும் நினைப்பவர்களுக்கும் விரும்பியதை அளிப்பவர் அவர். (49).



# अष्टमोऽध्यायः

नामधारक उवाच—

ब्रह्मन् कुत्रावतीर्यासौ किं चकारास्य चेष्टितम्।
मायाश्रितस्याप्रमेयं ब्रूहि शुश्रूषवेऽर्थदम्।। १

सिद्ध उवाच—

उदग्देशेऽवतीर्णस्य दीनानुद्धर्तुमीशितुः।
वक्ष्येऽल्पकं साधुयोगि-दुर्विभाव्यं हि चेष्टितम्।। २

या श्रीपादोपदेशेन प्रदोषेऽजमतोषयत्।
सा प्रेत्योत्तरदेशे स्त्रीर्जाता ब्रह्मकुलेऽमले।। ३

धीरूपशीललक्ष्माढ्या सुसंस्कारा गुणान्विता।
श्रीपादेन पुराम्बेति प्रोक्तत्वात्सा तदाह्वया।। ४

शिववृत्तिं माधवाख्यमनुरूपं द्विजं पिता।
दृष्ट्वा तत्रैव तां तस्मै गृह्योक्तिविधिना ददौ।। ५

सा पातिव्रत्यमास्थाय भेजे छायेव तं पतिम्।
प्रदोषेऽपि शिवं पूर्वसंस्कारात् पत्यनुज्ञया।। ६

स्नेहोऽन्योन्याश्रयो भावबन्धोऽभूच्चक्रवाकवत्।
तयोर्हर्षितयोरेवं गर्भमम्बा वरं दधौ।। ७

सा सुदोहदलक्ष्माथ तत्त्वज्ञानमुपादिशत्।
द्विजोऽप्यनुक्रमाच्चक्रे क्रियाः पुंसवनादिकाः।। ८

अब्रघ्नगेष्टखगसूचितसिद्धिपूर्व
प्रव्रज्यके सुसमयेऽथ समोष्णशीते।
आत्मीयवाच्यपठनेन सतोऽ नुगृह्णन्
ओङ्कारवाच्यभगवान्स्वयमाविरासीत्।। ९



ஸ்ரீ நரஸிம்ஹ ஸரஸ்வதி
ஸ்ரீ நரஸிம்ஹ ஸரஸ்வதீப்யோ நம:

## அத்தியாயம்-8

''ஸித்தரே ! பகவான் எங்கு அவதரித்தார் ? என்ன செய்தார்? மாயையால் வடிவமேற்றவரது விரும்பியதை வழங்குகிற வரலாற்றைக் கூறுவீர் !'' எனக் கேட்ட நாமதாரகரிடம் ஸித்தர் கூறினார். வடநாட்டில் ஈசன் எளியவரைக் காக்கப் பிறந்த கதையைக் கூறுகிறேன். அது யோகிகளுக்கும் எட்டாதது. ஸ்ரீபாதரின் உபதேசத்தால் முன் பிறவியில் ப்ரதோஷ வேளையில் ஈசனை வழிபட்ட தாய் வடநாட்டில் உயர்ந்த அந்தணர் குலத்தில் பிறந்தாள். அறிவும் அழகும் ஒழுக்கமும் சீரும் மிக்கவளாக நல்ல பண்பாடும் குணங்களும் கொண்டவளாக ஸ்ரீபாதர் முன்னர் அழைத்ததற்கேற்ப அம்பா என்ற பெயருடன் இருந்தாள். மங்களமான நடைமுறை கொண்ட 'மாதவன்' என்ற நன் மகனுக்கு அம்பாவை தந்தை முறைப்படி மணம் செய்வித்தார். அவளும் பதிவ்ரதைத் தன்மையைப் பின்பற்றி மாதவனுடன் வாழ்ந்தாள். பதியின் அனுமதியுடன் பூர்வ ஜன்ம வாஸனையால் ப்ரதோஷத்தில் சிவபூஜை செய்தாள். சக்ரவாகப் பறவைகள் போல அன்பால் இணைந்து வாழ்ந்த அவள் கருவுற்றாள். கருவில் உள்ள சிசுவிற்குத் தத்வஜ்ஞானத்தைப் போதித்தாள். பும்ஸவனம் முதலியவற்றை மாதவன் முறைப்படி செய்தார். ப்ரஸவ வேளை நெருங்கியது. அந்த வேளையில் ஒரு க்ரஹமும் அஸ்தமன மடையவில்லை. பிறப்பவனுக்குத் துறவியாகும் யோகத்தைத் தெரிவித்த அந்த சுபவேளையில் ஓங்காரத்தை உச்சரித்துக் கொண்டே ஓங்காரத்தின் பொருளான பெருமான் வெளியானார். (9)

**विश्वं तदाभूच्छुभशंसि लोका ओङ्कारमाकर्ण्य सुविस्मिताः स्युः।**
**भावान्सुखेटान्गणकाः सुयोगान् दृष्ट्वा मुदं प्रापुरदृष्टपूर्वान्॥ १०**

**त ऊचुर्माधवेदं ते सुकृतद्रुफलं किल।**
**श्रीसिद्धयोऽस्य दास्योऽङ्घ्री स्पर्शवन्निधयोऽनुगाः॥ ११**

**नायं गृही जनोद्धर्ता दृष्ट्या पतितपावनः।**
**वन्द्योऽस्यानुग्रहात्कोऽपि भवेन्नैवात्र संशयः॥ १२**

इत्युक्त्वा तेन हृष्टेन पूजितास्ते गृहं ययुः ।
श्रुत्वाऽद्भुतं जनुर्द्रष्टुं प्राप्तैर्लोकैः स नेक्षितः ।। १३

तद्दृग्दोषभियैकान्ते गुरुः संस्थाप्य रक्षया ।
तं ररक्षार्भबुद्ध्येशं तन्मायामोहितो हरिम् ।। १४

भूयान्नरो हरिरिव नरतापाघदैन्यहृत् ।
अयमित्याख्यया चक्रे बालं नरहरिं द्विजः ।। १५

क्षुच्छान्तिर्नास्य मत्तोऽतो धात्री वाजा पयस्विनी ।
मृग्येत्युक्तेऽम्बयोरोजौ स्पृष्ट्वाऽर्भोऽध्यदुहत्पयः ।। १६

तद्बालचेष्टितं चित्रं सद्दृग्दोषभियाऽनया ।
स्फुटं नाकारि मात्रैवमन्यदप्यद्भुतास्पदम् ।। १७

உலகம் மங்களத்தை எதிர்பார்த்தது. ஓங்காரத்தைக் கேட்டு மக்கள் வியப்படைந்தனர். நல்ல நிலையில் க்ரஹங்கள் அமைந்துள்ளதால் இதுவரை காணப் பெருத சுபயோகம் நேர்ந்துள்ளதைச் சோதிடர் கூறினர். செல்வமும் அணிமாதிஸித்திகளும், இவருக்கு அடிமையாகும். நிதிகள் இவரது காலடியில் நிற்கும். ஆனல் இவருக்கு இல்லறமில்லை. பார்வையாலேயே மக்களை மேனிலைக்குக் கொணர்பவர். எளியவரைக் காப்பவர். இவரது அருள் பெற்றவர் மக்களால் வணங்கப் பெறுவர் என்றனர். இந்த அற்புதச் சிசுவைக் காண மக்கள் கூடியதும் திருஷ்டி விழும் என்ற பயத்தால் தனிமையில் தந்தை தன் சிசு என்ற அன்புப் பிணைப்பால் காத்தார். அவர் ஹரி என்பதை அறியவில்லை. இந்தச் சிறுவன் நரனுயினும் ஹரிபோன்று துயர் நீக்குவான் என்ற எண்ணத்தில் நரஹரி என்று அந்தணர் பெயரிட்டார். தனது முலைப்பால் இவனுக்குப் போதாதென எண்ணிய தாய் பெண்ணுட்டைப் பாலுக்காகத் தேடினுள். சிசு தாயின் மார்பகத்தைத் தொடவும் பால் நிறையச் சுரந்தது. அந்தச் சிசுவின் லீலையை திருஷ்டி படும் என்ற பயத்தால் தாய் மறைத்தாள்.

बाल्यादिना मर्त्यलिङ्ग-भाजीहाज्ञानल क्षणम्
प्रतीतेर्ब्रह्मतारोपः साक्षात्कैः कल्प्यते कथम्॥ १८॥

जातस्त्रैवार्षिकोऽप्येष लीलयाऽभूत्सुमूकवत्।
खिन्नाऽतस्तत्प्रतीकारानारेभेऽम्बा द्विजोदितान्॥ १९

सौर्येऽह्न्यश्वत्थपत्रेऽन्नभोजनैः कुलपार्चनैः।
बालोक्तिपाठनैश्चान्यैः सूपायैर्नावदच्छिशुः॥ २०॥

वक्तुं श्रोतुं नायमज्ञो मूकश्चेत्कथमोङ्कृतिम्।
श्रुत्वान्योक्तिं ब्रूत इति पितरौ मोहमापतुः॥ २१॥

मूकोऽयं नौ श्रमेणालं प्रदोषे शम्भुरर्चितः।
दिष्ट्यैतत्फलं प्राप्तं संस्कार्योऽसौ कथं न्वतः॥ २२॥

ताभ्यामित्युदिते मौञ्ज्यां बद्धायां वक्ष्य इत्यसौ।
संज्ञया दर्शयत्स्वर्णं व्यकृणोत्तन्मुदेऽयसः॥२३॥

तदा सञ्जातविश्वासे विप्रानाहूय माधवः।
मुदा संभृतसंभारः सुलग्नेऽमुमुपानयत्॥ २४

மனித உருவில் தோன்றிய சிசுவிடம் பால்யம் முதலியவற்றால் பேதைமையை மட்டும் காண விரும்பியதால் இதுவே பரம் பொருள் என்ற உணர்வு எப்படி வெளியாகும்? மூன்று வயது தாண்டியும் சிசு ஊமை போன்று பேசவில்லை. அந்தணர்கள் கூறியபடி பேச்சின்மை நீங்க சடங்குகளைத் தாய் செய்தாள். சனிக்கிழமை காலையில் அரசு இலையில் உணவு, குலதெய்வ வழிபாடு, சிறுவர்க்கான மொழிப் பயிற்சி மற்றும் அத்தகைய உபாயங்களைச் செய்தும் பேசாத சிறுவன், பேச்சைக் கேட்காத சிறுவன், ஊமையாயின் பிறர் சொல்வதற்கு ஓம் என்று (சம்மதம் எனப்பொருள்படும்படி) பதில் சொல்கிறானே, அது எப்படி என உணராத பெற்றோர் கலங்கினர். இவன் ஊமையே! இனிப்பாடுபட்டுப் பயனில்லை. சனிப்பிரதோஷத்தில் செய்த சிவ

பூஜையின் பலன் இது தானு? இவனுக்கு எப்படி உபநயனம் முதலியவற்றைச் செய்விப்பது? என்று கலங்கிநிற்கிற பெற்ருேரிடம் இடுப்பில் முஞ்சக் கயிறு கட்டியதும் சொல்கிறேன் எனச் செய்கையால் அவர்களுக்கு உணர்த்தி இரும்பைத் தங்கமாக்கிக் காட்டிஞன். அதஞல் நம்பிக்கை பெற்றுத் தந்தை முறைப்படி நல்ல வேளையில் உபனயனம் செய்வித்தார். (24)

सुसंस्कृतः कृतस्वस्त्ययनो भुक्तोऽम्बया सह।
गुरूपदिष्टां सावित्रीमुपनीतोऽयमाददे।। २५ ।।

गुर्वाश्रितब्रह्मचारि- भिक्षां स मातरम्।
याचयित्वा जगौ वेदान्न चित्रं वेदवाच्यदः ।। २६ ।।

प्रणम्य पितरौ प्राह विरक्तः प्रव्रजामि भोः ।
अनित्याद्ध्राक्शरीरस्य तदाज्ञां दातुमर्हथः ।। २७ ।।

प्रत्यवायाभिक्रमान्तौ नैव धीमति धीस्त्वियम्।
मम प्राग्दैहिकाक्षय्या भविष्यन्त्यात्मजा हि वाम्।। २८ ।।

इत्युक्तेऽम्बा विषीदन्ती तन्मायामोहिताऽब्रवीत्।
एक एव सुतस्त्वं मे कथं यासि विहाय माम्।। २९

प्रव्रजेद्वेदविद्भुक्त-गार्हस्थ्योऽनुक्रमाद्वनात्।
तत्त्वविद्वासनानाश-मनोभङ्गा अतः श्रुताः ।। ३०

உபநயனம் நடந்ததும் குரு உபதேசித்த காயத்திரியைச் சொன்ஞர், குருவை அண்டி நின்று பிரம்ஹ சரியவிரதத்தை ஏற்று தாயிடம் பிக்ஷையிட வேண்டிப் பெற்று வேதமோதிஞர். வேதத்தின் தோற்றுவாயான ஈசனிடம் இது வியப்பதற்குரியதல்ல. பெற்ருேரை வணங்கி பற்றற்றுத் துறவறம் கொள்கிறேன். அனுமதி தருவீர். உடல் நிலையற்றதாகையால் உடன் அனுமதிப்பீர். பிரம்மசரிய விரதம் நிறைவுறவில்லை என்ருே, பக்குவம் வரவில்லை என்ருே நினைக்காதீர். ஆத்மா அநாத்மா பொருள் பற்றிய பகுத்தறிவு உள்ளதால் பிரும்மசரியம் நிறைவுற்றது.

ஸன்யாஸத்திற்கு உரிய நிலையின்மை பற்றிக் கவலை வேண்டாம். முற்பிறவியில் ஏற்பட்ட அழியாத வாஸனையாகப் பதிந்த பகுத்தறிவு உள்ளது. உங்களுக்கு இனிப்புதல்வர்கள் தோன்றுவர்.'' என நரஹரி கூறினார். எனக்கு நீ ஒரே பிள்ளை. என்னை விட்டு எப்படிச் செல்லலாம் எனத் தாய் கேட்டாள். வேதமோதிய பின் இல்லறம் புகுந்து அனுபவித்து வானப்பிரஸ்தம் பெற்றுப் பின் துறவறம் பெறுவதே முறை. அதனால் துறவறத்திற்கு தத்வஜ்ஞானம், வாஸனை அழிவு, மனம் போக்கின்றி மறைதல் இவை ஸாதனம் எனப் பெரியோர் கூறினர் என்றாள். (30)

श्रीगुरुरुवाच——

जैह्वचौपस्थ्यसुखात्तानां क्रमोऽयं नैव मादृशः ।
प्राक्संस्कारविरक्तस्य जोष्यैः किं मेऽकयोनिभिः ॥ ३१

श्रुतश्रोतव्यनिर्वेदं यास्ये संन्यस्य भो ततः ।
संसिद्धिः सुलभा नातः परं कार्यं हि धीमता ॥ ३२

कलावायुः शतं स्वापाद्-ध्रियतेऽर्धं तु शेषकम् ।
बाल्ययौवनवृद्धत्वैः पराधीनतया च नुः ॥ ३३

स्वप्नवत्सम्पदिष्टाढ्य-संसारोऽज्ञानकल्पितः ।
यौवनं पुष्पवच्चायुस्तडिद्वत् क धृतिर्बुधे ॥ ३४

कालो भ्रूणाञ्छिशून्यूनो वृद्धानार्तान्सुखस्थितान् ।
मूढान् ग्रसत्यपि प्राज्ञान्निःशेषानमरानपि ॥ ३५

यदर्थं ममताप्येतज्जलबुद्बुदवद्वपुः ।
मांसास्थिरक्तवद्विंस्र-वञ्चनार्थं त्वगावृतम् ॥ ३६

न भस्मविट्कीटरूप-परिणामं निजानुगम् ।
तदानुषङ्गिकाः स्त्र्याद्याः किमुतानर्थहेतवः ॥ ३७

ஸ்ரீ குரு சொன்னார்- நாக்கும் உடலுறவும் தருகிற இன்பத்தில் நாட்டமுள்ளவருக்கே இந்தமுறை. முன் பிறவிகளில் ஸம்ஸாரத் தொடர்பால் பற்று நீங்கியவனுக்கு துக்கம் தருகிற வெளிப்பொருள் நாட்டத்தால் ஆவதென்ன? அதனால் துறவு பூண்டு கேட்டதும் கேட்கவேண்டியதும் பற்றிய அறிவு போதும் என்பதால் ஜ்ஞானஸித்தி எளிதில் கிட்டும். அந்த அறிவு நிலையில் இனிக்கடமைகள் எதுவுமில்லை. கலியில் நூறாண்டுகள் வாழ்ந்தாலும் தூக்கத்தால் பாதி குறைகிறது. மீதிப்பாதி பால்யம் யௌவனம் முதுமை இவற்றால் குறைகிறது. பொருள் நிறைவிலும் விரும்பியதைப் பெறுவதிலும் நாட்டம் கனவு போல் மாயையின் கற்பனை. வாலிபம் பூப்போன்று சிறிது நேரம் மலரும். ஆயுள் மின்னல் போல் தோன்றிய உடன் மறையும். எப்படி இவற்றை நம்பித்தைரியம் பெற முடியும்? யமனே கருவில் உள்ள சிசுவையும் பிறந்ததையும் வளர்வதையும் முதிர்ந்ததையும் துன்புறுபவரையும் இன்புறுபவரையும் முட்டாளையும் பேரறிஞரையும் பாகுபாடின்றி விழுங்குகிறான்.இந்த உடலைக் கொண்டே மமதை ஏற்படுகிறது. தோல் போர்த்திய இது தசையும் ரத்தமும் எலும்புமானது. நீரின் கொப்புளம் போன்று நிலையற்றது. அதன் முடிவு சாம்பல், விஷ்டை, புழு என்று நேரும். மனைவி முதலிய பந்தமும் பொருளற்றது. *(37)*

देहोऽचित्सर्वगो जीवश्चिदंशोऽजोऽव्ययो ध्रुवः।
स्वप्नवत्सुखदुःखादि-संबन्धोऽज्ञानजोऽस्य तु ॥ ३८

प्रसादात्सद्गुरोः शाब्द-परब्रह्मविदस्त्विदम्।
छित्वाऽविद्गहनं ज्ञेय-ज्ञानास्त्रः स्वस्थ इद्भवेत् ॥ ३९

य उत्तमं ज्ञानपात्रं लब्ध्वा धामाग्रजातिजम्।
नाचरत्यात्मनः श्रेयस्तेनात्मा वञ्चितो ध्रुवम् ॥ ४०

तस्मान्नारब्धविघ्ना मे भव तेऽम्ब नमोऽपि ते।
पुत्रो भविष्यति ध्यानाद् भवाब्धिं मे तरिष्यसि ॥ ४१

इत्युक्त्वाऽदर्शयत्तस्यै स्वं रूपं दिव्यमुत्तमम्।
साप्यदभ्रदृशा दृष्ट्वा तद्वित्तत्प्राग्जनिर्जगौ ॥ ४२

உடல் ஜடப்பொருள். அளவீட்டிற்கு உட்பட்டது. ஜீவனே பேரறிவானவன். எங்கும் பரவியுள்ளவன். தேய்வற்றவன். இன்பதுன்பங்கள் அறியாமையால் ஏற்படுபவை. அவற்றுடன் ஜீவன் ஒட்டாதவன். சொல்லால் உணர்த்தக்கூடிய பிரும்ஹத்தை வளர்த்த நல்ல குருவின் அருளால் ஜ்ஞானம் என்ற கத்தி கொண்டு அறியாமையிருளை நீக்க, மேனிலை பெறலாம். மிகச் சிறந்த ஜ்ஞானத்தைப் பெறத் தகுதி கொண்ட அந்தணப்பிறவி பெற்றும் மேனிலை பெற முயலாதவன் தன்னைத் தானே வஞ்சித்துக் கொள்கிறுன். அதனுல் என்னைத் தடுக்காதீர். உமக்கு வேறு பிள்ளை பிறப்பான். என் நினைவால் ஸம்ஸாரக் கடலைத் தாண்டிடுவீர். தாயே! உமக்கு வணக்கம். என்று கூறித் தன் தெய்வவடிவைக் காட்டினுர். தாயும் தன் ஞான திருஷ்டியால் முன் பிறவியின் நினைவு பெற்றதும் தேவனிடம் கூறினுள்.(42)

नमस्ते भगवन्देव प्राग्दृष्टो मर्तुकामया।
कुपुत्रया मया स त्वं श्रीपादो मेऽद्य गोचरः ॥ ४३

ब्रह्मापि वेत्ति नो रूपगुणांस्तु मोहिता त्वहम्।
मानुषी त्वां कथं जाने दिष्ट्याऽद्य ज्ञानमर्पितम् ॥ ४४

कृतं मत्कुक्षिसंभूत इति लोकविडम्बनम्।
अज ब्रह्माण्डकुक्षे न उभयं पावितं कुलम् ॥ ४५

सत्यसङ्कल्प ते विघ्नं माऽस्तु रूपं स्थिरीकुरु।
मयीदं चात्र भो स्थेयं यावत्पुत्रो भविष्यति ॥ ४६

तथेत्युक्त्वेशबुद्ध्याऽसौ स्थित्वा ताभ्यां सुपूजितः।
तत्र शिक्षितवाञ्छिष्यान्विदुषोऽप्येष वेदवाक् ॥ ४७

अम्बापि गर्भिणी भूत्वा कालेऽसूत सुतौ शुभौ।
स त्रैमासिकयोः शिश्वोः प्राहाम्बां शृणु मेऽम्ब भोः ॥ ४८

जातौ द्वौ ते भविष्यन्ति पुत्रौ पुत्री च सत्तमाः ।
देह्याज्ञां म इति प्रोक्त्वा तदाज्ञप्तः प्रचक्रमे ।। ४९

"தேவரே! உமக்கு நமஸ்காரம். முன்பிறவியில் அசட்டுப்பிள்ளையைப் பெற்று நொந்து வாழ்வை முடித்துக் கொள்ளவிரும்பிய நான் ஸ்ரீபாதரான உம்மைக் கண்டேன். உமக்கு நமஸ்காரம். பிரும்மாவும் உம்மை அறிய இயலாது. இந்த அறியாமைமிக்க மனிதப் பெண் எவ்வாறு அறிவேன். தைவவசத்தால் இன்று உம்மை இன்னார் எனக் கண்டேன். பிரும்மாண்டங்களையே தன் வயிற்றில் கொண்ட உம்மை என் வயிற்றினுள் சுமந்தேன் என்பது உலகை ஏமாற்ற நிகழ்ந்தது. என் குலமும் என் பதியின் குலமும் புனிதமாயின. நினைத்ததை நிறைவேற்றுபவரே! உமக்குத் தடை நேரவேண்டாம். என் நினைவில் உம் வடிவம் நிலைத்து நிற்கட்டும். மற்றொரு புதல்வன் என்னிடம் தோன்றும் வரை இங்கிருப்பீர்" என்றாள். பகவான் இதனை ஏற்றார். பெற்றோர் இவரை ஈசன் என்றே வழிபட்டனர். அறிஞர்களும் இவரிடம் சீடராகி ஜ்ஞானம் பெற்றனர். வேதத்தை வாக்காகக் கொண்ட இவரிடம் ஞானம் பெறுவது அரிதல்லவே. தாயும் கருவுற்று இரு புதல்வர்களைப் பெற்றாள். மூன்று மாதங்கள் கடந்ததும் தேவர் தாயிடம் விடைதரக் கோரினார். மேலும் இரு புதல்வர்களும் ஒரு புதல்வியும் தோன்றுவர். எனக்கு அனுமதி தருவீர் என்றார். தாயின் அனுமதி பெற்று கிளம்பினார். (49)

रेजे शिरस्त्राणविशोभिमूर्धा सुपादुकामण्डितपादपद्मः ।
काषायवस्त्रावृतपेशलाङ्गः कौपीनधृग्दण्डकरः स्मितास्यः ।। ५०

क्षमस्वार्भबुद्ध्या मयाजापराद्धं
इति व्याहरन्तीं सतीं त्रिंशताब्दैः।
पुनर्दर्शनं मेऽस्तु सांनिध्यमम्ब
स्मृतावित्थमुक्त्वा ययौ तां निवर्त्य ।। ५१

नायं मर्त्योऽस्तीश एनं नताः स्म एवं सद्भिः स्तूयमानो मुनीनः ।
योगीशोऽपि द्रागबदर्याश्रमं सद् द्रष्टुं काशीं प्राप वेषान्मुमुक्षोः ।।

स खेचरत्सहृज्जिह्व उन्मन्यावस्थयाऽतपत्।
तपः श्वासोच्छ्वासहीनः काश्यां वज्रासनस्थितः ॥ ५३

भागीरथ्यां त्रिषवणमथाप्लुत्य साष्टाङ्गयोगं
युञ्जन्तं तं सकलमुनयः प्रेक्ष्य सिद्धासनस्थम् ।
नत्वाष्टाङ्गैः परतरधिया खेचरीमुद्रयैक
कुम्भोद्युक्तं जगुरुपरता नादसिद्धोत्समाधिम् ॥ ५४

भवान्परात्मास्ति न मर्त्यबालः सद्धर्मगुप्त्यै विधृतावतारः ।
प्राक्शंकराचार्यमतोऽपि लुप्तः संन्यास एनं वितनोतु तिष्ये ॥ ५५

कष्टोत्थाद्यन्तवत्स्पर्श-भूभोगसुरतात्मभिः ।
उच्छिन्नोऽध्यात्मसौख्याङ्गैरयं कलिहतात्मभिः ॥ ५६

भीरूग्रे सुलभक्षेमे कलौ संन्यासवर्त्मना ।
अध्यात्मपरमानन्दं भगवन्दातुमर्हसि ॥ ५७

इत्याश्रुत्योक्तमाचार्यं वृत्वा कृष्णसरस्वतीम्।
ततः संन्यास्यभून्नाम्ना स नृसिंहसरस्वती ॥ ५८

தலையில் முண்டாசுடன், கால்களில் பாதுகைகளுடன் துவராடை சுற்றி கௌபீனம் கட்டி தடியேந்திச் சிரித்துக்கொண்டே கிளம்பினர். சிறுவனென்று எண்ணிப் பிழை புரிந்ததைப் பொறுத்தருள வேண்டிய தாயிடம் முப்பதாண்டுகளுக்குப் பின் என்னைக் காண்பீர். நினைத்தால் உடன் முன் தோன்றுவேன் என்று கூறிப்பின் தொடர்பவர்களைத் திருப்பி அனுப்பினர். இவர் ஈசனே! மனிதனல்ல என எல்லோரும் வணங்க, இவர் விடைபெற்றுக் காசியையும் பதரிகாசிரமத்தையும் நோக்கிச் சென்றார். முக்தி ஸாதனைக்காகக் காசியை அடைந்து கங்கைக் கரையில் வஜ்ராஸனத்தில் அமர்ந்து கேவலகும்பகத்தால் கேசரி முத்திரையில் உன்மனி நிலைபெற்றுத் தவம் புரிந்தார். தினமும் மூன்று வேளை கங்கையில் நீராடி ஸித்தாஸனத்தில் அமர்ந்து ஸமாதி நிலை பெற்ற இவரைப் பரமேசுவரனுகக் கண்டமுனிவர்கள் இவரை வணங்கி

இவ்வாறு விண்ணப்பித்துக் கொண்டனர். ''நீர் பரமேச்வரரே! மனிதரல்ல. நல்லறப்பாதுகாப்பிற்கெனத் தோன்றியவர். முன் சங்கராசாரியர் பழக்கித் தந்த ஸன்யாஸமுறை கலிகாலப் போக்கால் பெரும்பாலும் அழிந்துவிட்டது. அதை மறுபடி முறைப் படுத்திப் பரப்புவீர். துன்பம் தருகிற பொருள் நாடிப் பெறுகிற இன்பத்தில் ஈடுபட்டு ஆத்ம உணர்வால் பெறத்தக்கப் பேரின்பத்தை மறந்ததால் இந்தத் துறவு முறை மறைந்துவிட்டது. இக்கலி மிகப் பயங்கரமானதெனினும் நன்மை பெறுவது எளிதே. ஆத்மாவைப்பற்றி அறிய இந்தத் துறவு சிறந்த வழி. அதற்கு வழிகாட்டுவீர். ''முனிவர்களின் வேண்டுகோளை ஏற்ற நரஹரி, கிருஷ்ண ஸரஸ்வதி என்ற குருவை அண்டி ஸன்யாஸதீக்ஷை பெற்று ந்ருஸிம்ஹஸரஸ்வதி என்ற தீக்ஷா நாமம் பெற்றார். (58)

न्यस्तसूत्रशिखो रेजे न्यस्तसर्वैषणो वशी ।
संन्यस्ताखिलसङ्कल्पः संन्यासी निर्ममोऽद्वयः ।। ५९

संन्यासपद्धतिं प्राह मुमुक्षुभ्यो जगद्गुरुः ।
विरजोमाञ्छुचिर्देवीं प्रविष्टो हापितैषणः ।। ६०

संन्यस्तसकलोऽसूत्रचूडो दण्डी गुरुं भजेत् ।
प्रज्ञानं ब्रह्मायमात्मा ब्रह्म तत्त्वमसीति च ।। ६१

अहं ब्रह्मास्मीति महावाक्यान्यास्वाऽर्थतो वशी ।
पञ्चीकरणविल्लब्ध-संज्ञः शौची स्वधर्मवित् ।। ६२

दैवभावो योगपट्टी संन्यासी श्रेयसेऽर्हति ।
गतिज्ञो धारणाभ्यासाज्जीवन्मुच्येत्परात्मदृक् ।। ६३

ब्रह्मीभूतस्य गव्यात्मा व्यसुः क्षेप्योऽप्क्रियादि नो ।
इत्युक्त्वा ग्राहयामास संन्यासं स्वधिकारिणः ।। ६४

துறவு பூண்டதும் உபவீதத்தையும் சிகையையும் அகற்றி உலகப் பற்றையும் செல்வப்பற்றையும் பரலோகப்பற்றையும் விட்டு, உள்ளமடக்கி, செயல்திட்டம் ஏதுமின்றி எனதென்ற பற்றின்றி ஆத்மாவை மட்டும் உணர்ந்து ஸன்யாஸியாகி, முக்தி

நாட்டமுள்ளவர் பின்பற்றவேண்டிய பிராயச்சித்தம் எட்டு சிராத்தம், விரஜாஹோமம். காயத்ரியினுள் பிரவேசம். குருவை அடைதல், மஹாவாக்ய உபதேசம் பெறுதல். பஞ்சீகரணம், யோகபட்டம், உள்-வெளித்தூய்மை, தன் நிலை உணர்வு, என்ற முறைப்படி இவற்றை ஏற்ருர். தைவகுணம் நிரம்பி, உடல் மறைந்ததும் நேர்கிற சுக்ல- கிருஷ்ண மார்க்கமுணர்தல், யோகநிலையில் ஆத்ம உணர்வு, ஜீவன்முக்தி நிலை, பிரும்மநிலை பெற்று உடல் கழன்று கொள்ளும் போது நீரியோ நிலத்தடியிலோ உடலைக் களைதல், பிரேத நிலைக்கான உதகதானம் முதலியவையின்மை, என்று ஸன்யாஸ நிலையில் நேர்வதனைத்தையும் உறுதியுடன் ஏற்கப்பயிற்சி தந்து தக்க மற்றவருக்கும் ஸன்யாஸம் தந்தார். (64)

**ततः प्रभृति संन्यासः संप्रवृत्तोऽमृतायनः ।**
**काश्यां पुमर्थवेदार्थान्प्रकाश्योत्तरवर्त्मना ।। ६५**

**मेरुं प्रदक्षिणीकृत्य पूतात्मापि सुशिष्ययुक् ।**
**तीर्थस्नातो ययौ गङ्गासागरं भक्तगुप्तये ।। ६६**

**कारयित्वा बहिःस्पर्शान्बाह्यान्सोऽन्ते दृशं भ्रुवोः ।**
**प्राणापानौ च खे तुल्यौ यतिभ्यो योगमादिशत् ।। ६७**

**प्रयागेऽथैत्य संन्यासं माधवब्रह्मणे ददौ ।**
**विभुस्तत्त्वोपदेशं च निजोद्भवभुवं ययौ ।। ६८**

*அதன்பின் ஸன்யாஸம் ஏற்கும் முறை நன்கு பரவியது. காசியில் வேதப்பொருளை வெளிப்படுத்திய பின் வடக்கு நோக்கிச் சென்று மேருவை வலம் வந்து தீர்த்தங்களில் நீராடி கங்காஸாகரம் சென்று வெளி உலகை மறந்தார். கண்பார்வையைப் புருவ நடுவில் நிறுத்தி பிராணாபானவாயுக்களின் ஓட்டத்தைச் சமப்படுத்தினர். பிரயாகை திரும்பி, மாதவருக்கு தத்துவோபதேசமும் ஸன்யாஸமும் தந்து தாயைக் காணச் சென்ருர். (68)*

नामधारक उवाच—

यत्प्रसादान्नरा मुक्ता अद्वैतामृतवर्षिणः ।
भवन्त्यस्य किमाचार्यैः कोऽयं कृष्णसरस्वती ।। ६९

सिद्ध उवाच—

सांदीपनिवसिष्ठाद्याः कृष्णरामादिभिर्वृताः ।
गुरवोऽपि तथाऽजेन वृतः कृष्णसरस्वती ।। ७०

मानुष्यं लीलयासाद्य स तद्वद्वर्तते न चेत् ।
वर्तेत सङ्करो लोके भवेत्तदनुवर्तितः ।। ७१

येनाध्यक्षेण मा सूते जगत्तेन न बद्ध्यते ।
असक्तोऽयमुदासीनवत्स्थितः किमुतेतरैः ।। ७२

शिष्यो विष्णुः पुरेशस्य विष्णोर्विधिरभूद्विधेः ।
वसिष्ठस्तस्य शाक्त्योऽस्य व्यासस्तस्य शुकोऽस्य तु ।। ७३

गौडपादोऽस्य गोविन्दः शंकरस्तस्य तस्य तु ।
विश्वरूपस्तस्य बोध-ज्ञानः सिंहगिरिस्तथा ।। ७४

तस्येश्वरो नृसिंहोऽस्य विद्यातीर्थं ततः शिवः ।
तस्य भागीरथीतीर्थं विद्यारण्योऽस्य तस्य तु ।। ७५

शिष्योऽभून्मलयानन्दो देवतीर्थं सरस्वती ।
यादवेन्द्रोऽस्य तस्यायं शिष्यः कृष्णसरस्वती ।। ७६

सर्वे स्वदीक्षाङ्कितारव्या जाताः कृष्णसरस्वती ।
पारंपर्योत्तमो ज्ञानी वृद्धोऽतोऽयं वृतोऽमुना ।। ७७

।। इति श्रीगुरुचरिते ज्ञानयोगे श्रीनृसिंहसरस्वत्यवतारकथनं नामाष्टमोऽध्यायः ।।

பிறருக்கு முக்தி பெற வழிகாட்டுபவருக்குத் தனக்கென குரு எதற்கு? கிருஷ்ண ஸரஸ்வதி என்பவர் யார்? எனக்கேட்ட நாமதாரகருக்கு ஸித்தர் விளக்கினுர். ஸாந்தீபினியும் வஸிஷ்டரும் கிருஷ்ணருக்கும் ராமருக்கும் குருவானது போன்று நரஹரியால் கிருஷ்ண ஸரஸ்வதி குருவாக ஏற்கப்பட்டார். மனிதப்பிறவி எடுத்தால் மனிதனுக்குள்ள கடமை தொடர்கிறது. இல்லாவிடில் மக்களுக்கு ஸம்பிரதாயத் தொடர்பில் குழப்பம் நேரும். ஈசனின் முன்னிலையில் மாயை உலகைப் படைக்கிறது. இந்த மாயை ஈசனைக் கட்டுப்படுத்தாது. ஆனுல் வழிமுறை காட்ட விஷ்ணு சிவனுக்குச் சிஷ்யர், விஷ்ணுவிற்குப் பிரம்ஹா. அவருக்கு வஸிஷ்டர். அவருக்குபின் அந்த குரு-சிஷ்ய பரம்பரை சக்தி பராசரர், வியாஸர், சுகர் கௌடபாதர், கோவிந்தர், சங்கரர், விச்வரூபர், போத ஜ்ஞானர், ஸிம்ஹகிரி, ஈச்வரர், நிருஸிம்ஹர், வித்யாதீர்த்தர், யாதவேந்திர ஸரஸ்வதி, கிருஷ்ண ஸரஸ்வதி, என்று தீக்ஷா நாமம் பெற்ற ஸன்யாஸி பரம்பரை. வயது முதிர்ந்த கிருஷ்ண ஸரஸ்வதி ஸ்ரீ நிருஸிம்ஹஸர ஸ்வதியின் குரு (77)



# नवमोऽध्यायः

नामधारक उवाच—

भगवानपि संन्यासं प्रगृह्य स्वजनुस्थलम्।
कुतो यातोऽस्य शिष्याः स्युः के के किमकरोत्ततः ।। १

सिद्ध उवाच—

महीं प्रदक्षिणीकृत्य प्रतिज्ञातानुसार्यजः ।
मातरं द्रष्टुमाप्तो हि माता वन्द्या यतेरपि ।। २

शिष्या हि बहवो जाता बालः कृष्ण उपेन्द्रकः ।
ज्ञानज्योतिः सदानन्दो माधवोऽहं च सप्तमः ।। ३

सरस्वत्यन्तसंज्ञाः स्युरेते मुख्यास्तु भूरिशः ।
आसन्नन्ये स तैः साकमाययौ स्वजनुस्थलम्।। ४

पितरौ प्रेक्ष्य बन्धूंश्च भगिनीमितरानपि ।
तत्राददे विश्वरूपः पूजां प्रत्यालयं क्षणात् ।। ५

पित्राऽर्चितममुं दृष्ट्वा प्राक्स्मृत्याऽम्बाऽब्रवीत्प्रिय ।
मृत्यून्मुखीं कुपुत्रां मां योऽरक्षच्छ्रीपदस्त्वयम् ।। ६

मादृग्भवेत्सुत इति प्रतिज्ञातसुसिद्धये ।
स्वदृगन्यसुताभावात्स्वयमेवाभवत्सुतः ।। ७

அத்தியாயம்-9

*பகவான் ஸன்யாஸ மேற்றபின் தான் பிறந்த ஊருக்கு ஏன் சென்றார்? இவரிடம் சிஷ்யரானவர் எவர்? பின் என்ன செய்தார்? என்று நாமதாரகர் கேட்டதும் ஸித்தர் சொன்னார். பூமியை வலம் வந்த நிருஸிம்ஹ ஸரஸ்வதீ கொடுத்த வாக்கை நிறைவேற்றத் தாயைக் காணச் சென்றார். தாய் ஸன்யாஸியாலும் வணங்கத் தக்கவர். சிஷ்யர்கள் பலர். ஸரஸ்வதி என்ற யோகபட்டப் பெயர். பாலர், கிருஷ்ணர், உபேந்திரர், ஜ்ஞான ஜ்யோதி, ஸதானந்தர், மாதவர், ஸித்தன் என்ற நான். மற்றும் பலர். இவர்களுடன் தாயகம் வந்தார். பெற்றோரையும் சகோதர, சகோதரிகளையும் உறவினரையும் கண்டார். பல வடிவங்களில் ஒவ்வொரு வீட்டிலும் பூஜையை ஏற்றார். தந்தையும் இவரை வழிபட்டார். தாய்க்கு உடன் முன்பிறவி நினைவு வந்தது. உயிரிழக்கும் தறுவாயில் அசட்டுப்பிள்ளையைப் பெற்ற என்னைக் காப்பாற்றிய ஸ்ரீபாதரே இவர். தன்னைப் போன்ற பிள்ளை பிறப்பான் என்று வரம் தந்ததால் தனக்கு ஈடு தானே என்றெண்ணி அவரே மகனாக வந்துள்ளார்'' என்று உணர்ந்தாள். (7)*

श्रीपाद मे त्वं न सुतोऽसि देव भवार्णवादुद्धर मा हरेऽज ।
लोकानुसारी खलु वर्तसे चेत् सम्बन्धमेनं स्मर पुत्र मातुः ।। ८

कालदैवक्रियेशात्म-द्रव्याज्ञास्वात्मवैकृताः ।
तत्संघातः प्रवाहोऽसौ त्वन्मायैतां निवारय ।। ९

श्रीगुरुरुवाच—

संन्यासी यत्कुले जातस्तरत्यपि तरिष्यति।
कुलैकविंशतिः पित्रोर्दुर्गताऽप्यमृतं लभेत्॥ ।१०

जातोऽत्रायं हि संन्यासी भो मातस्तेऽथ किं वद।
सम्पत्प्रजान्वितानां वः काश्यां मुक्तिर्भविष्यति॥ ११

भगिन्युवाच—

गतिर्मे काऽग्रतः स्वामिन्भवसिन्धोर्बिभेम्यहम्।
पापिष्ठां मोद्धर हरे सद्गुरुस्त्वं हि मे प्रभो॥ १२

श्रीगुरुरुवाच—

पतिसेवनमेवैकं तारकं नापरं स्त्रियाः।
पातिव्रत्यं भज ततो भवाब्धेः पारमेष्यसि॥ १३

दम्पत्योः प्राकृतं वैरं त्वया गौर्लत्तया हतः।
अतः पत्युर्यतित्वं ते कुष्ठं चाङ्गे भविष्यतः॥ १४

इति श्रुत्वाऽतिखिन्नाऽभूत्तामाश्वास्याह सद्गुरुः।
वार्धक्ये तूभयं तेऽस्तु नश्येन्मे दर्शनात्कुरुक्॥ १५

*ஸ்ரீபாதரே! என் மகன் நீர் தானே! ஸம்ஸாரக்கடலிலிருந்து கரையேற்றுவீர். ஹரே! உலகியல்படி நடப்பதானுல் இந்தத் தாயுடன் உள்ள தொடர்பை உணர்வீர். காலம், விதி, செயல், ஈசன், ஆத்மா, ஸாதனப்பொருள், தன் நிலை மாற்றம் என்ற பலவற்றின் கூட்டு விளைவே வாழ்க்கை. இந்த மாயையை அகற்றுவீர். என்று தாய் கூறியதும் ஸ்ரீ குரு கூறினுர்- ஸன்யாஸி தானும் ஸம்ஸாரக் கடலின் கரையேறுவான். அவனது பெற்ருேரின் 21 தலைமுறைகளைக் கரையேற்றுவான். துர்கதியிலும் நற்கதி பெறுவர். இந்த ஸன்யாஸி இங்கு பிறந்துள்ளான். மக்களாலும் மற்றதாலும் நிறைவு பெற்ற உங்களுக்குக் காசியில் முக்திகிட்டும்.'' பெற்ருேருக்கு அருள் புரிந்ததைக் கண்ட ஸகோதரி*

கேட்டாள்-எனக்கு ஸம்ஸாரக்கடலில் பயமதிகம். எனக்கு இனி என்ன கதி? பாபியான என்னைக் கரையேற்றுவீர். நீர் எனக்கும் ஸத்குரு என. ஸ்ரீ குரு சொன்னார். பெண்ணைப் பதிக்குப் பணிவிடை புரிவதே கரையேற்றும். பதிவிரதையாக நடந்து கொள்வாய். முன்பிறவியில் உனக்கும் கணவருக்குமிடையே விரோதம் ஏற்பட்டது. பசுவைத்தடியால் அடித்தாய். உன் கணவன் துறவியாவான். உன் உடலில் குஷ்டம் பரவும் என்றார். சகோதரி துயருறுவதைக் கண்டு இவ்விரண்டு கேடுகளும் முதுமையில் நேரட்டும். எனது பார்வைபட்டு உன் குஷ்டம் விலகும் என்றார். (15)

इत्युक्त्वा तदनुज्ञातः सशिष्यो गौतमीं ययौ ।
याऽऽनीता गौतमेनेशाद् गोहत्याव्यपनुत्तये ।। १६

तामेत्याप्लुत्य भगवान्मुनिं माधवसंज्ञकम् ।
भक्तं गतागतान्मुक्त्वा स्तुतस्तेनाग्रतोऽगमत् ।। १७

सशिष्योऽग्रे व्रजन्दृष्ट्वा गङ्गायां मर्तुमुत्सुकम् ।
विप्रं गलशिलं कश्चिदादिष्टैस्तं कृपानिधिः ।। १८

छात्रैरुद्धारितं दीनं शूलरोगाकुलं प्रभुः ।
दयनीयतमं प्राह विधत्से साहसं कुतः ।। १९

विप्र उवाच—

किं करिष्यसि मां पृष्ट्वा मरिष्ये शूलकातरः ।
कथं जीवामि रोगोऽन्नवैर्ययं दुःसहः सदा ।। २०

प्राणोऽन्नं जीवनं चान्नं लयोऽन्नं जीवमन्नमुत् ।
उद्भवोऽन्नं कथं स्थेयमृतेऽन्नात्तन्मृतिर्वरम् ।। २१

भवान्तरेऽत्र वा नान्नं दत्तं पुण्यं न वा कृतम् ।
गोविप्रग्रासोऽपहृतो निन्दिताः पितरौ गुरुः ।। २२

नेशोऽर्चितो वातिथयो हापिता धिक्कृता द्विजाः ।
मिष्टान्नं पितरौ त्यक्त्वा साकं भुक्तं स्त्रिया मया ।। २३

इति भात्यन्यथा नेदक्कष्टं भो मय्युपस्थितम्।
कृतो नान्योपकारो भूभारो मोघभवोऽभवम्॥ २४

சிஷ்யர்களுடன் ந்ருஸிம்ஹர் கோதாவரியையடைந்தார். பசுமாட்டைக்கொன்ற பாபம் நீங்க ஈசனிடமிருந்து கௌதமர் கொணர்ந்த நதி அது. அதில் நீராடி மாதவர் என்ற அந்தணரை மேனிலைக்குக் கொணர்ந்தார். ஓர் அந்தணர் தன் கழுத்தில் கல்லைக்கட்டிக் கொண்டு கோதாவரியில் விழுந்து உயிரைவிட எத்தனித்தார். கடும் வயிற்றுவலியால் துன்பம் தாங்காமல் மரிக்க விருந்த அவரைக்குரு கரைக்குக் கொணர்ந்தார். ஏனிந்த அடாத செயல் எனக் கேட்டதும், கடும் வலிதாங்காமல் மரிக்கிறேன். கேட்டு என்ன செய்யப்போகிறீர்? உணவேற்கமுடியவில்லை. உணவு தான் உயிர். உணவுதான் வாழ்வு. மருந்தும் உணவே. உணவேற்க முடியாத போது மரணமே சிறந்தது. முன் பிறவியில் பிறருக்கு உணவிட்டிருக்கமாட்டேன். அணுவளவு புண்யம் கூடச் செய்யவில்லை. பசுவிற்கும் அந்தணருக்கும் இட்ட உணவைப் பறித்திருப்பேன். குருவையும் பெற்றோரையும் மனம் நோகச் செய்திருப்பேன். ஈசனை வழிபடவில்லை. அதிதிகளை வாசலில் விரட்டியிருப்பேன். பெற்றோருக்கு உணவிடாமல் தம்பதிகளாக உணவேற்றிருப்போம். பிறருக்கு உதவியதில்லை. பூமிக்குச் சுமையாக வாழ்ந்துள்ளேன். அதன் பலனே இது. நான் வீணே பிறந்தேன் என்று புலம்பினான் (24)

श्रीगुरुरुवाच—

मा भीर्दास्येऽन्नपथ्यं ते दिव्यौषधमहं भिषक्।
इत्युक्त्वा विरते तस्मिन्द्विज एकः समाययौ। २५

सायंदेवाभिधः काञ्चीवासी कौंडिन्यगोत्रजः।
सुदीनो यवनाधीनस्तमाह प्रणतं गुरुः॥ २६

मर्तुमिच्छति रुग्णोऽयं व्यथितो दिव्यमौषधम्।
दद्मचस्मै त्वमपि ब्रह्मन्पथ्यं स्वाद्वन्नमर्पय॥ २७

सायंदेव उवाच—

मासा पक्षेण वाल्पान्नं भुङ्क्ष आत्यन्तिकीं व्यथाम्।
स तदाप्नोत्यन्नदानाद् भवेद्धत्येति भाति मे ॥ २८

श्रीगुरुरुवाच—

भिषक्तमोऽस्मि नाशङ्क्यं सापूपं देहि माषयुक्।
परमान्नं च पथ्यं मा भीर्जाने रुक्प्रतिक्रियाम् ॥ २९

सायंदेव उवाच—

तथा कुर्यामपि भवान्सशिष्योऽङ्गीकरोतु मे।
भिक्षां गृहेऽस्मि ते शिष्यः प्रपन्नं शाधि मां गुरो ॥ ३०

इत्युक्तिं सौष्ठवौदार्यरम्यां श्रुत्वा तथेति तम्।
ऊचे ततः सशिष्यं तं द्विजो निन्ये निजालयम् ॥ ३१

*''பயப்படாதே! நான் உனக்கு இதமான உணவு தருவேன். நான் மருத்துவன். சிறந்த மருந்து தருவேன் என குரு ஆறுதல் கூறினார். அங்கு ஒரு யவனனிடம் பிடிபட்ட காஞ்சி நகரவாஸியும் கௌண்டின்ய கோத்திரத்தானுமான ஸாயந்தேவன் என்ற பெயர் கொண்ட அந்தணர் வந்தார். வணங்கி நின்ற அவனிடம் குரு ''அந்தணரே! கடும் நோயுற்ற இந்த அந்தணன் இறக்க விரும்புகிறான். இவனுக்கு நல்ல மருந்தை நான் தருகிறேன். நீர் இவனுக்கு பத்திய உணவு தருவீர் என்றார். அந்த அந்தணனோ மாதமொருமுறையோ பதினைந்து தினங்களுக்கு ஒரு முறையோ உண்டாலும் கடும் வயிற்று வலியால் வாடுகிறான். இவனுக்கு உணவிடுவது கொல்வதற்கு ஸமம் என்றார். ஸ்ரீ குருவோ'' நான் சிறந்த வைத்யன். சந்தேகப்படாதே! உளுந்து சேர்ந்த அப்பமும் பாயஸமும் ஏற்ற உணவு. நோய்க்குச் சிகித்ஸையை நான் அறிவேன் என்றார். ஸாயந்தேவர் அவ்வாறே செய்வதாக ஒப்புக்கொண்டு சிஷ்யர்களுடன் அவரையும் பிக்ஷை ஏற்கத்தன் வீட்டிற்கு அழைத்தார். பெருமனம் கொண்ட இந்த அழைப்பை ஸ்ரீ குரு ஏற்றதும் அவரை சிஷ்யர்களுடன் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். (31)*

चित्रितेऽलङ्कृते गेहे रंगवल्ल्यादि रञ्जिते।
स्वासनेषूपवेश्यैतानुपतस्थेऽङ्गनान्वितः ॥ ३२

सूपचारैः प्रपूज्येशं रौद्रैर्मन्त्रैश्च पौरुषैः।
नीराज्य श्रद्धया गीत-स्तोत्रादिभिरतोषयत्॥ ३३

गुरुपादोदकं तीर्थं भक्त्या संपूज्य मुक्तिदम्।
पीत्वैनोहारि सस्त्रीकः शिष्यान्सर्वानपूजयत्॥ ३४

अन्नं चतुर्विधं स्वादु सुरसं गव्यसंयुतम्।
प्रादात्प्रकामं सर्वेभ्यो मधुरोक्त्यादरेण सः ॥ ३५

भुक्त्वान्नं गुरुपङ्क्त्यां स भेजे रुग्णोऽप्यनामयम्।
नेदं चित्रं हि यद्भक्ता घ्नन्त्युद्भवमहारुजम्॥ ३६

स ततोऽसारसंसार-निर्विण्णो गुरुदर्शनात्।
भूत्वा क्षणादुदासीनः सर्वतोऽभजदच्युतम्॥ ३७

द्विजोऽपि भुक्तानाचान्तान्सूपविष्टान्सुगन्धिभिः।
पत्सेवनैश्चास्यवासैस्तोषयित्वाऽब्रवीद्गुरुम्॥ ३८

अद्यांघ्र्यब्जवन्दनात्तेऽद्य सफलं जन्म कर्म मे।
पितरोऽनुग्रहान्मुक्तास्तत्कृतार्थोऽस्मि निर्मलः ॥ ३९

गङ्गा पापं विधुस्तापं दैन्यं कल्पतरुर्हरेत्।
वायुस्तूलमिवैतत्ते दर्शनं हरति त्रयम्॥ ४०

साक्षी सर्वान्तरस्थस्त्वं परात्माऽधोक्षजोऽमलः।
नृरूपेणावतीर्णोऽसि साधूंस्त्रातुमजोऽव्ययः ॥ ४१

देहि मे तेऽमलं दास्यं श्रद्धोपेतं कुलाय च।
याचेऽदो भगवन्नेको ममाधिस्तन्निशामय॥ ४२

यन्निघ्नोऽस्मि स वै हिंस्रो यवनो हन्ति भूसुरम्।
प्रत्यब्दमाह्वयत्यद्य तदर्थमिति शुश्रुम॥ ४३

கோலம் போட்டு அலங்கரிக்கப் பெற்ற தன் வீட்டினுள் இவர்களுக்கு ஆஸனமிட்டு மனைவியுடன் இவர்களை உபசரித்தான். ஆரத்தி எடுத்துப் பாடித் துதித்து மகிழ்வித்தான். குருவின் சரணநீரைப் பருகினுன். நன்குபக்குவமான இனிய பலவகை உணவுப் பண்டங்களை இட்டு இனிது உபசரித்தான். இவர்கள் பந்தியில் நோயுற்ற அந்த அந்தணனும் அமர்ந்து வலியின்றி மகிழ்ச்சியுடன் உண்டான். அவனது நோய் அகன்றது. ஈசனே உணவேற்கும் போது இது வியப்பதற்கில்லை. நோயகன்றதும் மன அமைதி பெற்று மறுபடி இல்லற வாழ்க்கையில் ஆர்வமற்று குருவையே சார்ந்து நின்ருன். உணவிட்ட ஸாயந்தேவனும் வணங்கிக் கிராம்பு முதலியவற்றைத் தந்து வாய் மணம் மாற்றி அமர வைத்து தான் மிக பாக்யம் செய்திருப்பதையும் தன் முன்ஞேர்கள் திருப்தியுடன் மேனிலை பெற்றுள்ளதையும் தெரிவித்தான். கங்கை பாபத்தைப் போக்கும். சந்திரன் தாபத்தை அகற்றுவான். ஏழ்மையைக் கல்பதரு அகற்றும். காற்று குப்பையை அகற்றும். உமது தரிசனம் பாபம் தாபம் ஏழ்மை என்ற மூன்றையும் அகற்றுகிறது. எல்லோர் உள்ளத்திலும் உள்ள ஸாக்ஷி நீர். புலப்படாத பரமாத்மா. நல்லோரைக் காக்க மனித வடிவில் தோன்றியுள்ளீர். எனக்கும் எனது குலத்திற்கும் உமது பணிவிடையில் இடம் தருவீர். எனக்கு ஒரு குறையுள்ளது. இங்குள்ள கொடூரஞன யவனன் ஒவ்வோராண்டும் ஒரு அந்தணரைக் கொல்வதாக விரதம் பூண்டுள்ளான். இன்று என்னை அழைத்துள்ளான் என்ருர். (43)

श्रीगुरुरुवाच—

मा भीः क्रूरमपीदानीं यवनं याह्यसंशयम्।
मुदैष्यस्यर्चितस्तेन तावत्तिष्ठामि मा शुचः ॥ ४४

इत्याकर्ण्यापिशङ्कं स ययौ यवनमञ्जसा।
शस्त्रैर्विप्रश्छिनत्तीति भ्रान्तोऽरं यवनस्तदा ॥ ४५

तं तुष्ट्वा वस्त्रभूषार्थैः प्राह गच्छ सुखं द्विज।
सायंदेवोऽपि वीताधिर्हृष्टः श्रीगुरुमाययौ ॥ ४६

सर्पोऽप्यद्याद्विराजोऽर्भं हरेर्वैभो गुरुप्रियम्।
न क्षमोऽप्यन्तको द्रष्टुं यवनः किमुताल्पकः ॥ ४७

दासोऽसीष्टं लभेत्ते मे द्वयष्टाब्दैर्दर्शनं भवेत्।
द्विजेत्युक्त्वा वैद्यनाथं गत्वान्तर्दध ईश्वरः ॥ ४८

ஸ்ரீ குரு சொன்னார்- பயப்படாதே. கொடும் யவனனிடம் செல்வாய். அவன் உன்னை பூஜிப்பான். மகிழ்ச்சியுடன் நீ திரும்பி வரும்வரை நான் இங்கு இருப்பேன் என. ஸந்தேகமின்றி யவனனிடம் சென்ற அந்தணனைக் கண்டதும் இவன் என்னைக் கத்தியால் வெட்டப் போகிறான் எனப் பயந்த யவனன் அந்தணனை ஆடை ஆபரணங்களால் மகிழ்வித்து ஸுகமாக வீடு திரும்புவாய் என அனுப்பினான். அந்தணனும் மன வேதனையின்றி மகிழ்ச்சியுடன் ஸ்ரீ குருவிடம் வந்தான். கருடனின் குஞ்சை பாம்பு கடித்தாலும் கடிக்கலாம். சிங்கக்குட்டியை யானை அடிக்கலாம். குருபக்தனை யமனும் அணுகமாட்டான். யவனன் ஓர் அற்பன். நீ என் தாஸன். விரும்பியதைப் பெறுவாய். பதினாறு ஆண்டுகளுக்குப்பின் என்னைக் காண்பாய் என்று ஆசிவழங்கிவிட்டு ஸ்ரீ குரு வைத்ய நாதம் சென்று மறைந்தார். (48)

ईदृश्योऽलौकिका लीलाः कृता भक्तिविधित्सया।
भजेयुर्मां कथमपि लोका इत्याशयोऽस्य तु ॥ ४९

लोके प्रत्युपकारित्वं समीक्ष्य भगवान्विभुः।
लौकिकानन्दजनकां चमत्कृतिमिहाकरोत् ॥ ५०

हेतुनानेन तल्लोका भजन्ति भगवत्पदम्।
भजनादेव निर्धूतमला यान्ति मुमुक्षुताम् ॥ ५१

ततोऽभ्यासाच्च वैराग्यात्तं ध्यायन्त उपासते।
महाप्रसादोऽनेनैव लभन्ते सद्गुरोर्नताः ॥ ५२

ऐक्यज्ञानं तदा लब्ध्वा महावाक्येन चात्मनोः।
शान्तिं विनिहिताविद्यास्तत्संस्थां यान्ति ते ध्रुवाम् ॥ ५३

प्रसन्नात्मानः प्रशान्ता निर्बन्धा द्वैतवर्जिताः ।
स्वात्मारामाश्चरन्त्यत्र जडोन्मत्तपिशाचवत् ।। ५४

स्पर्शेक्षाकीर्तनादीनां सद्गुरोर्महिमा त्वियान् ।
स्नेहाद्द्वेषाद्भयाद्वाऽपि धत्ते यत्र मनोऽचलम् ।। ५५

तत्सारूप्यं स पेशस्कृद्ध्यानात्कीट इवैत्यरम् ।
इत्याद्या मार्गणोपाया हरेः स्युः सुलभा नृणाम् ।। ५६

मृग्योऽसौ पुरुषेणैव बुद्ध्यादिगुणहेतुभिः ।
नानुमानैरतो युक्त आत्मैवात्मगुरुः किल ।। ५७

உலகியலிற்கு அப்பாற்பட்ட லீலைகளை பக்தர்களுக்காக அவர் செய்தார். என்னை எப்படியும் மக்கள் அணுகுவர் என்று பகவான் நினைத்தார். நல்லது செய்ததற்குப் பிரத்யுபகாரம் செய்வது உலகியல்பு. அதனால் மக்களுக்கு ஆனந்தமளிக்கிற இத்தகைய லீலைகளை ஈசன் புரிந்தார். அதனால் பகவானிடம் மக்களுக்கு ஈடுபாடு அதிகமாக, பகவானை அணுகுவதால் அறியாமையகன்று முக்தி பெறுகின்றனர். பக்தி பழகப்பழக பற்றின்மை வரும். தியானமும் உபாஸனமும் இறையருளும் கிட்டும். மஹாவாக்யத்தைப் பொருளுணர்ந்து கூற தன் ஆத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் வேற்றுமையின்மை உணரப்பெறும். அவித்யை அகன்று அமைதி கிட்டும். தெளிந்து தன் ஆத்மாவிடம் ஒன்றி அதுவாக உணர்ந்து ஜடன் போல் பித்தன் போல் பிசாசு போல் புற உணர்வின்றி உலாவுவர். ஸத்குருவைக் காண்பதும் தீண்டுவதும் பாடுவதும் குருவின் பெருமையுணர்வைத் தரும். மனத்தை நட்பாலோ துவேஷத்தாலோ பயத்தாலோ ஒரு பொருளில் அசையாமல் பதித்துவிட்டால் குளவி கொட்டிய புழு போல் தன்மயமாகி விடுவது இயல்பு. ஹரியைத் தேடும் வழிகள் எளிதானவை. இறைவனை அறிவால் உணர்வால் தான் தேடி அடைய முடியும். இருப்பான் என அனுமானத்தால் அவன் கிட்டுவதில்லை. தேடுபவனுக்கு அவனது ஆத்மாவே வழிகாட்டியான குரு. (57)

नामधारक उवाच—

भूतेशोऽन्तर्दधे कस्मात्तेजस्वी भक्तवत्सलः।
शिष्यास्तस्थुस्तदा कुत्र तच्छ्रोतुं सादरोऽस्म्यहम्।। ५८

सिद्ध उवाच—

सर्वे शिष्या भविष्याम इति मत्वाऽत्र यान्त्यतः ।
मत्वा स्थेयं रह इति छात्रान्सद्गुरुरब्रवीत्।। ५९

लब्ध्वा द्विजत्वं संस्कारैर्ब्रह्मचारी पठन्त्रयीम्।
द्वादशाब्दं कृती सूत्र-मेखलाजिनदण्डधृक्।। ६०

सायं प्रातः स कर्माग्नि-कार्यं भिक्षां चरन्गुरुम्।
भजन्भक्त्याऽस्वपन्नह्नि याचितां गुरवेऽर्पयन्।। ६१

तद्दत्तभुग्लब्धविद्यः स्नायाद्दत्वा वरं व्रती।
अनाश्रमी न तिष्ठेत भवेत्स प्रत्यवाय्यतः ।। ६२

स्नातकस्तूद्वहेत् भार्यां गृह्यं परिचरेद् गृही।
पोष्यभृद्यज्ञकृद्वेदशास्त्रधर्मपरो भवेत्।। ६३

पुत्रार्पितश्रीर्भार्यायुगग्राम्यविषयो वने।
यतात्माऽकृष्टपच्याशी यावच्छुद्ध्यन्तरं वसेत्।। ६४

स्वारोपिताग्निः स वानप्रस्थो भार्याज्ञयाऽममः ।
प्रव्रजेद्यतिधर्मज्ञो विरक्तस्तु कुतोऽपि हि।। ६५

*குரு ஏன் மறைந்தார்? சீடர்கள் அப்போது எங்கு இருந்தனர்? என்று ஆர்வத்துடன் கேட்ட நாமதாரகனிடம் ஸித்தர் கூறினார். எல்லோரும் சிஷ்யர்களாகக் கூடலாம். அதனால் தனித்திருக்க வேண்டும் என்று நினைத்த குரு, தன்னை அணுகுபவரிடம் கூறினார். அந்தணனாகப் பிறந்தவன் ஸம்ஸ்காரங்களால் அந்தணனாக வேண்டும். பன்னிரண்டு ஆண்டுகள் பிரும்மசாரியாக இருந்து மூன்று வேதங்களையும் ஓதி உபவீதம், மேகலை, மான்தோல், தண்டம் தரித்து காலை, மாலை அக்னியை வழிபட்டு, பிக்ஷ*

எடுத்துக் குருவிற்குப் பணி விடை புரிந்து பிக்ஷையால் பெற்றதைக் குருவிடம் தந்து அவர் தருவதை உண்டு வேதமோதி முடிந்ததும் ஸ்நாதகனுகிறுன். அது ஆசிரமமற்ற நிலை. அதில் வெகு நாட்கள் வாழக்கூடாது. அவ்வாறு இருந்தால் தோஷமுண்டு. பெண்ணை மணந்து இல்லறம் புகுந்து வீட்டுக்கடமைகளை நிறைவுறச் செய்யவேண்டும். தன்னுல் போஷிக்கத்தக்கவர்களைப் போஷித்து வேள்விகள் புரிந்து வேதங்களும் சாஸ்திரங்களும் காட்டும் வழியில் தர்மங்களைச் செய்ய வேண்டும். பிள்ளையிடம் தான் ஈட்டியதைத் தந்து மனைவியுடன் சிற்றின்ப நாட்டமின்றிக் கட்டுப்பாட்டுடன் தானே கிடைத்த காய் கிழங்குகளை உண்டு. உள்ளம் தூய்மை பெறும் வரை காட்டில் வானப் பிரஸ்தனுக வாழவேண்டும். மனைவியிடம் அனுமதி பெற்று வழிபட்ட அக்னியைத் தன்னில் இணைத்து துறவியின் கடமைகளை உணர்ந்து எதிலும் பற்றற்றுத் துறவறம் பூணவேண்டும். (65)

त्रिकालस्नायी संन्यासी न्यस्तसूत्रशिखैषणः ।
जपभिक्षाटनध्यान-शौचार्चनरतो वशी ।। ६६

स्त्रीकथालौल्ययानाहःस्वापखट्वाऽस्पृगात्मदृक् ।
सद्वेणुमृद्दार्वलाबुमयभाजनदण्डधृक् ।। ६७

सकृदह्नचाप्तसद्भिक्षाभुक्शान्तस्तत्त्वचिन्तकः ।
तीर्थान्यटन्नृते वर्षास्त्र्यहमेकस्थले वसन् ।। ६८

स्थिरीकृतमनाः क्वापि ततस्तिष्ठन्सुखी भवेत् ।
अशक्तस्तु महाक्षेत्रे हरिं ध्यायन्वसेत्सदा ।। ६९

तस्मात्कुर्ध्वं स्वाश्रमार्हं कृत्यं पातोऽन्यथा भवेत् ।
इत्युक्त्वान्यान्प्रेरयित्वा गृहेभ्योऽजोऽब्रवीद्यतीन् ।। ७०

ஸன்யாஸியின் நடைமுறை பின் வருமாறு- மூன்று வேளையும் நீராடல், உபவீதம் சிகை நாட்டம் நீக்குவது, ஜபம், பிக்ஷை எடுத்தல், தியானம், தூய்மை, ஈசனின் வழிபாடு, பெண்ணைப் பற்றிய பேச்சும் சபலமும் வாகனமும் பகல் தூக்கமும் கட்டிலில் அமர்வதும் தவிர்ப்பது. ஆத்ம தரிசனம் செய்வது.

மூங்கில், மண், மரம், சுரைக்காய், இவற்றாலான பாத்திரம், தண்டம் ஏந்துதல், பகலில் ஒரு வேளை பிக்ஷை, அமைதி, தத்துவ சிந்தனை, எப்போதும் தீர்த்தாடனம், மழை காலத்தில் ஓரிடத்தில் வாஸம், மன உறுதி இவை முக்கியம். இயலாமை இருந்தால் பெரிய க்ஷேத்திரத்தில் தங்கி ஹரி ஸ்மரணம். இவை ஆசிரமக்கடமைகள். இவை தவறினால் வீழ்ச்சி நேரும். அவரவருக்குரிய கடமைகளை ஆற்றுவீர். என்றார். ஸன்யாஸிகளைப் பார்த்து தனித்து உபதேசித்தார். (70)

काशी प्रयागो गया च श्रीरङ्गः पुरुषोत्तमः ।
श्रीशैलो नैमिषारण्यं कुरुक्षेत्रं बदर्यपि ।। ७१

गोकर्णः शङ्खकर्णश्च काञ्च्ययोध्या च गोकुलम् ।
मथुरा द्वार्वती मायाऽवन्तिका करवीरपूः ।। ७२

गन्धर्वपूर्हरिहरक्षेत्रं सद्देवकन्यका ।
गुहाश्रमः सेतुबन्ध इत्यादिक्षेत्रविस्तरः ।। ७३

गङ्गा सरस्वत्यर्कोत्था विपाट्पौष्णी मरुद्वृधा ।
वितस्तासिन्ध्वनेकास्या चन्द्रभागा पयस्विनी ।। ७४

शरावती मधुमती रेवा गोदाऽमरोद्भवा ।
सरयू कौशिकी पूर्णा भीमा कृष्णा मलापहा ।। ७५

कावेरी प्रवरा तुङ्गा क्षिप्रा तापी च वेदिका ।
चर्मण्वती गण्डकीति पूर्वा नद्यो नदा अपि ।। ७६

तत्सङ्गमा अप्यघघ्नास्तीर्थान्यन्यान्यनेकशः ।
तीर्थानि गुरुसञ्चाराच्छश्वद्द्वादशसिन्धुषु ।। ७७

प्रचरन्ति सदा तास्तु स्वर्णदीस्नानपुण्यदाः ।
कुर्ध्वं स्नानादि विधिवत्सर्वत्रात्र सरःस्वपि ।। ७८

ग्रीष्मे रजस्वला नद्यो यद्दिनेऽम्बु नवं तदा ।
दशाहं नर्ते तीरस्थैः स्नानं मुख्यासु तु त्र्यहम् ।। ७९

घुरात्रमपि कूपादौ चरित्वैवं ततोऽखिलाः ।
श्रीशैलं बहुधान्येऽब्दे यात यास्याम्यहं ह्यपि ॥ ८०

इत्युक्त्वा प्रेरयामास यात्राया अपि ते ययुः ।
तत्रैव सद्गुरुपद पद्मालिरभवं त्वहम् ॥ ८१

यद्वर्जुनाभ्यां विद्योगौ प्राहैष प्राग्यथा तथा ।
गुह्यौ मे प्राह ते शिष्य विनीत कथयामि ते ॥ ८२

इत्युक्त्वा प्रणतायोचे सिद्धः शिष्याय सत्तमः ।
याभ्यां परं पुमान्याति स्वानन्दो वैष्णवं पदम् ॥ ८३

*इति श्रीगुरुचरिते ज्ञानयोगे तीर्थयात्रोद्देशो नाम नवमोऽध्यायः ॥ ९*

காசி, பிரயாகை, கயை, ஸ்ரீரங்கம், புருஷோத்தமம்(பூரி) ஸ்ரீசைலம், நைமிஷம், குருக்ஷேத்திரம், பதரீ, கோகர்ணம், சங்ககர்ணம், காஞ்சீ, அயோத்யா, கோகுலம், மதுரா, துவாரகை, மாயாபுரீ, அவந்தீ, கொல்ஹாபூர், கந்தர்வபுரம், ஹரிஹரம், கன்யாகுமாரீ, குஹாசிரமம், ஸேதுபந்தம் முதலியவை க்ஷேத்திரங்கள். கங்கை, ஸரஸ்வதி, யமுனை, விபாசா, பௌஷ்ணீ, மருத்விருதா, விதஸ்தா, அஸிக்னீ ஏகாஸ்யா, சந்திரபாகா, பயஸ்வினீ, சராவதீ, மதுமதீ, ரேவா, கோதாவரீ, அமரஜா, ஸரயூ, கௌசிகீ, பூர்ணா, பீமா, கிருஷ்ணா, மலாபஹா, காவேரீ, ப்ரவரா, துங்கா, க்ஷிப்ரா, தாபீ, வேதிகா, சர்மண்வதீ, கண்டகீ, என்ற நதிகளும் நதங்களும் இவற்றின் ஸங்கம இடங்களும், எனப்பாபம் நீங்க நீராட ஏற்றவை. ஸிம்ஹராசி முதலியவற்றில் குரு கிரகம் ஸஞ்சரிப்பதற்கேற்ப தனிச்சிறப்பாகத் தெய்வ அருள் தருகிற தீர்த்த ஸ்தலங்கள் இவற்றில் திவ்யதடாகங்களிலும் நீராடவேண்டும். கிரீஷ்ம ருதுவில் நதிகள் ரஜஸ்வலா தோஷம் கொண்டவை. இவற்றில் இடத்திற்கேற்ப மூன்று அல்லது பத்துநாள், வாபி கிணறு தடாகம் முதலியவற்றில் ஒரு நாள் நீராடுவதில்லை. இவ்வாறு தீர்த்தாடனம் செய்த பின் பஹுதான்ய ஆண்டில் ஸ்ரீசைலத்தில் கூடுவீர். நானும் அங்கு இருப்பேன். இவ்வாறு கூறியாத்திரைக்கு அவர்களை அனுப்பினர். நான் ஒருவனே(ஸித்தன் மட்டும்) அவரது திருவடிப்பணியில் கூட இருந்தேன். யதுவிற்கும் கார்த்தவீர்யார்

ஜ்ஞானனுக்கும் (ஸ்ரீதத்தர்) உபதேசித்ததை எனக்கும் பரிவால் விளக்கினார். உனக்கு நான் அதனை விளக்குவேன். அதனால் பேரானந்தம் பெற்று விஷ்ணுநிலையைப் பெறுவர் (83).



# दशमोऽध्यायः

नामधारक उवाच—
शिष्यांस्तु तीर्थयात्रायै प्रेरयित्वा स्वयं कुह।
उवास भगवान्ब्रूहि श्रोतुमिच्छामि सादरम्॥ १

सिद्ध उवाच —
संवत्सरं वैद्यनाथ-समीपमकरोद्विभुः।
निवासमहमप्येतत्पादाब्जभ्रमरोऽभवम्॥ २

तत्रैत्यैको द्विजो मन्दो नमस्कृत्याब्रवीद्गुरुम्।
प्रपद्ये भगवंस्त्वां मे मोक्षोपायमुपादिश॥ ३

मया तु सिद्धये कष्टं भूर्यकारि तथापि मे।
नाप्ता सिद्धिर्नोपलब्धः सन्मार्गप्रापको गुरुः॥ ४

श्रीगुरुरुवाच—

कथं गुरुं विना वत्स सिद्धये केन योजितः।
कस्याज्ञया कृतं कष्टमित्याकर्ण्य द्विजोऽब्रवीत्॥ ५

सिद्ध्यै मया गुरुः कश्चिच्छ्रितश्चण्डः स तु प्रभो।
सेवार्थी पीडयामास ततस्त्यक्तः स वै मया॥ ६

श्रीगुरुरुवाच—

हन्तासाधु कृतं धिक्त्वां गच्छेतः सत्वरं यतः।
गुरुद्रोह्यस्यावलोको न भद्राय कथंचन॥ ७

प्रणिपातपरिप्रश्न-सेवाधर्मपराङ्मुखे।
कुतो गुरुकृपालेशस्तद्धत्येव प्रसन्नता ॥ ८

**அத்தியாயம்—10**

சிஷ்யர்களைத் தீர்த்த யாத்திரைக்கு அனுப்பிய குரு வசித்த இடம் பற்றிக் கேட்ட நாமதாரகனிடம் ஸித்தர் கூறினார். ஸ்ரீ குரு வைத்யநாதத்தில் ஓராண்டு வசித்தார். நானும் அவரது திருவடி ஸேவை செய்தேன். அங்கு ஒரு மந்தனான அந்தணன் அவரிடம் வந்தான். ''உம்மைச் சரணடைந்தேன். எனக்கு முக்திக்கு உபாயம் சொல்வீர். இதில் ஸித்தி பெற நான் பெருமுயற்சி செய்தேன். பலன் கிட்டவில்லை. நல்வழி காட்டுகிற குருவும் கிட்டவில்லை'' என்றான். குரு அவனிடம் கேட்டார். ''குருவின்றி முக்திக்காக ஏன் முயன்றாய்? யார் உன்னைத் தூண்டியவர்'' என்று. ''ஐயனே! நான் ஒரு குருவை அண்டினேன். அவர் கோபக்காரர். பணிவிடையை அதிகம் எதிர்பார்த்துத் துன்புறுத்தினார். பின்னர் அவரை விட்டு வந்து விட்டேன் என்றான். ஸ்ரீ குரு கோபம் கொண்டார். 'நீ இங்கேயிருந்து சென்றுவிடு? நீ ஒன்றுக்கும் உதவாதவன். குரு த்ரோகியான உன் முகத்தைப் பார்ப்பதும் நல்லதற்கல்ல. வணங்கவோ, பணிவிடை புரியவோ, தனக்கு வேண்டியதை அவரிடம் பணிவுடன் கேட்கவோ விரும்பாத உனக்கு குரு அருள் எவ்வாறு கிட்டும்? இவற்றை விரும்பி நாடுபவனுக்கல்லவா குருவருள் கிட்டும்? (8)

द्विज उवाच—

कथं ज्ञेयः कथं सेव्यो गुरुस्तन्मे वदाखिलम्।
अजानता गुरुद्रोहः कृतोऽतो मोद्धर प्रभो ॥ ९

श्रीगुरुरुवाच—

गुरुर्निरुपमः साक्षाद् ब्रह्मविष्णुशिवात्मकः।
सोऽज्ञेयस्त्वादृशैरन्धैस्तद्वत्सेवापि सद्गुरोः ॥ १०

एतदर्थं पुरा वृत्तं शृणु धौम्याभिधो मुनिः।
द्वापरेऽभूत् त्रयश्छात्रा आसंस्तस्याज्ञ तत्पराः ॥ ११

बैदारुणोपमन्वाख्याः सेवाधर्मसुशिक्षिताः ।
तेषां परीक्षितुं भावं गुरुः प्राह दयार्द्रधीः ॥ १२

मच्छालेयेऽम्ब्वभावोऽस्ति जीवेत्सस्यमतः कुतः ।
गत्वा वः कोपि यत्नेन क्षेत्रमम्ब्वानयत्वरम् ॥ १३

குருவை எவ்வாறு அறிவது? எவ்வாறு அவருக்குப் பணிவிடை புரிவது? இதனையறியாமல் குரு த்ரோஹம் செய்து விட்டேன். என்னைக் காப்பாற்றுவீர் என வேண்டி நின்ற அந்தணனிடம் ஸ்ரீ குரு இவ்வாறு விளக்கினார். குரு மும்மூர்த்தி வடிவினர். ஈடிணையற்றவர். உன்னைப் போன்ற குருடர்களால் புரிந்து கொள்ள முடியாதவர். ஸத்குருவின் பணிவிடையும் உன் போன்றவரால் செய்யமுடியாததே. த்வாபரயுகத்தில் தௌம்யர் என்ற முனிவரிருந்தார். அவரிடம் பக்தி கொண்ட சீடர்கள் மூவர். பைதர், அருணர், உபமன்யு என. பணிவிடை முறையை நன்கு கற்றவர்கள். அவர்களின் எண்ணங்களைச் சோதிப்பதற்கு கருணையுள்ளம் படைத்த தௌம்யர் அவர்களிடம் இவ்வாறு கூறினார். நஞ்சை நிலத்தில் நீரின்மையால் பயிர்கள் வாடுகின்றன. உங்களில் ஒருவர் சென்று எங்கிருந்தாவது விரைவில் நீரைக் கொண்டு வருவீர் என்றார். (13)

श्रुत्वैवमरुणोऽह्नाय गत्वा क्षेत्रसमीपतः ।
जलमानीय यत्नेन पल्वलात्क्षेत्रमुन्नतम् ॥ १४

दृष्ट्वाऽकरोत्क्षेत्रतुल्यं वारिवारणमाशु तत् ।
जलप्रवाहः सहसा क्षेत्रादन्यत्र निर्ययौ ॥ १५

न्यस्तोऽपि पाषाणचयः स्थातुं तत्र शशाक नो ।
मन्ये क्षेत्रे जलाभावाद् गुरुर्मां धिक्करिष्यति ॥ १६

गुर्वर्थमत्र मर्तव्यमिति मत्वोभयत्र सः ।
स्वाङ्गं निधायोपरिष्टाज्जलैः क्षेत्रमपूरयत् ॥ १७

धौम्योऽपि क्षेत्रमेत्याम्बुपूर्णं शालेयमीक्ष्य सः ।
खिन्नः शिष्यमदृष्ट्वैहि वत्सेत्यावाहयन्मुदा ।। १८

प्रत्युत्तरं जलाक्तान्तरङ्गो दातुं स न क्षमः ।
किञ्चिद्ध्वनिं चकारासौ तच्छ्रुत्वैत्य ददर्श तम् ।। १९

कृपया परयोत्थाप्य भक्तिं ज्ञात्वा स तत्क्षणम् ।
तस्मिन्प्रसन्नः सम्भूय स्वीयं साम्यं व्यधान्मुनिः ।। २०

विद्याविनयसंपन्नो भूत्वा संतोष्य सद्गुरुम् ।
तदाज्ञया ययौ धाम स्वमर्च्योऽभवदत्र सः ।। २१

*அதனைக் கேட்ட அருணன் உடன் கிளம்பி வயலுக்குச் சமீபத்தில் குட்டையிலிருந்து நீரைக் கொணர்ந்தான். வயல் மேட்டிலிருந்ததால் வயலின் உயரத்திற்கு அணை கட்டினுன். ஆனுல் தடை பெற்ற நீர் வேறிடத்தில் பாய்ந்தது. நிறையக் கற்களை அடுக்கியும் நீர் பாய்வதைத் தடுக்கமுடியவில்லை. வயலுக்கு நீர் வராததால் குரு தன்னை நிந்திப்பார். அதனுல் குருவுக்காக உயிர் விடவேண்டுமென்று நினைத்து தன் உடலைக் குறுக்கே படுக்க வைத்து நீர் மட்டத்தை உயர்த்தி வயலில் நீர் பாயவிட்டான். தௌம்யர் நிலைமை உணர வயலுக்கு வந்தவர் வயலில் நீர் நிரம்பியிருப்பதைக் கண்டு நிரப்புவதற்குப் பாடுபட்ட சீடனைக் காணுமல் குழந்தாய் என்று உரக்கக் கூப்பிட்டார். நீர் வாய் மட்டம்வரை நிரம்பியிருந்ததால் குரல் கொடுக்க முடியாத அருணன் ஏதோ ஒருவாறு குரல் கொடுத்தான். அதனைக் கேட்ட குரு ஓடிவந்து பெரும் பரிவுடன் சீடனைத் தூக்கி அவனது பக்தியை மெச்சி அவனைத் தனக்கு ஈடான அறிஞனுக்கினுர். கல்வியும், பணிவும் கொண்ட அவன் குருவை மகிழ்வித்து அவரது அனுமதியுடன் தன் வீடு திரும்பி அங்கும் புகழ்பெற்றுன். (21)*

ततो बैदं गुरुः प्राह सस्यं मे शिष्य सर्वतः ।
रक्षयित्वा नु धान्यं तद्यत्नात्सर्वं समानय ।। २२

आज्ञा प्रमाणमित्युक्त्वा पशुपक्षिनिवारणैः ।
सस्यं ररक्ष पश्चात्तच्छित्वा धान्यं स निर्ममे ।। २३

शशांस गुरवे न्यस्तो धान्यराशिर्मया गुरो ।
क्षेत्रेऽत्रानेतुमेकं मे शकटं देहि सर्षभम् ।। २४

तच्छ्रुत्वा शकटं तस्मै स लुलायेन योजितम् ।
प्रददौ स तमादाय नीत्वा विन्यस्य चाखिलान् ।। २५

शालीनाहरदर्धाध्वं तत्र पङ्के सकासरः ।
संलग्नोऽभूत्स्वयं सोऽथ स्वकण्ठेऽयोजयद्युगम् ।। २६

सलुलायः स शिष्यस्तु तत्र भारातिरेकतः ।
पपात तत्र सहसा धौम्यः प्राप यदृच्छया ।। २७

तत्कर्म प्रेक्ष्य घोरं तं मोचयित्वा प्रसन्नधीः ।
वरं तस्मै ददौ येन स परत्रात्र चोत्तमः ।। २८

*பின் பைதனிடம் குரு வயலைச் சுற்றிப் பாதுகாத்து தான்யம் நன்கு விளைந்ததும் அதனை என்னிடம் கொணர்வாய் என உத்தரவிட்டார். உடன் ஆணையைத் தலையால் ஏற்று, கால் நடைகளும் பறவைகளும் தான்யத்தைக் கொய்யாமல் பாதுகாத்து நன்கு விளைந்ததும் அறுவடை செய்து அதனை கொணர்வதற்கு குருவிடம் வந்து. அறுவடை செய்த தான்யத்தைக் கொண்டுவர காளைமாடு பூட்டிய வண்டி கேட்டான். அவரோ எருமை பூட்டிய வண்டி தந்தார். தான்ய மூட்டையை அதில் ஏற்றிக் கொணரும் போது பாதி வழியில் சேறு நிரம்பிய குட்டையில் வண்டி சிக்க, எருமையுடன் இவனும் நுகத்தடியில் கழுத்தைக் கொடுத்து இழுத்தான். சுமை அதிகமிருந்ததால் திடீரென சேற்றில் வழுக்கி விழுந்துவிட்டான். தௌம்யர் அப்போது அங்கு வந்தவர் அவனை விடுவித்துக் கரை சேர்த்தார். உள்ளம் கசிந்து அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் மேனிலை பெற அருள்புரிந்தார். (28)*

अथोपमन्युमाहैष गाश्चारय सदेत्यथ ।
कतिकालं तदा चक्रे स्वल्पभुक्क्षुधितोऽभवत् ।। २९

वने विप्रालयान्प्रेक्ष्य स्वं पुपोषान्नयाच्ञया ।
पुष्टोऽसि कथमित्युक्तो गुरुणा तन्न्यवेदयत् ।। ३०
तन्मे देहीति गुरुणा भाषितः स तथाकरोत् ।
स पश्चाद्याच्ञयाऽरक्षत्स्वं तद्वेदापि वै मुनिः ।। ३१
द्विवारमर्पयेत्यूचे सच्छिष्योऽपि तथाऽकरोत् ।
पीत्वा ररक्ष गा दुग्धं वत्सपीतावशेषकम् ।। ३२
तज्ज्ञात्वा धीभ्रंशभिया वारितो गुरुणा वने ।
अर्कक्षीरं दधौ पातुं तत्तस्याक्ष्णोः पपात ह ।। ३३
स पपातान्धवद् गावो ययुर्गेहं गुरुस्तदा ।
अन्वेष्य तं तथा दृष्ट्वा तं प्राह स्तुहि रेऽश्विनौ ।। ३४
सोऽश्विस्तवाद्दृष्टिमाप गुरुणा तदुपर्यपि ।
कृपा कृता तेन सोऽपि कृतकृत्योऽभवद्द्रुतम् ।। ३५

உபமன்யுவை தௌம்யர் பசுக்களை மேய்த்துவரக் காட்டிற்கு அனுப்பினார். உணவு போதாமல் பசியால் வாடிய உபமன்யு காட்டிலிருந்த அந்தணர் குடியிருப்பில் பிக்ஷை வாங்கி உண்டான். புஷ்டியுடன் இருக்க என்ன செய்தாய் எனக் குரு கேட்டுத் தெரிந்துகொண்டதும் பிக்ஷை வாங்கியதைத் தன்னிடம் தரும்படி உத்தரவிட்டார். (குருவிடம் தந்து பின் அவர் தருவதை உண்பது குரு குலத்தின் முறை). அவ்வாறே யாசித்துப் பெற்றதைக் குருவிடம் தந்ததும் குரு அவனுக்கு உணவு தரவில்லை. அதனால் மறுபடி யாசித்துப் பெற்ற உணவை உண்டான். இரண்டாவது தடவை யாசித்துப் பெற்றதையும் குரு தன்னிடம் கொடுக்க உத்தரவிட்டதும், பசுவிடம் கன்று குடித்து மடியில் மீந்துள்ள பாலைக் கையால் ஏந்திப் பருகினான். கையால் பருகுவது அறிவைக் கெடுக்கும் என்று குரு அதனைத் தடுக்கக் காட்டில் எருக்கஞ் செடியின் பாலைக் குடித்தான். அது கண்களில்பட குருடனாகி மாடுகளை குருகுலத்திற்கு ஓட்டிச் செல்லும் போது வழி தவறி பள்ளத்தில் விழுந்தான். மாடுகள் மட்டும் வந்ததைக் கண்ட

தௌம்யர் அவனைத் தேடிச் சென்றார். கண்பார்வை இழந்த அவனை அசுவினீ தேவர்களைத் துதிக்கச் சொன்னார். அவனும் அவர்களைத் துதிக்கப் பார்வை மீண்டது. பரிவுடன் அவனுக்கு குரு அருள்புரிய அவன் நல் வாழ்வு பெற்றான்.

तच्छिष्या अपि तत्तुल्या बभूवुः शृणु सादरम्।
उद्दालकोऽस्य शिष्यः सन्सत्रेऽहीनदहद्बहून्॥ ३६

जनमेजयतोषार्थं स्वर्गाच्छक्रं समानयत्।
अयं गुरुप्रसादस्तत्-तोषात्प्राप्यो न चान्यथा॥ ३७

अतस्तमेव शरणं सर्वभावेन गच्छ भोः।
तत्प्रसादात्परां शान्तिं मोक्षं प्राप्स्यसि दुर्लभम्॥ ३८

विप्र उवाच-

युज्यते भिन्नधात्वैक्यं न मुक्तायास्तथा हृदः।
तद्भृद्भिन्नं न यास्येऽतः प्राणांस्त्यक्ष्यामि तेऽग्रतः॥ ३९

इति तन्निश्चयं ज्ञात्वा के विन्यस्य करं गुरुः।
तापदग्धाशुभस्यास्य प्राहाङ्ग स्वगुरुं स्मर॥ ४०

द्विजोऽपि स्वगुरुं स्मृत्वा तत्स्वरूपमिव प्रभुम्।
ददर्श श्रीगुरुं प्रेम्णा तुष्टाव स मुदश्रुयुक्॥ ४१

तमाह प्राञ्जलिं विप्रं श्रीगुरुस्त्वं यथाक्रमम्।
लघु निस्तीर्य कर्मौघं परां संसिद्धिमाप्स्यसि॥ ४२

त्वया व्यालोकि रूपं मे यत्तद्भक्त्या स्मरन्क्रियाः।
मदर्थ इत्सदासक्तः कुर्वन्सिद्धिमुपैष्यसि॥ ४३

इति द्विजं तं निजरूपदर्शनात् सुदुर्लभस्वात्मसुखान्वितं प्रभुः।
विधाय चैकं द्विजपुत्रमागतं समुद्दधारच्छितजिह्वमप्यरम्॥ ४४

ये केचन श्रीगुरुमीशबुद्ध्या सन्तापदग्धैनस आव्रजन्ति।
प्रच्छिद्य ते मोहसमूहमाशु स्वानन्दसौख्यं द्विजवत्प्रयान्ति॥

।। इति श्रीगुरुचरिते गुरुभक्त्यनुशासनं नाम दशमोऽध्यायः ।।

*தௌம்யரின் சீடர்களும் அவரைப் போன்றே சிறந்து விளங்கினர். உத்தாலகர் என்ற சிஷ்யன் ஜனமேஜயனின் வேள்வியில் அவனது திருப்தியைப் பெற ஸர்ப்பங்களை எரித்தான். இந்த்ரனையும் ஸ்வர்கத்திலிருந்து கொணர்ந்தான். குருவின் அருளால் மட்டுமே இவ்வாற்றலைப் பெற முடியும். அதனால் நீ உடன் உன் குருவிடம் சென்று பணிவிடை புரிந்து பேரமைதியையும் முக்தியையும் பெறுவாய் என்று ஸ்ரீ குரு கூறினார். இரு உலோகங்களை உருக்கி இணைக்க முடியும். ஆனால் முத்து உடைந்தால் இணைக்க இயலாது. எங்கள் உள்ளங்கள் உடைந்து விட்டன. நான் அவரிடம் செல்ல மாட்டேன். உம் எதிரில் உயிரை விடுகிறேன் என்று உறுதியுடன் அவன் கூறினான். ஸ்ரீ குரு அவனது உறுதியை உணர்ந்து அவன் மீது கரம் வைத்தார். அனுதாபத்தால் அவனது பாபம் அகன்றது. ஸ்ரீ குரு அவனைத் தன் குருவை நினைத்துக்கொள்ளச் சொன்னார். அவன் தன் குருவை நினைத்ததும் எதிரிலுள்ள ஸ்ரீ குரு அவனது குருவாகத் தோன்றினார். அவன் மகிழ்ச்சிக் கண்ணீர் ததும்ப கை கூப்பி நின்றான். வினைச் சுமையை எளிதில் தாண்டிவிட்டதால் பெரும் ஸித்தியைப் பெற ஆசி கூறினார். நீ எப்போதும் இப்போது கண்ட என் உருவைத் த்யானிப்பாய். பற்றற்றுக் கடமைகளைச் செய்வாய் என வாழ்த்தி ஆத்மானந்தம் பெறச் செய்து க்ருஷ்ணா நதிக் கரை வந்து அங்குவந்த நாக்கறுக்கப்பட்ட அந்தணரை மேனிலைக்குக் கொணர்ந்தார். (ஈசனைக் குருவைத் த்யானிப்பவர் ஆத்மானந்தம் பெறுவர்). 45*



# अथैकादशोऽध्यायः

नामधारक उवाच—

क आगतश्छातजिह्वः कथं भगवतोद्धृतः ।
तत्कथामृतमास्वाद्य तृष्णा मेऽतीव वर्धते ।। १

सिद्ध उवाच—

करवीरे सुधीपुत्रो जातोऽज्ञस्तं जगुर्बुधाः ।
विपुच्छशृङ्गो गौस्त्वं गोभाग्यं नात्तं तृणं तु यत् ।। २

विद्यानिधिर्हर्त्रलभ्यः स शिष्यार्पित एधते।
श्रेष्ठेष्वर्च्यं करोत्यूनं काप्यस्वं च धनान्वितम्॥ ३

सुखे स्त्रीवावनेऽम्बेव सखेव कापि तातवत्।
हिते बोधे च गुरुवद्विद्या धित्त्वामविद्य रे॥ ४

इति निर्भर्त्सितस्त्रस्तो भिल्लवार्टी ययौ स तु।
प्रायोपविष्टोऽनशन आनर्च भुवनेश्वरीम्॥ ५

दत्वाऽलब्धप्रसादोऽस्यै जिह्वां छेत्तुं कमुद्यतः।
स्वप्ने देव्याह तं दण्डी कृष्णातीरेऽस्ति तं भज॥ ६

इति श्रुत्वा दुःखितोऽपि धृत्याऽऽगत्य स सद्गुरुम्।
ननामाश्रूत्तगात्रस्तन्मूर्ध्न्यधाच्छ्रीगुरुः करम्॥ ७

### அத்தியாயம்–11

நாக்கு வெட்டப்பட்டு வந்த பக்தனின் சரிதத்தை நாமதாரகனுக்கு ஸித்தர் விளக்குகிறார். கரவீரத்தில் (கொல்ஹாபுரத்தில்) ஓர் அந்தணருக்குப் பிறந்த பிள்ளை ஜடன், வாலும் கொம்புமில்லாத மற்ற மாடுகளின் பாக்யத்தால் புல் தின்பதில்லை என மக்கள் அவனைக் கேலி செய்வர். கல்வியறிவு என்பது பெரும் நிதி; திருடனுக்குக் கிட்டாதது; சிஷ்யனுக்கு வழங்க வளரும்; உடலூனம் கொண்டவனையும் மதிக்கச் செய்யும்; ஏழையையும் சில ஸமயம் பெரும் தனிகனுக்கும். கல்வியறிவு இன்பம் தருவதில் பெண் போல்; காப்பதில் தாய் போல்; அறியாத இடத்தில் நண்பன் போல்; பிறருக்கு உணர்த்துவதில் குருபோல். கல்வியறிவற்ற நீ வீண் என்று வசை கேட்டுப் பயந்த ஜடன் வேடர் குடியிருப்பிற்குச் சென்றான். உணவின்றித் தேவியை வழிபட்டான். அருள் கிட்டாததால் நாக்கை வெட்டித் தேவியிடம் வைத்தான். மறுநாள் தலையையும் வெட்டி அர்ப்பணம் செய்ய நினைத்தான். இரவில் கனவில் தேவி தோன்றி, "க்ருஷ்ணாநதியின் அக்கரையில் உள்ள துறவியை அணுகுவாய்" என்றாள். கண்ணீர்

மல்க, துயர்மிக்க அவன் தைர்யத்துடன் அந்த குருவை அணுகி வணங்கினான். குரு அவன் தலையில்கையை வைத்தார். (7)

स्पर्शेऽयोऽपि यथा हेम हंसः काकोऽपि मानसे।
यथा विद्वांस्तथाभूत्स सुजिह्वः स्पर्शनाद्विभोः ॥ ८

वज्राङ्कुशाध्वजाब्जाङ्कं ध्यायन्त्यङ्घ्र्यब्जमस्य ये।
अपैति तत्प्रसादाद्धीजाड्याद्यं नात्र चित्रमित् ॥ ९

गुर्वाज्ञया गृहं गत्वा सिद्धिं प्रापोभयीं द्विजः।
भगवांस्तत उत्थाय दक्षिणाभिमुखो ययौ ॥ १०

कृष्णावेणीपञ्चनदीसंगमं सुमनोहरम्।
अष्टतीर्थान्वितं पुण्यं दृष्ट्वा तस्थौ परे तटे ॥ ११

सरस्वती शिवा भद्रा कुम्भी भोगवतीत्यमूः।
कृष्णावेण्योः संगतास्तत्संगमस्तूत्तमोत्तमः ॥ १२

स्थलं कुरुपुराख्यं तत्कुरुक्षेत्राधिपुण्यदम्।
साक्षात्प्रयागोऽयमग्रे काश्याः श्रेष्ठं महास्थलम् ॥ १३

तत्रोदुम्बरकल्पद्रुर्विश्वेट्तुल्योऽमरेश्वरः।
योगिन्योऽपि चतुःषष्टिर्नरोप्यत्रामरो भवेत् ॥ १४

स्वर्याति ना तपःस्नायी सङ्गतेऽत्र सितासिते।
तीर्थान्यवाक्प्रवाहेऽत्र महाघघ्नानि कोटिशः ॥ १५

मुमुक्ष्वाश्वासनं कामि-हितं सत्तमरञ्जनम्।
दृष्ट्वाश्रमं मूर्तिमत्स्वं परात्मोदुम्बरे व्यधात् ॥ १६

ஸ்பர்சத்தால் இரும்பு தங்கமாவது போல், மானஸ ஸரஸில் மூழ்கியதும் காக்கை ஹம்ஸமாவது போல், அவன் குருவின் கை தீண்டலால் பேரறிஞனானன். துண்டிக்கப் பெற்ற நாக்கும் சீரானது. வஜ்ரம் கொடி, துரட்டி, தாமரை இவற்றின் ரேகை

கொண்ட ஈசனின் திருவடித் தாமரையைத் த்யானித்ததும் அறிவு மந்தமகலுவது வியப்பல்லவே ! குருவின் அனுமதியுடன் வீடு திரும்பிய அவன் இம்மையிலும் மறுமையிலும் மேன்மை பெற்ருன். பகவானும் அங்கிருந்து கிளம்பி தெற்கு நோக்கி வந்தார். க்ருஷ்ணு, வேணீ, பஞ்சநதம் கூடுமிடத்தில் அத்திமரத்தினடியில் அமர்ந்தார். அங்கு எட்டு தீர்த்தங்கள் கூடுமிடம். ஸரஸ்வதீ, சிவா, பத்ரா, கும்பீ, போகவதீ என்ற ஐந்து நதிகள் இணைந்து க்ருஷ்ணு வேணீ நதிகளுடன் இணையுமிடம். குருபுரம் என்ற அந்த இடம் குரு க்ஷேத்ரத்தைவிடப் புனிதமானது. இது ஒரு ப்ரயாக க்ஷேத்ரம். காசியை விட உயர்ந்தது. இந்தக் கூடலிலுள்ள அத்திமரம் ஒரு கற்பக விருக்ஷம். விச்வேச்வரர் போன்று அமரேச்வரர் இங்குள்ளார். அறுபத்து நான்கு யோகினிகளும் இங்கு வசிக்கின்றனர். மனிதனும் தேவனுகுமிடம். ஸீதா, அஸிதா என்ற இரு நதிகள் கூடுகின்றன. இங்கு நீராடுபவனும் தவமிருப்பவனும் ஸ்வர்கமடைவான். தெற்கு நோக்கி ஓடுகிற ப்ரவாஹத்தில் பாபம் நீக்கும் துறைகள் கோடிக் கணக்கில் உள்ளன. முக்தி பெற விரும்புபவனுக்கு இந்த இடம் ஆறுதல் தரும். பொருளை நாடுபவனுக்கு உதவும். நல்லோரின் உள்ளத்தைக் குளிர்விக்கும். அங்கு அத்திமரத்தடியில் ஆச்ரமத்தில் ஸ்ரீ குரு பகவான் தங்கினுர். (16)

सद्विद्याढ्यामरपुरं प्राङ्निरीक्ष्यैत्य तत्र सः ।
स्वाचारं वैदिकं दीनं प्रभुर्भिक्षां स्म याचते ।। १७

भिक्षावृत्तेस्तदा साध्वी सात्त्विकस्य कुटुम्बिनी ।
अन्नाभावाद्ददौ शाकमातिथेयी तु भिक्षवे ।। १८

भक्त्यार्पितमपि प्राश्य शाकं संतृप्त ईश्वरः ।
तत्र शाकलतां दृष्ट्वा तामुत्पाट्याश्रमं ययौ ।। १९

तदा स्त्रीर्दुःखिता प्राह योगक्षेमकरी कुतः ।
उन्मूलिता लता नैव भिक्षाशाठ्यं मया कृतम् ।। २०

तां भर्तोचे मौनमेहि न कोऽपि सुखदुःखदः ।
लोकाः स्वकर्मसूत्रोता वृथाहङ्कारसंश्रिताः ।। २१

ईशाधीनं जगत्सर्वं येनाप्तव्यं तु यत्ततः ।
कोऽपि नेशोऽन्यथा कर्तुमायुश्चान्नं स यच्छति ।। २२

विश्वोद्भवलयत्राण-निदानस्यास्य चैकदृक् ।
प्राज्ञेऽज्ञे राज्ञि रङ्केऽपि मा शुचस्तारकोऽस्त्ययम् ।। २३

इत्याश्वास्य वधूं विप्रो मूलमुत्खाय तत्र सः ।
अर्थपूर्णं घटं लेभे सद्गुरोः संप्रसादतः ।। २४

सभार्योऽथ द्विजो गत्वा शशंस गुरवे तु तत् ।
स प्राह दम्पती गोप्यमिदं श्रीर्नान्यथा ध्रुवा ।। २५

ऐश्वर्यपुत्रपौत्राढ्यौ संभूयात्र निरामयौ ।
मोक्षं गमिष्यथो नूनं गन्तव्यं सुखमालयम् ।। २६

பேரறிஞர் நிரம்பிய அமர புரத்தை நோக்கிச் சென்ற ஸ்ரீ குரு நல்ல நடைமுறையுள்ளவரும், வைதிகரும் ஏழையும், பிக்ஷை எடுத்து உண்பவருமான ஓர் அந்தணர் வீட்டில் பிக்ஷை கேட்டார். அந்த நல்லவரின் மனைவி உணவில்லாததால் இலைகளை இட்டாள். பக்தியுடனிட்டதை உண்டு பசி தீர்ந்த நரஸிம்ஹர் அந்த வீட்டில் முளைத்திருந்த செடியைப் பிடுங்கி எறிந்துவிட்டு ஆச்ரமம் சென்றார். இதனால் துயருற்ற பெண்மணி "பசி நீக்கி வாழவிட்டுக் கொண்டிருந்த செடியை ஏன் பிடுங்கி எறிந்தார்? நான் பிக்ஷையிடாமல் இல்லையே!?" என்று அழுதாள். அவரவர் வினைதான் இன்பமும், துன்பமும் தருகிறது. மற்றவர் அல்ல. உலகமனைத்தும் ஈசனை அண்டியுள்ளது. அவரவருக்கு அடையத் தக்கதே கிட்டுகிறது. இதை எவரும் மாற்ற இயலாது. ஆயுளையும் உணவையும் கொடுப்பவர் அவரே. உலகைப் படைத்துக் காத்து மறைத்துக் காரண மானவர். அறிஞனும் முட்டாளும் அரசனும் ஆண்டியும் அவருக்கு ஸமமானவரே என்று அந்தணர் மனைவியை

ஸமாதானப் படுத்தி அந்தக் கொடியின் வேரையும் அகற்றினார். அங்கு தனம் நிறைந்த குடம் குருவின் அருளால் தென்பட்டது. உடன் தன் மனைவியுடன் அந்த அந்தணன் ஸ்ரீ குருவிடம் நிகழ்ந்ததைக் கூறினார். ஸ்ரீ குரு இதனை ரகசியமாகக் காக்க ஆணையிட்டு ஐச்வர்யமும் நற்சந்ததியும் பெற்றுப் பெருவாழ்வு வாழ அருள் புரிந்தார். (26)

नामधारक उवाच—

भिक्षावृत्तिः प्रभोः कस्मात्कल्पद्रुम उदुम्बरः ।
सति पूज्यतमेऽश्वत्थे कुतो भगवता श्रितः ॥ २७

सिद्ध उवाच—

पक्वान्नभिक्षुको भिक्षुरिति श्रुतमतं प्रभुः ।
भिक्षुः सन्लीलया भेजे शम्भुवृत्तिरियं पुनः ॥ २८

नखा नृसिंहावतारे विषार्ता दैत्यदारणात् ।
शान्ता औदुम्बरैः सोऽथ प्रीत्याऽनेन सदाश्रितः ॥ २९

यत्र काप्येष कल्पद्रुर्भूयात्तापाघदैन्यहृत् ।
कामदोऽहं श्रियात्रासमिति तस्मै वरोऽर्पितः ॥ ३०

विश्वात्मा यत्र तत्रैव वेदतीर्थामरा अपि ।
सन्त्युदुम्बर एवात्र कल्पद्रुर्भुवि नापरः ॥ ३१

तस्मादुदुम्बरतले भिक्षां कुत्रापि विश्वभृत् ।
अकृत्वा कामरूपाभिर्योगिनीभिः स्थितोऽर्चितः ॥ ३२

अज्ञानावृतविप्रास्तदज्ञात्वोचुः परस्परम् ।
कथं जीवत्यकृत्वाऽयं भिक्षां मृग्यं तदद्य हि ॥ ३३

इत्थं विचार्य तस्थुस्ते मध्याह्ने योगिमायया ।
त्रस्ता ग्रामं ययुः कोऽपि ज्ञातुं शक्योऽस्य चेष्टितम् ॥ ३४

எல்லாம் வல்லவர் பிக்ஷை எடுத்துச் சாப்பிடுவது ஏன்? அத்திமரத்தனடியில் ஏன் தங்கினுர் என்று நாமதாரகர் கேட்க ஸித்தர் கூறுகிருர். சமைத்த உணவை யாசிப்பது துறந்தவரின் நடைமுறை. வேதமும் இதனை ஏற்கிறது. அது மங்களத்தை வெளிப்படுத்தும் வாழ்க்கை முறை. துக்கத்தை அகற்றுகிறது. சிவனின் நடைமுறையும் கூட. ந்ருஸிம்ஹ அவதாரத்தில் அஸுரனைப் பிளந்த நகங்களில் விஷத்தீண்டல் ஏற்பட்டது. அதனை அத்தி அகற்றியது. அதனுல் அங்கு ப்ரியமுடன் தங்குகிருர். எங்காவது அத்திமரமிருந்தால் அதனடியில் லக்ஷ்மியுடன் தான் வசிப்பதாக அதற்கு வரம் தந்துள்ளார். ஈசன் இருக்குமிடத்தில் வேதமும் தீர்த்தங்களும் தேவர்களும் இருப்பர். அத்தியே பூமியிலுள்ள கற்பக மரம். இலையை பிக்ஷையாக ஏற்ற நாளிலிருந்து, இஷ்டம் போல் உருமாறுகின்ற யோகினிகள் இவருக்குப் பிக்ஷை இடுகின்றனர். அதனுல் ஈசன் அத்திமரத்தடியில் தங்குவார். இந்நிலையறியாத அந்தணர்கள் பிக்ஷையே எடுக்காமல் இவர் எப்படி வாழ்கிருர்? அவருக்கு உயிரூட்டுகிற அன்னம் இங்கு தேட வேண்டியுள்ளதே எனக் கவலைப்பட்டு நடுப்பகலில் அங்கு தங்கி பகவானின் மாயையால் பயந்து அங்கிருந்து சென்றனர். அவரது செயலை யார் அறிவார். (34).

श्रीगुरुं द्रष्टुमागत्य भाविको भक्तिभावनम् ।
गङ्गानुजाख्यभक्तोऽत्र दृष्टवान् चित्रमेकदा ।। ३५

जलपूर्णाऽपि कृष्णाऽदान्मार्गं तेनागमत्प्रभुः ।
ददर्शान्वेत्य भक्तोऽपि पुरीं दिव्यामिवान्तरे ।। ३६

नीराजितो योगिनीभी रत्नसिंहासनस्थितः ।
स्वर्चितः प्रेक्ष्य तं देवः प्राह कोऽस्यागतः कुतः ।। ३७

गङ्गानुज उवाच—
गङ्गानुजाभिधोऽहं त्वामत्रत्यो द्रष्टुमन्वगाम् ।
भवान्परात्मा सर्वेशो दैवान्मेऽद्यात्र गोचरः ।। ३८

त्वन्मायामोहितात्मानस् त्वां विदुः केवलं नरम्।
संसारसागरेऽपारे तेऽतो मज्जन्ति नेतरे॥ ३९

इति प्रेम्णा स्तुतस्तस्मै हृद्यं दत्वेश्वरोऽब्रवीत्।
मयि सत्यत्र यद्दृष्टं नाख्येयं कस्यचित्त्वया॥ ४०

इत्युक्तो गुरुणा हृष्टो भक्तः क्षेत्रं स्वमेत्य सः।
लेभेऽसम्भाव्यसस्यर्धिं लोके श्रैष्ठ्यं च संविदम्॥ ४१

ஒரு சமயம் கங்கானுஜன் என்ற பாமர பக்தன் ஸ்ரீ குருவைக் காணவந்தான். அங்கு ஒரு விந்தை நிகழ்ந்தது. நீர் பெருக்கெடுத்தோடிய க்ருஷ்ணா நதி ஸ்ரீ குருவிற்கு வழிவிட்டது. ஸ்ரீ குரு அவ்வழியே உள்ளே சென்றார். பக்தனும் பின் தொடர்ந்து நடுவிலுள்ள தீவில் அழகிய நகரைக் கண்டான். சிங்காதனத்தில் அமர்ந்திருந்த ஸ்ரீ குருவை யோகினிகள் உபசரிப்பதைக் கண்டான். ஸ்ரீ குரு இவனை ''நீ யார்? எங்கிருந்து வருகிறாய்'' எனக் கேட்டார். ''நான் இங்கே வசிக்கிற கங்கானுஜன். உம்மைக் காணவந்தேன். நீர் பரமாத்மா. எல்லோருக்கும் ஈசன். தைவ வசத்தால் எனக்குப் புலப்பட்டீர். உம் மாயையால் மயங்கியவர். உம்மை மனிதன் என நினைத்து ஸம்ஸாரச் சுழலில் சிக்கித் துயருறுகிறார்கள் என்று கங்கானுஜன் துதித்ததும், அவன் விரும்பியதை வழங்கினார். இன்று நீ கண்டதை நான் இங்கிருக்கும் போது பிறரிடம் சொல்லாதே என்றார். அவன் தினமும் வந்து வழிபட்டான். தனது நிலங்களில் தானியம் நிறைய விளைந்ததால் மக்களிடையே பெருமை பெற்றான். (41)

स एत्य नित्यमानर्च गुरुं प्राहैकदा गुरो।
काश्यां तु त्रिस्थलीयात्रा वरेत्याहुर्न वेद्मि ताम्॥ ४२

श्रीगुरुरुवाच—
प्रयागः संगमः काशीयं गया करवीरपूः।
दर्शयामीदमेतद्वत् त्रिस्थलं ते द्रुतं परम्॥ ४३

इत्युक्त्वा धारयित्वा स्वपादुके त्रिस्थलीं त्विमाम्।
प्रयागकाश्यौ गयां च दर्शयित्वाऽगमत्क्षणात्।। ४४

तमाह त्रिस्थली त्वेषा दर्शितान्यापि तादृशी।
साम्यं ज्ञात्वोभयोरत्र स्वाचारान्मुक्तिमेष्यसि।। ४५

इति योगीशवाक्यं स श्रुत्वा ज्ञात्वाऽस्य चेष्टितम्।
तद्ध्यानात्कर्मबन्धं द्राक् छित्वा मुक्तो बभूव ह।। ४६

*ஒரு நாள் குருவிடம் திரிஸ்தலீ யாத்திரை பற்றிக்கேட்கக்குரு சொன்னார். 'திரிஸ்தலி' என்ற மூன்று ஸ்தலங்களுக்கான யாத்திரை என்று மக்கள் கூறுவதில் ப்ரயாகை, காசி, கயை இவை மூன்றும் த்ரிஸ்தலீ. இங்கோ க்ருஷ்ணா - பஞ்சநதீ ஸங்கமமே ப்ரயாகை. யுகாலயமே காசி. கரவீரமே (கொல்ஹாபூர்) கயை. இந்த இரண்டு த்ரிஸ்தலிகளையும் காட்டுகிறேன் எனக் கூறி, தன் யோக பாதுகைகளைத் தரித்து, இரண்டையும் காட்டினார். இந்த இரண்டு த்ரிஸ்தலியும் புனிதத் தன்மையில் ஸமமானவையே இவ்விரண்டிலும் தம் தம் கடமைகளான சடங்குகளைச் செய்பவன் முக்தி பெறுவான்'' என. இதைக் கேட்ட கங்கானுஜன். அவரது லீலையைக் கண்டுணர்ந்து அவரது த்யானத்தால் முக்தி பெற்றான். (46).*

वृद्धोऽत्र महिमा सन्त आयास्यन्तीतरेऽप्यतः।
गन्तव्यं क्वापि न स्थेयं साक्षादत्रेत्यमंस्त सः।। ४७

नो हित्वाद्य क यासीति विलपन्तीः स योगिनीः।
आश्वास्योचेऽत्र तिष्ठामि लोकदृष्ट्या गमिष्य इत्।। ४८

अमरेशोऽन्नपूर्णात्र विघ्नेशो युष्मदादयः।
भक्तेष्टदा मयाऽप्यत्र स्थेयं वस्तुष्टये सदा।। ४९

इतः प्रभृत्यदः क्षेत्रं सुप्रसिद्धं भविष्यति।
बहुलोकनिवासोऽत्र यास्यन्त्यत्र जनाः सुखम्।। ५०

सन्निपाताक्षिरुङ्मेह-कुष्ठश्लेष्मक्षयज्वरान् ।
वातपैत्तिकगुल्माद्यान् देशाद्युत्यान्हरेदिदम् ॥ ५१

पुत्रं वन्ध्याऽभयं त्रस्तो निःस्वः स्वं रोग्यनामयम् ।
मुमुक्षुः सद्गतिं यद्यद्यस्येष्टं स लभेत्सदा ॥ ५२

सहस्रगोदानफलं पर्वक्रान्तिग्रहाप्लुतौ ।
नुः कोटिफलमत्राल्प-जपहोमसुरार्चनैः ॥ ५३

प्रदक्षिणाऽश्वमेधादि-फलदा नुः पदे पदे ।
दुर्गताः पितरोऽप्यत्र श्राद्धाद्यान्ति परां गतिम् ॥ ५४

इत्याश्वास्य स योगिनीः परतरः कल्पद्रुमूलेऽमले
संस्थाप्य स्वसुपादुके नर इह स्नात्वार्चयेदष्टसु ।
तीर्थेष्वीश्वरयोगिनीसुरयुते मत्पादुके द्राग्लभेत्
सोऽभीष्टं त्विति तां प्रभाष्य स ययौ भीमातटं योगिराट् ॥ ५५

इति श्रीगुरुचरिते ज्ञानयोगे कृष्णापश्चनदी सङ्गमोत्कर्ष कथनं नामैकाद शोऽध्यायः ॥

இதனை மக்கள் உணர்ந்ததும் அவ்விடத்தின் பெருமை கூடியது. அதனால் நல்லோரும், மற்றவரும் கூடக் கூடும். அதனால் வேறிடம் செல்ல வேண்டும். இங்கு தங்கக்கூடாதென ஸ்ரீ குரு நினைத்தார். எங்களை விட்டு அகலக் கூடாதென யோகினிகள் நிர்பந்திக்க, உண்மையில் நான் இங்கு தானிருப்பேன். உலகின் பார்வையில் இங்கிருந்து அப்பால் இருப்பேன். அமரேசரும், அன்னபூர்ணாவும், விக்நேச்வரரும் நாமும் பக்தர் நாடியதைத் தருவோம். உங்கள் திருப்திக்காக இங்கிருப்போம். இனி இந்த க்ஷேத்ரம் மிகவும் புகழ் பெறும். நோய்களனைத்தும் நீங்கும். மலடிக்கும் புதல்வன் தோன்றுவான். பயமின்மை, செல்வம், ஆரோக்யம், மேனிலை என அவரவர் நாடுவதைப் பெறுவர். ஸங்க்ரமணம் க்ரஹணம் முதலிய வற்றிலும் ஜபம் ஹோமம் தைவ வழிபாடு முதலியவற்றால் பன்மடங்கு பயன் பெறலாம். வலம்

வருதல் அச்வமேத பலனைத் தரும். மேனிலை பெறுது துயருற்ற பித்ருக்கள் இங்கு செய்கிற ச்ராத்தத்தால் மேனிலை பெறுவர். இவ்வாறு யோகினிகளுக்கு ஆறுதல் கூறி தன் பாதுகைகளை அங்கு ப்ரதிஷ்டை செய்தார். எட்டு தீர்த்தங்களில் நீராடித் தன் பாதுகைகளை வழிபடுபவன் விரும்பியதைப் பெறுவான் என்று அருள் புரிந்தபின் அங்கிருந்து பீமா நதிக் கரையிலுள்ள கந்தர்வ புரம் சென்றடைந்தார். *(55)*



# द्वादशोऽध्यायः

नामधारक उवाच—

गतेऽपि भगवत्यङ्ग कृष्णावेणीतटाश्रमम्।
तस्मात्तत्रैव भजतां कार्यसिद्धिः कुतो वद ।। १

सिद्ध उवाच—

गतिस्थित्यासनस्वप्ना न कदापि चिदात्मनि।
लीलेयं मानुषी तस्य नरानुकृतिकारणः ।। २

भाव्यतेऽजो भावनया यद्वत्तद्वद्विभात्यसौ।
एवं यद्भावनात्रेदृक् तादृग्जागर्ति तत्र सः ।। ३

योगिनीवरदानादि यैर्यैर्गङ्गानुजाच्छ्रुतम्।
ते ते भक्त्याभजन्स्तत्र तं स तत्कामदोऽभवत् ।। ४

### *அத்தியாம்—12*

க்ருஷ்ணை - வேணீ கரையிலிருந்த ஆச்ரமத்திலிருந்து ஸ்ரீ குரு வெளியேறிய பின்னரும் அங்கு அவரை வழிபடுபவருக்கு விரும்பியது எவ்வாறு கிட்டுகிறதெனக் கேட்ட நாமதாரகருக்கு ஸித்தர் விளக்கினுர். நடப்பது, நிற்பது, அமர்வது, மற்றும் தூங்குவது மனித உடலின் செயல்களே. ஆத்மாவினுடையவை அல்ல. மனித வடிவை ஏற்றதால் மனிதராக அவரை

எண்ணுகிறோம். அவரும் அவ்வாறே நடிக்கிறார். எந்த எண்ணத்துடன் அவரை நோக்குகிறோமோ, அவ்வாறே அவர் இருப்பதாகத் தோன்றுகிறது. இங்கு இவ்வாறு பலன் தருவார் எனக் கருதினால் அவ்வாறு பலன் தருகிறார். கங்கானுஜன் வாயிலாக, யோகினிகளுக்கு வரமளியதைக் கேட்ட மக்கள் அங்கு பக்தியுடன் வழிபட்டனர். ஸ்ரீ குருவும் நாடியதைத் தருகிறார்.

शृण्वेवं सति तत्रत्या मृतापत्यत्वदुःखिता।
काचिद् द्विजसती विप्रान्स्वस्त्यर्थं शरणं ययौ ॥ ५

प्रपन्नां प्रेक्ष्य तां दीनां निजभक्तिविधित्सया।
देवप्रेरितधीः कश्चित्तदैवं भूसुरोऽब्रवीत् ॥ ६

मृतापत्यत्वदोषांस्तु शृणु साध्वि पुरार्जितान्।
मृतापत्यत्वादिदोषाः प्रायशः प्रेतहेतवः ॥ ७

ब्रह्महा भ्रूणहा वाऽपि गोघ्नोऽश्वघ्नोऽपरार्थहृत्।
ब्रह्मस्वस्वर्णहा पापी लभेज्जन्मान्तरे त्विदम् ॥ ८

लोहाश्मदारुचूर्णानि प्रयत्नाज्जरयेत्पुमान्।
ब्रह्मस्वं त्रिषु लोकेषु कः कथं जरयिष्यति ॥ ९

हृतस्वार्थाभिलाषेण चेन्मृतो ब्राह्मणः स तु।
गत्वा पिशाचतां स्वार्थी सदा स्याद्धर्तृवंशहा ॥ १०

त्वया भवान्तरे साध्वि हृतं शौनकगोत्रिणः।
द्रव्यं विप्रस्य सोऽभूँस्ते भूत्वा प्रेतो निहन्त्युत ॥ ११

भोगादेव क्षयः साध्वि नान्यथाऽऽरब्धकर्मणः।
तस्मात्प्रारब्धजफलं भुङ्क्ष्व कोऽत्र निवारकः ॥ १२

அங்கு ஒரு அந்தணப் பெண்மணி தான் பெற்ற குழந்தைகள் பிறந்த உடன் இறப்பதால் வருந்தி நலம் பெற அங்கிருந்த அந்தணர்களைச் சரணடைந்தாள். சரணடைந்த அவளிடம் தைவத்தின் தூண்டுதல் பெற்ற ஒரு அந்தணன் இவ்வாறு ஆறுதல்

கூறினன். முன்பிறவியில் சேமித்த வினையின் பயனே பிறந்ததும் சிசு இறக்கக் காரணம். முன் பிறவியில் இறந்ததும் ப்ரேத நிலைமாறாது தொடர்வதே அது. ப்ரஹ்மஹத்தி, கருக்கலைப்பால் சிசு ஹத்தி, பசுக் கொலை குதிரைக் கொலை, பிறர் பொருளைப் பறித்தல், அந்தணரின் உடமையைப் பறித்தல், தங்கம் திருடுதல், முதலிய பாபம் செய்தவன் இப்பிறவியில் இந்தத் துன்பத்தைப் பெறுவான். இரும்பையும், கல்லையும் மரத்தையும் தூள் செய்து சாப்பிட்டுச் செரித்துக் கொள்ளலாம். அந்தணரின் உடமையை உண்பவன் அதனைச் செரிக்க இயலாது. இழந்த சொத்தை மீட்கும் எண்ணத்துடன் இறந்தவன். பிசாசாகித் தனது சொத்தைப் பறித்தவனின் குலத்தை அழிக்கிறான். அந்தப் பாபம் அநுபவித்துத் தான் தீர்க்கத் தக்கது. பலன் தரத் தொடங்கிய வினையைத் தடுக்க முடியாது. (12)

तच्छ्रुत्वा कर्णशूलाभं त्रस्तचित्ताऽब्रवीद् द्विजम्।
भो ब्रह्मन्माऽनुगृह्णीष्व मुक्त्युपायमुपादिश ॥ १३

विप्र उवाच

प्रेतौर्ध्वदेहिकं कर्म प्रायश्चित्तपुरःसरम्।
कारयित्वाङ्ग भर्त्रा त्वं मासमात्रं व्रतं चर ॥ १४

कृष्णापञ्चनदीयोगे स्नात्वा श्रीगुरुपादुकाम्।
उदुम्बरं चाष्टतीर्थस्नानपूर्वं समर्चय ॥ १५

ब्राह्मणान्भोजयित्वाऽथ शतद्रव्यं द्विजातये।
देहि शौनकगोत्राय शुद्धिस्तेनैव ते सति ॥ १६

ब्राह्मण्युवाच—

शतद्रव्यं कुतो लभ्यं मासमात्रं करोम्यहम्।
सद्गुरोरर्चनं भक्त्या स मां पायाद्भयाद्धरिः ॥ १७

इति निश्चित्य सा पत्या यथानिर्दिष्टमाचरत्।
दिनत्रयान्तरे स्वप्ने तस्या विप्रपिशाचकः ॥ १८

ब्राह्मणीं भीषयित्वा तां ययाचे द्रव्यमात्मनः ।
भीतोदुम्बरमूले सा ददर्श श्रीगुरुं हरिम् ।। १९

तां च तं तादृशं दृष्ट्वा पिशाचं प्राह सद्गुरुः ।
कस्त्वं पिशाचरूपेण सतीं खेदयसेऽधम ।। २०

पिशाच उवाच—

यतीन्द्र त्वय्यनर्होऽयं पक्षपातोऽहमात्मनः ।
अनयाऽपहृतं द्रव्यं याचितुं हीदृशोऽभवम् ।। २१

*காதைப் பிளக்கிற இதனைக் கேட்ட பெண்மணி அந்தணரிடம் பாபத்தைக் கழுவ வழி கேட்டாள். "இறந்தவனின் பிசாச நிலை நீங்குமாறு கணவன் மூலம் ஈமச் சடங்குகளைச் செய்வாய். கணவனுடன் கிருஷ்ணை - பஞ்சநதீ கூடலில் நீராடி அஷ்ட தீர்த்தங்களில் நீராடி குரு பாதுகையையும் அத்திமரத்தையும் வழிபடுவாய். அந்தணர்களுக்கு உணவிடுவாய். சௌனக கோத்ரத்து அந்தணருக்கு நூறு வெள்ளிப் பணத்தைத் தானம் செய்வாய்" என்று அவர் கூறினார். நூறு பணம் என்னிடமில்லை. ஒரு மாதம் வரை பாதுகைகளை வழிபடுகிறேன். அந்த ஹரியே என்னைக் காப்பாற்றட்டும் என்று தீர்மானித்த அந்தப் பெண் தன் கணவருடன் நீராடி வழிபட்டாள். மூன்றும் நாளிரவு கனவில் அந்தணப் பிசாசு தோன்றி அவளை மிரட்டித் தன் பணத்தைக் கேட்டது. பயந்து ஓடியவள் அத்திமரத்தடியில் ஸ்ரீ குருவைக் கண்டாள். ஸ்ரீ குரு பிசாசை நீ யார்? ஏன் இந்த அந்தணப் பெண்ணை மிரட்டுகிறாய் என்ற கேட்க "அவளிடத்தில் பக்ஷபாதம் காட்டாதீர். இவளால் திருடப்பட்ட என் சொத்தை மீட்கவே இவ்வாறானேன் என்றது (21).*

श्रीगुरुरुवाच—

अनेन ते कथं मोक्षो ब्रह्मङ्गलयोनितः ।
येनाप्यते सद्गतिस्तच्छृणु तेन हितं भवेत् ।। २२

योन्यन्तरे हृतार्थोऽस्ति किं त्वत्र फलभागिनी ।
प्राप्ता दरिद्रवंशेऽसौ लभ्यतेऽतः कुतो धनम् ।। २३

अतस्तया कारयित्वा शक्त्या कर्मौर्ध्वदेहिकम्।
त्वद्गोत्राय यथालभ्यं दापयित्वा धनं खलु ।। २४

विप्राय प्रेत कस्मैचित्ततो मोक्षं ददामि ते।
नेदं त्वां रोचते चेत्त्वां रक्षामि स्वेच्छयाचर ।। २५

पिशा च उवाच—

देवेदेव कृतार्थोऽस्मि त्वत्पादाब्जविलोकनात्।
ममाद्य निष्कृतिर्जाता यथेच्छसि तथा कुरु ।। २६

एवं तन्निश्चयं ज्ञात्वा ब्राह्मणीं प्राह सद्गुरुः।
संवादो नौ श्रुतः साध्वि तथा निर्व्याजमाचर ।। २७

तेनासौ सद्गतिं यायाद्वंशवृद्धिश्च ते भवेत्।
उक्त्वैवं ध्यानगम्योऽभूद्गुरिर्बुद्धाऽभवत्सती ।। २८

पत्ये शशंस तत्सर्वं तथैवाचीकरत्क्रियाम्।
तया प्रेतो गतिं लेभे साऽप्यपापा बभूव ह ।। २९

ஸ்ரீ குரு பிசாசிடம் கூறினார். இவனைத் துன்புறுத்துவதால் இந்த அமங்களமான பிசாச நிலையிலிருந்து நீ விடுபட முடியுமா? உனக்கு நற்கதிகிட்ட வழி சொல்கிறேன். கேட்பாய். முற்பிறவியில் இவள் திருடினாள். அதனை இப்பிறவியில் திரும்பப் பெறுவது எப்படி? அந்த பாபத்தால் இன்று இவள் ஏழை வம்சத்தில் பிறந்துள்ளாள். இவளிடமிருந்து பணம் பெறுவது எப்படி? அதனால் அவள் உனது பிசாச நிலை நீங்க ஈமக் கடனைச் செய்விப்பாள். உன் கோத்ரத்தில் பிறந்த அந்தணனுக்கு கிடைத்த அளவு பணத்தைத் தானம் தருவாள். உனது பிசாச நிலை நீங்கும். இதில் உனக்குச் சம்மத மில்லையேல், நீ விரும்பியபடி செய். நான் இவளைக் காப்பேன் என்றார். பிசாசமோ ''உம் திருவடியை கண்டதுமே என் பாபம் நீங்கியது. நீர் விரும்பியபடி செய்வீர்'' என்றது. இதனைக் கேட்ட ஸ்ரீ குரு அந்தணப் பெண்ணிடம் கூறினார். ''எங்கள் பேச்சைக் கேட்டாய். நல்லவளே ! இவன் நற்கதி

பெறவும், உன் வம்சம் வளரவும் வஞ்சனையின்றிச் செய்ய வேண்டியதைச் செய்வாய்'' என. உடன் அவர் மறைந்தார். அந்தணப் பெண் நிலைமையை உணர்ந்து கணவனிடம் கூறி குரு கூறியவற்றைச் செய்து வினை நீங்கப் பெற்றாள். பிரேதமும் நன்னிலையடைந்தது. (29)

अपरेऽहनि तत्स्वप्ने फले विन्यस्य चांशुके।
तामाह भोजयित्वाऽजो विप्रान्भुङ्क्ष्व फले त्विति ।। ३०

प्रबुद्धाऽपि फले दृष्ट्वा भोजयित्वा द्विजान् फले।
कान्तेन साकं बुभुजे ततोऽभूद्गर्भिणी सती ।। ३१

काले दत्तप्रसादेन सूर्याचन्द्रमसाविव।
पुत्रावसूत विप्रोऽपि जातकर्मादिकं व्यधात् ।। ३२

ततोऽष्टमेऽब्दे ज्येष्ठस्य व्रतबन्धं चिकीर्षुणा।
सम्भाराः संभृताः पित्रा तदाऽद्भुतमिवाभवत् ।। ३३

अकस्मात्सन्निपातेन ज्येष्ठपुत्रो ममार हि।
उच्चै रुरोद तन्माता कोरस्ताडनपूर्वकम् ।। ३४

हा पुत्र क गतोसि त्वं पयो मे स्रवते वृथा।
कति शेषेऽचिरं वत्स बुद्ध्यस्वेदं पयः पिब ।। ३५

भोजनावसरोऽयं ते भुक्त्वा रन्तुं चराङ्गणे।
वयस्या आह्वयन्ति त्वामुत्तिष्ठोत्तिष्ठ मा स्वप ।। ३६

त्वं नोत्तिष्ठसि चेत्प्राणांस्त्यक्ष्याम्यग्रे तवाधुना।
जाता ये पञ्च पुत्रा मे तेषां त्वं प्राणवन्मम ।। ३७

मृते त्वयि मरिष्ये मे यतः प्राणोऽसि केवलम्।
रे दोहदप्रभृत्यद्य यावद्दुःखं न दापितम् ।। ३८

गर्भे नष्टास्त्रयोऽर्भास्तद्दुःखं त्वन्मुखवीक्षणात्।
मया विस्मृतमद्याकसिन्धौ त्वक्त्वा क यास्यसि ।। ३९

धर्मोऽयं ते न वार्धक्ये त्राता नौ पुत्र को वद।
एवं तद्रुदितं श्रुत्वा तत्रत्या ऊचुरेत्य ताम् ।। ४०

மறுநாள் ஸ்ரீகுரு கனவில் அவளது மேலாடையில் இருபழங்களைப் போட்டுவிட்டு, அந்தணர்களுக்கு உணவிட்டுப் பின் இந்த இருபழங்களையும் சாப்பிடு என்றார். விழித் தெழுந்தவள் தன் மடியில் பழத்தைக் கண்டதும் அந்தணர்களுக்கு உணவிட்டுக் கணவனுடன் பகிர்ந்து பழங்களைச் சாப்பிட்டாள். உடன் கருவுற்றாள். உரிய வேளையில் ஸூர்யனும் சந்த்ரனும் போல் இரு புதல்வர்களைத் தத்தபகவானின் அருளால் பெற்றாள். அந்தணர் ஜாதகர்மம் முதலியவற்றைச் செய்தார். எட்டாவது வயதில் இரட்டையரில் மூத்தவனுக்கு உபநயனம் செய்ய ஏற்பாடு செய்தார். தற்செயலாக ஸந்நிபாத (ஜன்னி) ஜ்வரம் ஏற்பட்டு அவன் இறந்தான். தலையிலும், மார்பிலும் அடித்துக் கொண்டு தாய் அழுதாள். "நீ எங்கு சென்றாய்? மார்பில் பால் சுரக்கிறதே ! நண்பர்கள் கூப்பிடுகிறார்கள். ஐந்து பிள்ளைகளில் நீதான் என் உயிர். நீ இறந்தால் நானும் இறப்பேன். கருத்தரித்தது முதல் நேர்ந்த வேதனையை உன் முகம் பார்த்து மறந்தேன். இன்று என்னைத் துயரக் கடலில் ஆழ்த்திவிட்டு எங்கு சென்றாய் ? இது உனக்குத் தகாது. எங்கள் முதுமையில் எவர் காப்பார் என்று உரக்கப் புலம்புவதைக் கேட்ட பக்கத்தில் வசிப்பவர்கள் அவளுக்கு ஆறுதல் கூறினர்.

किं शोचसि वृथा भीरु मृत्युर्देवर्षिदानवान्।
न विस्मरति कालेऽपि मनुष्याणां तु का कथा ।। ४१

अवतारा येऽवतीर्णास्तेऽपि कालवशं गताः ।
एवं सति वृथा शोकं त्वं मा कुरु विचारय ।। ४२

सोवाच——

अहो बत पिशाचोत्थं दूरीकृत्य भयं हि मे।
येन देवेन यद्दत्तं फलं तद्विफलं कथम् ।। ४३

यदि तस्य मृषा वाक्यं तं भजन्ति कुतोऽपरे।
विभीषणध्रुवमुखैर्मन्तव्यं तद्दतं कथम्।। ४४

लोकान्तरे नयाम्येतां तत्कीर्तिं सूनुना सह।
एवं रुदित्वा संस्कर्तुं न ददौ शवमङ्गना।। ४५

ग्रामे तु भोजनाभावाल्लोकास्त्रस्तास्तदैत्य हि।
यदृच्छयाऽब्रवीद्वाग्मी जटिलस्तापसः सतीम्।। ४६

*''பயந்தவளே ! ஏன் வீணே புலம்புகிறுய்? யமன் தேவரையும், முனிவரையும், அஸுரரையும் மறப்பதில்லே. மனிதரைப் பற்றி என்ன சொல்வது? அவதார புருஷர்களும் யமனின் வசம் சென்றுள்ளார்கள். அதனுல் வீணே துயரடையாதே! சிந்தித்துப் பார்'' என்றனர். அவள் கூறிஞள் - பிசாசிடமிருந்த பயத்தை ஸ்ரீ குரு நீக்கி இரண்டு பழங்களேயும் கொடுத்தார். அது எப்படி வீணுகும் ? அது பொய்யாஞல் ஏன் மற்றவர் அவரை அணுகுகிறுர்கள்? விபீஷணன், த்ருவன் முதலானேர் ஏன் இதனே நம்பினர்? இறந்த என் புதல்வனுடன் இந்த அவப் பெயரையும் வானுலகம் கொண்டு செல்வேன் என்று கதறி இறந்தவனுக்கு ஈமக் கடன் செய்ய சவத்தைத் தர மறுத்தாள். க்ராமத்தில் எவரும் உணவேற்கவில்லே. உலகம் நடுங்கியது. அப்போது சடையுள்ள சிறந்த பேச்சாளரான ஒரு தாபஸர் தற்செயலாக அங்கு வந்து அந்தப் பதிவ்ரதையிடம் கூறிஞர். (46)*

तापस उवाच——

किं शोचसि मुधा साध्वि शोकस्याविषयं सुतम्।
सुतस्तवैष देहो वा जीवो वा ब्रूहि सारतः।। ४७

त्वग्रक्तमांसास्थिमयो देहोऽयं पुरतस्तव।
जीवोऽजः सर्वगोऽनन्तः कोत्र शुग्विषयो वद।। ४८

कालकर्मगुणोत्पन्नं जगन्मायामयं त्विदम्।
कथं ध्रुवं हि मन्तव्यं यथा कर्मैन्द्रजालिकम्।। ४९

कालकर्मगुणाद्युत्थ-देहिनः स्वत्वकल्पना।
पुत्रादिरूपा मिथ्यैषा नद्यां काष्ठौघवच्चला॥ ५०

त्वया ध्रुवा मतेयं चेद्वद पूर्वापरोद्भवे।
कस्य त्वं जननी स्त्रीर्वा के वा सम्बन्धिनस्तव॥ ५१

जन्ममृत्यू कालवशादलङ्घ्यौ दिनरात्रिवत्।
शरीरिणोऽङ्गे बाल्यादि यथा देहान्तरं तथा॥ ५२

गुरुप्रसादाद्यततो भ्रमोऽयं लीयतेऽचिरात्।
तेनर्ते मृत्यवे कल्प्यो जातो वै जनुषे मृतः॥ ५३

नार्यतोऽपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि।
मृतः शुचा पुनर्नैति नाप्युपायान्तरायुतैः॥ ५४

நல்லவளே ! சோகத்திற்குத் தகுதியற்ற பிள்ளையைப் பற்றி ஏன் துயரமடைகிறாய்? உன் பிள்ளை என்பது இந்த உடலா ஜீவனா ? தோலும், சதையும், இரத்தமும், எலும்பும் கொண்ட உடலாயின் அது உன் முன் உள்ளது. ஜீவன் பிறப்பிறப்பற்றவன். எங்கும் இருப்பவன். அவனைப் பற்றியா வருந்துகிறாய்? காலம், வினை, ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் இவற்றின் கூட்டே இந்த உலகம். மாயையால் உள்ள தோற்றம் மட்டும் என்பது உண்மை நிலை. இந்த்ர ஜாலச் செயல் போன்றது. நிலைத்ததல்ல. காலமும், வினையும், குணங்களும் தோற்றுவித்த மாயையின் விளைவில் இவன் என் புதல்வன் என்ற கல்பனை பொய்யானது. ஆற்றின் பெருக்கில் அலைகிற மரத் துண்டு போன்று தொடர்பு நிலைத்ததல்ல. முன் பிறவியில் நீதான் தாயா? அடுத்த பிறவியில் நீதான் தாயா? நீ யாருக்குத் தாய் அல்லது மனைவி? உன் உற்றார் யார்? பிறப்பும், இறப்பும் காலத்தின் வசத்தில் நேர்பவை. பகலும், இரவும் போல். உடலில் பால்யம் முதலானதும் இறந்ததும் வேறு உடல் பெறுவதும், எல்லாம் மதி மயக்கமே. குருவின் அருளால் மட்டுமே இந்தப் பிரமை நீங்கும். குருவின் அருளில்லையேல் பிறந்தவன் இறப்பதும் இறந்தவன் பிறப்பதும் தவிர்க்க இயலாது.

அதனால் தவிர்க்க முடியாததொன்றைப் பற்றி நீ வருந்துவது உசிதமில்லை. வருந்துவதாலோ வேறு உபாயங்களாலோ இறந்தவன் திரும்பி வரமாட்டான். (54).

सोवाच—

न वेदार्थतत्वादि रोचते येन मेऽर्पितम्।
सुफलं तत्कुतो यति विश्वस्तव्यः स कैर्भुवि ॥ ५५

साधुरुवाच—

यत्र त्वया वरो लब्धस्तत्र गत्वा सविस्तरम्।
वरदं परिपृच्छेदं यास्येऽलं विस्तरेण भोः ॥ ५६

तच्छ्रुत्वा शवमादाय सद्गुरोराश्रमं ययौ।
तत्र पादुकयोः शीर्षं ताडयामास भामिनी ॥ ५७

एवं निशीथादासायं शुशोच न ददौ शवम्।
संस्कर्तुं स्वालयं विप्रा जग्मुस्तत्रैव दम्पती ॥ ५८

ततो निशीथे सुष्वाप साध्वी स्वप्ने ददर्श सा।
श्रीगुरुं प्राह सोऽप्येनां किं मयापकृतं हि ते ॥ ५९

प्राणो नामैष वायुः स बहिर्यातो मुहुर्मया।
आनीय पूर्ववन्न्यस्तस्त्यजातः शुचमङ्गने ॥ ६०

इति दृष्ट्वा विनिद्राऽभूद् ददर्शोत्थितमात्मजम्।
हर्षशोकान्विता साध्वी प्रेम्णा भर्तारमाह्वयत्॥ ६१

இதனைக் கேட்ட அந்தத் தாய் "இந்த வேதாந்தப் பேச்சு எனக்குப் பிடிக்கவில்லை. எவர் எனக்குப் பழம் தந்தாரோ அவரை நம்புவது எப்படி என்று கேட்டாள். எங்கு உனக்கு வரம் கிட்டியதோ அங்கு சென்று வரம் தந்தவரிடம் விவரமாகக் கேட்பாய். நான் வருகிறேன் என்று சொல்லி அந்த ஸாது மறைந்தார். இதனைக் கேட்ட அந்தப் பெண் சவத்தை எடுத்துக்

கொண்டு ஸ்ரீ குரு பாதுகை உள்ள இடம் சென்று மறுநாள் மாலைவரை வருந்தியவள் சவத்தை ஈமச்சடங்கிற்குத் தரமறுத்தாள். அந்தணர்கள் தம் வீடு திரும்பினர். தம்பதிகள் பாதுகை மண்டபத்திலேயே இரவில் தங்கினர். இரவில் கனவில் அந்தப் பெண் ஸ்ரீ குருவைக் கண்டு தன் துயரை விளக்கினாள். ஸ்ரீ குரு கூறினார் – நான் உனக்கு என்ன அபகாரம் செய்தேன் ? ப்ராணன் என்பது காற்று. அது வெளியே சென்றது. அதனை மறுபடியும் கொண்டுவந்து முன்போல் உடலில் வைத்துவிட்டேன். கவலைப்படாதே ! என்றார். கனவிலிருந்து விழித்தெழுந்தவள் தன் புதல்வன் எழுந்து அமர்ந்துள்ளதைக் கண்டு மகிழ்ச்சியும், வருத்தமும் கலந்த குரலில் அன்புடன் கணவனைக் கூப்பிட்டாள். (61)

सोऽप्युत्थायात्मजं दृष्ट्वा रुदन्तं क्षुत्तृडाकुलम् ।
मन्त्रवत् त्रिरवघ्राय मूर्ध्न्यस्तौषीत्परात्परम् ।। ६२

अत्रान्तरे प्रातरभूद्दग्धुं प्रापुः शवं द्विजाः ।
ते जीवन्तं सुतं दृष्ट्वा सर्वं श्रुत्वाऽस्तुवन्हरिम् ।। ६३

दम्पती तु ततः स्नात्वा प्रपूज्येशं सुविस्तरात् ।
नीराज्याभ्यर्च्य भूदेवान्जग्मतुर्निजमन्दिरम् ।। ६४

विद्याविनयसंपन्नश्चिरजीवी स भाग्यभाक् ।
बभूवाप्येवमेवान्य आसन्पूर्णमनोरथाः ।। ६५

तत्राश्रान्तं स जागर्ति स नृसिंहसरस्वती ।
अद्य कालान्तरेऽप्येवं न निद्रात्यन्यवत्कलौ ।। ६६

तत्रेशमाद्यं दृढभक्तियुक्ता भजन्ति ये केऽपि सदुक्तिसक्ताः ।
ते प्राप्नुवन्ति द्रुतमिष्टकामान्निदर्शनं त्वत्र सती सुकामा ।। ६७

*इति श्रीगुरुचरिते ज्ञानयोगे प्रेतसंजीवनं नाम द्वादशोऽध्यायः*

அவரும் எழுந்து பசியாலும், தாகத்தாலும் வருந்தி அழுகிற மகனைக் கண்டு மந்த்ரத்துடன் மூன்று தடவை உச்சி முகர்ந்து ஈசனைத் துதித்தார். மறுநாள் காலை சவத்தை எரிப்பதற்கென வந்த அந்தணர்கள் சிறுவன் உயிருடனிப்பதையறிந்து ஹரியைத் துதித்தனர். தம்பதியரும் நீராடி ஸ்ரீ குருவை வழிபட்டு அந்தணர்களையும் பூஜித்து வீடு திரும்பினர். அந்த மாணவனும் கல்விகற்று அடக்கமிக்கவனாக வெகு நாட்கள் பாக்யம் நிரம்ப வாழ்ந்தான். இவ்வாறு பலர் தன் மனம் எண்ணியதைப் பெற்றனர். அங்கு ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஸரஸ்வதி ஓய்வின்றி விழித்துள்ளார். கலியில் மற்றவர்போல் தூங்குவதில்லை. இந்த ஆதி ஈசனைத் திடமான பக்தியுடன் வழிபடுபவர், அவரது உபதேசத்தில் ஆர்வமுள்ளவர் தான் விரும்பியதைப் பெறுகின்றனர். இந்தப் பெண் அதற்கு எடுத்துக் காட்டு. (67).



# त्रयोदशोऽध्यायः

नामधारक उवाच—
आसाद्य भगवान्भीमां ततः किमकरोत्प्रभुः ।
श्रद्दधानाय मे शंस दुर्ग्रहं तस्य चेष्टितम् ।। १

सिद्ध उवाच—
गन्धर्वनगरे भीमामरजासंगमे शुभे ।
कृष्णापञ्चनदीयोगतुल्ये तस्थौ जगत्प्रभुः ।। २

स्थित्वाऽत्र गुप्तभावेन तत्रत्यब्राह्मणालयम् ।
गत्वा भिक्षां ययाचेऽसौ भक्तोद्धरणहेतवे ।। ३

दीनभाविकसद्विप्रदत्तभिक्षाप्रियं द्विजाः ।
श्रीविद्याढ्या हसन्ति स्म श्रीशं भक्तिप्रियं हरिम् ।। ४

यथार्के प्रसरत्यभ्रच्छन्नेऽपि द्योत इद्यथा ।
सम्पुटस्थितकस्तूरीगन्धस्तद्वद्धरेर्गुणाः ।। ५

एकदा दीनविप्रस्य गेहे च्युतरदां वशाम् ।
महिषीं प्रेक्ष्य स प्राह ब्राह्मणीं देहि मे पयः ।। ६

सा प्राहेयं वशा भारवाहिनी नासिकागुणा ।
योगक्षेममितोऽस्माकं जन्मतोऽपि लुलायवत् ।। ७

मृषा मा वद तां दुग्ध्वा क्षीरं देहीति भाषिता ।
गुरुणाऽपि वशां दुग्ध्वा काष्ठपात्रेऽलभत्पयः ।। ८

विस्मिता साऽर्पयत्तस्मै कोष्णं कृत्वा पयो मुदा ।
पीत्वा क्षीरं ययौ प्रेम्णा श्रीगुरुः संगमं द्रुतम् ।। ९

तत एत्य गृहेशोऽदः श्रुत्वा सस्त्रीक एत्य तम् ।
गुरुं संपूज्य लब्धेष्टवरो हृष्टोऽन्वगाद्गृहम् ।। १०

***அத்தியாயம்-13***

*ஸ்ரீ குரு பகவான் ந்ருஸிம்ஹ ஸரஸ்வதீ பீமாநதிக் கரையை அடைந்து செய்த லீலைகளை நாமதாரகருக்கு ஸித்தர் விளக்குகிறார். பீமா- அமரஜா நதிகளின் கூடலில் கந்தர்வ நகரத்தில் ஜகத் ப்ரபு தங்கினார். க்ருஷ்ணா-பஞ்சநதீ ஸங்கமம் போன்று மிகப் புனிதமான இடம். பிறர் அறியாதபடி அந்தணர்களின் வீடுகளிலிருந்து பிக்ஷையை அதிகம் விரும்பியேற்ற ஸ்ரீ குருவை செல்வமும் கல்வியும் நிறைந்தவர்கள் பரிஹாஸம் செய்தனர். ஈசனின் குணங்கள் மேகத்தில் மறைந்த ஸூர்ய ஒளி போன்றவை. ஸம்புடத்தில் மூடிவைத்த கஸ்தூரியின் மணம் போன்றவை. ஒரு நாள் ஒரு ஏழை அந்தணரின் வீட்டில் பல்லிழந்த மலட்டு எருமையைக் கண்டு அந்தணப் பெண்மணியிடம் பால் கேட்டார். இது மலடு. பாரம் சுமப்பது. மூக்கில் கயிறு கோர்த்து இதனைக் கொண்டே எம் பிழைப்பு நடக்கிறது என்றாள். பொய் சொல்லாதே. இதனைக் கறந்து பால் தருவாய் என்று ஸ்ரீ குரு கேட்டதும் அவள் அதனிடம் பால் கறந்து வியப்புடன் அதனைக் காய்ச்சி ஸ்ரீ குருவிடம் தந்தாள். அவரும் அதனைப் பருகிவிட்டு உடன் கூடல் சென்றார். இதனையறிந்த கணவனும் மனைவியுடன் குருவிடம் சென்று வணங்கி அருள் பெற்று வீடு திரும்பினார். (10)*

अन्येद्युर्भारवाहार्थं वशामाहर्तुमागताः ।
कृषीवलाः प्रेक्ष्य दोहं शशंसुर्द्राङ् नृपाय तत् ।। ११

नृपोऽप्याकर्ण्य विप्रात्तच्चतुरङ्गबलान्वितः ।
गुर्वर्थं राजचिह्नानि गृहीत्वा सङ्गमं ययौ ।। १२

तमेत्य प्रणिपत्योचे दण्डवद्गद्गदाक्षरः ।
पुलकाङ्कितदेहो राड् दीनं माम्पाहि किङ्करम् ।। १३

श्रीगुरुरुवाच—
दण्डी वनचरोऽस्म्यङ्ग भिक्षुस्त्वं सेनया सह ।
राजन्कस्मादिहानन्दसंरम्भादागतोऽसि किम् ।। १४

राजोवाच—
भवान्मायानरो भिक्षुर्नैवास्ति परमेश्वर ।
हित्वाऽरण्यविहारं भो पावनं कुरु मे पुरम् ।। १५

इत्थं श्रुत्वा सकारुण्यमुदारं वाक्यमच्युतः ।
तथेत्युक्त्वाऽऽययौ प्रेम्णा पुरं पावनपावनः ।। १६

भेजे छत्रप्रकीर्णैं राट् पादचारी सुखासने ।
उपवेश्य गुरुं विप्र-वाहिते तूर्यनिःस्वनैः ।। १७

वेदघोषं द्विजाश्चक्रुर्मागधाः स्तोत्रमुत्तमम् ।
जयघोषं तथाप्यन्य एवं गोपुरमागतः ।। १८

गुरुः प्रत्यक्पथं पुर्या एत्वाऽश्वत्थे भयङ्करम् ।
स ब्रह्मराक्षसं शक्रं ददर्शातीन्द्रियः प्रभुः ।। १९

तद्दर्शनान्नराद्भूत्वा प्रशान्तो ह्यवरुह्य सः ।
गुरुं नत्वोद्धर हरे कुयोनेर्मेत्युवाच तम् ।। २०

करस्तन्मूर्ध्नि विन्यस्तो गुरुणाऽथाभवन्नृवत् ।
तमाह संगमस्नानाच्छीघ्रं मुक्तो भविष्यसि ।। २१

इति श्रुत्वा नमस्कृत्य गुरुं स्नात्वा स संगमे।
विहाय भौतिकं कायं मुमुचे कर्मबन्धनात्॥ २२

மறுநாள் மூட்டை சுமக்க மலட்டெருமையை வாடகைக்கு எடுக்க வந்த உழவர்கள் அது பால் கறப்பதைக் கண்டு வியந்து அரசனிடம் தெரிவித்தனர். அதனைக் கேட்ட அரசன் நான்கு வகைப்படைகளுடன் குருவைக் காண அரச மர்யாதையுடன் கூடலுக்கு வந்து வணங்கி தழ தழத்த குரலுடன் கிங்கரனுன தன்னைக் காக்க வேண்டினன். காட்டில் சுற்றுகிற தண்டமேந்திய துறவி நான். ஆனந்தப் பரபரப்புடன் ஏன் வந்தீர் என ஸ்ரீ குரு கேட்க அரசன் நீர் ஆண்டியல்ல. மனித உருவில் வந்த ஈசன். இனிக் காட்டில் சுற்றுமல் என் நகரம் வந்து அதைப் புனிதப்படுத்த வேண்டுமென்று வேண்டினன். அதனை ஏற்ற ஹரியும் அன்புடன் நகரத்திற்கு அந்தணர்கள் சுமந்த பல்லக்கில் அமர்ந்து குடை சாமரம் வாத்ய கோஷம் முதலிய உபசாரத்துடன் வந்தார். அந்தணர் வேதமோத, துதிபாடகர்கள் துதிபாட, மற்றவர் ஜய ஜய என வாழ்த்த நகரத்தில் நுழைந்தவர், நகரின் மேலவீதியில் அரசமரத்திலிருந்த கொலைகாரப் ப்ரஹ்ம ராக்ஷஸனைக் கண்டார். இவரது பார்வை பட்டதும் அது அமைதியுற்று மரத்திலிருந்து இறங்கிக் குருவை வணங்கி இந்தக் கொடிய நிலையிலிருந்து விடுவிக்கும்படி கேட்டது. குரு அதன் தலையில் கைவைத்து அருள்புரிய அது மனிதவடிவம் பெற்றது. கூடலில் நீராட இந்நிலைமாறும் எனக் குரு கூற அது உடன் கூடலில் நீராடிப் பூத உடலைவிட்டு வினை தீர்ந்து மேனிலை பெற்றது. (22)

दृष्ट्वेदं राडभिष्टूय तस्मा आम्रेडितोक्तिभिः।
पुरं नीत्वा सुमठिकां निर्मायास्मा उपानयत्॥ २३

खेदं विनयते स्मेशपूजारार्तिकगायनैः।
घोरं सांसारिकं प्रेम्णा नित्यं तदनुगो नृपः॥ २४

आह्निकं संगमे भिक्षां ग्रामे निवसतिं मठे।
स कृत्वा भक्तवात्सल्याद्राण्निघ्नो भगवानभूत्॥ २५

श्रुत्वाऽऽश्रमानर्हचेष्टामस्यामंस्ताल्पधीर्यतिः ।
भ्रष्टोऽयं दाम्भिक इति तं त्रिविक्रमभारती ।। २६

तज्ज्ञात्वाशेषहृत्संस्थः सर्वसाक्षी जगत्प्रभुः ।
भूपं प्राहाद्य गन्तव्यं निन्दकार्दनहेतवे ।। २७

मन्निन्दकोऽस्ति कुमसीग्रामे भिक्षुस्त्रिविक्रमः ।
इति श्रुत्वा नृपो हृष्टो गमनायोपचक्रमे ।। २८

सुपालके तूपवेश्य नृपचिह्नैः परिष्कृतम् ।
श्रीगुरुं कुमसीग्रामं निन्ये राड् यत्र भारती ।।२९

नृसिंहध्याननिष्ठोऽपि स तदा योगिमायया ।
सम्भूय चञ्चलमना आजह्वे स्तोतुमीश्वरम् ।। ३०

सुप्रसन्न नृसिंहेश दयाब्धे भक्तभावन ।
कस्मात्तेऽद्य न सामीप्यं ध्याने स्तोष्ये दयस्व भोः ।। ३१

स्तुत्वैवं स नदीतीरे ध्यानाज्ज्ञात्वा स्थितं विभुम् ।
त्रस्तचित्तोऽभ्यगाद् द्रष्टुमचिन्त्याव्यक्तविग्रहम् ।। ३२

*அரசன் இதனைக் கண்டு குருவைத் திரும்பத் திரும்பத் துதித்து நகரினுள் அழைத்துவந்து இவருக்கென மடம் அமைத்து அதில் அவரை அமர்த்தினான். பூஜை, ஆரத்தி, கானம் முதலியவற்றுடன் அவரைத் தொடர்ந்து கோரமான ஸம்ஸார துக்கத்திலிருந்து விடுபட்டான். தினந்தோறும் கூடலில் பிக்ஷை அளித்து மடத்தில் அவரைத் தங்கவைத்து அவரது அடிபணிந்தான். இவரை நன்கு உணராத த்ரிவிக்ரம பாரதி என்ற துறவி, ஸ்ரீ குருவை ஸன்யாஸியின் நடைமுறையைக் கைவிட்ட ஸன்யாஸி வேஷத்திலுள்ள வஞ்சகர் என்று கருதினார். அவரது உள்ளத்தை அறிந்த ஸ்ரீ குரு அரசனிடம் இன்று என்னை நிந்திக்கிற திரிவிக்ரமபாரதி என்ற குமஸீ எனும் க்ராமத்திலுள்ள துறவியைக் காண விரும்புவதாகத் தெரிவித்தார். அரசன் அரசமர்யாதையுடன் ஸ்ரீ குருவைப் பல்லக்கில் ஏற்றி பாரதி இருக்குமிடத்திற்கு*

*அழைத்து வந்தார். பாரதி நரஸிம்ஹரை வழிபடுபவர். அவரது த்யானத்தில் ஆழ்ந்திருந்த பாரதி திடீரென த்யானம் விலகக் குழப்பத்துடன் நரஸிம்ஹரைத் துதிக்கத் தொடங்கினார். "கருணைக் கடலே ! ந்ருஸம்ஹரே ! ஏன் த்யானத்தில் உமது அருகாமை எனக்குக் கிட்டவில்லை? தயை புரிவீர் ! உம்மை வணங்குகிறேன் என்று வேண்டி நின்றவர் தனது வழிபடு தெய்வமான நரஸிம்ஹர் நதிக் கரையில் உள்ளதாக உணர்ந்து பரபரப்புடன் அவரைக் காண நதிக் கரைக்கு வந்தார். (32)*

त्रिविक्रमो जवेनैत्य योगिमायावृतान्तरः ।
उच्चावचान्यतीन्दृष्ट्वा भूरिशो मोहमाप सः ।। ३३

व्यालोकि परितस्तेन सर्वे संन्यासिरूपिणः ।
ज्यायांसोऽपि कनीयांसः प्रशान्ता दण्डिनोऽमिताः ।। ३४

आहेशो विस्मितं तं यं धिक्करोष्यस्मि दाम्भिकः ।
भ्रष्टः स इन्मयोद्भाव्य मायामसि परीक्षितः ।। ३५

नृसिंहचिन्तकोऽसि त्वं यतिधर्मसुशिक्षितः ।
संन्यासी लोकविज्ञातः संन्यस्तं ब्रूहि किं त्वया ।। ३६

न्यस्तसूत्रशिखो दण्डी रागद्वेषाकुलान्तरः ।
वेषानुकारी संन्यासी धर्मज्ञो वा भवेदपि ।। ३७

दम्भिलक्षणजिज्ञासुरागतोऽस्म्यद्य कृत्स्नशः ।
त्वं नृसिंहप्रसादेन विद्वंस्तद्वक्तुमर्हसि ।। ३८

त्रिविक्रम उवाच—

प्रत्याहतमतिस्तेऽस्मि भगवन्नीश मायया ।
नापि वक्तुं हृषीकेश शक्यः पाहि दयानिधे ।। ३९

प्रपन्नोऽस्मि क्षमस्वेश मन्तून्मे ध्यानपुण्यतः ।
साक्षाद्दृष्टं हि ते धाम नृसिंहोऽसि दयस्व भोः ।। ४०

इति स्तुवति तस्मिन्स भगवान्पूर्वरूपतः ।
प्रादुरासीत्तथाप्यन्ये सैन्या मन्त्री नृपः स्फुटम् ।। ४१

सैन्यमध्ये स्थितं भूप-वीजितं च त्रिविक्रमः ।
विश्वरूपं स्वनेत्रेण न शशाकापि वीक्षितुम् ।। ४२

तमाह दुर्निरीक्ष्यं मे रूपं दिव्यदृशाऽपि ते ।
दर्शितं ध्यानहृष्टेन धामाथो पश्य लौकिकम् ।। ४३

ततः प्रशान्तसंन्यासिरूपेणावस्थितं हरिम् ।
दृष्ट्वा प्रकृतिगः प्राह भगवन्तं त्रिविक्रमः ।। ४४

कायेन मनसा वाचा केवलैरिन्द्रियैरपि ।
असत्कृतोऽसि विश्वात्मन्मया त्वां क्षामयेऽद्य तत् ।। ४५

धन्योऽस्म्यनुगृहीतोऽस्मि कृतकार्योऽस्मि दर्शनात् ।
रूपं पुराऽर्जुनायेदं दर्शितं मेऽद्य तत्पुनः ।। ४६

हरेऽविद्याप्रवाहे मां मज्जन्तं ज्ञाननौकया ।
कृपामरुत्संगतया स्वात्मरूपतटं नय ।। ४७

तीर्त्वाऽविद्यानदीं ज्ञानप्लवेन परमं पदम् ।
द्राग्यास्यत्रैव तिष्ठेति तमुक्त्वा श्रीगुरुर्ययौ ।। ४८

क्षणात्ससैन्यभूपेन साकमेत्य मठं प्रभुः ।
कर्ममार्गं ततानेशश्चिकीर्षुर्लोकसंग्रहम् ।। ४९

*इति श्रीगुरुचरिते ज्ञानयोगे भीमामरजासंगमनिवासो नाम त्रयोदशोऽध्यायः*

யோகியான ஸ்ரீ குருவின் மாயையால் எண்ணங்கள் குழம்ப, பலதரப்பட்ட யோகிகளை அங்கு கண்டு மயங்கினார். தன்னைச் சுற்றி வயதில் முதிர்ந்தவரும், இளையவரும் அமைதியுடன் தண்டமேந்தி

நிற்கிற துறவிகளைக் கண்டார். ஸ்ரீ குரு அவரிடம் ''உமது அவதூறுக்குள்ளான அந்த போலித் துறவி நானே ! மாயையால் உம்மைச் சோதித்தேன். நீர் நரஸிம்ஹரின் பக்தர். தன் நடைமுறையறிந்தவர். நீர் துறவி எனில் எதனைத் துறந்தீர்? சிகையும் உபவீதமும் துறந்தீர் எனில். அத்தகைய துறவி பற்றும் வெறுப்பும் கொண்டிருந்தால் துறவறம் பற்றியறிந்தவனுயினும் அவன் துறவியா?'' என்று கேட்டார். ''பகவானே ! உமது மாயையால் என் அறிவு மழுங்கிவிட்டது. என்னுல் ஒன்றும் சொல்ல முடியவில்லை. கருணைக் கடலே ! உள்ளத்தை ஆட்டிப் படைப்பவரே ! காப்பீர். த்யானம் எனும் புண்யத்தால் புலப்படுகிற நரஸிம்ஹர் நீர். உம்மைச் சரணடைந்தேன். என் பிழைகளைப் பொறுத்தருள்வீர்'' என்று திரிவிக்ரமர் வேண்டியதும் ஸ்ரீ குரு தன் பூர்ண நிலையை அவருக்குக் காட்டினுர். அரசன் சாமரம் வீச, இடையே தோன்றுகிற ஸ்ரீகுருவைத் திரிவிக்ரமர் காண இயலவில்லை. அரசர் மந்திரிஸேனை எல்லாம் அங்குதோன்றின. திவ்யத்ருஷ்டியாலும் காண இயலாத என் வடிவை உமது த்யானத்தில் மகிழ்ந்த நான் காட்டினேன். இப்போது என் மானுட வடிவைக் காண்பாய்'' - எனக் கூறி அமைதிமிக்க துறவி வடிவில் நின்ருர். அந்நிலையில் அவரைக் கண்ட திரிவிக்ரமர் அவரிடம் பிழை பொறுக்க வேண்டினுர். ''எல்லாமானவரே ! வாக்காலும் எண்ணத்தாலும் உடலாலும் உம்மிடம் தவருக நடந்து கொண்டேன். பொறுத்தருள்வீர். உமது அருள் பெற்ற நான் இன்று பாக்கியசாலி. அர்ஜுனனுக்கு விச்வரூபம் காட்டியது போல் எனக்கும் அதனைக் காண்பித்தீர். அஜ்ஞான வெள்ளத்தில் மூழ்கிய என்னை ஜ்ஞான மெனும் ஓடத்தில் ஏற்றி தன்னிலை உணர்வு என்ற கரை சேர்ப்பீர்''. ஸ்ரீ குருவும் ஜ்ஞானத்தால் அஜ்ஞானத்தைக் கடந்து பெருநிலை பெறுவாய். இங்கேயே தவம் செய் என உபதேசித்து மடத்திற்கு வந்து கர்ம மார்க்கத்தைப் பரப்பினுர் (49).

**ஜ்ஞான யோகம் முற்றிற்று.**

# ॥ चतुर्दशोऽध्यायः ॥

नामधारक उवाच-

ज्ञानयोग इयानुक्तः सिद्ध्यै संन्याससत्पथः ।
कुतो भगवता पश्चात्कर्मयोगः प्रकाशितः ॥ १ ॥

अविद्याघातकं कर्म तदुत्थं कथमित्यमुम् ।
छिन्धि मे संशयग्रन्थिं भगवच्चरितासिना ॥ २ ॥

सिद्ध उवाच -

कर्कटीं तद्भवा घ्नन्ति यथा मृत्क्षालनं मृदा ।
तथाऽविद्या च कर्मापि कर्मणैव विलीयते ॥ ३ ॥

साधनावधि तत्कार्यमुपात्तपरसाधनः ।
ततः संन्यस्य शमवान्भवेन्नैष्कर्म्यसिद्धिभाक् ॥ ४ ॥

प्रकृत्युत्थगुणैः कोऽपि जात्वकर्मा न तत्फले ।
सक्तोऽज्ञोऽसक्त इद्विद्वानस्येदं लोकसंग्रहे ॥ ५ ॥

अहं यथानुतिष्ठामि लोकस्तदनुगो भवेत् ।
नेदं साध्विति मत्वाऽजः कर्मयोगं जगौ प्रभुः ॥ ६ ॥

कर्मयोगमयं तस्य चेष्टितं शृणु सादरम् ।
यच्छ्रुत्वा भवसम्बन्धं छित्वा याति परं पदम् ॥ ७ ॥

## அத்தியாயம்-14

ஸன்யாஸமென்ற நல்வழி கொண்ட ஜ்ஞானயோகத்தை அடுத்து கர்மயோகம் கூறக் காரணமென்ன? அவித்யையால் செய்கிற கர்மங்கள் அவித்யையை எப்படி அழிக்கும்? என்று நாமதாரகரின் ஸந்தேஹத்திற்கு ஸித்தர் விளக்கம் தருகிறார். தாய் நண்டின் வயிற்றைக்கீறிக் கொண்டு குஞ்சுகள் வெளிவருவதால் தாய் நண்டு உயிரிழக்கும். பானைமீது அழுக்காகப் படிந்த மண்ணை

மண்ணுல் தேய்த்து அலம்புவர். அவ்வாறே அவித்யையால் செய்யப்படுகிற கர்மம் கர்மபந்தத்தை நீக்குகிறது. கர்மம் யோகமாகி இதற்கு ஸாதனமாகிறது. பயனை எதிர்பார்க்காமல் செய்யப்படுகிற கடமை நிலையிலுள்ள கருமத்தை ஞானயோகத்திற்கு ஸாதனமாகும் வரை செய்து பின் துறவற மேற்று சமத்தைப்பயின்று கர்மத்தைக் கர்மமாகாத நிலைக்குக் கொணர்வர். கருமங்கள் செய்யாமல் உயிருடன் இருக்கமுடியாது. இயற்கை செயலாற்றத் தூண்டும். அஜ்ஞானி அதில் பலனை எதிர்பார்த்து ஈடுபடுவான்.-ஜ்ஞானியோ தன் நலம் கருதாமல் உலகோடு ஒட்டி வாழப் பற்றின்றி கர்மங்களைச் செய்வான். தானிருக்கும் நிலை வேறு. தனது நடைமுறையை மற்றவர் (உலகியலில் ஈடுபட்டவர்) நடத்தமுடியாது என்பதால் தான் கர்ம யோகத்தை ஸ்ரீ குரு விளக்கினர். கர்மயோகத்தை பெருமளவில் கொண்ட ஸ்ரீ குருவின் வரலாற்றைப் பார்ப்போம். (7)

ब्रह्मध्रुग्यवनो राजा कश्चिद्धिंस्रोऽभवत्खलः ।
सदस्याहूय विप्रान्स स्वाग्रे वेदानपाठयत् ॥ ८ ॥

वेदान्पठन्ति ये सार्थास्तेभ्यो दास्ये धनं बहु ।
इत्याकर्ण्य तदुक्तं ये रैलुब्धास्ते तथाऽभजन् ॥ ९ ॥

श्रुत्वा खलोऽपि वेदार्थं द्विजाग्रे ब्राह्मणान्छ्रुतीः ।
अकुत्सयद्गवाशेन मिथ्याचारो मतोऽखिलः ॥ १० ॥

एवं सत्येकदा विप्रौ वैदिकावेत्य दुर्विधौ ।
मत्तौ तमूचतू राजन् वेदशास्त्रविदौ स्व इत् ॥ ११ ॥

अस्मत्तुल्यौ न के क्वापि त्वन्निघ्नाश्चेदिहानय ।
श्रुत्वेदं स्वाश्रितेभ्यो राट् शशंसोचुः खलं हि ते ॥१२॥

न यान्ति संमुखे केऽपि तयोस्तत्तौ समर्चय ।
राजाप्यानर्च तौ विप्रौ गजावारोह्य भूषितौ ॥ १३ ॥

जैह्वचौपस्थ्यसुखासक्ति निदानेनेदृशी स्थितिः ।
वेदज्ञानामधःपातशङ्कावर्जितचेतसाम् ॥ १४ ॥

विप्रावूचतुः -

विद्यापरिश्रमो वादं विना न सफलोऽस्ति नौ ।
तदाज्ञापय गच्छावो गां जेतुं विदुषो द्विजान् ॥ १५ ॥

स तथाप्यादिशद्विप्रपराभवपरो नृपः ।
जयपत्रं द्विजान्जित्वा गृह्णन्तौ चेरतुर्भुवम् ॥ १६ ॥

யவன அரசன் ஒருவன் அந்தணர்களுக்குக் கேடு விளைவிப்பவன். கொடூரன், போக்கிரி, அந்தணர்களை அரசைவக்கு அழைத்துத் தன் முன்னிலையில் வேதமோதச் செய்வான். வேதத்தைத் தன்முன் பொருளுடன் கூறுபவருக்கு நிறைய தனம் தருவதாகக் கூறுவான். பணத்தாசை பிடித்த சில அந்தணர்கள் அங்கு சென்று வேதமோதினர்கள். வேதத்தையும் அதன் பொருளையும் கேட்ட யவனன் வேதத்தையும் அந்தணர்களையும் பழித்துக் கூறி அவர்களின் நடைமுறையை அவமதித்தான். ஒரு சமயம் கர்வமிக்க ஏழை அந்தணரிருவர் யவனனிடம் வந்து நாங்கள் வேத சாஸ்திர அறிஞர்கள். உன் அதீனத்திலுள்ளவர்களில் எவரேனும் எமக்கு ஈடாவாரேயாகில் அவர்களை ஸபைக்கு அழைப்பாய் என்றனர். அரசன் அழைத்தும் எவரும் வராததால் அவ்விருவரையும் யானை மீது ஏற்றி ஊர்வலம் வரச் செய்தான். தனக்கு வீழ்ச்சி நேரும் என்ற பயமின்றி சிற்றின்பத்தில் நாட்டமுள்ளதால் வேதமறிந்தவருக்கும் இந்நிலை ஏற்படுகிறது. இரு அந்தணர்களும் ''வாதத்தில் ஈடுபட்டாலன்றி கல்வி கற்பதால் மட்டும் பயனில்லை. அதனால் அவர்கள் இங்குவராவிடில் அவர்களிருக்குமிடம் சென்று வாதத்தில் அவர்களை வெல்ல அனுமதி கேட்க அரசன் அனுமதித்தான். வாதத்தில் அந்தணர்களை வென்று வெற்றி பத்திரத்தில் தோற்றவர்களைக் கையெழுத்திடச் செய்து தேசத்தை வலம் வந்தனர். (16)

वावदूकतया मिथ्या द्विजांस्तर्जयतोः सदा।
विवादं त्याजितैः प्राज्ञैर्जयोऽभूद्विशदस्तयोः ॥ १७ ॥

त्रिविक्रमं त्रयीज्ञं तौ श्रुत्वागत्योचतुः कुरु।
चेद्वेदज्ञोऽसि वादं नौ देहि वा जयपत्रमित् ॥ १८ ॥

त्रिविक्रम उवाच-

वेदज्ञास्त्वादृशाः पूज्या द्विजौ नाहं तथाविधः।
यतौ जयाजयसमे जिते किं वां भवेदिह ॥ १९ ॥

पश्येमान्यमितानि त्वं पत्रं देहीति भाषितः।
ताभ्यां दास्ये गुरोरग्र इत्युक्त्वा श्रीगुरुं ययौ ॥ २० ॥

तौ मत्तौ स्वासनारूढौ मूढौ तमनुजग्मतुः।
मठे श्रीगुरुमासाद्य तमस्तौषीत् त्रिविक्रमः ॥ २१ ॥

नम ओङ्काररूपाय निर्गुणाय गुणात्मने।
जगद्गुरो परानन्द-मूर्ते जय जयाच्युत ॥ २२ ॥

नाज्ञानान्धः परं वेत्ति यं घूक इव भास्करम्।
स त्वं भो मत्तविप्रद्विड्द्विजौ शासितुमर्हसि ॥ २३ ॥

स्तुत्वैवमादितः सर्वं शशंसागमकारणम्।
तौ प्राह गुरुरप्याप्तौ साध्यमेतेन किं द्विजौ ॥ २४ ॥

विप्रावूचतुः-

राज्ञाज्ञप्तौ द्विजाञ्जेतुमावां विद्वत्तमौ भुवि।
अत्रानीतावनेनोभौ भिक्षू किं वेदपारगौ ॥ २५ ॥

*வாதத்தில் தேர்ந்தவர்களானதால் மிரட்டிக் கலக்கி வென்று ஜயித்தனர். வேதமறிந்த திரிவிக்ரம பாரதியிடம் சென்று வேதமறிந்தவனுயின் வாதிட வா? அல்லது வெற்றிக் கடிதம் தா!*

எனக் கேட்டனர். நீங்களோ மதிப்பிற்குரிய வேத அறிஞர்கள். நானோ, துறவி. எனக்கு வெற்றியும் தோல்வியும் ஒன்றே. துறவியைவென்றதால் நீங்கள் பெறப்போவது என்ன? என்று திரிவிக்ரமர் கூற, வெற்றிக் கடிதங்களைக்காட்டி, நீரும் எமக்கு வெற்றிக் கடிதத்தைத் தருவீர் என்றனர். திரிவிக்ரமரோ குரு நாதரின் எதிரில் அதைத் தருகிறேன் என்று கூறி நடந்து குரு இருக்குமிடம் சென்றார். அவர்களும் பல்லக்கில் ஏறிப் பின் தொடர்ந்தனர். திரிவிக்ரமர் குருவை அடைந்து வணங்கி, ஓங்காரவடிவினரும் நிர்குணரும் குணமே வடிவானவரும் பக்த வத்ஸலருமான ஜகத்குருவே! வணங்குகிறேன். கோட்டான் ஸூர்யனைக் காணாது. அஞ்ஞானத்தால் குருடானவர் உம்மைக் காணமாட்டார். இவர்களிருவரும் திமிர்பிடித்தவர்கள். இவர்களை அடக்குவீர் என்று வேண்டித் தனது நிலையை விளக்கினார். குரு அந்த இரு அந்தணர்களையும் இந்த அந்தணரைத் துன்புறுத்துவதால் உமக்கு என்ன கிட்டும்? எனக் கேட்டார். ''அரசரின் ஆணை. நாங்கள் மிகச் சிறந்த அறிஞர்கள். வாதில் போட்டியிட இவரால் இங்கு அழைத்துவரப்பட்டோம். நீங்கள் இரு பிக்ஷுக்களும் வேதத்தில் கரை கண்டவர்களா? என்ற அந்த இரு அந்தணர்களும் ஸ்ரீ குருவைக் கேட்டனர். (25)

श्रीगुरुरुवाच-

गर्वेणैव प्रणष्टाः स्यू राक्षसा असुरा द्विजौ ।
अनादीन्कृत्स्नशोऽनन्तान्कोऽपि वेदान्न वेद रे ।। २६ ।।

ब्रह्मचर्याश्रमे वेदान्पठितुं प्राक्तपोऽतपत् ।
भरद्वाजो विधिः प्रीतस्तस्मै वेदानदर्शयत् ।। २७ ।।

दृष्ट्वा भास्वद्वेदराशीन् शङ्कितोऽभूदृषिर्ददौ ।
त्रीन्मुष्टीनृषयेऽद्यापि पठ्यमानो न पारगः ।। २८ ।।

पैलो वैशम्पायनश्च जैमिनिश्च सुमन्तुकः ।
ऋग्यजुःसामाथर्वाख्या अशिक्षन्त श्रुतीः क्रमात् ।। २९ ।।

गुरुर्व्यासो हरिः साक्षात्ततोऽत्र प्रसृता श्रुतिः ।
पठिताः कतिचिद्वेदा आयुष्मद्भिर्युगान्तरे ।। ३० ।।

शाखयैवाल्पायुषोऽत्र मन्दा वेदज्ञमानिनः ।
प्रतिग्रहपरान्नस्त्रीसक्ताः सिद्धिविवर्जिताः ।। ३१ ।।

*ஸ்ரீ குரு கூறினார்- அந்தணர்களே! ராக்ஷஸர்களும் அஸுரர்களும் கர்வத்தால் அழிந்தனர். ஆதியும் அந்தமுமற்ற வேதங்களை முழுவதும் அறிந்தவர் எவருமில்லை. பரத்வாஜர் பிரும்மசாரியாயிருந்த போது வேதம் ஓதத் தவமிருந்தார். பிரும்மா அவர் முன் வேதங்களைக் காட்டினார். ஒளிமிக்க வேதக்கு வியலைக் கண்ட பரத்வாஜர் கலங்கினார். அதிலிருந்து மூன்று பிடியளவை பிரும்மா பரத்வாஜரிடம் தந்தார். இன்றும் பரத்வாஜர் ஓதிக் கொண்டிருக்கிறார். பிடியளவு வேத எல்லையைக் கூட அவர் இன்னம் காணவில்லை. பைலரும் வைசம்பாயனரும் ஜைமினியும் ஸுமந்துவும் முறையே ருக், யஜுஸ், ஸாம, அதர்வ வேதங்களைக் கற்றனர். வியாஸர் ஸ்ரீ ஹரியே. அவர் பைலர் முதலானவரின் குரு. அவர் மூலம் வேதத்தின் பகுதிகள் உலகில் பரவலாக ஓதப்பட்டன. கலியில் ஆயுளும் குறைவு. அறிவும் குறைவுள்ளதே. அதனால் வேதத்தின் பகுதியையே வேதமெனக் கருதி ஓதுகின்றனர். தானம் ஏற்பதும் பிறரிட்ட உணவை உண்பதும் சிற்றின்ப ஈடுபாடும் உள்ளவர் இதில் ஸித்தி பெற வில்லை. (31)*

व्यासेनोक्ताश्चतुर्वेदाः शाखाङ्गोपाङ्गसंयुताः ।
आयुर्वेदस्ततो रुग्हृद्दग्वेदस्योपवेद उत् ।। ३२ ।।

स्वर्णोऽत्रिगोत्रजो गायत्रच्छन्दो ब्राह्मदैवतः ।
द्व्यरत्निमात्रो दीर्घाक्ष ऋग्वेदो व्यक्तकन्धरः ।। ३३ ।।

शाकला बाष्कला तस्याः सांख्यायन्याश्वलायनी ।
माण्डूक्येत्थं पञ्च शाखा अष्टौ विकृतयस्त्वृचः ।। ३४ ।।

निरुक्तं व्याकृतिज्योतिश्छन्दः शिक्षा च कल्पकः ।
अस्येमानि षडङ्गानि वेत्तीमं कोऽद्य कृत्स्नशः ।। ३५ ।।

வேதத்தைக் கிளையாக வகுத்து அதன் அங்கம் உபாங்கம் எனப்பிரித்தவர் வியாஸர். ருக் வேதத்தின் அங்கம் ஆயுர்வேதம். ருக்வேதம் தங்க நிற முள்ளது. அத்திரி இதன் கோத்திர ருஷி. காயத்ரீ சந்தஸ் பிரும்மா தேவதை, இரண்டு சாண் நீளமுள்ளது. நீண்ட கண்களும் வெளிப்படையான குரலும் கொண்டது. சாகலா, பாஷ்கலா, ஸாங்க்யாயனீ, ஆச்வலாயனீ, மாண்டூகீ என்று ஐந்து கிளைகள்.ஜடா, மாலா, சிகா, லேகா, த்வஜம், தண்டம், ரதம், கனம், என எட்டு விகிருதிகள். நிருக்தம், வியாகரணம், ஜ்யோதிஷம் சந்தஸ் சிக்ஷா கல்பம் என ஆறு அங்கங்கள். இவற்றை முழுவதும் அறிந்தவர் எவரேனும் உண்டா? (35)

पञ्चारत्निमितोऽर्काभः कपाली कृशदीर्घकः ।
यजुर्वेदो धनुर्वेदः क्षत्रेष्टोऽस्योपवेद उत् ॥ ३६ ॥

त्रिष्टुप्छन्दो भरद्वाज-गोत्रजो विष्णुदैवतः ।
षडशीतिभिदोऽङ्गानि प्राग्वदष्टादशास्य तु ॥ ३७ ॥

परिशिष्टान्युपाङ्गानि षडेवैष इयान् ततः ।

யஜுர் வேதம் ஐந்து சாண் உயரமுள்ளது. ஸூரியனைப் போன்ற ஒளி கொண்டது. கபாலம் ஏந்தியது, உடல் இளைத்து நீண்டிருக்கும். க்ஷத்திரியர்கள் விரும்புகிற தனுர் வேதம் இதன் உபவேதம். திரிஷ்டுப் சந்தஸ், பரத்வாஜ கோத்திரம், விஷ்ணு தேவதை, எண்பத்தாறு பிரிவுகள், ஆறு அங்கங்கள், பதினெட்டு பரி சிஷ்டங்கள், ஆறு உபாங்கங்கள். இத்தனை விரிவுள்ளது யஜுர் வேதம். இதனை முழுவதும் அறிந்தவர் யார்? (37 1/2)

क्षमी दान्तः शुचिः स्रग्वी चर्मी दण्डी तृतीयकः ॥ ३८ ॥

षडरत्निमितोऽस्योपवेदो गान्धर्वसंज्ञकः ।
रुद्राधिदेवो जगतीच्छन्दः काश्यपगोत्रजः ॥ ३९ ॥

हता नष्टाश्चापि शिष्टा नवाष्टौ च भिदोऽस्य तु ।
सामाङ्गोपाङ्गभेदेन कः पुमान्वेदितुं क्षमः ॥ ४० ॥

ஸாம வேதம் பொறுமையும் அடக்கமும் தூய்மையும் மிக்கது. மாலை அணிந்தது. கேடயம், தடி ஏந்தியது. ஆறு சாண் உயரமுள்ளது. இதன் உபவேதம் காந்தர்வம். ருத்ரன் தேவதை. ஜகதீ சந்தஸ். காசியப கோத்திரம், அழிந்தது போக மீதமுள்ள சாகைகள் 17. இதனை முழுதும் அறிந்தவர் யார்? (40)

चण्डस्तीक्ष्णोऽसितः काम-रूपी क्षुद्रीक्रियोऽशुभः ।
स्वदारातुष्टोऽथर्वाख्यः शस्त्रास्त्रोपाङ्गवेद उत् ।। ४१ ।।

बैजानगोत्रजोऽनुष्टुप्छन्दा एषैन्द्रदैवतः ।
नवास्य भेदाः संपूर्णाः कल्पाः पञ्चात्र वेत्ति कः ।। ४२ ।।

அதர்வவேதம் உக்கிரமானது, கூர்மிக்கது, கருநிறமுள்ளது. விரும்பியபடி உருமாறக்கூடியது. அற்பச் செயல்கள் கொண்டது, அமங்களமானது, பிறர் மனைவியை நாடச் செய்வது முதலிய அபிசாரச் செயல் கொண்டது. இதன் உபாங்கம் சஸ்திர- அஸ்திர வேதம். பைஜான கோத்திரம், அனுஷ்டுப் சந்தஸ், இந்திரன் தேவதை, ஒன்பது சாகைகள், கல்பங்கள் ஐந்து, இதனை முழுதும் அறிந்தவர் யார்?. (42)

वर्षेऽद्य भारते कर्मभ्रष्टा हीना द्विजातयः ।
वेदान्क्रीणन्त्यन्त्यजाग्रे सत्त्वहीना अतोऽभवन् ।। ४३ ।।

उत्सृष्टोपाकृताभ्यस्तगुप्तवेदमनुर्भुवि ।
किं न दास्यति विप्रेभ्यः प्रत्येकः कामधेनुवत् ।। ४४ ।।

देवाधीनं जगन्मन्त्र-निघ्ना देवास्तु मन्त्रकाः ।
ब्रह्माधीना ब्राह्मणा मे देवता विष्णुरब्रवीत् ।। ४५ ।।

सर्वस्वदक्षिणा भूपैर्दत्तापि ब्राह्मणैः पुरा ।
नात्ता कृतोऽद्रिस्तृणवत् सुसत्त्वाच्चाद्रिवत्तृणम् ।। ४६ ।।

वशसर्वामरास्तेऽपि तदा स्वल्पज्ञमानिनः ।
युवां भ्रष्टौ भ्रष्टमन्त्रौ स्वल्पज्ञौ प्राज्ञमानिनौ ।। ४७ ।।

आत्मस्तुतिपरौ ब्रह्मद्विषौ साध्वात्मवञ्चकौ।
त्वत्तुल्या ये पुरा जाता जातास्ते ब्रह्मराक्षसाः ॥ ४८ ॥

பாரதவர்ஷத்தில் கர்மங்களைத் தவருன முறையில் செய்வதால் தாழ்ந்த அந்தணர்கள் மந்திர வீர்ய மற்றிருக்கின்றனர். வேதத்தை விற்கிருர்கள். உத்ஸர்ஜனம், உபாகர்ம, வேதத்தை நன்கு ஓதி தாரணையில் கொள்வது, மந்திரங்கைள ரஹஸ்யமாகக் காப்பற்றுவது முதலியவற்ருல் நன்கு காப்பாற்றப்பட்ட வேதம் காமதேனு போல் விரும்பியதனைத்தையும் தரும். தேவர்களிடம் உலகம் அடங்கியது. வேத மந்திரத்திடம் தேவர்கள் அடங்குவர். வேத மந்திரம் அந்தணரிடம் அடங்கும். அதனுல் அந்தணர்கள் எனக்கு தைவம் என்று விஷ்ணு கூறிஞர். அரசர்கள் தனது உடமைகள் அனைத்தையும் தானம் செய்தாலும் அந்தணர்கள் அதனை ஏற்கமாட்டார்கள். மலை புல்லாக, புல் மலையாக ஆனது. தேவர் அனைவரும் மந்திரங்கள் மூலம் தம் வசப்பட்டிருந்தாலும் தான் கற்றது அற்பமே என்று நினைத்தனர். நீரிருவரும் மந்திர சக்தி இழந்தீர். சிறிதே அறிந்துள்ளீர். ஆனுல் பேரறிவாளியாக அகந்தை கொண்டீர். தன்னைத் தானே துதித்துக் கொள்கிறீர். அந்தணருக்கு எதிரிகளாக நல்லோரை வஞ்சிப்பவராக ஆனீர். உம்மைப் போன்றவர் முன்னர் பிரும்ஹ ராக்ஷஸர்களாக ஆஞர்கள் என்ருர் ஸ்ரீ குரு. (48)

विप्रावूचतुः -

नैतावच्छ्रोतुमाप्तौ स्वो विवादं कुरु चेन्न वाम्।
तच्छक्तिर्जयपत्रं नौ युवाभ्यां दीयतामिति ॥ ४९ ॥

तथेत्युक्त्वोद्वीक्ष्य यान्तमानयित्वान्त्यजं प्रभुः।
लेखा उल्लिख्य सप्ताभ्युत्क्रामयन्तमवाचयत् ॥ ५० ॥

प्राचीनसप्तजन्मज्ञो रेखास्पर्शनतोऽभवत्।
आद्यां गत्वास्मि बुरडो मातंग इति भाषितम् ॥ ५१ ॥

द्वितीयां तु किरातोत्थो रावणाख्य इतीरितम्।
तृतीयां च नदीतीरस्थो गाङ्गेय इतीरितम्॥ ५२॥

चतुर्थीं वै कृषिपटुः शूद्रोऽस्मीत्यभिभाषितम्।
पञ्चमीं सोमदत्ताख्यो वैश्योऽस्मीत्युदितं ततः॥ ५३॥

षष्ठीं गोवर्धनाख्योऽहं क्षत्रः शूर इतीरितम्।
सप्तमीं वेदशास्त्रज्ञो ब्राह्मणोऽस्मीति भाषितम्॥५४॥

तदास्य मन्त्रितं भस्म क्षिप्त्वाङ्गे प्रभुराह तम्।
चेद्वेदज्ञोऽसि विप्रौ द्राग्विवादेन पराजहि॥ ५५॥

इति श्रुत्वेशवाक्यं तौ प्रत्याहितधियौ भिया।
कम्पितौ श्रीगुरुं गत्वा विप्रौ शरणमूचतुः॥ ५६॥

''இதனைக்கேட்க நாங்கள் வரவில்லை. வாதம் புரிவீர். அதற்கு இயலாவிடில் நாங்கள் வெற்றி பெற்றதாகக் கடிதம் தருவீர்'' என்று இரு அந்தணர்கள் கூறினர். அப்படியே ஆகட்டும் எனக் கூறி வழியிற் செல்கிற கீழோனை அழைத்தார். ஏழு கோடுகளை வரைந்து அதனைத் தாண்டிவரச் செய்தார். நீ யார் எனக்கேட்டார். கோடுகளை வரிசையாகத் தாண்டிய அவன் ஏழு முற்பிறவிகளில் நடந்ததையறிந்தவனானான். முதல் கோட்டைத் தாண்டியதும் தான் மாதங்கன் என்ற பெயர் கொண்ட புருடன் என்றான். இரண்டாவதைத் தாண்டியதும் ராவணன் என்ற வேடன் என்றும் மூன்றாம் கோட்டைத் தாண்டியதும் காங்கேயன் என்றும் நான்காவதில் உழவன் என்றும் ஐந்தாவதில் ஸோமதத்தகுப்தன் என்ற வைசியன் என்றும் ஆறாவதில் கோவர்த்தனவர்மா என்ற க்ஷத்திரியன் என்றும், ஏழாவதில் வேத சாஸ்திரமறிந்த அந்தணன் என்றும் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். அவன் உடலில் விபூதியைப் பூசிய குரு நீ வேதமறிந்தவனாயின் இந்த இரு அந்தணர்களை வாதிட்டு வெல்வாய் என்றார். இதனைக் கேட்ட இரு அந்தணர்களின் அறிவும் மழுங்கியது. உடல் நடுங்க, குருவைச் சரணடைந்தனர். (56)

ब्रह्मद्विषौ स्वः पापिष्ठौ दुष्टसङ्गाहितभ्रमौ ।
मूढौ नौ दुर्गतिं यान्तौ समुद्धर्तुं हरेऽर्हसि ।। ५७ ।।

श्रीगुरुरुवाच-

म्लेच्छाग्रे पठिता वेदा धिक्कृता ब्राह्मणा यतिः ।
तत्कर्मपरिपाकार्थं राक्षसौ द्राग्भविष्यथः ।। ५८ ।।

सन्तप्तत्वाद्द्वादशाब्दानुषित्वा शान्तरूपतः ।
पठ्यमानानुवाकोपदेशाद्विप्राय वां गतिः ।। ५९ ।।

इत्युक्तौ गुरुणा गत्वा भीमां स्नात्वा मृतावुभौ ।
राक्षसौ गुरुवाक्यात्तौ भूत्वा तत्रैव तस्थतुः ।। ६० ।।

तत्र यान्द्वादशाब्दान्ते द्विजो विस्मृतवान्मनुम् ।
तस्मै शशंसतुस्तं तौ तदा मुक्तौ स्वरीयतुः ।। ६१ ।।

स्वधर्ममुत्सृज्य मदेन ये द्विजान्
गुरून्द्विषन्तः खलु राक्षसा वने ।
भवन्ति पापोऽपि यदानुतापितः
कनिष्ठशिक्षो भवति द्विजाविव ।। ६२

*इति श्रीगुरुचरिते कर्मयोगे वेदोपदेशो नाम प्रथमोऽध्यायः आदितश्चतुर्दशोऽध्यायः । (सप्ताहपारायणे तृतीयः । अन्ते रसज्ञा वशा.. स्तोत्रं पठनीयम् । अन्यदिने आरंभे गुरुस्तुतिः ।)*

''நாங்கள் பிரும்மத்வேஷிகள். கெட்டவருடன் இணைந்து மதிமயங்கிப் பாபம் செய்தவர்கள். துர்கதியடைய விருக்கிற எங்களை மேனிலைக்குக் கொணர்வீர் என்று இரு அந்தணர்களும் குருவை வேண்டினர். ஸ்ரீ குரு சொன்னார்- யவனன் முன் வேதமோதினீர். துறவிகளையும் அந்தணர்களையும் அவமதித்தீர். அதன் விளைவாக ராக்ஷஸர் ஆவீர். செய்த தவற்றை உணர்ந்து வருந்தியதால் சாந்த வடிவில் பன்னிரண்டாண்டுகள் கழித்து,

வேதானுவாகங்களை மறந்தவனுக்கு மறந்த மந்திரப் பகுதியை நினைவுபடுத்தியதும் நற்கதி பெறுவீர் என்றருள் புரிந்தார். இருவரும் பீமா நதி சென்று நீராடும் போது இறந்தனர். மறுபிறவியில் ராக்ஷஸர்கள் ஆகி அங்கேயே சாந்தமாக வசித்தனர். பன்னிரண்டாவதாண்டில் மந்திரத்தை மறந்து வருந்துகிற அந்தணனுக்கு அதனை நினைவுபடுத்தினர். உடன் ராக்ஷஸத் தன்மை நீங்கி ஸ்வர்க்கம் சென்றூர்கள். தம் கடமைகளை புறக்கணித்து திமிருடன் அந்தணர்களையும் குருவையும் பகைத்துக் கொள்பவர் காட்டில் ராக்ஷஸர்களாக அலைவர். தன் தவற்றை உணர்ந்து வருந்துபவர் இந்த அந்தணர்கள் போல் குறைந்த தண்டனை பெறுவர். (62)



## ॥ पञ्चदशोऽध्यायः ॥

नामधारक उवाच-

पतितस्य ततो जातं किमु हीनोऽप्यनुग्रहात् ।
श्रीमद्भगवतो वेदशास्त्रज्ञोऽस्मीति योऽब्रवीत् ॥ १ ॥

सिद्ध उवाच-

प्रसादात्सद्गुरोर्ज्ञानी भूत्वाह पतितो हरिम् ।
ब्राह्मणस्यापि मे कस्मादधःपातोऽभवद्गुरे ॥ २ ॥

श्रीगुरुरुवाच-

कर्मणा भ्रममाणस्य यन्त्रवत्पुण्यपापतः ।
प्रकृत्यायत्तचेष्टस्य जन्तोरूर्ध्वमधोगती ॥ ३ ॥

गुरुमातापितृस्त्र्यर्भ- धर्माचारकुलेश्वरान् ।
यो जहाति मुधा सोऽपि जीवहिंस्रोऽनृतप्रियः ॥ ४ ॥

खलः कन्याश्वगोक्रेता गृहग्रामवनाग्निदः ।
त्यक्तश्राद्धः परान्नाशीः कालाप्तातिथिहापकः ॥ ५ ॥

सद्विप्रदेवतीर्थार्च्यवेदशास्त्रादिनिन्दकः ।
तडागकूपारामाध्वक्रतुध्वंसी व्रताहभुक् ॥ ६ ॥

श्राद्धार्च्याहाम्बुपर्वाह्निस्त्रीभुग्विश्वासघातकः ।
दत्तदानहरः स्वोक्तव्यस्ताचारोऽन्यकर्मकृत् ॥ ७ ॥

स्वपुण्यपरपापास्यो दम्भाद्यैः सत्त्वदर्शकः ।
खलहिंस्रस्तेयिसङ्गी घातज्ञो जा(मा)रणादिकृत् ॥ ८ ॥

ज्ञानं विना चिकित्साशी कर्मभ्रष्टोऽन्यतापकृत् ।
इत्याद्याः प्रेत्य नरकं भुक्त्वा चण्डालयोनिगाः ॥ ९ ॥

அத்தியாயம்-15

பெரும்பாபியான ஒருவன் கீழோனாகி குருவின் அருளால் முன் ஏழாவது பிறவியில் வேத சாஸ்திரமறிந்த அந்தணனாக இருந்தேன் என்று சொன்னான். பின் அவன் அடைந்த நிலை என்ன? என நாமதாரகன் கேட்க ஸித்தர் சொன்னார். ஸ்ரீ குருவின் அருளால் முன் பிறவி பற்றியறிந்த ஜ்ஞானி குருவை வணங்கி அந்தணனாயிருந்த நான் எப்படி இந்த ஈனஜாதியில் பிறக்கும்படி வீழ்ச்சி ஏற்பட்டது என்று கேட்டான். ஸ்ரீ குரு சொன்னார்- புண்யமும் பாபமும் செயலின் விளைவுகள். முற்பிறவிகளில் செய்த நற்செயலும் கெட்டசெயலும் இப்பிறவியில் இயல்பாக அமைந்து யந்திரம் போல் மனிதனின் செயலைக் கட்டுப்படுத்துகின்றன. அதன்படி புரிந்த புண்யபாபச் செயல்களையொட்டி மேனிலையும் கீழ் நிலையும் ஏற்படுகின்றன. குரு, பெற்றோர், மனைவி, புதல்வர், குலம் தெய்வம் என்ற வரையறைக்குட்பட்ட கடமைகளை விட்டவன், ஜீவஹிம்ஸை செய்பவன், பொய் பேசுபவன், போக்கிரி, கன்யகை, குதிரை, பசு இவற்றை விற்பவன், வீட்டிற்கும் ஊருக்கும் காட்டிற்கும் தீவைப்பவன், சிராத்தம் விட்டவன், பிறர் உணவை உண்பவன்,

காலத்தில் வந்த அதிதிக்கு உணவிடாதவன், நல்ல அந்தணர், தேவர், புண்ய தீர்த்தம், குலதெய்வம், வேதம், சாஸ்திரம் முதலியவற்றை நிந்திப்பவன், குளம், கிணறு தோட்டம், நடைபாதை, வேள்வி முதலியவற்றை யழிப்பவன், விரதநாளில் உண்பவன், சிராத்தம் முதலிய நாட்களில் பகலில் பெண்களுடன் சேர்பவன், நம்பிக்கை துரோகி, கொடுத்த தானத்தைப் பறிப்பவன், தன் வார்த்தை மீறி நடப்பவன், பிறருக்குரிய பணியைக் செய்பவன், தன் நற்செலையும் பிறரது கெட்ட செயலையும் கூசாமல் கூறுபவன், ஜம்பமாகப் பேசுபவன், போக்கிரி, குரூரன், திருடன் இவர்களுடன் தொடர்பு கொள்பவன், கொலைகாரன், மருத்துவ முறையறியாமல் மருத்துவம் புரிபவன், தன் கடமையைச் செய்யாதவன், பிறரை நோகச் செய்பவன், இத்தகைய செயல்களைப் புரிபவர் நரகம் சென்று பின் மறு பிறவியில் சாண்டாளனுகப் பிறப்பர். (9)

क्रोधी शूद्रीरतस्त्यक्तनित्यनैमित्तिकक्रियः ।
वृषगो वृषलीसक्तो रसगोवेदविक्रयी ॥ १० ॥

अदत्वेशं कपिलगोदुग्धपोऽतिनिषिद्धभुक् ।
प्रतिग्रही पराजीवजीवी सन्ध्याशायी कुवाक् ॥ ११ ॥

इत्याद्या ब्राह्मणास्तेऽपि पूर्ववत्संभवन्ति हि ।
जीवजातिमिताः सन्ति नरका एकविंशतिः ॥ १२ ॥

तेषु श्रेष्ठा जीवपापविपाका अन्तकालये ।
तेष्वन्तकः क्षिपत्येतान्पापिनो पापभुक्तये ॥ १३ ॥

அந்தணனுயிருந்து முன்கோபி, சூத்ர ஸ்திரீயிடம் இன்பம் பெறுபவன், தனது நித்திய-நைமித்திகக் கருமங்களைவிட்டவன். எருதின் மீதேறி வருபவன், வேசியுடன் கூடுபவன், தயிர் பால் பசு வேதம் இவற்றை விற்பவன், ஈசனுக்கு வழங்காமல் கபிலப்பசுவின் பால் அருந்துபவன், தகாதெனத் தடுக்கப்பெற்ற உணவை உண்பவன். கெட்டதானத்தை ஏற்பவன், பிறரது பிழைப்பைக் கெடுப்பவன், ஸந்தியா காலத்தில் தூங்குபவன், கெட்ட பேச்சு

பேசுபவன், இவற்றைச் செய்பவன், அந்தணனுயினும் சண்டாளனுவான். செய்த பாபத்தை அனுபவிக்க 84 லக்ஷம் நரகங்கள் உள்ளன. அவற்றில் முக்கியமானவை இருபத்தொன்று. யமன் இவற்றில்பாபிகளைத் தள்ளுகிருன். (13)

त्यक्त्वा पुष्टमपीह वर्ष्म कलुषी यान्यातनाङ्गेन तृट्-
क्षुच्छीतोष्णसुपीडितो यमचरैर्बद्धोऽयने दुर्गमे।
मूर्च्छन् तर्जनताडनादिभिरसन्वै वैतरिण्यर्दितो
भुङ्क्ते याम्यमवाप्य राष्ट्रमवशस्तां यातनां नारकीम्॥ १४॥

ततो योन्यन्तरे याति भुक्तदुःखोऽप्यघांशतः।
प्रायशो वासनाभूम्नो भूतप्रेतपिशाचताम्॥ १५॥

हुंतुंकाराद्गुरोर्विप्राभिभवाद्ब्रह्मराक्षसः।
गर्दभो हीनसेवी स्यात् कुक्कुटोऽतिथिहापकः॥ १६॥

उष्ट्रोऽर्थहृद्वनचरः फलपत्रार्थहृद्भवेत्।
मधु दंशः पलं गृध्रोऽन्नमाखुश्चातको जलम्॥ १७॥

गन्धान् छुच्छुन्दरी धान्यं शलभोऽलिर्विषं तथा।
कृमिः कीटः पतङ्गः स्यात् स्वर्णं हृत्वा तृणं पशुः॥ १८॥

काको निर्मन्त्रभुग्गृध्रो मित्रध्रुग्दाम्भिको बकः।
इत्याद्या बहुशो योनीर्भुक्त्वा रुग्णा भवन्त्यथ॥ १९॥

பாபியானவன் புஷ்டி பெற்ற தன் உடலை இங்கு விட்டு, நரகத்தில் துன்புற யாதனா சரீரம் பெறுகிருன். நாவரட்சியும் பசியும் குளிரும் தாபமும் துன்புறுத்த யமனது தூதர்களால் நெருங்கிய பாதையில் இழுத்துச் செல்லப்படுகிருன். மயங்கி விழும்போது யமபடர்கள் அவனை அடித்துத் துன்புறுத்தி வைதரிணியாற்றில் ஆழ்த்தப்பெற்றுக் கடக்கிருன். யமவாதனைகளை அனுபவித்த பின் மறுபடி பிறக்கிருன். மன அழுத்தமும் வாஸனையும் அதிகமாக, பூதம் பிரேதம் பிசாசாகி அலைகிருன். குருவையோ சிறந்த அந்தணர்களையோ ஏளனமாகப் பேசித் துன்புறுத்திஞல்

பிரும்ஹராக்ஷஸஞகிருன். ஈனர்களை அண்டிப் பிழைத்திருந்தால் கழுதை, அதிதியை விரட்டிஞல் கோழி, பிறர் செல்வத்தைப் பறித்தால் ஒட்டகை: காய் ,கனி முதலியவற்றைத் திருடிஞல் குரங்கு, திருடியதுதேஞஞல் குளவி, மாம்ஸமாஞல் கழுகு; அன்னமாஞல் எலி, தண்ணீராஞல் சாதகப்பறவை, வாஸனைப் பொருளாஞல் மூஞ்சோறு, தானியமாஞல் விட்டில்பூச்சி, விஷமாஞல் தேள், தங்கமாஞல்கிருமி, புல்லாஞல் கால் நடை, மந்திரம் கூருமல் சாப்பிட்டால் காக்கை, நண்பனை ஏமாற்றிஞல் பருந்து; ஜம்பமடித்தால் கொக்கு, இவ்வாறு பல பிறவிகளைப் பெறுகிருன்.(19)

हृद्रोगी परहृद्भेत्ता गुरुत्यागी महामयी।
क्षयी तु ब्रह्महा कुष्ठी स्वर्णहृत्पुस्तकापहा ।। २० ।।
जन्मान्धो विश्वासघाती वमी गण्डी गणार्थहृत्।
अपुत्रोऽन्यार्थहृद्वस्त्र-हृच्छ्वित्री चानृती कुवाक् ।। २१ ।।
गुल्म्यन्नहृत्कुरुङ् मांसभोक्ता कास्यस्तु तैलहृत्।
पामी फलादिहृच्छ्वित्री कांस्यकार्पासलोहहृत् ।। २२ ।।
देवार्थहृत्पाण्डुरोगी रोगाः सर्वेऽत्र पापतः ।
परस्त्र्यालिङ्गनाज्जन्म शतं श्वा तद्गवेक्षकः ।। २३ ।।
अन्धो बन्ध्वङ्गनाभोगी गर्दभोऽहिश्च दुर्धिया।
परस्त्र्यालिङ्गनान्नूनं हृद्रोगी ह्यष्टधा रतिः ।। २४ ।।
श्वा मातुलसखिस्त्रीभुक् कृमिः स्यादौपपत्यतः ।
स्वैरिण्योऽपि स्त्रियः श्वादियोनिं गत्वा व्यथन्त्यलम् ।। २५ ।।

பிறர் மனத்தை உடைத்தால் இதயநோய், குருவைவிட்டால் பெருநோய், அந்தணனைக் கொன்ருல் க்ஷயம், தங்கம் திருடிஞல் குஷ்டம், புத்தகம் திருடிஞல் குருடு, நம்பிக்கையை அழித்தால் வாந்தி, சமுதாயப் பொருளைத் திருடிஞல் கண்டமாலை, பிறரது பொருளைப் பறித்தால் புத்திரனின்மை, துணி திருடிஞல் வெண்குஷ்டம், பொய் சொன்ஞல் பேச்சுக் குளறல், உணவைத்

திருடினால் வயிற்றுவலி, மாம்ஸம் திருடினால் அழுகிய குஷ்டம், எண்ணெயால் வாய் அழுகல், பழத்தால் படர்த் தாமரை, வெண்கலம், பஞ்ச லோகங்கள் திருட வெண்குஷ்டம், ஆலயத்திருட்டால் சோகை முதலிய நோய்கள் பாதிக்கும். பிறர் மனைவியை அணைத்தால் நாயாக நூறு பிறவி, உடலழகைப் பார்க்கக் குருடு, உறவினர் மனைவியுடன் கூடினால் கழுதை; பாம்பு, கெட்ட எண்ணத்தால் இதயநோய், மாமன் நண்பன் மனைவியுடன் கூடினால் நாய், ஜாரனுடன் கூட புழு, என்றவாறு நோயும் ஈனப்பிறப்பும் பாபத்தின் பயனே. (25)

इति संवादमाकर्ण्य गुरुं प्राह त्रिविक्रमः ।
ज्ञानाद्वाऽज्ञानतो जातं कथं पापं प्रणश्यति ।। २६ ।।

श्रीगुरुरुवाच—

पश्चात्तापेन संशुद्धिः प्रायश्चित्तादिभिः पुनः ।
सदस्युच्चार्य पापं स्वं ब्रह्मदण्डं निधाय च ।। २७ ।।

सभ्याज्ञया क्षौरपूर्वं कृतपापानुसारतः ।
कृच्छ्राब्दादि चरेच्छक्त्याऽशक्तो गोऽर्घादिनाऽशठः ।। २८ ।।

स्वल्पं तीर्थे दशस्नानाद् द्विशतास्वायमैरघम् ।
स्वर्णदानात्प्रणश्येत सद्गुरोर्दर्शनान्महत् ।। २९ ।।

त्र्यहं दिवा त्र्यहं सायं त्र्यहमद्यादयाचितम् ।
नाद्यात् त्र्यहं कायकृच्छ्रोऽयुतगायत्रिकाजपात् ।। ३० ।।

सहस्रहवनाद्वापि द्वादशद्विजभोजनात् ।
गोदानाच्छक्तितोऽर्घाद्वा प्राजापत्यः प्रसिद्ध्यति ।। ३१ ।।

द्वादशाद्युः पञ्चदश-ग्रासा भोज्याः सदा निशि ।
मासाच्छुद्धिः स्वल्पभुज्या क्षीराज्याद्यशनैश्च वा ।। ३२ ।।

बिल्वाश्वत्थाब्जदर्भाम्बु-पानात् तीर्थाटनादपि ।
वाराणसीस्नानमात्राल्-लीयन्ते पापकोटयः ।। ३३ ।।

अन्यतीर्थे त्वनुष्ठानाद्रामेश्वरसमीपतः ।
अब्धिस्नानाद्ब्रह्महत्या-कृतघ्नाद्यघसंहतिः ।। ३४ ।।

இவ்வாறு நேர்ந்த பாபத்தின் விளைவுகளை அகற்றுவது எப்படி? எனத் திரிவிக்ரமர் கேட்க ஸ்ரீ குரு சொல்கிறார். தான் செய்த தவற்றை உடன் உணர்ந்து தாபப்படுவது, பிராயச்சித்தம். பலர் முன் தான் செய்ததைக் கூறி மன்னிப்பு கோருவது, ஏற்றவாறு தன் உடமைப் பொருளை அந்தணர்க்குத் தானம் செய்தல், ஸபையினரின் தீர்ப்பின்படி க்ஷவரம் செய்து கொண்டு கிருச்ச்ரதானம், பிறரின் இழப்புக்கேற்பப்பொருள் அளிப்பது, பத்து தடவை நீராடுவது, நூறு தடவை பிராணாயாமம், ஸ்வர்ணதானம், குரு ஸேவை, மூன்று நாட்கள் பகலிலும் மூன்று நாட்கள் இரவிலும், மூன்று நாட்கள் முழுவதும் பட்டினி, மூன்று நாட்கள் யாசிக்காமல் பிறர் வலிவில் தந்ததை உண்பது, இது பிராஜாபத்யகிருச்சிரம். அது இயலாவிடில் காயத்திரியைப் பத்தாயிரம் ஜபம் செய்வது, ஆயிரம் தடவை காயத்திரியால் ஹோமம், பன்னிரண்டு அந்தணருக்கு போஜனம், கோதானம், ஸ்வர்ணதானம் முதலியவை. பகலிலும் இரவிலும் பதினைந்து பிடி அன்னம் உண்பது. அளவு குறைத்து ஒருமாதம் சாப்பிடுவது, பாலும் நெய்யும் மட்டும் உண்பது, வில்வம், அரசிலை, தாமரை, தர்ப்பமிட்ட நீரைப்பருகுவது. தீர்த்தாடனம், காசியில் கங்கை ஸ்நானம், ராமேச்வரமருகே கடலில் ஸ்நானம் இவை பிரும்மஹத்திமுதலிய பாபங்களின் கழுவாயாகும். *(34)*

लक्षसंख्याकगायत्री जपान्मद्यपसंशुचिः ।
कोटचा ब्रह्मघ्नोऽष्टलक्षैर्गुरुतल्पगतस्य च ।। ३५ ।।

सप्तलक्षात्स्वर्णहर्तुः पावमानीभिरप्युत ।
इन्द्रं मित्रं शुनःशेपसूक्तं पौरुषशान्तिके ।। ३६ ।।

त्रिसुपर्णं नाचिकेत मघमर्षण वैष्णवे ।
मासमात्रं जपेत्स्वल्पे षण्मासं च महत्यघे ।। ३७ ।।

चान्द्रायणं चरेद्ग्रासानेकैकं वर्धयेत्सिते ।
पक्षेऽन्यके ह्रासयेत्तैः शुचिगव्याशनेन च ।। ३८ ।।

गोमूत्रं गोमयं क्षीरं दध्याज्यं सकुशोदकम् ।
मिलित्वा मन्त्रवद्धुत्वा पिबेत्सर्वाघशान्तये ।। ३९ ।।

उभौ समं ह्यनन्तर-कृताघेणापि दम्पती ।
लिप्यते पापिसंसर्गी सोऽपि पापी भवेत्समः ।। ४० ।।

प्रायश्चित्तानि चीर्णानि दुष्टं हरिपराङ्मुखम् ।
नदीव सौरभाण्डं न निष्पुनन्ति कथञ्चन ।। ४१ ।।

கள் குடித்ததற்கு காயத்திரியின் லக்ஷஜபம், பிரும்ஹஹத்திக்கு கோடிஜபம், குருவின் மனைவியுடன் கூடியதற்கு எட்டுலக்ஷ ஜபம், தங்கத்திருட்டிற்கு ஏழுலக்ஷ ஜபம், பவமான ஸூக்தம், இந்த்ரம் மித்ரம் என்ற ஸூக்தம், சுனச்சேப ஸூக்தம் புருஷஸூக்தம், சாந்தி மந்திரங்கள், திரி ஸுபர்ணம், நாசிகேதம், அகமர்ஷணம், விஷ்ணு ஸூக்தம், இவற்றை ஒரு மாதம் ஜபித்தல், கடும்பாபமெனில் ஆறு மாதங்கள், சுக்ல பிரதமையன்று ஒருபிடி, இரண்டாம் நாள் இரண்டுபிடி என்றவாறு தினமும் ஒரு பிடிகூட்டிப் பூர்ணிமையன்று பதினைந்து பிடியன்னம் சாப்பிடுவதும் மறுபடி கிருஷ்ண பக்ஷத்தில் ஒவ்வொரு பிடியாகக் குறைத்து அமாவாஸையன்று ஒரு பிடி மட்டும் உணவு கொள்ளுதல் சாந்திராயணமாகும். இது பாபத்தைப் போக்க மிகவும் ஏற்றது. மந்திரம் கூறி பஞ்சகவ்யம் சேர்த்துத் தர்ப்பமிட்டு மந்திரம் கூறிச் சாப்பிடுவது எல்லா பாபத்தையும் நீக்கும். கணவனும் மனைவியும் கூடிப் பாபம் செய்திருந்தால் இருவரும் சேர்ந்தே கழுவாயைச் செய்யவேண்டும். பலர் சேர்ந்து பாபம் செய்தால் அவர்கள் சேர்ந்தே கழுவாயைச் செய்யவேண்டும். எத்தனை கழுவாய் செய்தாலும் ஹரியின் ஸ்மரணமின்றி அவை பலன்தராது. கள்ளைக்குடத்தில் நிரப்பி மூடி முத்திரையிட்டு ஆற்றில் அமிழ்த்தினுல் கள்ளின் மணம் அகலாது. அதுபோல் உள்ளத்தை ஹரிநாமத்தால் தூயதாக்கினுல் உடலால் செய்த பாபம் நீங்கும். (42)

इति त्रिविक्रमं प्रोक्त्वा पतितं प्राह सद्गुरुः ।
प्राङ्मातापितृसंत्यागाल्लब्धा चण्डालताऽत्र ते ।। ४२ ।।

मासमात्रं नदीस्नानात् प्रेत्य विप्रो भविष्यसि।
प्राहान्त्यजो योजय मां त्वद्दृक्पूतं द्विजातिषु ॥ ४३ ॥

श्रीगुरुरुवाच-

भूत्वापि पतिताद्वृद्धो देहस्तेऽसंस्कृतोऽशुचिः।
वदन्ति पतितं न त्वामन्यत्प्रोक्तं कथं त्वया ॥ ४४ ॥

विश्वामित्रः पुरा क्षत्रो देवर्षित्वं तपोबलात्।
देवान्ययाचे प्रोक्तं तैर्वसिष्ठात्स्वीकुरुष्व तत् ॥ ४५ ॥

वसिष्ठेनापि हीनत्वान्न दत्तं तत्सुतान्छतम्।
हत्वा तं हन्तुकामोऽभूच्छङ्कितो ब्रह्महत्यया ॥ ४६ ॥

तदाज्ञया तपस्तप्तं तत्तु मेनकया हृतम्।
विश्वामित्रः पुनस्तप्त्वा दग्धाङ्गोऽभूदृषीश्वरः ॥ ४७ ॥

तस्माद्भवान्तरे तेऽस्तु ब्रह्मत्वं गच्छ तेऽस्तु शम् ॥ ४८ ॥

த்ரிவிக்ரமரிடம் ஸ்ரீ குரு கூறினார். "பெற்றோரைக் காப்பாற்றாமல் வெளியேற்றியதால் தான் இந்தச் சண்டாளப் பிறவி நேர்ந்தது. ஒரு மாதம் இங்கு நீராடினால் மறுபிறவியில் அந்தணனாக முடியும்". இதனைக் கேட்டுச் சண்டாளன் "உம் கடாக்ஷத்தால் என்னை இப்போதே அந்தணராக்கி விடுவீர்" என்று வேண்டினான். ஈன ஜாதியில் பிறந்த உடல் முதுமையடைந்தது. பிறவியிலிருந்து செய்ய வேண்டிய ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களால் இது புனிதமாகவில்லை. அதனால் இந்த உடலால் இனி நன்மை இல்லை. இதனைவிடவேண்டும். முன்னர் க்ஷத்ரியரான விச்வாமித்ரர் தவத்தால் தேவர்ஷியாகத் தேவர்களிடம் வேண்டினார். வஸிஷ்டரிடமிருந்து அதனைப் பெறத் தேவர்கள் கூறினர். ஈனப்பிறப்பால் அதைப் பெறமுடியாதென வஸிஷ்டர் மறுத்தார். விச்வாமித்ரர் வஸிஷ்டரின் நூறு புதல்வர்களைக் கொன்றார். பின் வஸிஷ்டரைக் கொல்ல முயன்றதும் ப்ரஹ்மஹத்தி பாபத்தில் பயம் வந்தது. வஸிஷ்டர் காட்டிய வழியில் செய்த தவம் மேனகையால்

*பறி போனது. மறுபடி தவம் புரிந்து உடலை எரித்துக் கொண்டார். மறுபிறவியில் ப்ருஹ்ம ரிஷியானார். நீயும் மறு பிறவியில் அந்தணராவாய் எனக் கூறினார். (48)*

पतित उवाच-

जाते स्वर्णेऽयसः पश्चात्कुतोऽयस्तद्वदप्यहम् ।। ४९ ।।

तच्छ्रुत्वा श्रीगुरुर्विप्रभ्रान्त्या दूरात्स्त्रियं सुतान् ।
वारयन्तं वीक्ष्य शिष्यमाहामुं स्नापय द्रुतम् ।। ५० ।।

तदा लुब्धद्विजेनैष स्नापितः पतितः स्वकैः ।
सहागाद्विस्मृतप्राप्तज्ञानो हीनो निजालयम् ।। ५१ ।।

त्रिविक्रम उवाच-

पतितोऽपि कृपादृष्ट्या पावितः स्नानमात्रतः ।
कथं स पूर्ववज्जातो भगवन्छिन्धि संशयम् ।। ५२ ।।

श्रीगुरुरुवाच-

क्षिप्तं भस्मार्पितं ज्ञानं विनष्टं क्षालनात्तु तत् ।
इयान् भस्मप्रभावः प्राग्वामदेवो महामुनिः ।। ५३ ।।

वने चचार तं प्राप्तुमागतो ब्रह्मराक्षसः ।
स्पर्शमात्रात्प्रशान्तोऽभूज्ज्ञाताऽखिलनिजोद्भवः ।। ५४ ।।

ब्रह्मराक्षस उवाच -

प्राक् श्रीमत्तोऽस्मि राट् कामी ब्राह्मणाद्यन्तजातिजाः ।
भुक्ताः श्रेष्ठाः स्त्रियोऽल्पाश्च सहैकैकामनन्तशः ।। ५५ ।।

हठाद्दानादिनानीय भुक्ता मद्राष्ट्रसंस्थिताः ।
नरा राष्ट्रान्तरं जग्मुः सस्त्रीका दोषकातराः ।। ५६ ।।

ततो रुग्णस्य मे राज्यमाक्रान्तं शत्रुभिस्ततः ।
कृच्छ्रात्प्रेत्य मया भुक्ता पितृभिः सह दुर्गतिः ॥ ५७ ॥

प्रेतो व्याघ्रश्चाजगरः सालावृक उ सूकरः ।
शरठः श्वा क्रोष्टुमृगौ कुक्कुटः कपिचिल्लकौ ॥ ५८ ॥

नकुलः काक ऋक्षश्च कुक्कटः खर ओतुकः ।
भेकः कूर्मो मत्स्य आखुर्घूको हस्तीह राक्षसः ॥ ५९ ॥

एता योनीर्मया भुक्ताः कृच्छ्रात्क्षुत्तृट्प्रपीडितः ।
त्वामत्तुमागमन् सद्यः शान्तो जातोऽस्म्यदः कथम् ॥ ६० ॥

*சாண்டாளனே இரும்பு ரஸவாதத்தால் தங்கமான பிறகு மறுபடி இரும்பாகுமா என வாதிட்டு தன்னை அணுகவந்த குடும்பத்தினரைத் தான் அந்தணனாகிவிட்டமையால் எட்டிச் செல்ல விரட்டினான். சீடனிடம் ஸ்ரீ குரு அவனை நீராட்டச் சொல்ல நீராடியதும் தன் நிலை உணர்ந்து தம் மக்களுடன் சேரியை அடைந்தான். மறதி நீராடலால் அகன்ற விதத்தை ஸ்ரீ குரு த்ரிவிக்ரமருக்கு விளக்கினார். விபூதியைத் தூவியதால் தான் அந்தணன் என்ற நினைவு வந்தது. நீராடலில் விபூதி அகன்றதும் தான் புலையன் என்ற உணர்வு வந்தது. வாமதேவர் என்ற முனிவர் காட்டில் சுற்றினார். அவரை ப்ரஹ்மராக்ஷஸன் விழுங்க வந்தான். இவர் உடல் தன்மீது பட்டதும் முன் பிறவி நினைவு வந்து அமைதி பெற்றான். வாமதேவரிடம் தன்னைப் பற்றி விளக்கினான். ''நான் ஓரரசன். செல்வத்திமிரால் பிறர் மனைவிகளைத் தீண்டினேன். பெண் பித்தன் என மிரண்டு என் நாட்டு மக்கள் குடும்பத்துடன் வேறு நாட்டிற்குச் சென்றனர். என் உடல் நோய்வாய்ப்பட்டு மெலிந்தது. எதிரிகள் என் நாட்டைப் பறித்தனர். நான் இறந்தேன். என் மூதாதையரும் என் பாபத்தால் கீழ் நிலையடைந்தனர். புலி, மலைப்பாம்பு, செந்நாய், பன்றி, நாய், நரி என்றவாறு பல பிறவிகளில் துன்புற்று ப்ரஹ்மராக்ஷஸனாகி உம்மைத் தின்றுவிடப் பாய்ந்தவன் உம்மைத் தீண்டியதால் அமைதியுற்றேன். இது எவ்வாறு நிகழ்ந்தது ? என வாமதேவரிடம் கேட்டான். (60).*

वामदेव उवाच-

अङ्गे भस्मास्ति तत्स्पर्शाज्ज्ञानं जातं तवादितः ।
तन्माहात्म्यमिदं यत्तु सदा प्रीत्या शिवो दधौ ।। ६१ ।।

पुरैको द्राविडे विप्र औपपत्ये हतो बहिः ।
त्यक्तस्तत्रैव भस्माक्तश्वस्पर्शाद्भस्मभूषितः ।। ६२ ।।

असून्जहौ तदा प्राप्तान्याम्यान्दूतान्निवार्य तम् ।
भस्मदग्धमलं शैवा दूता निन्युः शिवान्तिकम् ।। ६३ ।।

राक्षस उवाच——

एवं चेद्भस्ममाहात्म्यं तत्स्वीकर्तुं समुत्सहे ।
तन्निर्माणप्रकारं मे शंस धार्यं कथं च तत् ।। ६४ ।।

प्राग्ब्रह्मभ्योऽर्पिता वार्ता वाप्याद्या निर्जलस्थले ।
रचितास्तत्फलं त्वेतत्पापान्ते तव दर्शनम् ।। ६५ ।।

वामदेव उवाच -

त्र्यक्षं सायुधपङ्क्तिहस्तमहिसत्सूत्रं शिवं श्वेतभं
पञ्चास्यं च कपर्दिनं स्मितमुखं वैय्याघ्रचर्माम्बरम् ।
चार्वम्बान्वितमिन्दुभालमु शिरोगङ्गं गणाद्यन्वितम्
स्वस्थं प्रेक्ष्य सनत्कुमारमुनिराण्नत्वाऽब्रवीत्प्राञ्जलिः ।। ६६

*வாமதேவர் சொன்ஞர் - என் உடலில் விபூதி பூசியுள்ளேன். அது உன் மேல்பட்டதும் முன் பிறவி நினைவு உனக்கு வந்தது. விபூதியின் பெருமை இது. சிவனும் அதனுல் இதனை விரும்பிப் பூசிக் கொள்கிருர். திரவிட தேசத்தில் ஒரு அந்தணன் ஜாரனுனதால் கொல்லப்பட்டான். வழியில் கிடந்த அவன்மீது விபூதி ஒட்டிக் கொண்டநாய் முகர்ந்தது. விபூதி அவன் மீது பட்டதால் யமதூதர்களை விலக்கிச் சிவ கணங்கள் சிவனருகே கொண்டு*

சென்றனர். '' வாமதேவரிடம் அந்த ப்ரஹ்ம ராக்ஷஸன் தானும் விபூதி பூசிக் கொள்ள விரும்புவதால் அதனைத் தயாரிக்கும் முறையை விளக்கக் கோரினான். முன் பிறவியில் செய்த புண்யச் செயல்களின் பலன்தான் இப்பிறவியில் பெரியோரின் அருகாமையைத் தந்துள்ளது என்பதை உணர்ந்து கூறினான்.

வாமதேவர் சொன்னார் - ஒரு ஸமயம் ஸநத் குமாரர் சிவனைத் த்யானித்தார். முக்கண்ணர், ஆயுத வரிசை ஏந்திய கைகள், பாம்பாலான உபவீதம், வெண்ணிற மேனி, ஐந்து முகங்கள், சடை, புன்சிரிப்புள்ள முகம், புலித்தோலாடை, அழகிய உமா தேவியின் அணைப்பு, நெற்றியில் சந்த்ரன், தலையில் கங்கை, சூழ்ந்து நிற்கிற கணங்கள் இவ்வாறு தன்முன் தோன்றியவரை முனிவர் வணங்கிக் கைகூப்பி, ஜயகோஷத்துடன் வேண்டினார். (60)

जयेश्वरानन्त हराज शंभो जगन्निदानाल्पकसाधनं नः ।
मुक्त्यै शिवोपादिश दुष्कराणि प्रोक्तानि सर्वाणि तु साधनानि ॥

शिव उवाच-

दर्शनात्परिहृत्याघं भुक्त्वा शं विधिवद्धृतेः ।
भस्मनः पुरुषोऽह्नाय जीवन्मुक्तो भवत्यलम् ॥ ६८ ॥

यज्ञोत्थं वा करीषोत्थमग्निरित्यादिमन्त्रितम् ।
धार्यं त्र्यायुषमित्येतैरङ्गुलीभिः प्रतिस्थलम् ॥ ६९ ॥

त्रिपुण्ड्रा भ्रूसमा रेख्या वर्णादिस्मृतिपूर्वकम् ।
त्र्यर्णास्त्रिदेवास्त्रिगुणास्त्रिरात्मानस्त्रिशक्तयः ॥ ७० ॥

त्रिछन्दसस्त्रिलोकास्त्रिवेदास्त्रिषवणाः स्मृताः ।
सर्वाघहृत्सदा सर्वैर्धार्यं तद्विधिवन्नरैः ॥ ७१ ॥

भक्त्याऽज्ञेनापि तद्धार्यं तारकं नापरं ह्यतः ।
परस्त्रीगोनिन्दकोऽसन् क्षेत्रहृत्परपीडकः ॥ ७२ ॥

गृहदाही मृषावादी खलो वेदरसक्रयी ।
नीचाच्च दुष्प्रतिग्राही वृषलीविधवादिगः ॥ ७३ ॥

ज्ञानाज्ञानकृताघोपि मुक्तः स्याद्भस्मधारणात्।
भस्मत्रिपुण्ड्ररुद्राक्षैः स्वः पूज्यो ना पुमर्थदैः ॥ ७४ ॥

''ஈசனே ! ஹரனே ! மங்களத்தின் தோற்றுவாயே ! நாங்கள் முக்தி பெறப் பல வழிகள் கூறப்பட்டுள்ளன. அவை செய்வதற்கு எளியவையல்ல. எளிய முறையை எமக்குக் காட்டுவீர் ! என்றூர் விபூதியைக் கண்டாலேயே பாபம் விலகும். தரித்தால் ஜீவன் முக்தனுவான். வேள்வியில் பெற்றதும் பசுவின் கோமய விராட்டியில் எரித்தெடுத்ததும் சிறந்தது. அதனை அக்னிரிதி பஸ்ம என்று தொடங்கும் மந்த்ரம் ஜபித்து த்ரியாயுஷம் என்ற மந்த்ரத்தால் ஆட்காட்டி விரலை தவிர்த்து மற்ற மூன்று விரல்களால் நெற்றியில் புருவத்தினளவு மூன்று கோடுகள் இடவேண்டும். பின் ஒவ்வோரிடத்திலும் இட வேண்டும். ஓங்காரத்தின் அகாரம், உகாரம்,மகாரம் என்ற மூன்றெழுத்துக்கள், மும்மூர்த்திகள், முக்குணங்கள், விச்வன் தைஜஸன் பிராஜ்ஞன் என்ற மூன்று ஆத்மாக்கள், இச்சா ஜ்ஞானம் க்ரியா என்ற சக்திகள், ருக், யஜுஸ், ஸாமவேதங்கள், மூவுலகங்கள், காயத்ரி, த்ருஷ்டுப், ஜகதீ என்ற மூன்று சந்தங்கள், காலை பகல் மாலை என்ற முக்காலங்கள், என்பவற்றின் வரிவடிவமே விபூதியின் மூன்று கோடுகள். எல்லா பாபங்களும் நீங்க எல்லோராலும் பூசப்படுபவை. அறிவிலியும் பக்தியுடன் பூசப் பலன் தரும். அறிந்தும் பல வகைப் பாபங்களைச் செய்தவர்களும், விபூதி பூசுவதால் பாபம் நீங்கப்பெறுவர். விபூதியால் த்ரிபுண்டிரமும் ருத்ராக்ஷமும் தரித்தவன் நன் மதிப்பிற்குரியவன்.(74)

सहस्रप्राक्परोत्पत्ति-दोषघ्नं व्याधिनाशनम्।
तीर्थाप्लुतिजपाधिक्य-फलदं भस्मधारकम्॥ ७५ ॥

स्वरादिलोकं नीत्वाऽन्ते शैवे स्थापयति ध्रुवम्।
सनत्कुमार सुलभं तारकं भस्मधारणम्॥ ७६ ॥

एवं सनत्कुमारेशसंवादस्ते मयोदितः।
तस्मात्त्वं परिधत्स्वाङ्गे भस्मेत्युक्त्वा ददौ मुनिः॥ ७७॥

राक्षसोऽपि तदादाय भस्माङ्गे विधिवद्दधौ।
तदैव राक्षसीं हित्वा तनुं मुक्तोऽभवत्क्षणात्॥ ७८॥

तदैवाप्तं विमानं स तेनागात्तत्क्षणाद्दिवम्।
तस्मान्मुने भस्मशक्तिं ज्ञात्वाऽङ्गे धेहि मुच्यसे॥ ७९॥

एवं गुरूक्तं ह्यभिगृह्य हृष्टो भक्त्योपसंगृह्य तमाज्ञयागात्।
त्रिविक्रमोऽन्येऽपि हि तत्प्रमाणं मत्वोत्तमं चेरुरथो तथैव॥

एवं क्रियाविपाकेऽयमीदृक्श्रुतिभयङ्करा।
दण्डधृग्यातना तस्माच्छ्रेय एव सदाऽऽचरेत्॥ ८१॥

*इति श्रीगुरुचरिते कर्मयोगे कर्मविपाको नाम पञ्चदशोऽध्यायः॥ १५॥*

விபூதி தரிப்பது பல பிறவிகளில் செய்த பாபத்தைப்போக்கும். தீர்த்தங்களில் நீராடுதல், ஜபம் இவற்றின் பலனை அதிகப்படுத்தும். ஸனத்குமாரருக்கு சிவ பெருமான் விளக்கியவாறு நீயும் விபூதி பூசுவாய் என வாமதேவர் ப்ரஹ்ம ராக்ஷஸனுக்கு விபூதி தந்தார். அவனும் அதனை முறைப்படி பூசிக் கொள்ள ப்ரஹ்ம ராக்ஷஸ நிலைமறைந்தது. முக்தனாகி விமானமேறி வானுலகம் சென்றான். த்ரிவிக்ரமரே! விபூதியைப் பக்தியுடன் உடலில் பூசுவீர் என ஸ்ரீ குரு சொன்னதை உளமாற ஏற்று நடந்தார்.

மனிதனின் புண்யச் செயலும் பாபச் செயலும் இன்ப துன்பங்களாக உருமாறிப் பல பிறவிகளில் தொடர்கின்றன. அதனால் நரகயாதனையும் ஈனப்பிறவியும் தருகிற பாபச் செயல்களைத் தவிர்த்து மேனிலை தருகிற புண்யச் செயல்களையே செய்ய வேண்டும். (81)



# षोडशोऽध्यायः

नमस्ते ब्रूहि चरितं हरेरद्भुतकर्मणः।
शृण्वतोऽपि न मे तृप्तिरमृतं पिबतो यथा॥ १

सिद्ध उवाच—

सत्पृष्टं वत्स धन्योऽसि भवाब्धिर्लीलया जितः ।
चित्तं ते चरितैर्विद्धं हरेस्तेनास्मि तोषितः ॥ २

को ब्रूयाद्भगवल्लीलां कति चित्राणि वच्मि ते ।
मूको ब्रूते प्रेक्षतेऽन्धो मृतो जीवति यद्दृशा ॥ ३

शृण्वेको माहुरे विप्रो गोपीनाथो धनी मृताः ।
तत्पुत्रा बहवोऽथैको जीवितो दत्तसेवया ॥ ४

दत्तप्रसादाच्चिरजीवितं सुतं
नाम्नाऽकरोद्दत्तमिति द्विजातिजः ।
कान्तः सुलक्ष्मा मतिमान्सुसात्त्विकः
पित्रोर्मृतार्भकविनाश्यवर्धत ॥ ५

सुसंस्कृतस्यास्य विधेः सुरूपिणी
लब्धा वधूर्धीगुणशीलशालिनी ।
रतिः स्मरस्येव परस्परोत्थितं
आसीत्तयोः प्रेम रथाङ्गनामवत् ॥ ६

सरूपौ सुरूपौ स्वयोर्मन्यमानौ
वियोगं कुयोगं क्षणं धर्मदक्षौ ।
उभौ तौ स्मरन्तौ सदाऽन्योऽन्यभद्रं
न तन्द्रा न निद्रा पतिप्रेम्णि साध्व्याः ॥ ७

लेपोऽत्युष्ण इवानिलोऽनलसमः शीतांशुरुष्णांशुवत्
शय्यावृश्चिकवत्सुमस्रगहिवद्भूषाः समाः कण्टकैः ।
वाङ्माधुर्यमपि प्रदीपनसदृक्स्वाद्वन्नमप्युत्कटु
प्रेष्ठे त्वन्तरिते क्षणं दृढतरां साध्व्या अभूत्सर्वदा ॥ ८

एवं सतोश्चापरिहार्यशोषवान्
भर्ता सुसाम्यासहनाद्विधेरभूत्।
क्षीणोऽरुचिः श्वासकफार्दितोऽनिशं
दुःखोज्झितस्वापभुजिःसुमन्दवाक्॥ ९

भुङ्क्ते यथान्नं स सती यथान्नं
शेतेऽपि यावत्स सती तु तावत्।
कृशोऽपि यद्वत्स सती तु तद्वत्
छायाऽपरेवास्य पतिव्रताऽभूत्॥ १०

### *அத்தியாயம்—16*

*அற்புதச் செயல்கள் புரிகிற ஸ்ரீகுரு ஸ்ரீந்ருஸிம்ஹ ஸரஸ்வதியின் வரலாற்றை நாமதாரகருக்கு ஸித்தர் விளக்குகிறார். "குழந்தாய் ! நீ கொடுத்து வைத்தவன். ஸம்ஸாரக் கடலை எளிதில் கடந்துவிட்டாய். உன் உள்ளத்தில் ஸ்ரீ குரு சரித்ரம் பாய்ந்துள்ளது. அதனை முழுவதும் கூற இயலாது. இதனைக் கேட்க ஊமை பேசுவான். குருடன் பார்ப்பான். இறந்தவன் உயிர் பெறுகிறான். மாஹுர் என்ற இடத்தில் கோபீநாதன் சிறந்த தனிகன். அவனது பல பிள்ளைகள் மரிக்க ஒருவன் ஸ்ரீ தத்த பகவானை ஸேவித்ததால் உயிருடன் இருந்தான். அவனுக்குத் தந்தை தத்தரென்றே பெயர் வைத்தார். அழகும் அறிவும் பெற்ற அவன் பெற்றோரை மகிழ்வித்தான். உபனயனமாகி அழகிய மனைவியையும் மணந்தான். உருவத்தால் ஒத்திருந்த அந்த தம்பதி பிரிவைத் தாங்காமல் சக்ரவாகப் பட்சிபோல் கூடி வாழ்ந்தனர். ஒருவர் மற்றவரது நன்மையை எப்போதும் விரும்பினர். கணவரிடம் அன்புடன் பழகுகிற மனைவிக்குச் சோர்வோ, து:க்கமோ வரவில்லை. கணவரின் பிரிவில் எந்த இன்பம் தரும் பொருளும் துன்பம் தந்தது. திடீரெனக் கணவனுக்கு கடும் க்ஷய நோய் ஏற்பட்டு உடல் இளைத்து உணவும் தூக்கமுமின்றி குரல் கம்மித் துன்புற்றான். அவனது மனைவி நிழல்போல் கூட இருந்து பணிவிடை செய்தாள். (10)*

वैद्योऽन्तिके तस्य कुगन्धशङ्कया
न याति साध्वी सुमना न तं जहौ।
भेजे पतिं स्नानसुगन्धिलेपनैः
पादाङ्गसंवाहनभेषजार्पणैः ॥ ११

शान्त्यार्चनैर्होमजपैश्च भेषजैः
दानैर्न यक्ष्मा किमपि व्यहीयत।
श्यामामुखेन्दुं परिपूर्णमुद्ग्रसन्
मन्दस्मितज्योत्स्नमभूत्परो ग्रहः ॥ १२

द्विजं रुजार्तं च तथाविधां वधूं
तयोर्न शेकुः पितरौ निरीक्षितुम्।
निवारिता तैरपि सा पतिव्रता
न तं जहावर्यमणं प्रभा यथा ॥ १३

विप्र उवाच—
प्राग्वैरतः कष्टमिदं मयार्पितं
धृत्या पितः सात्त्विकयाऽम्ब जीवितुम्।
साध्वर्हथस्ते सति पूर्ववैर्यहं
तन्मां विहायाशु पितुर्गृहं व्रज ॥ १४

साध्व्युवाच—
नार्हास्म्यनन्यशरणा परिहापितुं ते
नन्वर्धसुन्दरशरीरविभागिनीयम्।
जीवोऽस्य साधुवपुषोऽस्ति भवान्वियुक्ते
जीवे तनोर्ननु भवेत्खलु जीवहत्या ॥ १५

सदा मदास्यं शशिशालि कालिमा
कुतो यतो भैधत एवमेव ते।

अकी सुखी यत्र भवत्यवत्यघात्
तमीशमीडे स तु देवदेवतः ।। १६

नमो नमो वां श्वशुरौ मया श्रुतो
गुरुः स गन्धर्वपुरेऽस्ति तारकः ।
असुप्रियोऽनामयमेति भाति मे
सहामुना यास्य उ रोचतेऽपि वाम् ।। १७

तावूचतुः क्वापि तव श्रमेण सम्राज्ञि जीवेत स तत्र गच्छ ।
श्रुत्वैवमाराद्वशुरौ प्रणम्य तदाज्ञयाऽगात्सह तेन साध्वी ।। १८

மருத்துவரும் அவனது உடல் நாற்றத்தால் அருகில் வராத போது இந்த பதிவ்ரதை அவனது உடலை நீராட்டி மணப் பொருள் பூசி கால்களை வருடி மருந்து கொடுத்து, சாந்தி ஜபம் ஹோமம் தானம் முதலியவற்றால் நோய் நீங்க உதவினாள். நோய் வளர்ந்தது. அவனது முகத்தில் தெளிவில்லை. அவர்களைக் கண்ட அவனது பெற்றோர் வருந்தினர். நோயுற்ற அவன் முன் வினைப் பயனாக நோய் வந்துள்ளதால் அனுபவித்துத்தான் தீர்க்க வேண்டும். வருந்தாதீர். என அவர்களுக்கு ஆறுதலளித்து மனைவியைத் தன்னை விட்டுவிட்டுப் பிறந்த வீட்டிற்குச் செல்ல வேண்டினான். ''தான் பாதி உடலானவள். வேறு புகலிடமில்லாதவள். உயிரான உம்மை விட்டுவிட்டுப் பிரிந்தால் என் நிலை என்னவாகும்? உமது முகத்தில் வாட்டமில்லை. ஸ்ரீ தத்தர் நம்மைக் காப்பார். நமக்குக் கெட்டது நேராது'' என மனைவி கணவனுக்கு ஆறுதல் கூறினாள். கணவனின் பெற்றோரையும் வணங்கி கந்தர்வ புரத்திலுள்ள குருவைத் தரிசனம் செய்தால் கணவனின் நோய் நீங்கும் என நான் நம்புகிறேன். உமக்குச் சம்மதமா என்று கேட்டாள். அவர்களும் உனக்கு அது நன்மை தரும் என்ற நம்பிக்கை உள்ளபடியால் நீ இவனை அழைத்துச் செல் என அனுமதி தந்தனர். அவள் இருவரையம் வணங்கிக் கிளம்பினாள். (18)

सुखस्थितं मन्थरवाहवाहितं
तमन्वगच्छत्पतिमङ्घ्रिचारिणी ।

दधौ कराकृष्टधवा गमानत-
क्षमेभिभामुत्कुचगण्डकर्शिता ।। १९

क्रान्तेऽयनेऽथो कतिचिच्छनैः शनैःमृत्युं धवोऽगात्स तदैव दैवतः ।
सा मर्तुमुत्कापि निवारितेतरैः शुक्षामसीम्लानमुखाम्बुजाऽवदत् ।। २०

कालात्ययं मा कुरु कुर्वथाह्निकं
उत्तिष्ठ शेषे कति नाथ विप्रराट् ।
कस्मान्न मे दास्यसि वल्लभोत्तरं
प्रेष्ठं नु किं ते वचनं व्यलङ्घयम् ।। २१

प्राणाः क्व याताश्च मनः क्व ते गतं
द्राक्तान्परावर्तय जीवितुं चिरम् ।
लिप्तः स्वमातापितृदारहत्यया
भविष्यसि त्वं न तथा करोषि चेत् ।। २२

उद्वाहितां कैषि विहाय मां प्रियां
पुत्राननुत्पाद्य कथन्वृणोद्धृतिः ।
स्थातव्यमीश क्व कथं न भाषितं
कथं व्रजेयं सदनं गुरोश्च वः ।। २३

सर्वत्र पूता त्वयि जीवतीशितः
मदास्यमप्यद्य न कोऽपि पश्यति ।
सव्रीडनर्मोक्तिसुतल्पहावयुक्
ताम्बूललेपादि कथं न ते हृदि ।। २४

सुखं स्वपोरूत्कुचभारभङ्ग
भीभीतमध्यात्मसुतल्प ईश ।
किं ते शिलाढ्ये शयनं कुपृष्ठे
सुप्तः पृथङ्नर्तुमृतेऽद्य किं तत् ।। २५

नक्रोऽप्सु यद्वत्तृषितं यथा द्रुः
श्रान्तं यथा गां तृणगां च हिंस्रः ।
प्रासाद ईशोक्षकमुन्निहन्ति
जातं तथा मे गुरुदर्शनाप्तेः ।। २६

தூளியிலிட்டு மெள்ளத் தூக்கிச் செல்லவைத்து அவள் அவனைத் தொடர்ந்து கால் நடையாகச் சென்றாள். கைகளால் கணவனைத் தொட்டுக் கொண்டே பூமியை அழுத்தி நடப்பவளாக, மார்பும், கழுத்தும் நோக மெள்ள மெள்ள கந்தர்வபுரம் நெருங்கியதும் நோயுற்ற கணவன் இறந்தான். தானும் கூட மரணத்தை நெருங்கினவளை மற்றவர் தடுக்க முகம் வாடிய அவள் சொன்னாள். நாதரே ! மாலை நெருங்குகிறது. மாலை வேளையில் செய்ய வேண்டிய கடன்களைச் செய்வீர். அந்தணரில் சிறந்தவரே ! எழுந்திருப்பீர் என்று புலம்பினாள். ஏன் பேசாதிருக்கிறீர் ? உமது அன்புக்கட்டளை எதனையேனும் மீறிவிட்டேனோ ! உயிரும் உள்ளமும் வெளியேறிவிட்டனவே ! அவற்றைத் திருப்பி உட்கொண்டு உயிர் வாழ்வீர். உயிர் பெறாவிடில் பெற்றோரையும் மனைவியையும் கொன்ற பாபம் உம்மைத் தொடரும். மணந்த மனைவியைத் தவிக்க விட்டுப் பிள்ளைப் பேறு மின்றி கடன் பட்டுள்ளீர். நான் எங்கே செல்வேன்? நீரோ பேசாதிருக்கிறீர். ராக்ஷஸி போல் உம் பெற்றோரிடம் எப்படிச் செல்வேன் ? நீர் உயிருடனிருந்த போது நான் தூயவள். இன்று நான் அமங்களமானவள். என் முகத்தை எவரும் காணவிரும்பமாட்டார். கட்டிலில் மெத்தையில் என்னுடன் படுத்திருந்தவர் இன்று தரையில் தனித்துத் தூங்குகிறீர். நீர் குடிக்கவந்தவனை முதலை போல், தன் அடியில் களைத்து வந்தவனை மரம் போல். புல் மேய்கிற பசுவைக் கொலைகாரன் போல் குரு தரிசனத்திற்காக வந்த உம்மை நடு வழியிலேயே மாடியிலிருந்து கீழே தள்ளியது போல் யமன் கொன்று விட்டான். (26)

जयेश्वरानन्त कथं त्वया कृतं
भिया त्वयात्रापहृतोऽस्ति किं पतिः ।
रुक्शान्तिशक्तिर्यदि ते न गम्यता
मिति त्वयोक्त कतमोऽर्दितुं क्षमः ।।२७

त्वया कृतं साधु यशो दिवं ते वहामि भर्त्रा सह गौरिमातः ।
केता ह्यवैधव्यकदानशक्तिर्व्रतेश्वरीशे न कथं स्मृतिर्मे ॥ २८

माङ्गल्यतन्तुंच निशां च कुङ्कुमं हर्तुं महांश्चोर इहागतः कुतः ।
सौभाग्यनौर्मे भवसिन्धुसंस्थिता सा कालमीनेन कथं नु चर्विता ॥ २९

*ஈசனுகிய குருவை நம்பி வந்தேன். ஈச ! நீர் ஏன் இப்படிச் செய்தீர். நோயைத் தீர்க்க முடியாதென்ற பயத்தில் என் கணவனைப் பறித்தீரோ ! என்னுல் நோய் தீர்க்க இயலாதென்று கூறி எங்களைத் திருப்பி அனுப்பியிருந்தால் உம்மைக் கேட்பவர் யார்? உம் புகழை என் கணவருடன் வானுலகம் கொண்டு செல்வேன். தாயே கௌரி! உன்னை வழிபடுபவருக்கு விதவை நிலை வராதிருக்கிற அருள் சக்தி எங்கு சென்றது? வ்ரதேச்வரி ! என் நினைவு உனக்கு வரவில்லையா ? என் தாலியையும், மஞ்சளையும், குங்குமத்தையும் காலவடிவில் வந்த மீன் விழுங்கிவிட்டது. (29)*

एवं रुदित्वोरुकुचत्रुटत्पटा संस्मृत्य संस्मृत्य तदीयचेष्टितम् ।
प्रत्यङ्गमालम्ब्य रुरोद मोहतः साध्वी तदा कश्चन साधुराययौ ॥ ३०

रुद्राक्षभूषो भसिताक्तदेहः शूली बभाषे जटिलः स साध्वीम् ।
बाले शुचा नैति मृतः कुतस्त्वं मुधोच्चकै रोदिषि तिष्ठ तूष्णीम् ॥ ३१

मृत्युर्न केषां विषयोऽपि देवान्ग्रसत्यसौ चापरिहार्य एव ।
द्वौ व्यैक्यमब्धौ च यथेन्धनैक्यं भवप्रवाहेऽपि तथा धवादिः ॥ ३२

सम्बन्ध एषां नियतो मतश्चेत्
प्राग्जन्मनि त्वं वद कस्य का वा ।
सम्बन्धिनः कस्य न केऽद्वयत्वात्
जीवश्चिदंशोऽखिलगोऽव्ययोऽजः ॥ ३३

पञ्चात्मकेऽस्मिन्खलु सङ्गतेऽत्र भर्त्रादिबुद्धिर्न तु तत्त्वतोऽस्य ।
काष्ठाग्निवत्तं तु पुमादिलिङ्ग-हीनं धवादिं प्रकृतिस्थमाहुः ॥ ३४

இவ்வாறு அழுது புரண்டு தவிக்கிற பெண்ணை நோக்கி ஒரு ஸாது வந்தார். ருத்ராக்ஷமாலை, உடல் முழுதும் விபூதிப் பூச்சு, சடையுடன் சூலமேந்தி நிற்கிற அவர் சொன்னார் – சிறுமியே ! இறந்தவன் வரமாட்டான். வீணே உரக்கக் கதறுகிறாய். யமன் எவருக்கும் புலப்படாதவன். தேவர்களையும், அவன் விழுங்குவான். இவனைத் தவிர்க்க இயலாது. மரத்தில் பறவைகள் கூடுவதுபோல், கடலில் மரக் கட்டைகள் கூடுவது போல், ஸம்ஸார ப்ரவாஹத்தில் கணவன், மனைவிச் சேர்க்கை. இந்தத் தொடர்பு நிலைத்ததல்ல. நிலைத்ததாயின் முன் பிறவியில் நீ யாருக்கு மனைவியாயிருந்தாய்? சொல். ஜீவன் ஒருவனே, பேரறிவானவன். எல்லா வற்றிலும் உள்ளவன். பிறக்காதவன், இறக்காதவன். ஐந்து பூதங்களாலான உடலில் கணவன் என்ற எண்ணம் உண்மையானதல்ல. கட்டையிலுள்ள நெருப்பு கட்டையல்ல. அது போன்று இந்த உடலிலுள்ள ஜீவன் உடலல்ல. நெருப்பிற்கு உருவமில்லாதது போல் ஜீவனுக்கும் எந்த அடையாளமும் பெயரும் கிடையாது. கட்டையிலுள்ள நெருப்பைக் கட்டை என்பது போல், உடலில் நுழைந்துள்ள ஜீவனை உடலுடன் தொடர்பு கொள்ளச் செய்து கணவன் முதலிய பெயரால் அழைக்கின்றனர். அவன் ஆணோ, பெண்ணோ அல்ல. (34)

**प्राप्तः प्रकृत्युत्थगुणानुगोऽसौ शरीरतादात्म्यमतोऽस्य वृद्धा।**
**द्वन्द्वप्रतीतिर्न तु सामलेऽजे द्वन्द्वोत्थकर्माश्रयिणो भवोऽस्ति ॥ ३५**

**भवोद्भवः कर्मत एव कर्म भवोद्भवं तूभयमज्ञभावात्।**
**धीरेण येनोभयमेव कृत्तं तत्त्वासिना तस्य न वै भ्रमोऽयम् ॥ ३६**

உடல் முதலியவையாகத் தோன்றுகிற ப்ரக்ருதி முக்குணங்கள் கொண்டது. ஆத்மா குணமேதும் இல்லாதது. ஆனால் அஜ்ஞானத்தால் ஆத்மா ப்ரக்ருதியின் முக்குணங்களை ஏற்று உடலுடன் ஒன்றி உடலே தானாகி இன்ப துன்பங்களுக்கு ஆட்படுகிறது. ஆத்மாவிடம் உண்மையில் குணக் கலப்பில்லை. குணக் கலப்பால் தேஹமே நான் என்ற எண்ணம் வந்தால் அது ஸம்ஸார பந்தமாகிறது. தேஹமே நான் என்ற எண்ணம் தானே செயல்படுவதாக ஆக்குகிறது. கர்தா என்ற அபிமானம் பிறப்

*பிறப்பிற்கு (ஸம்ஸாரத் தொடர்பிற்கு)க் காரணமாகிறது. வினையால் பிறப்பு. பிறப்பதால் வினை என்ற இரண்டும் அறியாமையின் விளைவு. இவ்விரண்டையும் தீரன் தத்துவ விசாரம் என்ற கத்தியால் வெட்டி ஆத்மாவைக் கட்டிலிருந்து விடுவிக்கிறான். (36)*

**अस्यास्त्यविद्यैव घटादिवद्ध्योः**
**उपाधिरात्मत्वमुपाध्यपाये।**
**मालाहिवत्कल्पित एति नाशं**
**भ्रमोऽस्य सद्दर्शिततत्त्वदीपात्॥ ३७**

**तावद्भ्रमान्तौ नियतौ द्युरात्रिवत्**
**जन्तोरतस्तत्त्वविचारवान्भवेत्।**
**त्वग्रक्तमांसास्थिमयात्मशोकतः**
**स्वार्थः कुतः साध्वि समुद्भवेद्वद॥ ३८**

**तस्माच्छुचं मुञ्च सति प्रसाधय**
**स्वार्थं यथा येन भवं तरिष्यसि।**
**तत्काल एषैव यदा प्रमादतो**
**याता नृयोनिस्तु पुनर्न तत्कथा॥ ३९**

எங்கும் நீக்கமறப் பரவி நிற்கும் ஆகாசம் குடத்தினுள் ஆகாசம் என அளவீட்டிற்கு உட்படுகிறது. அறியாமையின் விளைவு இது. அறியாமை நீங்க குடத்தாகாசம் பராகாசமாகிவிடுகிறது. ஆத்மாவும் உடலால் கட்டுப்படுவதும் உடல் எனும் உபாதி நீங்க பரமாத்மா ஆவதும் அவ்வாறே. பாம்பும் பழுதும் போல் கற்பனையால் ஏற்பட்ட ப்ரமை. குருவின் வழி காட்டலில் இது விலகும். உண்மை உணர்வு ஏற்படும் வரை இரவும், பகலும் போல் பிறப்புமிறப்பும் இடையறாது தொடரும். தோலும், ரத்தமும் தசையும் எலும்புமான உடல் அழியும் தன்மையை இயல்பாகக் கொண்டது. அதனால் ஆத்மாவிற்கு யாதொரு லாபமுமில்லை. அதனால் சோகத்தை விடுவாய். நீ துன்பத்தைக்

*கடப்பதற்கு ஆவனவற்றைச் செய். இதுதான் அதற்கான நேரம். மெத்தனத்தால் மனிதப் பிறவி வீணே கழிந்தது. மறுபடி அதைப் பற்றிய பேச்சு வேண்டாம் என்றார். (39)*

साध्व्युवाच—

प्राप्ता धवानामयहेतुनाधुना
दैवात्पथेऽस्मिन्दयितो मृतः पितः ।
सम्बन्धिनोऽप्यन्तरितास्त्वमेव मे
सर्वोऽसि मामुद्धर दुःखसागरात् ।। ४०

साधुरुवाच—

भर्तैव तारकं साध्व्या नोपाया बहवो नृवत् ।
शृण्वगस्त्यसतीस्तोत्र-प्रसङ्गोक्तं वृषं सुरैः ।। ४१

*அந்த பதிவ்ரதை விண்ணப்பித்தாள் - என் கணவரின் நோயை நீக்க இங்கே வந்தேன். தந்தையே ! விதியால் வழியில் அவர் இறந்தார். உறவினரும் தூரத்திலுள்ளனர். எனக்கு நீரே அனைத்துமானவர். துயரக் கடலிலிருந்து என்னைக் கரை ஏற்றுவீர் என. அந்த ஸாது கூறினார். ஆணுக்குப் போல் பெண்ணிற்குப் பல உபாயங்கள் இல்லை. கற்பு ஒன்றே கரையேற உதவும். அகஸ்த்யரின் மனைவி லோபாமுத்திரையின் துதியில் தேவர்கள் கூறிய அறவழியைக் கூறுகிறேன். (41)*

विन्ध्योत्कर्षभियैत्य तद्गुरुमगस्त्यं तद्वधूं निर्जरैः
साकं देवगुरुर्जगौ सति रमा सावित्र्युमाऽरुन्धती ।
इत्याद्या अपि साध्व्य उत्तमतमा तासां त्वमेवास्यहो
छायेवानिशमीशसेवनपरा त्वत्पिघ्नमेतज्जगत् ।। ४२

भक्त्या छायेव याऽश्रान्तं स्वभर्तृपरिचारिणी ।
पतिरेव व्रतं यस्या अखण्डं सा पतिव्रता ।। ४३

पादाम्बु तीर्थमुच्छिष्टं प्रसादो देवतार्चनम् ।
तत्सेवा भूषणं तोषो धर्मोऽनुज्ञानुपालनम् ।। ४४

वशानुवर्तनं देहयात्रा श्वश्र्वादिगौरवम्।
लोकयात्रेश्वरो भर्ता करणं पोष्यपोषणम्॥ ४५

कार्यं नाज्ञां विना किञ्चिद् दूरात्स्थेयं स्थिते प्रिये।
सुप्तोत्थितात्प्रागुत्थाय सेव्योऽश्रान्तं पतिर्मुदा॥ ४६

तस्मै दत्वेष्टमाप्लुत्य गृहसंमार्जिनादिकम्।
दत्वेशायेष्टसंभारा देयाः स्वादु च भोजनम्॥ ४७

क्रुद्धश्चेत्प्रार्थनीयो न गन्तव्यं परसद्मनि।
नाज्ञां विना गुरोर्गेहे न वक्तव्यं सदेतरैः॥ ४८

मन्दं श्वश्र्वादिसामीप्ये वक्तव्यं सन्धयेशितुः।
इष्टं देहीति नो वाच्यं वक्तव्यं परवक्त्रतः॥ ४९

स्वीकार्यं वस्त्रभूषादि भर्त्रा दत्तं यदृच्छया।
न निन्द्यो दुर्भगो दीनो दुःशीलोऽपि शिवोपमः॥ ५०

न कार्यं स्वैरिणीसख्यं स्वानां पार्थक्यमप्युत।
धार्याः सौभाग्योपचारा न भूषाः प्रोषिते प्रिये॥ ५१

दर्शितव्यं मुखं नर्तौ श्रोतव्यं नागमादिकम्।
स्नात्वा चतुर्थेऽह्नि भर्ता प्रेक्ष्यो वाऽसम्भवे रविः॥ ५२

प्रोषितेऽर्च्याज्ञया स्थेयं प्रत्युद्गन्तव्यमागते।
सव्रीडहावरत्यङ्घ्रिसेवाद्यैस्तोषणीय इत्॥ ५३

सुप्तेऽस्मिन्छयनं कार्यं नोच्चार्यं पतिनाम च।
भोक्तुं नान्यत्र गन्तव्यं याच्ञा कार्या न कुत्रचित्॥ ५४

वैषम्येऽपि सुखं कल्प्यं कल्प्येशे दुःखिते न मुत्।
त्याज्यमुच्चासनं लीला धवाद्यग्रे हसस्तथा॥ ५५

விந்திய மலே உயர்ந்து கொண்டிருப்பதில் பயந்த தேவ குரு ப்ருஹஸ்பதி தேவர்களுடன் அகஸ்த்யரை அணுகிஞர். லோபாமுத்ரையிடம் அவர் கூறிஞர். ''லக்ஷ்மி, ஸரஸ்வதி, உமா, அருந்ததி முதலியவர்களேவிட நீயே சிறந்த கற்புக்கரசி. கணவரின் திருவடி கழுவிய நீரே உயர்ந்த தீர்த்தம். அவர் உண்ட மீதியே ப்ரஸாதம், அவரது பணிவிடையே தேவ பூஜை. அவரது அனுமதிப்படி நடப்பதே ஸந்தோஷம் என்பது கற்பின் அடையாளம். பதி நின்ருல் நிற்பது, அவர் தூங்கி விழித்தெழுவதற்கு முன் எழுதல், ஓய்வின்றி அவருக்குப் பணிவிடை, வீட்டைத் தூய்மைப் படுத்தி நீராடி கணவர் விரும்பியதைச் சேமித்து அவரிடம் அளிப்பது, நல்லுணவு வழங்குவது. அவர் கோபித்தால் சாந்தப்படுத்துவது. பிறர் வீடு செல்லாதிருத்தல், வீட்டிலும் அவரது அனுமதியுடன் பிறருடன் பழகுதல், மாமியார் முதலானவரிடம் நேரிடையாகத் தன் விருப்பத்தைத் தெரிவிக்காமல் பிறர் மூலம் தெரிவிப்பது, கணவர் தற்செயலாக அளித்த ஆடையணிகளேப் பூணுதல். பாக்யமற்று நொந்து வாழ்பவஞயினும் கெட்ட நடைமுறை கொண்டவஞயினும் நிந்திக்காதிருத்தல், தன் விருப்பப்படி நடக்கும் பெண்களுடன் பழகாதிருத்தல், தன் உறவினருடன் வேற்றுமனிதர் போல் பழகாதிருத்தல், தினமும் மங்களப் பொருளேத் தரித்தல், கணவர் வெளியூர் சென்றபோது நகைகளே அணியாதிருத்தல், ருது காலத்தில் நீராடியதும் கணவனேயோ ஸூர்யனேயோ பார்த்தல், கணவர் வெளியூர் சென்றிருக்கும்போது வீட்டுப் பெரியோர்களின் ஆணேப்படி நடத்தல், கணவன் வந்ததும் எதிர் கொள்ளுதல், வெட்கமும் உள்ளர்த்தமும் கலந்த பேச்சால் அவரை மகிழ்வித்தல், அவன் தூங்கிய பின் தூங்குதல், அவனது பெயரைக் கூருதிருத்தல், பிறர் வீட்டில் உண்பதும் பிறரிடம் யாசிப்பதும் தவிர்த்தல், கருத்து வேறுபாட்டிஞல் கோபமடையக் கூடாது. இவர் துயருற்ற போது மகிழக் கூடாது. பரிகாசமோ உயராஸனத்தில் அமர்வதோ கூடாது. (55)

**प्रतिवादाच्छुनी भर्तुरुलूकी गुरुवर्जनात् ।**
**पतिं विना स्वादुभुक्त्या वराहोलूकयोनिगा ।। ५६**

मूका रोषोक्त्या व्याघ्री स्यात् कृतताडनभाषिणी ।
सपत्नीवैरतः स्त्री स्याद् दुर्भगा जारगा कृमिः ॥ ५७

पत्यौ मृतेऽनुगन्तव्यं स्थेयं वा विधवावृषे ।
शवाभावे गर्भिणीत्वेऽल्पेऽर्भे वैधव्यपालनम् ॥ ५८

शिरसो वपनं कार्यं भुवि शय्या सकृद्भुजिः ।
वर्ज्यास्ताम्बूलगन्धादि सुभोगा मङ्गलाप्लुतिः ॥ ५९

त्याज्याः सौभाग्योपचारा धार्यं गौरांशुकं सदा ।
राधमाघोर्जेषु कार्यं स्नानदानव्रतादिकम् ॥ ६०

शक्तौ चान्द्रायणं कार्यं भोज्यं वाज्यफलादिकम् ।
यत्प्रियं सति पत्यौ तद्देयं विप्राय भक्तितः ॥ ६१

*கணவனை எதிர்த்துப் பேசுபவள் அடுத்த பிறவியில் பெண் நாயாவாள். கணவனின் பெற்றோரைத் தடுப்பதால் கோட்டானாக, கணவனில்லாத போது இனிய உணவை உண்பவள் பன்றியாக, கோபத்தால் சுடு சொல் சொல்பவள் ஊமையாக, அடித்துத் துன்புறுத்திப் பேசுபவள் பெண் புலியாக, சக்களத்தியிடம் விரோதம் பாராட்டுபவள் பாக்யமிழந்தவளாக, ஜாரனுடன் கூடுபவள் புழுவாகப் பிறப்பாள். கணவன் இறந்தால் அவனுடன் உடன் கட்டை ஏறலாம். அல்லது விதவாமுறையில் கேசத்தை நீக்கி, பூமியில் படுத்து, ஒரு வேளை உண்டு, தாம்பூலம் இன்பமிக்க வாழ்க்கை, மங்கள நீராட்டம் முதலியவற்றைத் தவிர்த்து வெண்ணிற ஆடை உடுத்தி, வைகாசி மாசி கார்த்திகை மாதங்களில் புண்ய நதிகளில் நீராடல், தானம், வ்ரதம் முதலியவற்றைச் செய்தல், சாந்த்ராயண வ்ரதம், பழம் மட்டும் சாப்பிடுதல் (பலாஹாரம்) கணவனிருக்கும் போது அவர் ப்ரியத்துடன் ஏற்றதை அந்தணருக்குத் தானம் செய்தல் நல்லது. (61)*

मासव्रतं च कल्पोक्तं कार्यं यद्यत्तु वर्जितम्
देयं विप्राय चोष्णाम्बु तोषणीयस्तु तैर्थिकः ॥ ६२

पुत्रे तदाज्ञया स्थेयं सम्पूज्यः पतिवद्धरिः ।
गुरुगोऽतिथिसद्विप्राः पूज्यास्त्याज्यं कुभोजनम् ।। ६३

हरिलीलारतिः कार्याऽपुत्रया पितृतर्पणम् ।
गोप्यं शीलं स्वकैः सार्धं तद्वैगुण्यादधोगतिः ।। ६४

एतद्धर्माश्रयात्साध्वी दुर्गतिस्थमपि प्रियम् ।
प्रसह्योद्धृत्य चिल्लीव सर्पं स्वर्विशति ध्रुवम् ।। ६५

लोपामुद्रे त्वत्ततोऽसौ सतीधर्मोऽत्र तारकः ।
एवं जीवोक्तधर्मस्ते मयोक्तः स्वेच्छयाचर ।। ६६

भेवार्कं पतिमन्वेहि रोचतेऽनुगमो यदि ।
स्वर्याति गौरवाद्येन प्रोद्धृत्येशं यमादपि ।। ६७

प्रत्यङ्घ्य्रश्वक्रतुफलं कोट्यब्दं प्रतिरोमतः ।
स्वर्वासः सार्धत्रिकोटि-रोमह्रोमात्प्रियान्वितः ।। ६८

रूपलावण्यसंपन्नाः स्त्रियःसन्ति गृहे गृहे ।
ताभिः किं कार्यमेकैव साध्वी त्रिकुलपावनी ।। ६९

क्ष्मा वातोऽर्कोऽग्निर्बिभेति स्वत्रासोऽस्या भवेदिति ।
तिष्ठन्ति प्रणता देवाः स्वपदच्युतिशङ्कया ।। ७०

साध्व्या इयान्प्रभावोऽस्ति धन्यैषा पितृतारका ।
धिग्दुःशीलामधःशेते या चिरं त्रिकुलैः समम् ।। ७१

साध्व्युवाच—

वैधव्यपालनं कष्टं तारुण्याद्यत्र घातकम् ।
प्रीतिर्धवानुगमने नूनं मे वर्धते गुरो ।। ७२

*கல்பத்தில் கூறப்பட்டுள்ள மாஸ வ்ரதம் எடுத்துக் கொண்டு, அக்காலத்தில் வ்ரதத்திற்காகத் தான் தவிர்த்த பொருளை*

அந்தணருக்குத் தானம் செய்தல், தீர்த்தத்தில் வசிப்பவருக்கு வென்னீர் தயாரித்துத் தருதல். புத்திரனிருந்தால் அவனது ஆணைப்படி இருப்பது, குருவை ஹரி போன்று நினைத்து வழிபடுதல், குரு, பசுமாடு, அதிதி, நல்ல அந்தணர்கள் இவர்களை வழிபடுவது, தவறான உணவைத் தவிர்த்தல், ஹரியான குருவின் லீலையைக் கேட்பதில் ஆர்வம். பிள்ளையில்லாவிடில் தன் கணவருக்கும் அவரது முன்னோர்களுக்கும் தன் பெற்றோருக்கும் அவர்களது முன்னோர்களுக்கும் தர்பணம் செய்வது, தன் ஒழுக்கத்தைக் காப்பது. ஒழுக்கத்தவறால் தனக்கும் தன் குலத்திற்கும் தாழ்வு என்ற பயம், இவ்வாறு விதவை நடந்து கொள்வதால் தன் பதியுடன் தானும் நற்கதி பெறலாம். இதுதான் லோபாமுத்ரையிடம் தேவர்கள் சொன்ன விதவா தர்மம். உடன் கட்டை ஏற நீ விரும்பினால் அவ்வாறே செய். ஸூர்யனோடு அதன் ஒளியும் மறைவது போன்றது இது. யம வாதனையிலிருந்து கணவரையும் மீட்கலாம். அவ்வாறு உடன் கட்டை ஏறிய பெண்ணின் உடல் எரியும் போது எரிகிற ஒவ்வொரு ரோமமும் அச்வமேத பலனைத் தரும். இந்தப் பெண் தன் குலத்தையும், கணவனின் தாய் தந்தையர் குலத்தையும் காப்பவள். பஞ்ச பூதங்களும் இவளிடம் பயப்படும். தேவர்கள் தம் பதவியிழக்க நேருமோ என்ற பயத்தில் வணங்கி நிற்பர்'' ஸாதுவின் இந்த உபதேசத்தைக் கேட்ட அந்தப் பெண் விதவையாக வாழ்வதிலுள்ள கஷ்டத்தை உணர்ந்து கணவனுடன் உடன் கட்டை ஏறுவதையே விரும்பினாள். (72)

साधुरुवाच—

साधु साध्वि तदिष्टं ते मा शुचो दैवमुन्नतम् ।
आयुष्मद्भीष्मपौलस्त्यमुखाः कालवशं गताः ॥ ७३

कालोऽजय्योऽमरैश्चापि दुर्धरः सद्गुरुं विना ।
गुरुदर्शनकामाप्ता दूरात् तत् त्वं समाचर ॥ ७४

स्नात्वा पीताम्बरं धृत्वा प्रायश्चित्तपुरःसरम् ।
सौभाग्यवायनान्यङ्ग सपत्नीकद्विजेभ्य इत् ॥ ७५

दत्वा श्रुत्योर्गले चेमान् बध्वाक्षान्भस्म मस्तके।
लिस्वाङ्गं गुरुपादाद्भिः प्रोक्ष्येशमनुयाह्ययि ।। ७६

इत्युक्त्वा भस्मरुद्राक्षान् दत्वागात्सोऽपि सा द्विजान्।
आहूयादात्सुसौभाग्य-दानानि बहुशो मुदा ।। ७७

प्राहानुगान्यात गृहमुमेशौ पितरौ मम।
यास्ये तत्रात्र हर्षात्स्वरिति वाच्यं गुरून्प्रति ।। ७८

इत्युक्त्वा नीयमानस्य पत्युरग्निकराग्रतः ।
गच्छन्ती मन्थरोमेव रेजे मुद्रूपिणी सती ।। ७९

भर्तृसौख्यानभिज्ञेयं षोडशाब्दातिसुन्दरी।
कुलोद्धर्त्री सुधन्येति स्तूयमाना जनैर्ययौ ।। ८०

श्मशानमेत्य संस्कृत्य कुण्डेऽग्निं वायनादिभिः ।
सुवासिनीस्तोषयित्वा सस्मार गुरुभाषितम्।। ८१

लिस्वाङ्गे भस्म बध्वाऽक्षान् पत्युर्विप्राज्ञया गुरुम्।
द्रष्टुकामा ययौ साध्वी संगमं तं स्तुवन्त्यजम्।। ८२

दाता सर्वेश्वरस्त्वं शरणमपि सतां त्र्यात्मको विश्वसर्ग-
स्थित्यन्तानां निदानं ततबिरुदचयः श्रीहरिस्त्वं दयाब्धिः ।
मत्तुल्यास्त्वत्कृपांशात्सुपतिसुतसुखाः सन्ति नार्योऽज यास्ये
स्वर्भूत्वा पूर्णकामा पतिसुतमुदिता कीर्तिमादाय तेऽद्य ।। ८३

मृतो जीवितो रुग्ण आरोग्यमाप्तो
गतः शर्म भीतोऽपि दीनोऽर्थयुक्तः ।
गतः प्राज्ञतामज्ञ ईश प्रभावात्
तवाहं धवाढ्याद्य सायुज्यमेष्ये ।। ८४

एवं स्तुवन्ती पथि साञ्जनाश्रु
लीढस्तनस्वर्णघटा हठात्स्वाम् ।
उद्धर्तुकामापि समं धवेन
जवेन साऽऽगत्य हरिं ननाम ।। ८५

''வரை இல்லாத ஆயுள்பெற்ற பீஷ்மரும் ராவணனும் இறந்தனர். அதனுல் கணவன் இறந்ததைப் பற்றி வருந்தாதே. நீராடி மஞ்சளாடை உடுத்தி ப்ராயச்சித்தம் செய்து பத்தினியுடன் கூடிய அந்தணருக்குத் தானம் வழங்கி காதுகளிலும், கழுத்திலும் ருத்ராக்ஷமணிந்து நெற்றியில் விபூதி இட்டு குருவின் திருவடி நீரை உடலில் பூசி, கணவரைப் பின் தொடர்வாய் என ஸாது கூறி விபூதியையும் ருத்ராக்ஷத்தையும் அளித்துச் சென்ருர். இவளும் அவ்வாறு செய்து உடன் கட்டை ஏறத்தயாராஞள். கணவருடன் இன்பம் அனுபவிக்காமலேயே பதினுறு வயதுள்ள சிறு பெண் தன் குலத்தை மேனிலேக்குக் கொணர்ந்ததை மக்கள் பாராட்டினர். அங்கிருந்த நல்லவர்களின் ஆணேப்படி ஸ்ரீ குருவைத் தேடி கூடல் சென்று அவரை வணங்கிஞள்.

ஈசனே ! உலகைப் படைத்துக் காத்து உலகின் புகலிடமாகிய நீர் கருணேக் கடல். உம் அருளால் பலர் நல்ல கணவனும், புதல்வர்களும் பெற்று வாழ்கின்றனர். கணவன் நோயுற்று இருந்தாலும் நோயற்றிருந்தாலும், ஏழையாஞலும், தனிகராஞலும் உயிருடனிருந்தாலும், இறந்தாலும் என் கணவருடனிருப்பதை விரும்பும்நான் உம்மை வணங்குகிறேன்'' என ஸ்ரீ குருவை வணங்கிஞள். (85)

आयान्तीं प्रणतां देवस्त्वं सौभाग्यवती भव ।
अष्टपुत्रा पुनश्चेति भगवान्प्रीत आह ताम् ।। ८६

तच्छ्रुत्वा चकिता लोकाः शशंसुः सर्वमादितः ।
प्रभुः प्राह न मे वाक्यं मोघं शवमिहानय ।। ८७

अत्रान्तरे द्विजा एत्य रौद्रयानर्चुर्गुरुं तदा ।
आनीतं शवमुद्वीक्ष्य सुधादृष्ट्या स्वसंनिधौ ।। ८८

स्थापयित्वा स तं रौद्रमन्त्रिताद्भिस्तनुं समाम्।
स्नापयामास सोऽकस्मात् सुप्तोत्थितवदुत्थितः ॥ ८९

तदा हर्षाश्रुपूर्णाक्षी लज्जितं विस्मितं पतिम्।
प्रेम्णा शशंस तत्सर्वमूचतुः प्राञ्जली उभौ ॥ ९०

आवां स्वो दुर्धियौ पापौ भवत्स्मृतिपराङ्मुखौ।
तथापि त्वं दयासिन्धो सच्चिदानन्द हंसि नो ॥ ९१

जगद्गुरो विश्वमूर्ते परात्मन्त्राहि विश्वप।
विश्वसाक्षिन्विश्वसंस्थ सर्वानन्दनिधे हरे ॥ ९२

कर्ताऽकर्ताऽन्यथाकर्ता त्वमेवासि पुमर्थदः।
आवाभ्यामपराद्धं तत् क्षामये त्वाद्य कार्त्स्न्यतः ॥ ९३

एवं तौ बहुशो नत्वा प्रणतीश्चक्रतुर्मुदा।
तच्चित्रं प्रेक्ष्य लोकोऽपि तुष्टाव परमेश्वरम् ॥ ९४

*ஸ்ரீ குரு "ஸௌபாக்யத்துடன் எட்டு புதல்வர்களைப் பெற்று வாழ்வாய்" என அருள் புரிந்தார். மக்கள் இதனைக் கேட்டுப் பயந்து நிகழ்ந்ததை அவரிடம் தெரிவித்தனர். ஸ்ரீ குருவோ என் ஆசி வீணாகாது எனக் கூறி சவத்தைக் கொணரச் செய்தார். தன் அமுதப் பார்வையால் பார்த்து ஸ்ரீ ருத்ர மந்த்ரம் ஜபித்த நீரால் அதனை நீராட்டினார். அவனும் உயிர் பெற்றுத் தூக்கத்திலிருந்து விழித்தவன் போல் எழுந்தான்.கண்ணீர் மல்கக் கணவனிடம் மனைவி நிகழ்ந்ததைத் தெரிவித்தாள். இருவரும் கைகூப்பி நின்று விண்ணப்பித்தனர். "ஈசனே ! அறிவு கெட்டுப் பாபியான நாங்கள் உம்மை நினைப்பதில் ஆர்வமின்றி வாழ்ந்தோம். கருணைக் கடலான நீர் அதனைப் பொறுத்தருள் செய்தீர். உலகின் குருவும் உலகமானவருமான நீர் எம்மைக் காப்பாற்றுவீர். செய்யுவும், செய்யாதிருக்கவும், மாறுபட்டுச் செய்யுவும் ஆற்றலுள்ள நீர் எமது பிழைகளைப் பொறுத்தருள்வீர் என்று கூறி வணங்கி நின்றனர். மக்கள் இந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்டு வியந்து ஈசனைத் துதித்தனர். (94).*

तत्रैको धूर्त आहेशं केऽस्ति ब्रह्मलिपिर्न वा।
नाल्पो मृत्युर्महानेष सास्ति चेज्जीवितः कुतः ।। ९५

श्रीगुरु रुवाच—

धात्रात्र लिखितं त्रिंशदायुरेष्यभवे शतम्।
याच्ञयैष्यं शतं त्वत्र गृहीत्वा व्यस्तमाचरम्।। ९६

तच्छ्रुत्वा मिलिता लोका उच्चैश्चक्रुर्जयध्वनिम्।
स्वर्वासिश्रोत्रविवर विश्रान्तिमघमर्षणम्।। ९७

दम्पती प्राह भगवानायुष्मन्तौ निरामयौ।
सुपुत्रधनकीर्त्याढ्यौ लोकवन्द्यौ भविष्यतः ।। ९८

श्रुत्वा गुरोर्गां प्रमुदान्वितावुभौ
स्नात्वा गुरोश्चक्रतुरर्चनं तदा।
अस्तं गतोऽर्कोऽप्यज आह्निकीं क्रियां
कृत्वा मठं सर्वजनैः सहाययौ।। ९९

*इति श्रीगुरुचरिते कर्मयोगे मृतसंजीवनं नाम तृतीयोऽध्यायः*
*आदितः षोडशोऽध्यायः*



அங்கிருந்தவர்களில் ஒரு கயவன் ஈசனிடம் "ஈசனே ! தலையில் ப்ரஹ்மலிபி உள்ளதா இல்லையா ? இந்த மரணம் பெரு நோயால் வந்தது. இவன் எப்படிப் பிழைத்தான்? எனக் குறும்பாகக் கேட்டான். குரு "ப்ரஹ்மா அவன் தலையில் இப்பிறவியில் முப்பது வயதையும், அடுத்த பிறவியில் நூறு வயதையும் எழுதினர். இவளது வேண்டுகோளால் அடுத்த பிறவியின் நூறு வயதை இப்பிறவிக்கு மாற்றினேன்" என்றார். ஈசனால் எதனையும் மாற்ற முடியும். மக்கள் வானுலகில் வசிப்பவரும் கேட்கும்படி ஜயகோஷம் செய்தனர். ஸ்ரீ குருவான

ஈசன் நீண்ட ஆயுளும், நல்ல ஸந்ததியும், செல்வமும், புகழும் பெற்று நல்வாழ்வு வாழ வாழ்த்தி ஸூர்யனின் மறைவையொட்டித் தன் அன்றாட மாலைக் கடன்களைச் செய்ய மக்களுடன் மடத்திற்கு வந்தார். (99)

## सप्तदशोऽध्यायः

सिद्ध उवाच—

अन्येद्युराह साध्वीशं पूर्वेद्युः कश्चनैत्य सन्।
तत्त्वज्ञानेन माश्वास्य भस्माक्षांश्चतुरो ददौ ।। १
प्राह दृष्ट्वा गुरुं तीर्थैः पतिं प्रोक्ष्यानुयाहि तम्।
इत्युक्त्वाऽगात्स कस्तीर्थरुद्राक्षमहिमा कियान्।। २

श्रीगुरुरुवाच—

रूपान्तरेण ते भावो मयैवाङ्ग परीक्षितः ।
धन्याऽसि सुभगे साध्वि तीर्थाक्षमहिमा त्वियान्।। ३

तन्माहात्म्यं कोऽत्र वक्ति भूषेशस्यामृतत्वदा।
नृणामेकादिवक्त्राक्षा गङ्गास्नानादिपुण्यदाः।। ४

वराः स्युर्धातुरत्नाढ्याः शिव एव सहस्रधृक्।
नाक्षैर्विना पुण्यलब्धिः पापनाशोऽक्षधारणात्।। ५

ईशनामाक्षभस्माढ्यो दुर्धरो मरुतामपि।
जपेऽक्षाः प्राज्यफलदा ना भस्माक्षैर्विना पशुः ।। ६

दन्ताभ्राब्ध्यर्कनृपभू-क्ष्मार्काष्टाशोन्मिताक्षतः ।
कण्ठकश्रुतिदोश्चूडा-दृक्करोरांसि भूषयेत्।। ७

**அத்தியாயம்—17**

ருத்ராக்ஷப் பெருமை— ஸித்தர் கூறுகிறார் :- மறுநாள் அந்தப்பெண் ஸ்ரீ குருவிடம் சென்று "நேற்று ஒரு ஸாது

தத்வஜ்ஞானத்தை உபதேசித்து ஆறுதல் கூறி விபூதியும், ருத்ராக்ஷமும் தந்தார். குருவிடம் சென்று சவத்திற்கு நீர் தெளிக்கச் செய்து கணவனுடன் நீ தீக்குளிப்பாய் என்று சொல்லிச் சென்றார். அவர் யார்? விபூதி-ருத்ராக்ஷப் பெருமை என்ன?'' என்று கேட்டதும் ஸ்ரீ குரு சொன்னார். ''நானே தான் வேறு வேஷமிட்டு உன்எண்ணத்தைச் சோதித்தேன். நீ பாக்யசாலி. ருத்ராக்ஷத்தின் பெருமை இது. அதன் பெருமையை எவரும் விளக்குவதில்லை. ஈசனின் அணி இது. முக்தி தருவது. ஒன்று முதல் பல முகங்கள் கொண்டது. கங்கையில் நீராடிய பலனைத் தரும். உலோகத்தில் ரத்னங்களுடன் கோர்த்து அணியலாம். தேவர்களுக்கும் கிட்டாதது. இவற்றால் ஜபம் செய்யும் போது நிறைய நன்மை நேரும். விபூதியும் ருத்ராக்ஷமும் தரிக்காதவன் பசு. கழுத்தில் 32, தலையில் 40, காதுகளில் 12,கைகளில் 16, சிகையில் 1, கண்களில் 2, கைகளில் 24, மார்பில் 108 ருத்ராக்ஷங்களைத் தரிக்க வேண்டும். (7).

काश्मीरे भद्रसेनस्य सुतस्तन्मन्त्रिणोऽप्युभौ ।
भूषां मत्वाऽश्मवत्स्वक्षान् बाल्येऽपि दधतुर्मुदा ।। ८

शाक्त्यो राजाग्रहात्प्राह तद्धेतुं शृणु भूपते ।
नन्दिग्रामे पुरा तन्वी वारमुख्येन्दुभा सती ।। ९

गजाश्वधनदाराढ्या धर्मज्ञा दानतत्परा ।
तन्नाट्यमण्डपे त्वेतौ साक्षौ मर्कटकुक्कुटौ ।। १०

शिवोऽस्या वैश्यरूपेण पातिव्रत्यं परीक्षितुम्।
धृत्वाऽऽप कङ्कणं लिङ्गं भास्वद्वेश्याऽब्रवीत्सखीम् ।। ११

परिपृच्छैनमर्घाच्चेद् रत्या वा दास्यति त्र्यहम् ।
साध्वीत्वेन वधूर्भूत्वा रमयाम्यस्मि पद्मिनी ।। १२

श्रुत्वोचे स तथा पृष्टं स्वैरिण्यां सत्यता कुतः।
युष्माकं कुलधर्मस्तु व्यभिचारो हि केवलम् ।। १३

वेश्योवाच—

न स्वैरिणीयं साध्व्येव लिङ्गं तत्र प्रमा खलु।
अहं ह्यहं सतीत्वेन भजे त्वां सर्वभावतः ॥ १४

वैश्य उवाच—

गृहाणेदं पुष्पवन्तौ साक्षिणावत्र मेऽसुवत्।
स्ववाक्यं दृढभक्त्यैव विचारय पुनः पुनः ॥ १५

इत्युक्त्वा तत्करे बध्वा कङ्कणं लिङ्गमर्पयत्।
साध्वीत्वेनापि सा भेजे लिङ्गं संस्थाप्य मण्डपे ॥ १६

सलिङ्गो मण्डपो दग्धोऽग्निनाऽकस्माद्रतिक्षणे।
सकीशकुक्कुटो वैश्यो जुहावाग्नौ तनुं तदा ॥ १७

वेश्याऽपि भर्तृनाशार्ता कुलाचारविरुद्धताम्।
मा भजेति निषिद्धाऽपि स्वैः सिद्धानुगमेऽभवत् ॥ १८

दत्वा दानानि नत्वाऽर्कं ध्यात्वेशं वह्निमाविशत्।
प्रादुर्भूतस्तदा त्र्यक्षः पञ्चास्यः प्राह पङ्क्तिदोः ॥ १९

*வேசியின் கற்பு :- காச்மீரத்தில் பத்ரஸேனனின் மகனும், அவனது இருமந்த்ரிகளும் ருத்ராக்ஷங்களை மாலைக்கான கல்லாக எண்ணி பால்யத்தில் தரித்தனர். அரசன் பராசரரிடம் இதைப் பற்றிக் கேட்டான். முன்பு நந்தி க்ராமத்தில் அழகிய வேசி, யானை குதிரை செல்வம் கொண்டவள். அவளது நடன மண்டபத்தில் ஒரு குரங்கும், கோழியும் ருத்ராக்ஷ மாலை பூண்டிருந்தன. சிவன் வைச்யர் வேஷத்தில் இவளது கற்பைச் சோதிக்க, கையில் வளையும், லிங்கமும் எடுத்துக் கொண்டு வந்தார். இவரைக் கண்ட வேசி தன் தோழியிடம் இந்த லிங்கத்திற்கும் வளைக்கும் விலை வேண்டுமா? என்னுடன் மூன்றுநாள் இன்பம் பெற்றால் போதுமா? நான் அந்த மூன்று நாட்கள் கற்புடன் இருப்பேன் என்று கேட்கச் சொன்னாள். வேசியிடம் வியபிசாரம் தான் எதிர்பார்க்க முடியும். ஸத்யத்தை எதிர்பார்க்க முடியுமா என வைசியன் கூற,*

வேசி நான் மூன்று நாட்கள் கற்புடனிருப்பேன். லிங்கத்தின் மீது ஸத்யம் கூறுகிறேன். ஸூர்யனும் சந்த்ரனும் இதற்கு ஸாக்ஷிகள் என்று உறுதி கூற வைச்யன் அவள் கையில் வளைகளை மாட்டி லிங்கத்தைத் தந்தான். லிங்கத்தை மண்டபத்தில் வைத்து விட்டு அவனுடன் மூன்று நாட்களைக் கழித்தாள். சிற்றின்பத்தில் ஈடுபட்டிருக்கும் போது அந்த லிங்கமும் கோழியும் குரங்குமிருந்த மண்டபம் பற்றி எரிந்து சாம்பலாகியது. வைச்யன் அந்த நெருப்பில் தீய்ந்து இறந்தான். கணவனாக மரித்தவனுடன் தானும் உடன் கட்டையில் ஏறிய வேசியை அவளது உறவினர்கள் தடுத்தும், தன்னிடமிருந்தது அனைத்தையும் தானமாக வழங்கி ஈசனைத் த்யானித்து அக்னியில் புகுந்தாள். உடன் அங்கு சிவன் தோன்றினார். (19).

मायामुद्भाव्य ते सर्वं मयेशेन परीक्षितम् ।
वारमुख्याऽपि साध्वी त्वं प्रीतोऽस्मि वरयेप्सितम् ।। २०

जैह्वचौपस्थ्यं सुखं क्वापि न काङ्क्षे मे स्वकैः समम् ।
सायुज्यं तेऽर्पयेत्यूचे सा शिवोऽपि तथाऽकरोत् ।। २१

तौ कीशकुक्कुटावेतौ पूर्वसंस्कारकारणात् ।
एतौ स्तोऽक्षप्रियौ शैवौ मताश्मसमभूषणौ ।। २२

तच्छ्रुत्वा भावि मे सूनोर्मुने शंसेति पृच्छते ।
राज्ञे तस्य मृतिर्नूनं सप्ताहादिति सोऽब्रवीत् ।। २३

मुहू राज्ञातिखिन्नेन प्रणतेनार्थितोऽब्रवीत् ।
पराशरऋषिर्मा भी राजन् रुद्रोऽस्ति तारकः ।। २४

स्रष्ट्रा सृष्टौ जगद्वृद्ध्यै धर्माधर्मौ तयोः पती ।
इन्द्रान्तकौ तौ स्वरधोनेतारौ धन्यपापिनाम् ।। २५

यमसारथयः काममुखा नानाघहेतवः ।
तत्सारथ्याद्यमो लोकान् पापान्क्षिपति दुर्गतौ ।। २६

बुद्धीन्द्रियमनःसंस्था अमी कामादयोऽबलाः ।
भीरून्निघ्नन्ति यमित गोहृद्धीनामगोचराः ।। २७

वेदान्स्रष्टाऽसृजत्तत्र दक्षास्योत्थयजुःश्रुतेः ।
महारुद्रोऽघहृल्लब्धो मुनिभिः प्रसृतस्ततः ।। २८

विप्रा यत्र पठन्त्येतं कामाद्याः सकला न तम् ।
देशं शेकुरपि द्रष्टुं याम्यं शून्यमभूत्पुरम् ।। २९

"மாயையால் எல்லாவற்றையும் அமைத்து உன்னைச் சோதித்தேன். நீ வேசியாயினும் நல்லவள். நீ விரும்பியதைக் கேள் எனச் சிவன் கூற "எனக்கு இந்தச் சிற்றின்பத்தில் நாட்டமில்லை. என்னைச் சார்ந்தவர்களுடன் உன்னிடம் ஸாயுஜ்யத்தை விரும்புகிறேன் என்றாள். சிவனும் அவ்வாறே அருள் புரிந்தார். அந்த குரங்கும், கோழியும் முன் பிறவி வாஸனையால் ருத்ராக்ஷத்தை விரும்பியதால் சிவகணத்தில் சேர்ந்தனர். அரசன் ருத்ராக்ஷம் தரித்த தன் மகனின் நிலை பற்றிக் கேட்கப்பராசரர் அவன் ஏழு நாட்களில் இறப்பான் என்றார். இதனைக் கேட்ட அரசன் மிகவும் வருந்தினான். பராசரரோ - "பயப்படாதே. சிவன் காப்பார். உலகம்வளரப் ப்ரஹ்மா தர்மத்தையும், அதர்மத்தையும் இவற்றின் காவலராக இந்த்ரனையும் யமனையும் படைத்தார். புண்யம் செய்பவனுக்கு ஸ்வர்கமும், பாபிக்கு நரகமும் செல்ல இவர்கள் அழைத்துச் செல்வர். யமனின் பணியாளர்கள் காமம் முதலான ஆறு கொடிய எண்ணங்கள். இவர்கள் மூலம் யமன் பாபிகளைத் தம் உலகிற்கு அழைத்து வருகிறான். அறிவிலும் மனத்திலும், புலன்களிலும் அமர்ந்த காமம் முதலியவை உள்ளத்து வலிவு குறைந்தவர்களை அழிக்கும். சித்தக் கட்டுப்பாடுள்ளவர்களிடம் இவற்றின் தாக்கம் பலிக்காது. ப்ரஹ்மா தன் தெற்கு முகத்தால் யஜுர்வேதத்தை வெளிப்படுத்தினார். அதிலுள்ள ருத்ர மந்த்ர தேவதையான சிவன் முனிவர்களுக்குத் துணை நின்றார். ருத்ரத்தைக் கேட்டவரிடம் காமம் முதலியவை உட்புகமுடியவில்லை. யமபுரம் சூன்யமானது. *(29)*

यमः शशंस तद्धात्रे स्वपन्तिष्ठन्व्रजन्कुधीः ।
मत्तोऽभक्तिर्जपति चेत्स पापी शाधि तं भृशम् ।। ३०

तद्भिन्नान्जापकान् रुग्णान्मा प्रेक्ष मृतिगानपि ।
श्रीविदारोग्यादिभाजस्त इत्याह यमं विधिः ।। ३१

तस्मान्मृत्युञ्जयस्त्राता मा भीः सद्ब्रह्मतः शिवे ।
अतिरुद्राभिषेकात्स भवेद्भूपायुतायुरित् ।। ३२

तच्छ्रुत्वा द्राक्समाहूय सद्विप्रान्नृप्यनुज्ञया ।
राजाऽनुष्ठानमारेभे श्रद्धाभक्त्या यथाविधि ।। ३३

पाशदण्डधराः प्राप्ताः सप्तमेऽह्नि यमानुगाः ।
गूढाङ्गा मूर्छितः पुत्रस्तदा तदुपरि द्विजैः ।। ३४

प्रक्षिप्तरौद्राम्बुतीर्थमन्त्रिताक्षतसम्भवैः ।
रौद्रैर्दूताः पराभूता जग्मुस्तेऽथोत्थितः सुतः ।। ३५

प्रीतो राजा तदा विप्रान् भोजयित्वाऽभ्यतोषयत् ।
सभां विरच्योपवेश्य स्वासने शात्त्यमाभजत् ।। ३६

रणद्वीणो हरिं गायन् तत्राप्तो नारदो नृपः ।
तं प्रत्युद्गम्य सम्पूज्य लोकोदन्तमपृच्छत ।। ३७

स प्राहात्र महामृत्युस् त्वत्पुत्रं हर्तुमागतः ।
शिवदूतैः सदूतः स पराभूतो यमं ययौ ।। ३८

यमोऽपि तैः सहैत्यैशान् दूतान्प्राहेश्वराज्ञया ।
नियतं कर्तुमुद्युक्ते मयि यूयं क विघ्नदाः ।। ३९

ऊचुस्तेऽदश्चित्रगुप्तं पृष्ट्वा स्वस्थो भवान्तक ।
स पट्टे द्वादशाब्देऽल्पं मृत्युं तीर्त्वाऽयुतायुरित् ।। ४०

भविष्यतीति सम्प्रेक्ष्य भ्रान्तः शैवान्क्षमापयत्।
दृष्टं मयेदं ते पुत्रस्त्रातः शाक्त्येन भूपते ।। ४१

इत्युक्त्वा नारदोऽगात्स्वराशीर्भिरभिनन्द्य तौ।
शाक्त्योऽप्यगात्स्वधामेयान् तीर्थाक्षमहिमा सति ।। ४२

*யமன் இதனைப் ப்ரஹ்மாவிடம் தெரிவித்தான். தூங்கிக் கொண்டும் நின்றும், நடந்தும் ஈசனிடம் பக்தியின்றி ருத்ரம் சொல்பவன் பாபி, அவனைக் கட்டுப்படுத்துவாய். பக்தியுள்ளவர்களை நோயுற்றிருந்தாலும் மரணத்தறு-வாயிலிருந்தாலும் பார்க்காதே. அவர்கள் எல்லா மேன்மைகளுக்கும் உரிமை பெற்றவர் என்று ப்ரஹ்மா கூறினார். ருத்ரானுவாகம் ஜபித்து அபிஷேகம் செய்ய மரணத்தை வெல்கிற ம்ருத்யுஜ்ஞயர் உன் புதல்வனைக் காப்பாற்றுவார் என்றார். உடன் அரசன் அவ்வாறு செய்தான். ஏழாவது நாளன்று யமபடர்கள் பாசமும், தண்டமும் ஏந்தி அரச குமாரனின் அருகில் வர, குமாரன் மயக்கமடைந்தான். உடன் ருத்ர மந்த்ரம் ஜபித்த நீரை அவன் மீது தெளிக்க, ருத்ர கணங்கள் மறைவிலிருந்தே அவனைக் காப்பாற்றினர். அரச குமாரன் உயிர் பெற்றெழுந்தான். அந்தணர்களை மகிழ்வித்த அரசன் பராசரரிடம் வந்தான். நாரதர் அங்கு வந்து உன் புதல்வனை அழைத்துச் செல்லவந்தவன் ருத்ர கணங்களால் விரட்டப் பெற்று யமனிடம் சென்று நிகழ்ந்ததைக் கூறினான். ஏன் இப்படி என்றறிய விரும்பிய யமன் சித்ரகுப்தனிடம் சென்றான். பன்னிரண்டாவது வயதில் நேரவிருக்கிற அகால மரணத்தை வென்று பத்தாயிரம் ஆண்டுகள் வாழ்வான் என்றிருப்பதை அவன் காட்டினான். யமன் பயந்து சிவ கணங்களிடம் மன்னிப்பு கேட்டான். பராசரரே இவனைக் காப்பாற்றினார் என்று உணர்ந்தான் என்று நாரதர் கூறியதும் அரசன் மகிழ்ந்தான். பராசரரும் நாரதரும் மறைந்தனர். இதுதான் ருத்ராக்ஷத்தின் பெருமை. (42)*

सावित्र्युवाच—

यत्त्वद्दृग्गोचरा साक्षाज्जाता धन्यतमा गुरो।
उपादिश मनुं मे ते पादाब्जस्मृतिहेतवे ।। ४३

श्रीगुरुरुवाच—

नोपदेश्यो मनुः स्त्रीणां पतिभक्तिस्तु तारका।
दत्तोऽप्यनुपयुक्तः स्याद्दातुर्हानिश्च शुक्रवत्।। ४४

शृणु साध्वि पुरा देवदैत्ययुद्धमभून्महत्।
काव्यो मन्त्रजपाद्वज्रिहतान्दैत्यानजीवयत्।। ४५

गत्वेन्द्रः शरणं शम्भुं तच्छशंस शिवेन तु।
आनयित्वा कविर्लीढः सोऽपि मूत्राद्बहिर्गतः ।। ४६

दैत्यानेत्य पुनः शुक्रस्तान्मृतानप्यजीवयत्।
त्रस्तस्तदेन्द्रो धीमन्नः पाहीति प्रार्थयद्गुरुम्।। ४७

स प्राह तन्मनौ व्याजाद्भ्रंशिते वो जयो ध्रुवः।
त्रिलोककण्टकोत्कर्षात् मन्त्रसारहृतिर्वरम्।। ४८

इत्युक्त्वा स कचं प्राह स्वसुतं गच्छ रे कविम्।
विद्यार्थित्वेन तं तुष्ट्वा मन्त्रसारं तिरस्कुरु।। ४९

*வேசி ஸாவித்ரி ஸ்ரீ குருவின் திருவடி நினைவை விட்டகலாதிருக்கும்படி ஒரு மந்த்ரம் உபதேசிக்கும்படி குருவிடம் கேட்டாள். ஸ்ரீ குரு சொன்னார். பெண்ணிற்குத் தனியே மந்த்ரம் உபதேசிக்கப் பெறுவதில்லை. பதிபக்தியே அவர்களுக்குத் தாரக மந்த்ரம். மந்த்ர உபதேசம் பெற்றாலும் பயன் தராது. கொடுப்பவனுக்குக் கேடு நேரும். முன்னர் தேவர்களுக்கும், அசுரர்களுக்குமிடையே போர் நிகழ்ந்தது. சுக்ரர் இந்த்ரனால் அழிக்கப் பெற்ற அசுரர்களை மந்த்ர ஜபத்தால் பிழைக்க வைத்தார். இந்த்ரன் தன் குரு ப்ரஹஸ்பதியிடம் காப்பாற்ற வேண்டினான். சுக்ரர் மந்த்ரம் ஜபிப்பதில் பிழைநேரும்படி செய்வதே சிறந்த உபாயம் எனக் கருதிய ப்ரஹஸ்பதி தன் புதல்வன் கசனிடம் சுக்ரரின் சிஷ்யனாகி அவரை மகிழ்வித்து அவரது மந்த்ரசக்தியை மறையச் செய்வாய் என்று கூறினார். (49)*

तं नत्वापि कचो गत्वा शुक्रं प्राहास्मि ते गुरो।
शिष्यो मां प्रणतं शाधि पक्षित्वं मा निधा मयि ॥ ५०

एवमुक्तवतस्तस्य रूपसौन्दर्यमोहिता।
शुक्रं प्रियात्मजोचेऽमुं शिष्यत्वेनोररीकुरु ॥ ५१

तच्छ्रुत्वोशनसा सोऽपि तद्वात्सल्यादुरीकृतः।
कचोऽपि सर्वभावेन शुक्रं गुरुमतोषयत् ॥ ५२

ज्ञात्वा तच्छाद्ध्यमसुराः समिदर्थं गतं वनम्।
तं जघ्नुर्देवयान्याह शुक्रं नाप्तः कुतः प्रियः ॥ ५३

शुक्रोऽपि तं हतं ज्ञात्वा ध्यानान्मन्त्रप्रभावतः।
जीवयित्वाऽऽनयद्गेहं कचं हृष्टाऽभवत्सुता ॥ ५४

मुहुर्दैत्या वने हत्वा हिंस्रेभ्यस्तत्पलं ददुः।
तमदृष्ट्वैव शोचन्तीं कन्यामाश्वास्य भार्गवः ॥ ५५

ज्ञात्वा तं भक्षितं हिंस्रैस् तत्कुक्षेर्मन्त्रशक्तितः।
कात्स्न्यान्निष्काश्य कृत्वैक्यं सजीवं पूर्ववद्व्यधात् ॥ ५६

पुनर्दैत्याः कचं हुत्वा तद्भस्म मधुयोजितम्।
ददुः शुक्राय प्रमादात् स पपौ दैत्यवत्सलः ॥ ५७

पुनः कन्याऽतिखिन्नाऽभूच्छुक्रो ज्ञात्वोदरस्थितम्।
दैत्यान्छशाप ब्रह्मघ्नान् कन्यामाह स नाप्यते ॥ ५८

दैत्यैः क्षिप्तः स मत्कुक्षौ तदानयनतो हि मे।
मृत्युर्भवेन्न को वेद दिव्यं मन्त्रं हि मां विना ॥ ५९

कन्योचे तात मे मन्त्रमुपादिश च जीवय।
तं त्वां यदेष्यति मृतिर्जीवयामि सुमन्त्रतः ॥ ६०

नोचेत्प्राणांस्त्यजामीति निर्विण्णाऽस्यै स मोहतः।
दत्वा मन्त्रं जपित्वा तं जीवयित्वा मृतिं ययौ ।। ६१

विदार्य जठरं प्राप्तं कचं दृष्ट्वा मृतं कविम्।
मन्त्रेण जीवयामास तदाऽतेजाऽभवन्मनुः ।। ६२

कृतकृत्यः कचो नत्वा गुरुं प्राह तदासुराः।
घ्नन्ति मां तद्व्हं यास्ये मदर्थे भवतोऽप्यकम्।। ६३

सोऽपि गच्छेत्यादिदेश कन्योचे मत्पतिर्भव।
मयैतदर्थमेव त्रिर्-जीवितोऽसि मृतोऽप्यहो ।। ६४

कच ऊचे गुरोः कन्या स्वसाऽम्बाऽस्वर्पणाच्च तत्।
नोद्वाह्याऽतस्त्यजास्वर्ग्यं विरुद्धाग्रहमम्ब भोः ।। ६५

सा विद्यां विस्मरेत्येनं शशापापि स तां नृपः।
त्वां वरिष्यति मौर्ख्यात्ते नश्येन्मन्त्रो गुरोरिति ।। ६६

मन्त्रोऽतेजास्तदैवाभूच्छुक्रो दीनत्वमापतत्।
स्त्रियै मन्त्रस्ततोऽदेयः कार्यं गुर्वाज्ञया व्रतम्।। ६७

ஸோமவார வ்ரதம் :- கசனும், சுக்ரரிடம் சென்று தன்னைச் சீடனாக ஏற்க வேண்டினான். தேவர்களைச் சார்ந்தவன் என்றநினைப்பால் மறுக்க வேண்டாம் எனக் கூறியவனை அவனது அழகில் மயங்கிய சுக்ரரின் புதல்வி தேவயானி சீடனாக ஏற்கத் தந்தையிடம் வேண்டினாள். சுக்ரர் ஏற்றார். கசனும்பணிவிடையால் சுக்ரரை மகிழ்வித்தான். இந்த வஞ்சகச் செயலையறிந்த அஸுரர்கள் கசன் ஸமித்து கொணரக் காட்டிற்குச் செல்லும் போது அவனைக் கொன்று விட்டனர். தேவயானி கசன் காட்டிலிருந்து திரும்பிவராததைச் சுக்ரரிடம் தெரிவிக்க அவர் த்யானத்தால் கசன் கொல்லப்பட்டதை அறிந்து மந்த்ரத்தால் பிழைக்கச் செய்தார். அசுரர்கள் மறுபடி அவனைக் கொன்று கொடிய விலங்குகளுக்கு உணவாக்கினர். சுக்ரர் மறுபடி விலங்குகளின் வயிற்றிலிருந்து

வெளிப்படுத்திக் காப்பாற்றினூர். மறுபடி கசனைக் கொன்று எரித்துச் சாம்பலாக்கி மதுவில் கலந்து சுக்ரரைப் பருகச் செய்தனர். தன் வயிற்றில் கசன் உள்ளதை உணர்ந்து அஸுரரைச் சபித்துத் தேவயானியிடம் கசன் திரும்பப்பிழைக்க முடியாத நிலையைத் தெரிவித்தார். வயிற்றிலுள்ளவனைப் பிழைக்க வைத்தால் அவன் என்வயிற்றைப் பிளந்து வெளியேறுவான். நான் இறப்பேன்.என்னைப் பிழைக்கவைக்க மந்த்ரம் அறிந்தவர் எவருமில்லை என்றூர். தேவயானி எனக்கு மந்த்ரத்தை உபதேசித்தால் நான் உம்மைப்பிழைக்கவைப்பேன். இல்லாவிடில் உம் எதிரில் உயிரை விடுவேன் என்றூள். சுக்ரரும் தேவயானிக்கு மந்த்ரத்தை உபதேசித்து விட்டுத் தன் வயிற்றில் உள்ள கசனையும் மந்த்ரத்தால் பிழைக்கவைத்தார். அவர் வயிற்றைக் கீறிக் கொண்டு கசன் வெளிவந்ததும் சுக்ரர் உயிரிழக்கத் தேவயானி சுக்ரரைப் பிழைக்க வைத்தாள். பெண்ணுக்கு உபதேசித்ததால் சுக்ரர் மந்த்ர பலத்தை இழந்தார். கசன் இனி இங்கிருந்தால் அசுரர் கொன்று விடுவர் எனக் கூறித் தன் இருப்பிடம் செல்ல சுக்ரரிடம் அனுமதி வேண்டினூன். கசன் சுக்ரரிடம் வந்ததன் பயன் நிறைவேறியது. இனி சுக்ரர் அதனைப்பயன்படுத்த முடியாது. தேவயானி கசனிடம் தான் காதல் கொண்டதைக் கூறி, அதற்காகவே அவனை உயிர்ப்பித்ததையும் கூறித் தன்னை மணக்க வேண்டினூள். கசனே நீ குருவின் பெண். தங்கையாக மதிக்க வேண்டியவள். உயிரைத் தந்ததால் தாயும் கூட. மணக்கத் தகாதவள். அதனூல் தவமூன பிடிவாதத்தை விடும்படி கோரினூன். அவள் கோபத்துடன் தந்தையிடம் பெற்ற மந்த்ரத்தை நீ மறக்கக் கடவாய் எனச் சபித்தாள். கசனும் தவமூக நடந்து கொண்டதால் நீயும் தாழ்ந்த குலத்தவனை மணப்பாய் என்று சபித்தான். சுக்ரரும் மந்த்ரபலம் குறைந்ததால் தாழ்நிலையடைந்தார். அதனூல் பெண்ணிற்கு மந்த்ர உபதேசம் செய்வதில்லை. குருவின் ஆணை பெற்று வ்ரதங்களைச் செய்வதே அவர்களது மேனிலைக்கு உதவும். (67)

**सावित्र्युवाच—**

**भगवन्सद्गुरो मन्त्रो यर्ह्यग्राह्यो हि योषिताम्।**
**तर्ह्येकं व्रतमाख्याहि तारकं ते स्मृतिप्रदम्॥ ६८**

श्रीगुरुरुवाच—

सुलभं तारकं साध्वि सोमवारमहाव्रतम्।
व्रतोत्तमं सुधामेष्टदं केऽप्यस्याधिकारिणः ॥ ६९

सीमन्तिन्या यत्प्रभावान् नष्टोऽप्याप्तः पतिः शृणु।
प्राक् चित्रवर्माऽऽर्यावर्ते राजा शूरो वशी कृती ॥ ७०

धीरूपशीललक्ष्माढ्यां पुत्रीं लेभेऽजसेवया।
शान्त्याद्याढ्या सती भर्त्रायुताब्दं राज्यभोक्त्र्यसौ ॥ ७१

इत्यूचुर्गणकास्त्वेको बाल्ये वैधव्यमित्यपि।
राजा हृष्टोऽपि खिन्नोऽभूत् ववृधे सा सितेन्दुवत् ॥ ७२

सा द्वादशाब्दिका श्रुत्वा वैधव्यं भावि दुःखिता।
नत्वैकदाऽऽप्तां मैत्रेयीं साऽवैधव्यं स्म याचते ॥ ७३

तां साऽब्रवीत्सोमवारव्रतात् त्राताऽस्ति शङ्करः।
प्रतीन्दुवारं संसेव्यो गोहृत्कायैः सदाशिवः ॥ ७४

उपोष्य नक्तं भुक्त्वा वा भक्त्याऽस्मिन्न क्षणं स्वपेत्।
नश्येत्प्राप्तापि भीस्त्यक्ते व्रते कुप्येत शङ्करः ॥ ७५

*வேசி ஸாவித்ரி ஸ்ரீ குருவிடம் பெண்கள் மந்த்ர உபதேசம் பெறத் தகுதியற்றவரெனில் அவர்கள் கடைத்தேற அனுஷ்டிக்க வேண்டிய வ்ரதத்தைப்பற்றி விளக்க வேண்டினாள். ஸ்ரீ குரு ஸோமவார வ்ரதம் ஏற்றதெனக் கூறி அதனை விளக்கினார். எல்லோருக்கும் இதில் தகுதி உண்டு. இழந்த கணவனை ஒருவள் இதனால் பெற்றாள். ஆர்யாவர்தத்தில் சித்ரவர்மாஎன்ற அரசன். சிவனை வழிபட்டு அவரருளால் ஒரு பெண்ணைப் பெற்றான். கணவனுடன் பத்தாயிரம் ஆண்டுகள் அரசாள்வாள் எனச் சோதிடர்கள் கூறினர். ஒருவர் மட்டும், இளமையில் விதவையாவாள் என்றார். அரசர் பன்னிரண்டாவது வயதுக்குள் நேரவிருக்கிற மகளின் கணவரின் பிரிவை நினைத்து வருந்தினான். தன் தோழி*

மைத்ரேயியைச் சரணடைந்த அந்தப் பெண் வழிகாட்ட அவனை வேண்டினாள். ஸோமவார வ்ரதத்தால் இந்தக் கேடு நீங்கும். சிவன் காப்பாற்றுவார்.ஒவ்வொரு திங்களன்றும் முக்கரணங்களாலும் சிவனை வழிபட வேண்டும். பகலில் உபவாஸம், இரவில் உணவு. சிவனிடம் பக்தியுடன் இரவில் கண்விழித்திருக்க வேண்டும். நெருங்கிய பயம் விலகும். வ்ரதத்தை நடுவில் விட்டால் சிவகோபத்திற்கு ஆளாவர்.

पापक्षयोऽस्याभिषेकात् साम्राज्यं पीठपूजनात् ।
गन्धादिदानात्सौभाग्यं सौगन्ध्यं धूपदानतः ॥ ७६

दीपात्कान्तिर्भोज्यदानाद्भुक्तिस्ताम्बूलतो रमा ।
नत्या पुमर्था ऐश्वर्यं जपाद्ब्राह्मणभोजनात् ॥ ७७

सर्वतृप्तिः कोशवृद्धिर्होमाल्लभ्याखिलं स्तवात् ।
तद्व्रतं कुर्विति प्रोक्त्वा सागात्कन्याऽकरोद्व्रतम् ॥ ७८

भूयाद्भाव्येषा देयेति मत्वा चन्द्राङ्गदाय राट् ।
तां वरायानुरूपाय नलगोत्रभुवे ददौ ॥ ७९

गजाश्वदासराष्ट्रादि दत्वापि स्वपुरे मुदा ।
पुत्राभावात्स तं राजा मेने संस्थाप्य पुत्रवत् ॥ ८०

कालिन्द्यामेकदा क्रीडन्मज्जति स्म स तच्चराः ।
पितरौ श्वशुरौ गत्वा तदूचुस्तत एत्य ते ॥ ८१

अन्वेष्यापि न तं प्रापुः शोकं चक्रुस्तदाऽखिलाः ।
कन्याऽनुगन्तुमुत्कापि शवाभावान्निवारिता ॥ ८२

तामाश्वास्यानयद्राष्ट्रं चित्रवर्मा नृपः सुता ।
शोकार्ताऽप्यकरोत्प्रेम्णा सोमवारव्रतं शुभम् ॥ ८३

पुत्रशोकाकुलं त्विन्द्रसेनं सस्त्रीकमुत्तमम् ।
खिन्नं संस्थाप्य कारायां तद्राज्यं बुभुजेऽहितः ॥ ८४

சிவனுக்கு அபிஷேகம் செய்தால் பாபம் நீங்கும். பீடத்தால் வழிபட்டால் சக்ரவர்த்தியாவான். சந்தனம் முதலிய நறுமணப் பூச்சால் பாக்ய நிறைவு; தூபமிட நட்பு பெருகும்; தீபத்தால் மேனி ஒளி; அன்ன நிவேதனத்தால் போகம், தாம்பூலம் தர செல்வம்; நமஸ்காரத்தால் அறம் முதலிய புருஷார்த்தங்கள்; ஜபத்தால் ஐச்வர்யம், அந்தணர்களுக்கு உணவிட அனைவரின் மன நிறைவு, ஹோமத்தால் பொக்கிஷ நிறைவு, துதிப்பதால் அனைத்துச் செல்வங்களும் கிட்டும். அதனால் ஸோமவார வ்ரதம் நடத்துவாய்'' என்றாள். அவளும் வ்ரதமிருந்தாள். நடப்பது நடந்தே தீரும் என்றெண்ணி அரசன் அவளை நளவம்சத்தில் பிறந்த இந்த்ர ஸேனனின் மகன் சந்த்ராங்கதனுக்கு மணம் செய்வித்தான். தனக்குப் பிள்ளை இல்லாததால் யானை முதலியவற்றைச் சீராகத் தந்து அவனைத் தன்னுடன் வைத்துக் கொண்டான். யமுனையில் நீராடச் சென்ற சந்த்ராங்கதன் நீரில் மூழ்கியதால் கரையேறவில்லை. அவனது பெற்றோரும் மாமியாரும் மாமனாரும் அங்குவந்து தேடியும் கிடைக்கவில்லை. உடன்கட்டை ஏறத் துடித்த கன்னிகையைச் சவம் கிடைக்காததால் அவர்கள் தடுத்து நகரத்திற்கு அழைத்துச் சென்றனர். துயருற்ற கன்னிகை ஸோமவார வ்ரதமிருந்தாள். புத்திர சோகத்தில் ஆழ்ந்திருந்த இந்த்ர ஸேனனை எதிரியரசர்கள் வென்று சிறையிலிட்டனர். *(84)*

**तं नागिन्योऽम्बुमग्नं स्वं लोकं नीत्वा मृतोपमम् ।**
**सर्पेशाय ददुः सर्पेट् सुधया तं व्यजीवयत् ।। ८५**

**अलौकिकं पुरं नागान्दृष्ट्वा स चकितोऽभवत् ।**
**वासुकिः प्राह तं कस्त्वं कस्य भक्तोऽसि मे वद ।। ७६**

**चन्द्राङ्गद उवाच——**
**सच्छ्लोकनलवंशोत्थ इन्द्रसेनसुतोऽस्म्यहम् ।**
**चन्द्राङ्गदाभिधो राजा जामाता चित्रवर्मणः ।। ८७**

**कालिन्द्यां पतितस्त्वत्र केनानीतो न वेद्मि तत् ।**
**दैवाद्वो दर्शनं जातं सफलं जन्म कर्म मे ।। ८८**

सृष्ट्यादिहेतुः सर्वेशः सर्वात्मा चिन्मयोऽप्यजः ।
कैलासे मूर्तिमद्योऽस्ति शम्भुर्नः कुलदैवतम् ।। ८९

वासुकिरुवाच—
पूतोऽस्यत्र पुरे तिष्ठ भुञ्जन्भोगानमानुषान् ।
सुधाकल्पद्रुपूर्णे रुक्शुग्भीनिद्रालयोनिते ।। ९०

चन्द्राङ्गद उवाच—
मां तु मत्वा मृतं नद्यां पितरौ मे मरिष्यतः ।
शोकार्ताऽपि वधूर्वर्षे वर्तमाने विवाहिता ।। ९१

श्रुत्वेति चेद्व्रजेत्युक्त्वा रत्नभूषामृतादिकम् ।
दत्वाऽह्यश्वौ मनोवेगौ गमयामास तौ स तु ।। ९२

स ससर्पोऽश्वमारुह्य गच्छन् प्रेक्ष्य मनोजवः ।
कालिन्द्यां सोमवारे स्वां विरूपां महिर्षी जगौ ।। ९३

*நீரில் மூழ்கிய சந்த்ராங்கதனை நாகலோகத்துப் பெண்கள் நாக லோகத்திற்கு அழைத்துச் சென்று வாஸுகியிடம் தந்தனர். அமுதம் தந்து வாஸுகி அவனுக்கு உயிரூட்டினான். புது உலகைக் கண்டு பயந்த சந்த்ராங்கதன் வாஸுகியிடம் தன் வரலாற்றைச் சொன்னான். நளவம்சத்தில் இந்த்ரஸேனன் மகன் சந்த்ராங்கதன் நான். சித்ர வர்மா என்ற அரசரின் மாப்பிள்ளை. யமுனையில் நீராடும்போது நீரில் மூழ்கி மயங்கியிருந்தவனை யாரோ இங்கு கொண்டு சேர்த்துள்ளனர். தைவவசத்தால் உம் தர்சனம் கிட்டியது. கைலாஸவாஸியான சிவபெருமான் எமது குல தெய்வம் என்றான். வாஸுகி அன்புடன் அவனை ''நாகலோகத்திலேயே தங்கி மனிதர்களுக்குக் கிட்டாத போகங்களை அனுபவிப்பாய். இங்கு கற்பகமரம் உள்ளது. வருத்தமோ, பயமோ,நோயோ உன்னை அணுகாது என்றான். சந்த்ராங்கதன் ''நான் திரும்பிப்பூமிக்ககுச் செல்ல வேண்டும். நான் இறந்துவிட்டதாக எண்ணி என்தாய் தந்தை மற்றும் மணந்து ஒரு வருஷம் கூட ஆகாத என் மனைவி துயரத்தால் இறந்து விடுவர் என்றதும் நாகர்களுடன் ரத்தின*

அணிகள் ஆடைகள் முதலிய பரிசுடன் அனுப்பி வைத்தான் யமுனைக் கரையில் ஸோமவார வ்ரதம் புரிகிற இளைத்த தன் மனைவியைக் கண்டான் (93).

वधूः कस्यासि कन्या त्वं शोकार्तासि कुतोऽङ्गने ।
सा तच्छ्रुत्वा सखीं प्राह कथयास्मै सविस्तरम् ।। ९४

सख्युवाच—

चन्द्राङ्गदवधूश्चित्रवर्मकन्येयमत्र तु ।
प्रियो नष्टस्तच्छुगार्ता स्नात्यत्राद्यास्ति सद्व्रतम् ।। ९५

कारायां श्वशुरावस्याः संस्थाप्य बुभुजे स्वयम् ।
राज्यं रिपुः सोमवारव्रतमेषा करोत्यतः ।। ९६

सीमन्तिन्यपि तद्रूपं दृष्ट्वा स्वपतिसन्निभः ।
कोऽयं धूर्तोऽसि यक्षो वा भाति वा स्वप्नहृद्भ्रमः ।।९७

इति मत्वा शुशोचैनामाश्वास्याहैष्यति त्र्यहात् ।
पुण्याद्भर्ता तवेत्युक्त्वा राष्ट्रं चन्द्राङ्गदो ययौ ।। ९८

साऽपि तूष्णीं ययौ राष्ट्रं पितुश्चन्द्राङ्गदस्त्वरिम् ।
स्वागमं श्रावयामास स भीतो मुक्तवान्नृपम् ।। ९९

द्विषा क्षमापितो मुक्तश्चन्द्रसेनः समागतम् ।
श्रुत्वा नष्टं सुतं वध्वा प्रेमाश्रूत्तोऽभवत्क्षणात् ।। १००

अलङ्कृतं पुरं सोऽपि प्रविश्य पितरौ दृढम् ।
समालिङ्ग्याऽऽदितः सर्वं शशंस पुलकाङ्कितः ।।१०१

सर्पं सत्कृत्य राज्याय प्रेरयत्पित्रनुज्ञया ।
गत्वा श्वशुरराष्ट्रं स्वभार्याशोकं जहार सः ।। १०२

आनीतानर्घवस्तूनि तस्यै दत्वा तया सह ।
राज्यमेत्याभिषिक्तः स जिष्णुवद्बुभुजे श्रियम् ।। १०३

इयान् व्रतप्रभावस्तद्व्रतं कुर्वित्यजोऽब्रवीत् ।
ततः प्रभृत्युभौ भक्त्या चेरतुर्व्रतमुत्तमम् ।। १०४

गुर्वाज्ञयेयितुर्गेहं प्रत्यब्दं गुरुदर्शनम् ।
कृत्वा श्रीपुत्रपौत्राढ्यावुभयौं सिद्धिमापतुः ।। १०५

एवं जगन्मङ्गलमङ्गलात्मा मनुष्यभावात्परिगृह्य भक्तान् ।
सञ्चारपूतां जगतीं विधाय ततान लीलाममलामघघ्नीम् ।। १०६

*इति श्रीगुरुचरिते कर्मयोगे दम्पतीगुरुसंवादो नाम चतुर्थोऽध्यायः । आदितः सप्तदशोऽध्यायः ।*

*सप्ताहपारायणे पञ्चमः । अन्ते रसज्ञा वशा स्तोत्रं पठनीयम् । द्वितीयदिने आरम्भे श्री गुरुस्तुतिः ।।*

*சந்த்ராங்கதனால் தன் மனைவியை அடையாளம் காணமுடியவில்லை. அவளது தோழி "சந்த்ராங்கதனின் மனைவி இவள். சித்ரவர்மனின் மகள். இவளது மாமனார் மாமியார் சிறையிலுள்ளனர். எதிரி அவரது அரசைப் பறித்துவிட்டான் இவள் ஸோமவாரவிரதம் இருக்கிறாள் என்றாள். அவனதுதோற்றம் தன்பதியினுடையது போன்றிருப்பதால் இவன் ஒரு பொல்லாதவன், அல்லது இது கனவோ பிரமையோ எனக் கலங்கினாள். சந்த்ராங்கதன் கன்னிகையிடம் விரைவில் உன் கணவர் வருவார் என்று ஆறுதல் கூறி அவளுடன் தலை நகர் சென்றான். இவனைக் கண்டதும் எதிரி அரசன் பயந்து சித்ரவர்மனைச் சிறையிலிருந்து விடுவித்தனர். தன் மகன் மீண்டதைக் கண்ட சித்ரவர்மன் மகனையும், மருமகளையும் கண்ணீர் மல்க அணைத்து மகிழ்ந்தான். தன்னுடன் வந்த நாகனைப் பரிசுகள் தந்து நாகலோகம் அனுப்பி, தன் மாமனாரது ராஜ்யம் சென்று தன் மனைவியின் சோகம் தீர்த்து இனிது வாழ்ந்தான். ஸோமவார வ்ரதத்தை தம்பதிகள் தொடர்ந்து செய்து வந்தனர். ஸ்ரீ குருவிடம் சென்று வணங்கிவந்தனர். இவ்வாறு ஸ்ரீ குரு மனித உருவில்பக்தர்களுக்கு அருள் புரிந்து தன் ஸஞ்சாரத்தால் பூமியைப் புனிதமாக்கி லீலைகள் செய்தார். (106).*

# अष्टादशोऽध्यायः

नामधारक उवाच—

निद्रितं मोहतम्यां मे मनोऽहङ्कारघूर्णितम्।
बोधार्कोदयबुद्धं तत् पातुमैच्छत्कथामृतम्।। १

सिद्ध उवाच—

वत्स विष्णौ प्रबुद्धोऽसि यत्तृप्तिः शृण्वतोऽपि नो।
मन्ये त्वयि प्रसादोऽस्ति श्रीमद्भगवतो हरेः ।। २

शृण्वेको ब्राह्मणस्तत्र त्यक्तान्यान्नप्रतिग्रहः।
दैवाप्तभुगृती शान्तोऽसक्तः कर्मपरो गृही ।। ३

तत्स्त्रीः कृत्येव सस्त्रीकाः स्वादु भुक्त्वान्यसद्मानि।
लभन्ते स्वंशुकार्थांस्तद् दृष्ट्वा पतिमगर्हयत्।। ४

भोक्तुं भर्त्रा सहाहूता धनिनैकेन सैकदा।
पत्याऽक्रुट्कामलोभेन निषिद्धैत्यावदद्गुरुम्।। ५

दीनां कुचैलां क्षुधितां पत्या साकं धनी गृहे।
दाताऽऽह्वयति भोक्तुं मां पतिं बोधय नैति सः ।। ६

तच्छ्रुत्वाऽऽहूय तं गच्छ भोक्तुं वध्वेत्यजोऽब्रवीत्।
स प्राह नियमं हित्वा तथा कुर्वे त्वदाज्ञया ।। ७

அஹங்காரத்தால் தலை சுற்றி அஜ்ஞானத்தால் தூங்கிக் கொண்டிருப்பவன் ஜ்ஞானம் என்ற ஸூர்யன் தோன்றியதும் விழித்தெழுவது போல் நாமதாரகன் ஸ்ரீ குருவின் வரலாற்றைக் கேட்கவிரும்பினான். ஸித்தர் அதனைப் பாராட்டிக் கூறினார். நாமதாரக ! உனக்கு விஷ்ணு பற்றிய அறிய விருப்பம் ஏற்பட்டுள்ளது. எவ்வளவு கேட்டாலும் நிறைவில்லை. ஈசனின் அருளின் விளைவு இது. ஓர் அந்தணன் பிறர் வீட்டில் உண்பதில்லை.

தற்செயலாக தைவம் தந்த உணவைச் சாப்பிடுவான். தன் கடமைகளை ஒழுங்காகச்செய்வான். அவனது பத்தினி பேராசை மிக்கவள். பிறர் ஆடை தருவதைப் பெற எங்கும் சாப்பிடுவாள். ஒருநாள் தனிகன் இந்த தம்பதியைச் சாப்பிட அழைத்தான். கணவன் இதனைத் தடுத்தான். ஸ்ரீ குருவிடம் இவள் சென்று ஏழ்மையையும் கந்தலாடையையும், பசியையும் காரணமாகக் காட்டித் தன் கணவனைத் தன்னுடன் தனிகர் வீட்டிற்குச் செல்ல உத்தரவிடும்படி வேண்டினுள். ஸ்ரீ குரு பரான்ன நியமத்தை அன்று மட்டும் தளர்த்தி மனைவியுடன் தனிகன் வீட்டுக்குச் செல்லும்படி கணவனுக்கு ஆணையிட்டார். அவரது ஆணையால் தன்நியமத்தை விட்டுச் செல்வதாகக் குருவிடம் கூறிக் கணவன் மனைவியுடன் தனிகன் வீட்டிற்குச் சென்றுன் (7)

इत्युक्त्वागात्तया भोक्तुं श्वक्रोडोच्छिष्टपाकतः ।
भुञ्जन्ती ददतेऽन्नं सा दृष्ट्वा पत्ये शशंस तत् ।। ८

उत्थायोभौ ततः खिन्नौ गुरुं प्राप्य तदूचतुः ।
स प्राहाज्ञाद्य लब्धं ते स्त्रीः परान्नसुखं परम् ।। ९

सोचेऽद्य च्छलितो भर्ता क्षन्तव्यो मन्तुरद्य मे ।
तामाह श्रीगुरुरितः पत्यनुज्ञानुगा भव ।। १०

विप्र उवाच—

निष्ठाऽन्यथा कृता मेऽद्य दुष्टयाघं कथं व्रजेत् ।
जन्मप्रभृत्यद्य यावन् नेदृक्पापं मया कृतम् ।। ११

श्रीगुरुरुवाच—

मा भीस्त्वय्येष दोषो न दुश्चित्तं न कुलस्त्रियः ।
कार्यं साऽतः परं नेच्छेत् तथाऽत्तुं क्वापि नैह्यतः ।। १२

कदाचिद्यस्य कस्यापि कर्माभाव उपस्थिते ।
द्विजाभावात्तु भोक्तव्यं तत्र दोषोऽन्यथा भवेत् ।। १३

विप्र उवाच—

परान्नं कस्य भोक्तव्यं कस्मिन्गेहे न कुत्र वा।
कस्माद्दानं गृहीतव्यं निषिद्धं चापि शंस मे ॥ १४

அங்கு நாயும், பன்றியும் தின்ற மீதி அன்னத்தை வழங்குபவதைக் கண்டவள் கணவனிடம் இதைக் காட்டினுள். சாப்பிடாமலே இருவரும் வெளியேறி குருவிடம் தெரிவித்தனர். பிறர் தருகிற உணவைச் சாப்பிடுவதால் ஏற்படுகிற இன்பம் இத்தகையது என குரு கூற அந்தப் பெண் என் கணவருக்கு இழைத்த பிழையை மன்னிப்பீர் என்ருள். இனி கணவர் சொன்னபடி நடப்பாய் என குரு சொன்னதும், பிறந்தது முதல் செய்தறியாத பாபத்தை இவளின் தூண்டுதலால் செய்ததாகக் கணவன் வருந்தினுன். ''இனி இவ்வாறு நேராது. ஆனுல் உணவேற்க ஒரு அந்தணன் கூடக் கிடைக்காததால் ஒருவருக்கு வ்ரதபங்கம் நேரிட்டால், அப்போது பிறர் தருகிற அன்னத்தைச் சாப்பிடமாட்டேன் எனக் கூறுவதும் தோஷமாகிவிடும் என்ருர் குரு. பரான்னம் எங்கு சாப்பிடலாம்' எங்கு சாப்பிடக் கூடாது? எந்த தானத்தை வாங்கலாம்? எதனை வாங்கக் கூடாதென விளக்கும்படி அந்த அந்தணன் கேட்க குரு விளக்கினுர். (14)

श्रीगुरुरुवाच

सद्विप्रवैदिकगुरुश्वशुरस्वशिष्य
मातामहालय उ भोजनतो न दोषः।
नाऽचारहीनपरकर्मरताहितार्त
क्षुद्राशुचिस्वगुरुदुःखकरान्नमद्यात् ॥ १५

दातारमेति सततं सुकृतं तदन्न
भुक्त्यास्य भोक्तुरघमेति तथाप्यमन्त्रात्।
हृत्याद्विजस्य च तथा खलु मासपुण्यं
दर्शे परान्नग्रहणादपयाति भोक्तुः ॥ १६

कन्यालयेऽर्भजननोत्तरमन्नमद्यात्
लक्ष्मीरपैति सततं परगेहवासात्।
ग्राह्यं च दानमपि सज्जनतो ग्रहे सत्
क्षेत्रादिके न न कुहाप्यंतिनिन्द्यदानम्॥ १७

उत्तमं यज्ञशिष्टान्नं दीक्षितब्रह्मिणोरपि।
स्वार्थं पक्तं क्वापि नाद्यादद्याद्यज्ञार्पितं शुभम्॥ १८

नश्येज्जपादापदि दानदोषः स्वाचारमप्यापदनापदिष्टम्।
विविच्य विप्राः प्रचरन्ति ये न क्वाप्याधिदैन्यर्णगदान्स्पृशन्ति॥

स्वाचारहीनाः परकर्मसक्ताः
तेऽमुत्र चात्रापि सदार्तिभाजः।
तस्माद् द्विजाचारममुं निराशीस्
त्वं कर्तुमर्हस्युभयार्थदं वै॥ २०

*நல்ல அந்தணர், வைதிகர், குரு, மாமனூர், தன் சிஷ்யன், தன் மாதாமஹர் இவர்களது வீட்டில் சாப்பிட பரான்ன தோஷம் ஏற்படாது. ஆசாரம் குன்றியவன், பிறருக்காகக் கர்மம் செய்பவன், எதிரி, நோயாளி, அற்பன், தூய்மையற்றவன், தன் குருவைத் துன்புறுத்துபவன் இவர்களது அன்னத்தைச் சாப்பிடக் கூடாது. அன்னதானம் செய்பவன் புண்யம் பெறுவான். சாப்பிடுபவன் பாபியாவான். அமாவாஸ்யையன்று பரான்னம் ஏற்பது செல்வத்தை அழித்திடும். நல்லவரிடமிருந்து தானம் பெறலாம். அதுவே க்ஷேத்ரத்தில் தீர்த்தத்தில் க்ரஹணத்தில் தானம் ஏற்பதைத் தவிர்க்கலாம். தீக்ஷிதன், ப்ரஹ்ம நிஷ்டன் இவர்கள் வீட்டில் உண்ணலாம். வேள்வியில் மீந்திருப்பதைச் சாப்பிடலாம். தனக்குமட்டும் சமைத்ததைச் சாப்பிடக் கூடாது. நெருக்கடியில் காயத்ரியை ஜபிக்க இந்தப் பாபம் விலகும். தன் கடமைகளைச் செய்யாமல் பிறர் கடமையைச் செய்பவர் இம்மையிலும் மறுமையிலும் துன்புறுவர். அதனல் சுயநலமின்றி கடமைகளைச் செய்வாய் என்ருர் ஸ்ரீ குரு. (20).*

विप्र उवाच—

देवदेव जगन्नाथ दयाब्धे भगवन्प्रभो ।
सद्गुरो सर्वमाचारं वक्तुमर्हसि मे हरे ।। २१

श्रीगुरुरुवाच—

विस्तृतोऽब्धिवदाचारो मुनीनामपि दुर्ग्रहः ।
तस्मात्सारं सद्गतिदं वक्ष्ये शाक्त्यादिसंमतम् ।। २२

आचार आद्यो धर्मो नुः सुखदस्तूभयत्र सः ।
श्रुतिस्मृतिपुराणोक्त चरणं विष्णुचिन्तनम् ।। २३

श्रद्धया देशकालाप्त दानं पात्रे दया क्षमा ।
शौचानसूयानायासाऽतृट्ताकार्पण्यमङ्गले ।। २४

सत्ता दैवीसम्पदेतल्लक्षणो धर्म उच्यते ।
श्रैष्ठ्यं कर्माप्यते तस्मात्ततो ज्ञानं ततोऽमृतम् ।। २५

श्रुतिस्मृतिपुराणानि धर्ममूलं श्रुतिर्वरा ।
तद्वैरे द्वौ वृषौ श्रुत्योर्द्वैधे स्मृत्योस्तु लौकिकः ।। २६

वर्णाश्रमविभागोक्तो देशकालोचितो वृषः ।
लौकिकोऽपि चतुर्वर्णैः सेवनीयः प्रयत्नतः ।। २७

स्वनुष्ठितादन्यधर्माद् विगुणोपि स्वको वरः ।
स्वगृह्योक्तोऽविरुद्धोऽपि स्मार्तो ग्राह्यो द्विजातिभिः ।। २८

नित्यं नैमित्तिकं कर्म नातीयात्काम्यमैच्छिकम् ।
तत्त्यागी क्वापि न सुखी ब्रह्मीभूतमृते भवेत् ।। २९

*ஸதாசாரம் :- நல்ல நடைமுறை பற்றி அந்தணன் விளக்க வேண்ட ஸ்ரீ குரு விளக்கினார். நல்லொழுக்கம் என்பது எளிதில் விளக்க இயலாதது. பராசரர் முதலானோர் இது பற்றி ஆராய்ந்து*

கூறியதன் ஸாரத்தைக் கூறுகிறேன். நல்லோர்களின் நடைமுறை இது. இம்மையிலும், மறுமையிலும் நலம் தருவது. வேதத்தையும் ஸ்ம்ருதியையும் விட்டு விலகாத நடைமுறை நல்லது. பொதுவாக, ஈசனைச் சிந்திப்பது, நல்ல இடத்தில் நல்ல வேளையில் ஸத்பாத்ரமாக வந்தவருக்குச் ச்ரத்தையுடன் தானம் செய்தல், பரிவு, பொறுமை, தூய்மை, அஸூயையின்மை, உடலை வருத்தாமை, நாட்டமின்மை, கஞ்சத்தனமின்மை, மங்களமான செயல்முறை, தைவிக நிலை இவைகள் நிறைந்த நடைமுறை (ஸதாசாரம்) நல்லது. இவற்றைவிட நற்பணிகளை நடத்துவது நல்லது. இதனைவிட ஆத்ம ஜ்ஞானமும் முக்தியும் பெறும் வழி நல்லது. வேதம் ஸ்ம்ருதி புராணம் இவற்றின் அடிப்படையில் நடைமுறை அமைய வேண்டும். மூன்றினுள் ஒன்றுக் கொன்று முரண்படுகிற நிலையில் வேதம் கூறும் நன்முறை சிறந்தது. வேதமே இரண்டு நடைமுறைகளைச் சொன்னால் இரண்டும் ஏற்கத் தக்கவை. ஸ்ம்ருதிகள் ஒன்றுக் கொன்று முரண்பட்டால் உலகம் ஏற்கும் நடைமுறை நல்லது. வர்ணம், ஆச்ரமம், தேசம், காலம் இவற்றை ஒட்டிய நாட்டு நடைமுறையும் ஏற்கத் தக்கதே. பிறரது கடமையையாயிருப்பதைவிட மாறுபட்ட தனது கடமையாயுள்ளது ஏற்றது. நித்யம் நைமித்திகம் காம்யம் என்ற நடைமுறையில் நித்ய நைமித்திகங்களை மீறாத காம்யமே நல்லது. நித்ய நைமித்திகங்களை விட்டவன் நன்மை பெறமாட்டான். ப்ரஹ்ம நிலையடைந்தவன் மட்டும் இந்த விதிக்கு விலக்கு (நித்தியம் என்பது ஸந்த்யோபாஸனை ஔபாஸனம் (அக்நி ஹோத்ரம்) தேவ-ருஷி பித்ரு-பூத-மனுஷ்ய யஜ்ஞங்கள், அமாவாஸ்யை முதலிய நாட்களில் பித்ரு தர்பணம் முதலியவை. நைமித்திகம், என்பது ஜாதகர்மம், நாமகரணம் முதலியவை. காம்யம் ஒரு தனித்த நலனைப் பெறச் செய்யப்படுவது.) (29)

**प्रमादलुप्तकर्मा तु प्रायश्चित्त्या शुचिर्विना ।**
**अनुतप्तं प्रयत्नाद्धीदुःसज्ञापहृतक्रिया ।। ३०**

**भजेत्सलक्षणं धर्मं श्रद्धाभक्तियुतो नरः ।**
**ब्राह्मणस्तु विशेषेण यतोऽस्मै श्रैष्ठ्यमर्पितम् ।। ३१**

दानादाने याजनेज्येऽध्ययनाध्यापने द्विजः ।
स्नानसन्ध्याजाप्यहोमपाठयज्ञपरश्चरेत् ।। ३२

वैदिकां तान्त्रिकां मिश्रामाद्यां वैकां चरेत्क्रियाम् ।
विमलः सुमुखःस्नातो द्विराचान्तो गुरूक्तिमान् ।। ३३

त्रिकच्छी धौतसच्छुष्कद्विवासा यतगोशिखः ।
मृद्भस्मगन्धान्यतमलिप्तो दर्भकरः शुचिः ।। ३४

पीठस्थोऽन्तर्जानुकरः प्रकुर्यात्कर्म सत्स्थले ।
उपोषितो विना नैशं कुर्याद्यज्ञजपार्चनम् ।। ३५

दोषो नौषधगव्येष्वप् फलताम्बूलभक्षणे ।
कर्म संकल्प्य कार्यं संपूर्णतास्येश्वरार्पणात् ।। ३६

(खेऽर्कौ यत्रैत्युद्गमास्तौ प्राक्प्रत्यक् ते ततोऽपराः।)

घुनक्तं प्रागुदग्वक्त्रो होमाद्येऽग्न्यादिसंमुखः ।
सौम्यैन्द्र्यैशान्यनुक्तायां दक्षाङ्गं चोपवीतता ।। ३७

आसीनत्वं मध्यपाठो देवतीर्थमनुक्तके ।
निवीतं कण्ठलम्ब्यार्षं दक्षांसस्थं तु पित्र्यकम् ।। ३८

प्राचीनावीतमन्यांसस्थं सूत्रं तूपवीतकम् ।
भ्रष्टं वा त्रुटितं सूत्रं त्यक्त्वा दध्यान्नवं विधेः ।। ३९

त्रिघ्नीकृत्य त्रिपद्या षण्णवतिस्वकरोन्मितम् ।
तूलादिसूत्रं पुनस्त्रिरावृत्य नवसूत्रकम् ।। ४०

कृत्वा त्रिरावृतं ग्रन्थिं दत्वा काजशिवान्नमन् ।
प्रोक्ष्याब्लिङ्गैः पङ्क्तिवारं सावित्र्या धेहि मन्त्रवत् ।। ४१

அறியாமல் செய்த தவறு ப்ராயச்சித்ததால் விலகும். அறிந்து கெட்டவரின் சேர்க்கையால் விளைந்த தவற்றை

பெருமுயற்சியாலும் தவற்றை உணர்ந்து ஈடு செய்வதாலும் போக்கலாம். தானம் செய்தல், தானம் பெறுதல், வேள்வி புரிதல், வேள்வி செய்வித்தல் வேதமோதுதல், வேதமோதுவித்தல் என்று இவை ஆறும், நீராடுதல், ஸந்த்யாவந்தனம், ஜபம், ஹோமம், இவற்றை நியமத்துடன் செய்வதும் அந்தணனின் செயல்முறை. கர்மங்களை வைதிகம், தாந்த்ரிகம், மிச்ரம் என்ற மூன்று வழிகளில் ஒரு முறையை ஏற்றுச் செய்யலாம். மலஜல சுத்தி செய்த பின் நீராடி இருமுறை ஆசமனம் செய்து மூன்று கச்ச முறையில் மேலாடையும் கீழாடையையும் உடுத்தி, மௌனத்துடன் சிகையை முடித்து, மண்ணாலோ விபூதியாலோ, சந்தனத்தாலோ நெற்றிக்கு புண்டிரமிட்டு, தர்ப்பை தரித்து பீடத்தில் நல்ல இடத்தில் அமர்ந்து, இருமுழங்கால்களுக் கிடையே இரு கைகளையும் வைத்து உணவேற்காமல் ஜபம் ஈசனின் வழிபாடு முதலியவற்றைச் செய்யலாம். இரவில் செய்ய வேண்டியவைகளில் சில உணவேற்ற பின்னரும் செய்ய நேரும். உபவாஸ காலத்தில் மருந்து, பகவின் பால், தண்ணீர், பழம், தாம்பூலம் இவற்றை ஏற்கலாம். இதற்காக இதனைச் செய்வதாக ஸங்கல்பத்துடன் தொடங்குவதும் ஈச்ரவரா பணத்துடன் முடிப்பதும் நல்லது. ஸூர்யன் உதித்து மறையும்வரை கிழக்கு நோக்கியும் பின் வடக்கு நோக்கியும் அமர்ந்து கடன் (கர்மம்)களைச் செய்ய வேண்டும். ஹோமத்தில் அக்னிக்கு எதிரில், திசை குறிப்பிடாதபோது கிழக்கு வடக்கு வடகிழக்கு நோக்கியும் செய்யலாம். நிலை குறிப்பிடாவிடில் அமர்ந்து செய்வர். பொதுவாகப் பூணூலை உபவீதமாக, தேவ தீர்த்த முறையில், ருஷியஜ்ஞும் முதலியவற்றில் நிவீதமாக ருஷி தீர்த்தமுறையில், பித்ருகார்யங்களில் ப்ராசீனாவீதமாக பித்ரு தீர்த்த முறையில் செய்ய வேண்டும். இடது தோளில் மாட்டி வலது விலாவில் பூணூல் தொங்குவது உபவீதம். கழுத்தில் மட்டும் தொங்குவது நிவீதம். வலது தோளில் மாட்டி இடது விலாவில் தொங்குவது பிராசீனாவீதம். பூணூல் உடலைவிட்டு நழுவினாலும் அறுந்தாலும் அதனைக் களைந்து வேறு பூணூல் தரிப்பர். 96 உள்ளங்கையளவு நூலை மூன்றாக மடித்து காயத்ரியை ஜபித்துக் கொண்டே முறுக்கி, மறுபடி மூன்றாகச் சுற்றி மும்மூர்த்திகளின் த்யானத்துடன் முடித்து மூன்று தடவை ஜபித்த ஜல தேவதை மந்த்ரத்தாலும் பத்து தடவை ஜபித்த

காயத்ரியாலும் தண்ணீர் தெளித்து, யஜ்ஞோபவீத தாரண மந்த்ரம் சொல்லி உபவீதம் போட்டுக் கொள்ள வேண்டும். (41)

**शश्वद्योज्याः सत्स्थिताग्नि-मन्त्रदर्भासनद्विजाः ।**
**पिण्डादिस्थाः कुशा विप्रः प्रेतश्राद्धाच्चितानलः ॥ ४२**

**मन्त्रा गौस्तुलसी नीचेऽसन्तः सन् शोधितो द्विजः ।**
**सोङ्कारान् सर्वदा होमे स्वाहान्तान्वामहस्तहृत् ॥ ४३**

**आर्षच्छन्दोदेवताविनियोगज्ञो मनून्जपेत् ।**
**शूद्राहृतं द्विजक्रीतं समिद्दर्भाप्सुमाद्यसत् ॥ ४४**

**अफेनानुच्छिष्टहस्तनखास्पृष्टामलाम्बु सत् ।**
**कुशकाशयवोशीर गोधूमव्रीहिकुन्दराः ॥ ४५**

**दूर्वा मौञ्जस्तृणं दर्भा वर्षामास्वीकृताः शुभाः ।**
**मूलतो ब्रह्मविष्ण्वीशा दर्भे सर्वेऽभितोऽमराः ॥ ४६**

**कर्मोत्तरान्तं प्राक्संस्थं व्यस्तं वा पित्र्यमग्निगम् ।**
**याम्यन्तं तद्वदास्यं च ज्ञेयोऽङ्गे वामतः क्रमः ॥ ४७**

நற்கர்மங்களில் பயன்பட்ட அக்னி, மந்த்ரம், தர்பை, ஆஸனம், மற்றும் அந்தணர்களை மறுபடி செய்கிற நற்கர்மங்களில் பயன்படுத்தலாம். பிண்டத்துடன் தொடர்பு கொண்ட தர்ப்பை, ப்ரேத ச்ராத்தத்தில் வரிக்கப்ப பெற்ற அந்தணன், மயான சிதையில் பயன்பட்ட அக்னி இவை மீண்டும் பயன்படத்தகாதவை. அந்தணன் பிராயச்சித்தத்தால் தூய்மை பெற்றால் பயன் படலாம். அவ்வாறே துளஸியும் பசுவும் நீசன் கைபடாதவரை மீண்டும் பயன்படலாம். இடது கையை மார்பில் வைத்து முதலில் ஓங்காரத்தையும் முடிவில் 'ஸ்வாஹா' என்ற சொல்லையும் சேர்த்து ஹோம மந்த்ரங்களைக் கூறுவர். மந்த்ரங்களை ஜபிக்கும்போது, ருஷி, சந்தஸ், தேவதை, விநியோகம் இவற்றை அறிந்து ஸ்மரித்தே சொல்ல வேண்டும். ஸமித்து தர்ப்பை ஜலம் பூ முதலியவைகளைத் தானே சேகரிக்க வேண்டும். விலைக்கு வாங்கியதையோ பணியாள்

கொணர்ந்ததையோ பயன்படுத்தக் கூடாது. நுரையின்றி பிறர் பயன்படுத்தி மீந்ததல்லாத நகம் படாத அப்பழுக்கற்ற நீரே ஏற்றது. குசம் காசம் யவைத்தாள், விலாமிச்சை கோதுமைத்தாள், நெல்தாள், குந்தரப்புல், அருகம்புல், முஞ்ஜைப் புல், புல், தர்ப்பை எனப் பத்துவகை தர்ப்பங்கள் ஆவணி அமாவாஸ்யையன்று சேகரிக்கப் பெற வேண்டும். அவற்றின் அடியிலும், நுனியிலும் மும்மூர்த்திகளும் சுற்றிலும் தேவர்களும் உள்ளனர். இவற்றை வடக்கிலும், கிழக்கிலும் நுனியை நீட்டிப் பரப்ப வேண்டும். (47)

तर्जन्यल्पाधःकराग्रमध्यादिषु यथाक्रमम् ।
तीर्थं पित्र्यं कायदैवमाग्नेयं ब्राह्ममुच्यते ॥ ४८

पित्रर्षिदेवादानोपस्पर्शकार्यं चरेत्तु तैः ।
वामान्वारब्धान्यपाणिः कर्माद्यान्ताम्बुदानयुक् ॥ ४९

त्वक्फलक्रिमिरोमोत्थ-श्वेतासृक्पीतमेचकम् ।
वासो दग्धं द्विजादेः सद्धौतमस्फाटितं स्वकम् ॥ ५०

வலது கையில் ஆட்காட்டி விரலின் கீழ் வழியே ஜலம் விடுவது பித்ரு தீர்த்தம், சுண்டு விரலின் கீழ் வழியே ஜலம் விடுவது ருஷி தீர்த்தம், விரல்களின் நுனி வழியே தேவதீர்த்தம். உள்ளங்கையின் (மணிக்கட்டை நோக்கி) கீழாக விடுவது ப்ரஹ்ம தீர்த்தம், உள்ளங்கை நடுவே அக்னி தீர்த்தம். இந்த ரீதியில் பித்ரு - ருஷி - தேவ - ப்ரஹ்ம- அக்னி தர்ப்பணம் செய்வர். வலது கையை இடது கை தொட்டுக் கொண்டிருக்கும். கர்மம் தொடங்கியதும் முடிவிலும் ஜலதானம் அஞ்சலியால் செய்ய வேண்டும். தோலாலானது, காயிலிருந்து நூற்றது, புழுவிலிருந்து நூலாக வடித்தது, உரோமத்தால் ஆனது என ஆடைகள் நான்கு வர்ணங்களுக்கு முறையே ஏற்றவை. வெள்ளை, சிவப்பு, மஞ்சள், கருப்பு என முறையே ஆடை நிறங்கள் ஏற்றவை. பிறர் தரித்ததும் அழுக் கடைந்து தூயதாக்காததும் கிழிந்ததும் தவிர்க்கத் தக்கது. (50)

ब्राह्मे मुहूर्त उत्थाय गणेशब्रह्मविष्णवजान् ।
देवान्नत्वा गुरून्खेटान्गां सच्छ्लोकांश्च संस्मरेत् ॥ ५१

ग्रामाद्बहिस्तु नैरृत्यां सद्द्रुवम्ब्वध्वादि वर्जिते ।
स्थलेऽम्बुदूरात्संस्थाप्य यतनासाक्षिवाक् तृणे ॥ ५२

उदङ्मुखोऽन्यथा नक्तमासीनो वस्त्रमस्तकः ।
आर्षसूत्रं दक्षकर्णे कृत्वा मूत्रविशौ त्यजेत् ॥ ५३

लिङ्गं सहाद्भिरप्स्थार्द्र- धात्रीमात्रमृदा गुदम् ।
त्रिर्वामो दशवारं च करः शोध्याः कराङ्घ्रयः ॥ ५४

प्रत्येकं सप्तवारं द्विगुणं वीर्येऽर्धमन्यके ।
वर्णिवानप्रस्थभिक्षोः शौचं द्वित्रिचतुर्गुणम् ॥ ५५

अर्धार्धार्धं निशाशक्तिमार्गेष्वङ्गाबलासु तु ।
गन्धलेपान्तावधि स्याद् गण्डूषान्वामतस्त्यजेत् ॥ ५६

द्विजो द्वादश चान्योऽल्पान् तर्जन्यास्यं न शोधयेत् ।
क्षीरिकण्टकिवृक्षाम्रनिम्बापामार्गदारुणा ॥ ५७

द्वादशाङ्गुलमात्रेण द्विजोऽन्योऽल्पेन मन्त्रवत् ।
शुद्धास्योऽब्गोविशा प्रातः स्नायान्मध्यन्दिनेऽम्मृदा ॥ ५८

*சரீர சுத்தி* :- ப்ரஹ்ம முஹூர்த்தத்தில் எழுந்து கணேசர் முதலான தேவர்களேயும், நவக்ரஹங்களேயும், குருவையும் பசுவையும் வணங்கிப் புண்ய ச்லோகர்களான நளன் முதலானோரை நினைத்து வீட்டைவிட்டு வெளியேறி தென் மேற்கில் சென்று ஆலயமும் அரசு முதலிய தைவமரங்களும் நடைபாதையும் அற்ற இடத்தில் சுத்திக்கான நீரை சொம்பில் வைத்து, மற்ற இந்த்ரியங்களை மூடிக் கொண்டு, பகலில் வடக்கு நோக்கியும் இரவில் தெற்கு நோக்கியும் புல் பரப்பி அதன் மீது அமர்ந்து காதில் உபவீதத்தை மாட்டி மல மூத்திரங்களைக் கழித்து ஒரு தடவை குறியையும், இரண்டு தடவை ஆஸனவாயையும், தனித்து பத்து தடவை இடது கரத்தையும் அலம்பி, பின் இரு கால்களையும் இருகைகளையும் ஏழு தடவை நெல்லிக்காய் அளவு மண்ணாலும், தண்ணீராலும் அலம்ப

வேண்டும். சிறு நீர் மட்டும் கழித்தால் இதில் பாதியளவு போதும். உடலுறவு கொண்டால் இரண்டு மடங்கு. ப்ரஹ்மசாரி இரண்டு மடங்கு, வானப் ப்ரஸ்தன் மூன்று மடங்கு, துறவி நான்கு மடங்கு சுத்தி செய்து கொள்ள வேண்டும். வழிநடையிலிருந்தால் பாதியளவு, நெருக்கடியில் அதிலும் பாதி போதுமானது. பெண்களுக்கும் சிறுவர்களுக்கும் துர்மணமும் அப்பிய மலமும் அகலும் வரை. சௌசத்திற்குப் பின் அந்தணர்கள் 12 தடவை நீரால் வாய் கொப்புளித்து இடது புறத்தில் நீரைத் துப்ப வேண்டும். மற்றவர் ஸௌகர்யம் போல் குறைத்துச் செய்தால் போதும். ஆட்காட்டி விரலால் வாயினுள் தேய்க்கக் கூடாது. வேம்பு, நாயுருவி முதலியவற்றின் குச்சிகளை மந்த்ரத்தின் மூலம் வேண்டிக் கொண்டு பற்களைத் தேய்த்து பதினாறு தடவை நீரிட்டுக் கொப்புளித்துத் துப்ப வேண்டும். பின் கோமயமும் மண்ணும் பூசி நீராட வேண்டும். நடுப்பகலில் மண் பூசி நீராட வேண்டும். (58)

भिक्षुर्व्रती त्रिकालं न चिरण्टी शिरसा सदा ।
शीतैः शीताप्सम्पुटितोष्णकैर्वाऽब्लिङ्गमन्त्रितैः ॥ ५९

धाम्न्याचमनसङ्कल्पमार्ष्टितृप्त्यघहारि नो ।
दीपाल्युत्सवमाङ्गल्याऽब्दाद्येऽभ्यङ्गं सदैच्छिकम् ॥ ६०

अनिन्द्याहेऽधवाभिक्ष्वोर्नेदं स्नायान्न शीतकैः ।
माङ्गल्येऽर्भोत्पत्तिपर्वक्रान्तिश्राद्धेषु नोष्णकैः ॥ ६१

स्नायाद्वान्त्यशुचिस्पर्शदुःस्वप्नरतिदुर्गमे ।
नद्यां प्रवाहाभिमुखो वरुणं प्रार्थ्य मन्त्रवत् ॥ ६२

स्नात्वाऽऽ लोड्याम्ब्वम्बुमन्त्रैः स्वमुन्माज्र्याघमर्षणम् ।
कृत्वा स्नात्वा तर्पयित्वा जले देवानृषीन्पितॄन् ॥ ६३

நீராடல் :- துறவியும், சாந்த்ராயணம் முதலிய வ்ரதமிருப்பவனும் மூன்று வேளை நீராட வேண்டும். ஸுமங்கலிப் பெண் தினமும் தலை நனைத்து நீராட வேண்டியதில்லை. குளிர்ந்த நீரிலோ, குளிர்ந்த நீர் கலந்த வெந்நீரிலோ அவள் நீராடலாம்.

வீட்டினுள் ஆசமனமோ, ஸங்கல்பமோ பாப நீக்கத்திற்கான அகமர்ஷண மந்த்ர ஜபமோ ஸ்நானத்தின் அங்கமான தர்பணமோ செய்வதில்லை. தீபாவளி, விவாஹம் முதலிய மங்கள நாள், வருஷப் பிறப்பு இவற்றில் எண்ணெய் தேய்த்து அப்பியங்க ஸ்நானம் அவச்யம். மற்ற தகாத நாட்களில் விரும்பினுல் அப்யங்கம் செய்யலாம். விதவையும் துறவியும் இதனைச் செய்யக் கூடாது. மங்கள ஸ்ஞனம் வென்னீரில்தான். புத்ர ஜனனத்தன்றும் அமாவஸ்யை முதலிய பர்வதினங்களிலும் ச்ராத்தத் தினத்திலும் வென்னீரில் நீராடக் கூடாது. வாந்தி எடுத்தல், அசுத்தப் பொருளைத் தொடுதல், கெட்ட கனவு, உடலுறவு, மயானம் முதலிய இடங்களுக்குச் செல்லுதல், இவற்றில் ஸ்னானம் அவச்யம். ஆற்றில் ப்ரவாஹத்தை நோக்கி நின்று நீராட வேண்டும். அப்போது வருணனை வேண்டுகிற மந்த்ரஜபம் செய்வர். தன்னைச் சுற்றிவருகிற நீரைக் குழப்பி உடலைத் தேய்த்து விட்டு அகமர்ஷண மந்த்ரம் ஜபித்து தேவர் ருஷி பித்ருக்கள் இவர்களுக்குத் தர்ப்பணம் செய்வர். (63)

निष्पीड्योदग्दशं वासः शोधिताङ्गो गृहं व्रजेत् ।
स्रवत्यात्मा सरन्ध्रोऽतः प्रातःस्नानं विशोधनम् ।। ६४

त्रिसप्तद्वादशाहं चेत् सन्ध्यास्नानाग्निवर्जितः ।
द्विजोऽपि शूद्रोऽशक्तश्चेन् मान्त्राद्यन्यतमं चरेत् ।। ६५

हृद्यभौमाग्नेयमान्त्रानिलदिव्यैः शुचिर्हरेः ।
ध्यानमृद्भस्माम्मनुगोरजोवर्षात्मकाप्लवैः ।। ६६

मेधाऽलोलुपतारोग्यरूपतेजोयशोबलम् ।
शौर्यदुःस्वप्नहृत्यायुर्लभेत्स्नातोऽन्यथापरम् ।। ६७

வடக்கு நோக்கி நுனி இருக்கும்படி ஆடையினை முறுக்கிப் பிழிந்து உடலைத் துடைத்துவிட்டு வீட்டிற்குச் செல்ல வேண்டும். த்வாரங்கள் உள்ள உடலில் எப்போதும் கசிவு இருந்து கொண்டிருக்கும். அதனுல் காலையில் நீராட வேண்டும். மூன்று நாட்கள் ஸந்த்யா வந்தனமும், ஏழு நாட்கள் நீராடலும் பன்னிரண்டு

நாட்கள் ஔபாஸனம் முதலிய அக்னி வழிபாடும் செய்யாத அந்தணன் சூத்ரனுவான். இவற்றைச் செய்ய சக்தி இல்லாத நிலையில் மந்திரித்த நீரைத் தெளித்து மந்த்ர ஸ்னானமும் மண்ணுல் பூசுவதாகிற பௌமஸ்நானமும், விபூதி பூசி ஆக்நேய ஸ்நானமும் பசுவின் காலடித் தூசியால் வாயு ஸ்நானமும் வெயிலுடன் பெய்கிற மழையில் நனைவதாகிற திவ்ய ஸ்நானமும் செய்யலாம். நீராடுபவன் மேதை, சஞ்சலமின்மை, ஆரோக்யம், அழகு, ஒளி, புகழ், வலிவு, சூரத் தன்மை, கெட்ட கனவின்மை, ஆயுள் முதலியதைப் பெறுகிறுன். (67)

स्नात्वा मृद्भस्म हुत्वाङ्गे धार्यमभ्यर्च्य चन्दनम् ।
केशवाद्यैर्द्वादशभिः सिते पक्षेऽसिते परैः ॥ ६८

ललाटोदरहृत्कण्ठ-दक्षकुक्षिभुजश्रुतिः ।
कुक्षिदोःश्रुतिपृष्ठाङ्गककुन्मूलेन कं त्विति ॥ ६९

मृद्गन्धितिलकैरङ्क्या भस्मपुण्ड्रैः षडर्णतः ।
मृताशौचे न गन्धान्न माङ्गल्ये भस्म धारयेत् ॥ ७०

गयाश्राद्धाधानपट्ट-प्रेतकृत्योत्तरीयकम् ।
पादुका रौप्यमुद्रा न क्षौरं जीवत्पिता भजेत् ॥ ७१

रौप्यहैमीखड्गमुद्रावत्तर्जन्यल्पकाङ्गुलिः ।
साग्रागर्भचतुर्दर्भपवित्रानामिकोऽपि वा ॥ ७२

நீராடியதும் மண்ணை நெற்றியிலிடவும். ஹோமம் செய்ததும் பஸ்மத்தை இடவும். ஈச பூஜை செய்ததும் சந்தனமிட்டுக்கொள்ளவும். கேசவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணோ, மதுஸூதன, த்ரிவிக்ரம, வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷீகேச, பத்மநாப, தாமோதர எனப் பன்னிரு நாமங்களால் சுக்ல பக்ஷத்திலும், ஸங்கர்ஷண, வாஸுதேவ, ப்ரத்யும்ன, அநிருத்த, புருஷோத்தம, அதோக்ஷஜ, நரஸிம்ஹ, அச்யுத, ஜநார்தன, உபேந்த்ர, ஹரே, ஸ்ரீ க்ருஷ்ண என்ற பன்னிரு நாமங்களால் க்ருஷ்ண பக்ஷத்திலும் புண்ட்ரதாரணம் செய்வர். நெற்றி, அடி

வயிறு, மார்பு, கழுத்து, வலதுவயிறு, வலதுகை, வலது காது, இடது வயிறு, இடது கை, இடது காது, முதுகு, தலை என்று பன்னிரு இடங்களில் இடுவர். ஓம் நமோ நாராயணாய என மண்ணால் ஊர்த்வ புண்ட்ரம், ஓம் நமச் சிவாய என விபூதியால் குறுக்கே புண்ட்ரம். தந்தை உயிருடனிருந்தால், கயா ச்ராத்தம், குறுக்காக மேல் உத்தரீயம், ப்ரேத கர்மாவிற்கான ப்ராசீனாவீதியான உத்தரீயம். பாதுகை, வெள்ளி மோதிரம் இவற்றைத் தரிக்கக் கூடாது. ஆட்காட்டியில் வெள்ளி மோதிரமும், தங்க மோதிரம் பவித்ர விரலிலும், கொம்பு மோதிரம் சுண்டு விரலிலும் தரிக்கத் தக்கது. பவித்ர விரலில் அடி நீக்கிய நான்கு நுனி தர்ப்பத்தால் பவித்ரம் செய்து தரிக்கலாம். *(72)*

**मुक्ताङ्गुष्ठाल्पगोकर्णाकृतिहस्तेन कं त्रिभिः ।**
**केशवाद्यैः प्राश्य हस्तौ द्वाभ्यां प्रक्षाल्य चाधरौ ॥ ७३**

**द्वाभ्यां प्रोक्ष्यास्यमेकैकात् करं पादौ शिरोऽपरैः ।**
**आस्यं नासेऽक्षिणी कर्णौ नाभिं हृत्के भुजौ स्पृशेत् ॥ ७४**

ஸந்த்யாவந்தனம்- கட்டை விரலையும், சுண்டு விரலையும் நீக்கி பசுவின் காது போன்று நடுவில் குவிந்துள்ள வலது கையால் கேசவ, நாராயண மாதவ என்று மூன்று நாமங்களால் நீரைப் பருகி, கோவிந்த விஷ்ணோ என்ற நாமங்களால் கையலம்பி மதுஸூதன த்ரிவிக்ரம என உதட்டைத் துடைத்து வாமன என முகத்தில் நீர் தெளித்து ஸ்ரீதர என வலது கை அலம்பி, ஹ்ருஷீகேச பத்மநாப என இரு கால்களில் தெளித்து, தாமோதரா என தலையிலும் ஸங்கர்ஷண என முகத்திலும் வாஸுதேவ ப்ரத்யும்ந என மூக்கின் இருபுறங்களிலும் அநிருத்த புருஷோத்தம எனக் கண்களிலும் அதோக்ஷஜ நாரஸிம்ஹ எனக் காதுகளிலும் அச்யுத எனத் தொப்புளையும், ஜநார்தன என இதயத்தையும் உபேந்த்ர எனத் தலையையும், ஹரே ஸ்ரீ க்ருஷ்ண எனக் கைகளையும் தொட வேண்டும். *(74)*

**नासां साङ्गुष्ठतर्जन्याङ्गुष्ठेनास्यं च दृक्श्रुती ।**
**सानामिकेन साल्पेन नाभिं करतलाग्रतः ॥ ७५**

हृद्वाहून्कं च सर्वाभिः स्पृशेदाचमनं त्विदम्।
त्रिभिः पीत्वा शुद्धपाणिः स्पृशेत्कर्णमसंभवे ॥ ७६

माषमज्जनमात्राम्बु पानेऽथ द्विरुपस्पृशेत्।
मूत्राद्युत्सर्गशुद्ध्यूर्ध्वं स्नाने दाने सुरार्चने ॥ ७७

प्राक्परे कर्मसन्ध्यासु सुप्ते वासोधृतौ क्षुते।
कासश्वासागमादानाध्ययनाशुद्धभाषणे ॥ ७८

श्मशानचत्वरगतौ पच्छौचे स्वान्ययोः कृते।
आचामेद्धीनसंभाषे स्त्रीशूद्रोच्छिष्टभाषणे ॥ ७९

रक्ताश्रुपातेऽसुयामे जलोत्तारेऽभिवादने।
उच्छिष्टस्पर्शेऽपाने च याते कर्णं स्पृशेत्तु वा ॥ ८०

विप्रदक्षश्रुतौ देवपाशीनेन्द्वग्न्यबाशुगाः।
सन्ध्याज्ञानाद्भवेच्छूद्रः सन्ध्याहीनोऽशुचिर्द्विजः ॥ ८१

विना संध्यावन्दनेन नाधिकारोऽन्यकर्मसु।
सम्यग्ब्रह्मात्र ध्यायन्ति विप्राः सन्ध्या ततः स्मृता ॥ ८२

भाढ्या भहीनार्कयुक्ता तूत्तमा मध्यमाधमा।
प्रातःसंध्याऽपरा तद्वत् सार्कार्कोना च भान्विता ॥ ८३

त्रिनाड्यधस्तामकृत्वा चतुर्थार्घ्यं प्रदापयेत्।
अध्यर्धयामादासायं संध्या मध्याह्निकी स्मृता ॥ ८४

*பின் கட்டை விரலாலும் ஆட்காட்டி விரலாலும் மூக்கையும் கட்டை விரலால் வாயையும் பவித்ர விரலையும் கட்டை விரலையும் இணைத்து கண்களையும், சுண்டு விரலையும் கட்டை விரலையும் கொண்டு காதுகளையும் உள்ளங்கையால் தொப்புளையும் விரல்கள் நுனியால் மார்பையும், கைகளையும் எல்லா விரல்களாலும் தலையையும் தொட வேண்டும். இதனைச் செய்ய முடியாவிடில் நடு*

மூன்று விரல்களால் ஆசமனம் செய்து கையலம்பிக் காதைத் தொடவும். ஆசமனத்திற்கான நீர் குவிந்த உள்ளங்கையில் உளுந்து முழுகும் அளவாகும். மல மூத்திரக் கழிவிற்குப் பின் சுத்தி செய்து கொண்டதும் இரு தடவை ஆசமனம் செய்யவும். நீராடிய பின்னும் தானம் செய்ததும் தேவ பூஜை செய்ததும், கர்மாவின் தொடக்கத்திலும், முடிவிலும் தூங்கி எழுந்ததும், ஆடை அணிந்ததும், தும்மிய பின்னரும், இருமலிலும் அத்தியயனம் செய்ததும் சுத்தமற்றவருடன் பேசிய பின்னரும், எச்சிலைத் தொட்டதும், அபான வாயு வெளியேறியதும் ஆசமனம் செய்ய வேண்டும். முடியாவிடில் வலது காதைத் தொட வேண்டும். அந்தணரின் வலது காதில் வருணன் ஸூர்யன், சந்த்ரன், அக்னி, ஜல தேவதை, வாயுமுதலிய தேவர்கள் வசிக்கின்றனர். ஆசமனத்தில் உளுந்து முழுகுமளவிற்குக் குறைந்தாலும் அதிகமானாலும் பருகும் நீர் கள்ளுக்கு ஸமம். ஸந்த்யா வந்தனத்தை அறியாதவன் சூத்ரனாவான். ஸந்த்யாவந்தனம் செய்யாவிடில் தூய்மையற்றவன். ஸந்த்யாவந்தனம் செய்யாதவனுக்கு மற்ற கார்யங்களைச் செய்கிற தகுதி இல்லை. இந்த வேளையில் அந்தணர்கள் நன்கு பரம்பொருளைத் த்யானிக்கின்றனர் என்பதால் ஸந்த்யா எனப்படுகிறது. நக்ஷத்ரமுள்ள விடியற்காலை சிறந்தது. நக்ஷத்ரம் தெரியாதது நடுத்தரம். ஸூர்யன் உதித்து வெளியான வேளை தாழ்ந்தது. மாலையில் ஸூர்யன் மறையுமுன் உள்ள வேளை சிறந்தது. சூர்யன் மறைந்தது நடுத்தரம். நக்ஷத்ரத்துடன் கூடியது தாழ்ந்தது. மூன்று நாழிகள் கடந்த பின் அர்க்க்யம் கொடுக்க நேர்ந்தால், ப்ராயச்சித்தமாக நாலாவது அர்க்க்யம் தர வேண்டும். உதித்தபின் ஒன்றரை யாமம் (4 1/2 மணி) கழிந்தபின் உள்ள வேளை மத்யாந்ந ஸந்த்யா நேரம் (84).

धृत्वानामिकाङ्गुष्ठैर् यतिर्वर्णी च पञ्चभिः ।
अन्यो नासां शनैर्वायुं सव्यया ऽऽपूर्य शक्तितः ।। ८५

प्रणवव्याहृतीः सप्त गायत्रीं शिरसा सह ।
त्रिर्जपन्कुम्भितं मन्दं दक्षनाड्या विरेचयेत् ।। ८६

कार्योऽन्यथाऽसुयामान्यो मूलबन्धोऽत्र सत्तमः ।
जालन्धरोड्डियाणाख्यौ कुम्भके रेचके हितौ ।। ८७

प्राणायामोऽघनिघ्नोऽयं कार्यः सर्वेषु कर्मसु ।
ग्रामाद्बहिः स्याद्द्विगुणं नद्यां शतगुणं फलम् ।। ८८

तीर्थे सहस्रं सन्ध्यायामनन्तं सान्ध्यकर्मजम् ।
बहिःसंध्या सुरापानानृतोक्त्याद्यघहारिणी ।। ८९

*ப்ராணாயாமம் :– ஸன்யாஸியும், ப்ரஹ்மசாரியும் கட்டை விரலாலும், மோதிர விரலாலும் மற்றவர்கள் ஐந்து விரல்களாலும் மூக்கைப் பிடித்துக் கொண்டு, இடது மூக்கால் வாயுவை முடிந்தவரை நிரப்பி ப்ரணவத்தையும், ஏழு வியாஹ்ருதிகளையும், காயத்ரியையும் காயத்ரீ சிரஸையும் மூன்று தடவை ஜபித்து உள்ளே அடக்கிய காற்றை வலது மூக்கால் மெள்ள மெள்ள வெளிப்படுத்த வேண்டும். மறுபடி வலது மூக்கால் உள்ளிழுத்து ஜபித்து இடது மூக்கால் மெள்ள மெள்ள விடவேண்டும். இரண்டாவது ப்ராணாயாமம் தொடங்கும் போது மூலாதார பந்தமும், பூரகத்தில் ஜாலந்தர பந்தமும் ரேசகத்தில் ஒட்டியாண பந்தமும் செய்வர். இவ்வாறு எல்லா கர்மங்களையும் தொடங்கு முன் ப்ராணாயாமம் செய்யத் தக்கது. கிராமத்தின் வெளியே இதை விட இருமடங்கும் ஆற்றங்கரையில் நூறு மடங்கும் புண்ய தீர்த்தத்தில் செய்ய ஆயிரமடங்கும் பலன் தரும். வீட்டின் வெளியே ஸந்த்யா உபாஸனம் செய்ய கள் குடித்தல், பொய் பேசுதல் முதலிய பெரும் பாபங்களைப் போக்கும். (89)*

संध्यामुपासिष्य इति संकल्प्यादाय मार्जयेत् ।
गोकर्णाकृतिताम्रादिपात्रे वामकरेऽप्यपः ।। ९०

वरान्तैर्नान्तैःसथान्तैः क्रमात्के पादयोर्हृदि ।
आपोहिष्ठेति पच्छोऽपः प्रातर्मध्यन्दिने निशि ।। ९१

सूर्यश्चापः पुनन्त्वग्निश्चेति प्राश्य ह्युपस्पृशेत् ।
सोङ्कारव्याहृत्योङ्कारयुग्देव्यप्सूक्ततो द्विजः ।। ९२

मार्जयेत्प्रतिमंत्रं के ऋतं चेति तृचान्तरे।
निःश्वास्याघनरं स्मृत्वा दक्षनासापुटेन तम्॥ ९३
बहिर्निःसार्य हस्तेऽप्सु पतितं नावलोकितम्।
क्षिप्त्वा क्षितौ वामभाग आचम्याप्पूरिताञ्जलिः॥ ९४
गोशृङ्गमात्रमुद्धृत्याञ्जलिं व्यङ्गुष्ठतर्जनीम्।
तिष्ठन्ध्यायन्संमुखोऽर्कं देव्यार्घ्यं त्रिर्निवेदयेत्॥ ९५
असावादित्यो ब्रह्मेति ध्यात्वाऽऽसिच्य प्रदक्षिणम्।
परीत्याचामेन्मध्याह्ने नतोऽर्घ्ये हंस इत्यृचा॥ ९६

ஸந்த்யா உபாஸனம் :— ஸந்த்யா உபாஸனம் செய்கிறேன் என ஸங்கல்பித்து பசுவின் காது போன்ற குழிவுள்ள தாம்ரம் முதலியதான பாத்திரத்திலோ, இடது கையிலோ நீரெடுத்து, 'ஆபோஹிஷ்டா' என்ற மந்த்ரத்தின் வ. ர என்று முடியும் பாதங்களால் தலையிலும் 'ந'வில் முடியும் பாதத்தால் இரு பாதங்களிலும் 'ஸ' த யில் முடிகிற பாதங்களால் மார்பிலும், காலையிலும் நடுப்பகலிலும் மாலையிலும் தெளிப்பர். "ஸுர்யச்ச" ஆப: புநந்து," அக்நிச்ச என்று தொடங்குகிற மந்த்ரங்களால் நீரை மந்த்ரித்துப் பருகி ஆசமனம் செய்ய வேண்டும். ஓங்காரம், வ்யாஹ்ருதிகள் ஓங்காரம் காயத்ரீ, ஆபோஹிஷ்ட்டா என்ற மந்த்ரத்தால் மறுபடி நீர் தெளித்துக் கொண்டு, 'ருதம் ச' என்ற மந்த்ரத்தின் மூன்று ருக்குகளையும் சொல்லி இடது மூக்கு வழியே மூச்சிழுத்துப் பாபங்களைப் புருஷ வடிவம் பெற்றதாகக் கருதி அதனை வலது மூக்கு வழியே வெளிப்படுத்தி கையில் உள்ள நீரில் அது அழிந்து விழுந்து விட்டதாகக் கருதி, பார்க்காமலேயே இடது பக்கத்துத் தரையில் விட்டு ஆசமனம் செய்து கை நிறைய நீர் நிரப்பி, கட்டை விரலையும் ஆள் காட்டி விரலையும் நீக்கித் தன் இதயத்திலிருந்து பன்னிரண்டு அங்குலம் நீர் எம்பி விழும்படி தூக்கி ஸுர்யனை நோக்கி நின்று வியாஹ்ருதியுடன் காயத்ரியைச் சொல்லி மூன்று தடவை அர்க்கியம் விடவேண்டும். 'அஸா வாதித்யோ ப்ரஹ்ம' என ஸுர்யனைப் பரம்பொருளாகப் பாவித்து நீரால் சுற்றித் தெளித்து ஆசமனம் செய்யவும். நடுப் பகலில் ஹம்ஸ

*மந்த்ரத்தால் வணங்கி அர்க்க்யம் தரவும். (96)*

जपेद्गृहाद्बहिर्द्विघ्नं त्रिघ्नं नद्यां शतं फलम् ।
गोष्ठे वनेऽग्निहोत्रे च हरहर्यग्रतोऽमिति ।। ९७

काष्ठासनेऽकीर्त्यकर्णं दौरात्म्यं पल्लवेंऽशुके ।
दैन्यं रुग्ग्राव्ण्यथाऽऽरोग्यं भसिते कम्बले सुखम् ।। ९८

विदैणेयेऽजिने द्वैपे मोक्षः प्रज्ञायुषी कुशे ।
व्याहृत्यास्मिन्सिद्धपद्मस्वस्तिकाद्यासनात्सुखम् ।। ९९

उपविश्य क्षमां प्रार्थ्य भूतान्युत्सार्य भावयेत् ।
यथाङ्गमात्मन्यात्मानं देव्या तद्रूपमेकधीः ।। १००

आर्षदैवतछन्दांसि स्मरन्नक्षरपूर्वकान् ।
न्यासान्कृत्वाऽखिला मुद्राः प्रदर्श्य मनुदेवताम् ।। १०१

तां बालां बालादित्येति त्रिभिर्ध्यानैस्त्रिकालतः ।
ध्यात्वा चागच्छ वरद इति तिष्ठन्समाहितः ।। १०२

प्रागास्यो मन्त्रार्थमनुसन्दधानो जपेच्छनैः ।
सोङ्कारव्याहृतिं देवीं छिन्नपादां स्रजांशुके ।। १०३

मत्रकारो मनस्त्राणौ तद्योगान्मन्त्र उच्यते ।
जन्मविच्छेदपापघ्नौ जपकारौ तु तद्युजा ।। १०४

प्रोक्तो जपो हि यज्ञोऽयं सर्वयज्ञेषु तूत्तमः ।
वाचिकोऽसन्मानसः सन् रहस्यो मध्यमो जपः ।। १०५

शाखारेखाशङ्खमणि-प्रवालस्फटिकैर्जपे ।
मुक्तापद्माक्षीस्वर्णाक्षैर् दशोत्तरगुणं फलम् ।। १०६

प्रोक्षिता स्रक् सती मेरुलङ्घने स्रक्च्युतौ जपे ।
तन्द्र्यादौ च जपाच्छुद्धिर् देवीं नासाग्रदृग्जपेत् ।। १०७

*காயத்ரீ ஜபம் :—* வீட்டின் வெளியே காயத்ரீ ஜபம் செய்ய இரண்டு மடங்கு பலன் தரும். ஆற்றங்கரை, பசு மாட்டுத் தொழுவம், காடு, அக்னி ஹோத்ரசாலை. சிவன், விஷ்ணு இவர்களின் எதிரே, ஜபம் செய்ய வரையற்ற பயன் தரும். அமர்ந்து கொள்ள, மரப்பலகை புகழ்கெடும், கடன் நேரும். இலையாலான ஆஸனம் முரடனுக்கும். துணியாலானது ஏழ்மை தரும். பாறுங்கல் மீது அமர்வது நோய் தரும். சாம்பல் மீது அமர்வது ஆரோக்யத்தையும், கம்பிளி ஸுகத்தையும் கருமான் தோல் அறிவையும் புலித்தோல் முக்தியையும் தர்ப்பாஸனம் பேரறிவையும் ஆயுளையும் தரும். வியாஹ்ருதி சொல்லி பத்மாஸனத்தில் அமர்ந்து பூமியிடம் இடம் தர வேண்டி, தடை நேராவண்ணம் சுற்றியுள்ள பூதம் முதலியவற்றை விலக்கி காயத்ரியை உடலின் ஒவ்வொரு பகுதியிலும் இருப்பதாக ஹ்ருதயம் முதலிய நியாஸங்களால் பாவனை செய்து, தன்னைத் தானே காயத்ரியாக மாறிவிட்டதாக ஒருமித்த சித்த முனைவுடன் ருஷி சந்தஸ் தேவதா இவர்களை நினைத்து வணங்கி, அக்ஷர ந்யாஸம் செய்து முத்திரைகள் காட்டி, காலையில் பாலையாக, நடுப்பகலில் யுவதியாக, மாலையில் முதிர்ந்தவளாகத் த்யானித்து 'ஆகச்ச வரதே' என அழைத்து கிழக்கு முகமாக நின்று மனச் சலனமின்றி காயத்ரியின் பொருளறிந்து வானை நோக்கி காயத்ரியை மெள்ள ஜபிக்க வேண்டும். ப்ரணவம் வ்யாஹ்ருதி இணைத்து பாதம் பாதமாகப் பிரித்து ஜபம் செய்ய வேண்டும். மன்-மனம், த்ர-காப்பாற்றுவது. அதனுல் அது மந்த்ரம். ஜ-பிறப்பு - ப-பாபத்தை நீக்கிக் காப்பது. அதனுல் ஜபம் என்பர். எல்லா வேள்விகளையும்விட ஜபம் எனும் வேள்வி சிறந்தது. வாயால் வெளிப்பட ஜபிப்பது. வாசிகம். மனத்தால் உச்சரிப்பது மானஸம் (உபாம்சு). மானஸம் சிறந்தது. உபாம்சு நடுத்தரம். வாசிகம் தாழ்ந்தது. கை விரல் விட்டெண்ணுவது தாழ்ந்தது. விரல் கணுக்களைக் கொண்டு எண்ணுவது மத்யமம். 'அ' முதல் 'க்ஷ' வரை உள்ள எழுத்துக்களைச் சேர்த்து மந்த்ர ஜபம் செய்வதும் அக்ஷர வடிவில் பாவித்த ஐம்பது மணிகள் கொண்ட அக்ஷமாலையால் ஜபிப்பதும் சிறந்தது. கைவிரல், விரலிலுள்ள கணுக்களின் ரேகை, சங்கு, ரத்தினம், பவழம், ஸ்படிகம், முத்து, பத்மாக்ஷம், தங்கமணி, இவற்றைக் கொண்டு ஜபத்தை எண்ணுவது முன்னதைவிடப் பின்னது பத்துமடங்கு

பலன் அதிகம் தரும். ஜபத்திற்கு முன் ஜபமாலையை நீர் தெளித்துத் தூயதாக்க வேண்டும். நடுவில் மேரு என்ற தொங்கட்டானைத் தாண்டாமல், சோர்வாலும், தூக்கத்தாலும் மாலை கைவிட்டு நழுவாமல், சோம்பலின்றி மூக்கின் நுனியில் பார்வையை நிறுத்தி ஜபிக்க வேண்டும். விரல் ஜபமாலை முதலியவற்றைத் துணியால் மறைத்து ஜபம் செய்வர். மாலை நழுவி விழுந்தால் மறுபடி தொடங்கி ஜபம் செய்வர். (107)

**यतिर्जपेत्षडोङ्कारां सहस्रं चाष्टयुक्शतम् ।**
**अन्योऽष्टाविंशतिं पङ्क्तिं नार्थार्थी तां जपेद्विजः ।। १०८**

**मैत्रैः सौरैरुपस्थाय वारुणैश्च क्रमात्सदा ।**
**जातवेदसे तच्छंयोस् त्रिर्नमो ब्रह्मणे इति ।। १०९**

**प्रणम्य दिक्तत्पदेव-विप्रान्सन्ध्यां विसृज्य च ।**
**गुरुं निषण्णं प्रागास्यं संमुखोऽत्राभिवादयेत् ।। ११०**

**कराभ्यां यथा वामान्य-कर्णौ स्पृष्ट्वा पदौ गुरोः ।**
**व्यस्ताभ्यां स्पृष्ट्वा शिरोऽङ्घ्र्योर्न्यसेत्तदभिवादनम् ।। १११**

**हृद्दृग्वाक्पत्कोरुवक्षः करैर्देवान्नमेद्वरान् ।**
**ज्ञानल्पानपि सद्विप्रान् पाणिभ्यान्नाशुचीन्नमेत् ।। ११२**

ஸந்யாஸி ஓங்காரத்தை 6000 தடவை ஜபம் செய்வார். மற்றவர் 108 தடவை (ஓங்காரம் வ்யாஹ்ருதி காயத்ரி) சொல்வர். அசக்தியில் 28-10 தடவை ஜபிப்பர். பணத்தாசையில் ஜபம் செய்யக் கூடாது. மித்ரனையும், ஸூர்யனையும், வருணனையும் துதிக்கிற மந்த்ரங்களால் காலை, பகல், மாலை வேளைகளில் உபஸ்தானம் செய்து, மூன்று வேளைகளிலும் "ஜாத வேதஸே" "தச்சம்யோ:" "நமோ ப்ரஹ்மணே என்று மந்த்ரங்கள் கூறி வணங்கி திக்குகள், திக்பாலர்கள், தேவர்கள், அந்தணர்கள், இவர்களை வணங்கி ஸந்த்யா தேவிக்கும் விடை தருவர். கிழக்கு முகமாக அமர்ந்துள்ள தன் குருவைத் தனது வலது, இடது கைகளால் தொட்டு அவரது பாதங்களில் தன் தலை படும்படி வணங்க வேண்டும். மனம், கண்கள், வாக்கு, கால், துடை, மார்பு, கைகள், தலை என்ற

எட்டங்கங்கள் பூமியில்படப் பெரியோரை வணங்க வேண்டும். வயதில் குறைந்து அறிவால் உயர்ந்தவர்களைக் கை கூப்பி வணங்குவர். நீராடாமல் சுத்தி குறைந்தவர்கள், அக்னி ஸமித்து முதலிய வழிபாட்டுப் பொருளைக் கையில் வைத்திருப்பவர், அற்பர் இவர்களை வணங்கக் கூடாது. ஒரு கையால் வணங்கக் கூடாது. (112)

कर्मस्थाग्र्यादिहस्तान् तद्वत्स्वयं चाल्पकान्करात्।
उद्वाहोर्ध्वं चरेत्सायं प्रातरौपासनं स्वयम्।। ११३

पत्नी वान्यतराग्रेऽन्यश् चेद्धमन्या प्रबोध्य तम्।
प्रादुष्कृताग्निं ध्यात्वाऽलङ्कृत्य संस्कृत्य हौम्यकम्।। ११४

ज्वालायां समिधं हुत्वा प्रातः सूर्याय चाग्नये।
सायं तूष्णीं तूभयत्र द्वितीयां जुहुयात्ततः ।।११५

उपतिष्ठेत्स्वर्चिताग्निः सूर्याग्निमनुभिः क्रमात्।
कायाभ्यां तूभयत्रात्र षष्टिधान्यमिताहुतिः ।। ११६

पयोदध्याज्यनीवार-यवव्रीह्यादि हौम्यकम्।
गृह्यं परिचरेच्छ्रौताग्नीन्वापि ज्ञाततद्वृषः ।। ११७

नातीयाद्ब्राह्मणो यज्ञान् नित्यमासिकवार्षिकान्।
नाहोतीयाद्विना दानं शक्त्या दद्यात् किमप्युत ।। ११८

भगवन्तं हरिं विष्णुं संस्मरेत्सर्वदाऽसकृत्।
संस्कृते साररे च्छन्ने स्वे गृहे निवसेद्गृही ।। ११९

ஔபாஸனம்- திருமணமானதும் மாலையிலும், காலையிலும் ஔபாஸனத்தைத் தானோ, பத்னியைக் கொண்டோ செய்ய வேண்டும். தம்பதிகளில் ஒருவர் முன்னிலையில் அசக்தியிருந்தால் புத்ரனும் செய்யலாம். அக்னியை அணையாமல் காப்பாற்றி ஔபாஸனத்தின் போது ஊதுகுழாயால் கிளப்பி, நன்கு பற்றியதும் அக்னி பகவானைத் த்யானித்து அலங்கரித்து ஹோமப் பொருளைத் தோஷம் நீக்கித் தக்கதாக்கி, ஜ்வாலையில் காலையில் ஸூர்யனுக்கும் மாலையில் அக்னிக்கும் ஸமித்தை ஹோமம் செய்து, இரண்டு

வேளைகளிலும் மந்த்ரமின்றி ப்ரஜாபதிக்கும் ஹோமம் செய்து அக்னியைப் பூஜித்து பகலில் ஸூர்ய மந்த்ரங்களாலும், இரவில் அக்னி மந்த்ரங்களாலும் இரண்டு வேளைகளிலும் ''ஹிரண்யகர்ப்ப:'' ''ப்ரஜாபதே'' மந்த்ரங்களாலும் உபஸ்தானம் செய்ய வேண்டும். அறுபது உமிநீக்காத தான்யத்தைக் கொண்டும், பால், தயிர், நெய், நவரை தான்யம், யவை, நெல் முதலியவற்ருலும் க்ருஹ்யம் ச்ரௌதம் என்ற இரு அக்னிகளிலும் செய்கிற தனி வழிபாடுகளைத் தவருமல் புரிய வேண்டும். தானமின்றி ஒரு நாள் கூடக் கழியக் கூடாது. சக்திக் கேற்ப தானம் செய்யலாம். நன்கு பராமரிக்கப் பெற்ற வாசலுள்ள வீட்டில் மறைப்புகள் வைத்து அதில் வசிக்க வேண்டும். *(119)*

भूः पूताप्युपलिप्ता चेत् पुनर्लेपेन शुद्ध्यति ।
तन्नित्यं वास्तूपलिम्पेत् प्रेताद्योऽलिप्तकेऽस्ति हि ।। १२०

कांस्यांशुकेऽत्र गर्ह्ये गो-विशा नैरृकतितो गृहम् ।
उपलिप्य स्वलङ्कार्यं रङ्गवल्ल्यादिनाऽन्वहम् ।। १२१

स्थाप्यं गव्यं तिलाश्चर्म मणिश्रीखण्डधेनवः ।
त्रिसन्ध्येऽर्च्योऽमरः प्रातर्विस्तराच्चन्दनादिना ।। १२२

मध्याह्ने निशिदीपैर्वा गोवज्जन्मान्यथा द्विज ।
गुर्वर्काग्न्यम्ब्वष्टधार्चा गोविप्रान्यतमार्चनम् ।। १२३

कुर्यात्तिष्येऽजसामीप्यं शालिग्रामे तमप्युत ।
गुर्वाज्ञया भक्तिमान्यं पूजयेत्स प्रसीदति ।। १२४

देवो भक्ततपोयोगादृच्छत्यर्चनगौरवात् ।
बिम्बाभिरूप्यात्सामीप्यं भक्तिरेवात्र कारणम् ।। १२५

नाश्रद्दधानोऽधिकारी संशयात्माऽत्र नास्तिकः ।
येभ्यो मातेति पुंगन्धं निवार्यादाय चाखिलान् ।। १२६

संभारानुपविश्याग्रे देवस्याप्पूरितं घटम् ।
दक्षभागे निधायाब्जं प्रपूज्य प्रोक्ष्य तत्स्थलम् ।। १२७

स्वं संभारांश्च भूभूतशुद्धिं कृत्वा यथायथम्।
प्राणान्प्रतिष्ठाप्य चान्तर् बहिर्मातृकया न्यसेत्।। १२८

तनौ देवेऽपि पुंसूक्त-मन्त्रैश्चापि यथाक्रमम्।
कराङ्घ्र्यूरुकटीनाभि-हृद्ग्रीवादोर्मुखाक्षिके।। १२९

एवं भूत्वा सुरोऽर्घ्यादि-पात्राण्यप्पूरितानि च।
संस्थाप्येशकलां हृत्स्थाम् आपादतलमस्तकम्।। १३०

ध्यात्वाऽञ्जलौ सुमगतां विभाव्यार्चागतां ततः।
प्रकल्प्यार्चां देवरूपां साक्षान्मत्वा ततोऽर्चयेत्।। १३१

सम्पूज्य पीठद्वाराशा मन्त्रतन्त्रविधानतः।
पुंमन्त्रैर्वाह्वानपीठ पाद्यार्घ्याचमनाप्लवान्।।१३२

वस्त्रे सूत्रे गन्धपुष्पे धूपदीपाशनादिकम्।
नतिप्रदक्षिणापुष्पाञ्जलीन्भक्त्याऽर्पयेत्क्रमात्।। १३३

(यजेत्पौराणिकैर्मन्त्रैः स्त्रीः शूद्रश्च द्विजोदितैः।)

संभवे सत्याप्लवादौ दद्यात्पञ्चामृतानि च।
भूषाः सुभोगा गन्धोर्ध्वमशनेऽन्नं चतुर्विधम्।। १३४

राजोपचारताम्बूलदक्षिणारार्तिकैः फलैः।
स्तोत्रैर्गीतैर्नृत्यवाद्यैस्तोषयेद् द्विजभोजनैः।। १३५

*தேவ பூஜை :—* பூமி தானே சுத்தமானது. அதன் மீது அழுக்கு ஒட்டும். அதனால் தினமும் கோமயத்தால் வீட்டை மெழுக வேண்டும். மெழுகி அழுக்கு நீக்காத இடத்தில் ப்ரேதம் முதலியவை கூடும். தென் மேற்கில் தொடங்கி வீடு மெழுகிக் கோலமிட்டு, பசுநெய், பால், எள்ளு, மான்தோல், மணி, சந்தனம், பசு இவை அருகில் இருக்க வேண்டும். தெய்வத்தை மும்முறை வழிபட வேண்டும். இரவில் தீப ஆரத்தி செய்ய வேண்டும். இல்லா விடில் மிருக வாழ்க்கை நடப்பதாகக் கொள்ளலாம். குரு,

ஸூர்யன், ஔபாஸநாக்னி, ஜலம், இஷ்ட குல தெய்வங்களின் எட்டு வகையிலான ப்ரதிமை, பசு, அந்தணர், இவர்களை வழிபட வேண்டும். கலியில் எளிதில் விஷ்ணுவின் அருகாமை பெற ஸாலக்ராமத்தில் வழிபடலாம். குருவின் அனுமதியுடன் பூஜை செய்ய ஈசன் அருள்புரிவார். பக்தனின் தவமும் வழிபாடும் பிம்பத்தின் அழகும் விரைவில் இறைவனின் அருகாமையைக் கொணரும். ஸந்தேஹமும் ச்ரத்தையின்மையும் நாஸ்திகமும் கொண்டவரின் வழிபாடு பலன் தராது. யேப்ப்யோ மாதா என்ற மந்த்ரத்தால் ஆண் வாடையை அகற்றி, எல்லா பூஜை உபகரணங்களையும் சேமித்து, தேவனின் எதிரில் அமர்ந்து வலது புறத்தில் ஜல கலசத்தையும் இடது புறத்தில் ஜலம் நிறைந்த சங்கையும் வைத்துப் பூஜித்து அந்நீரால் பூமி சுத்தி, பூத சுத்தி, ப்ராண ப்ரதிஷ்டை செய்து, அந்தர் நியாஸம், பஹிர்நியாஸம், இவற்றால் தன் உடலிலும் ப்ரதிமையிலும் தெய்வ ஆற்றல் நிரம்பியதாகப் பாவித்து, புருஷஸூக்தத்தால் தன் உடலிலும் ஈச விக்ரஹத்திலும் கை, கால், துடை இடுப்பு, நாபி, மார்பு, கழுத்து, தோள், முகம், கண்கள், தலை முதலிய இடங்களில் தெய்வ சக்தியைப் பரப்பித் தானே தேவனாகி அர்க்கியம் முதலியவற்றை நிரப்பி, ஈசனின்கலையை இதயத்தில் காலிலிருந்து தலைவரை த்யானித்து அஞ்ஜலியிலுள்ள புஷ்பத்தின் மீது கொணர்ந்து விக்ரஹத்தில் கொண்டு சேர்த்து நேரே தேவனைக் காண்பதாக மனத்தில் உருவகப் படுத்திக் கொள்ள வேண்டும். பீட சக்தி, த்வாரபாலர், திக்பாலர் இவர்களை மந்த்ர தந்த்ர முறைப்படி வழிபட்டு, புருஷ ஸூக்த விதானத்தால் ஆவாஹனம் , ஆஸனம், பாத்யம், அர்க்க்யம், ஆசமனம், ஸ்நானம், வஸ்த்ரம் உபவீதம், சந்தனம் முதலிய நறுமணப் பொருளளிப்பது, புஷ்பாலங்காரம், தூபம், தீபம், நிவேதனம், நமஸ்காரம், வலம் வருதல், புஷ்பாஞ்ஜலி, இவற்றை முறைப்படிப் பக்தியுடன் செய்ய வேண்டும். பெண்களும் சூத்ரரும் புராணத்தில் கூறிய மந்த்ரங்களால் செய்யலாம். வசதியிருந்தால் ஸ்னானத்தில் பஞ்சாம்ருத ஸ்னானம் என்றவாறு ராஜோபசார தேவோபசாரங்களைச் செய்விக்கலாம். தாம்பூலம், தக்ஷிணை, ஹாரத்தி, பழம், துதி, கீதம், நிருத்தம், வாத்யம் இவற்றால் திருப்திப் படுத்தலாம். அந்தணர்களை அமர்த்திப் போஜனம் செய்விக்கலாம். (135)

घण्टानादं चरेदादौ स्नाने धूपप्रदीपयोः ।
दद्यादाचमनं स्नाने नैवेद्ये वस्त्रसूत्रयोः ॥ १३६

जलं प्रत्युपचारं च शङ्खांब्वीशं विनाऽऽप्लुतौ ।
स्वारामारण्यक्रयाप्तं पुष्पं सन्मध्यमं त्वसत् ॥ १३७

तद्वच्छ्वेतारक्तकृष्णं वर्ज्यं पर्युषितं सुमम् ।
सच्छिद्रं जन्तुयुक् शीर्णं कीटाद्यात्तं स्वयं च्युतम् ॥ १३८

समलं वामहस्ताङ्घ्रिस्पृष्टं क्षालितमम्बुनि ।
बकुलाब्जाशोकजाती दूर्वाबिल्वं शमी कुशः ॥ १३९

तुलसी करवीरं च मल्लिकाशोकमुत्तमम् ।
कोविदारार्कधत्तूर शाल्मलीकुटजैर्हरिः ॥ १४०

नार्च्यो गणेशस्तुलस्या दूर्वयार्येश्वरोऽसितैः ।
रक्तैः केतकनिम्बाद्यैर् बिल्वं श्वेतसुमं प्रियम् ॥ १४१

दूर्वा गणेशस्य विष्णोस् तुलसीत्यादि सर्वशः ।
ज्ञात्वा पुष्पाणि देयानि श्रद्धया देवतुष्टये ॥ १४२

முதலில் மணி அடித்துப் பூஜை துவங்க வேண்டும். ஸ்னானத்தின் போது தூப தீபங்கள், ஸ்நானம் நைவேத்யம், வஸ்த்ரம், உபவீதம் இவை நடந்ததும் ஆசமனம், சிவனைத் தவிர மற்றவருக்கு சங்க ஜலத்தால் ஸ்நானம், தன் தோட்டத்துப் புஷ்பத்தால் அர்ச்சனம் சிறந்தது. காட்டுப் பூ நடுத்தரம், தன் தோட்டத்துப் புஷ்பத்தால் அர்ச்சனம் சிறந்தது. சிகப்புப் பூ மத்தியமம் கருப்புப் பூ அதமம். பறித்து ஒரு நாளானது பொத்தலுள்ளது. இதழ் உதிர்ந்தது, பூச்சி அரித்தது, புழு உள்ளது. தானே மரத்திலிருந்து உதிர்ந்தது. அழுக்கானது. இடது கை கால்பட்டது. ஜலம் விட்டு அலம்பியது, இவை பூஜைக்கு உரியவையல்ல. மகிழம்பூ, தாமரை, அசோகப்பூ, ஜாதிப்பூ, அருகம்புல், வில்வம், வன்னியிலை, குசம், துளஸீ, அரளி, மல்லிகை இவை பூஜையில் ஏற்றவை. கொன்றை, எருக்கு, ஊமத்தை,

முள்ளிலவு, வெட்பாலைப் பூ இவை விஷ்ணுவிற்கு ஏற்றவை அல்ல. துளஸியால் கணேசரும், அருகம் புல்லால் ஈச்வரியும், கருப்புப் பூ, சிவப்புப்பூ, தாழை, வேப்பம்பூ இவற்ருல் சிவனும் வழிபடத் தக்கவரல்ல. வில்வ இலையும் வெண்ணிறப்பூவும் சிவனுக்கு, அருகம்புல் கணேசருக்கு, துளஸி விஷ்ணுவிற்குப் பிரியமானவை. இவ்வாறு பகுத்தறிந்து புஷ்பத்தால் வழிபட வேண்டும். (142)

हुत्वा पुंसूक्तेन दत्वा पुष्पाणि प्रार्थयेद्धरिः ।
मन्त्रं जपेद्यथाशक्ति भक्त्या तद्गतहृद्विजः ॥ १४३

द्विजदेवांघ्र्यब्जतीर्थं पेयं धार्यं च मूर्धनि ।
चतुर्धाऽध्ययनं कुर्यात्स्ववृत्त्या पोष्यपोषणम् ॥ १४४

स्ववृत्त्या जीवनाभावाद् गुर्वापद्यन्यवार्तया ।
जीवेतानिन्द्यया नैव हीनवृत्त्या कुटुम्ब्यपि ॥ १४५

புருஷ ஸூக்தத்தால் பக்தியுடன் ஹோமம் செய்து புஷ்பாஞ்ஜலி செய்ய வேண்டும். அந்தணர்கள் தேவர்கள், இவர்களின் திருவடி தீர்த்தத்தைப் பருகித் தலையில் தெளித்துக் கொள்ள வேண்டும். வேதத்தை ஓதியும் ஓதுவித்தும் பொருளுணர்ந்தும் பொருளுணர்த்தியும் நான்கு விதமாக வேதமோத வேண்டும். தம் தமது பிறப்பிற்கு ஏற்ற பிழைப்பு முறையால் தேவையைப் பெற்று வாழ வேண்டும். அவ்வாறு வாழ முடியாவிடில் நெருக்கடியில் பிறரது வாழ் முறையைப் பின் பற்றலாம். பிறரது அவதூறுக் கிடமின்றி, குடும்பத்தைக் காக்க வேண்டும். பாப விருத்தியை எந்நிலையிலும் ஏற்கக் கூடாது. (145)

कृतसन्ध्यः कृतोपस्थो जानुस्थसकुशाञ्जलिः ।
सोङ्कारव्याहृतिं देवीं रोदसीदत्तदृग्जपेत् ॥ १४६

तां पच्छोऽर्धर्चशः सर्वां वेदान्साङ्गान्स्वशक्तितः ।
तिष्ठन्नासीनो व्रजन्वाऽनध्यायेऽल्पं जपेत्ततः ॥ १४७

त्रिर्नमो ब्रह्मण इति तर्पयेत्साक्षताञ्जलिः ।
देवानृषीन् तिलैः पितॄन् स्वगृह्योक्तविधानतः ॥ १४८

यज्ञादिवर्ज्यमाशौचे कर्म मानसिकं चरेत्।
यमाग्निपितृभे नन्दा शुक्रार्कौहि जनुर्दिने ।। १४९

माङ्गल्येऽब्दतदर्धार्धं विवाहव्रतचौलतः ।
तिलैर्नैमित्तिकमृते तर्पयेन्न गृहे तु न ।। १५०

भीष्मं माघसिताष्टम्यां दीपाल्यां तर्पयेद्यमम्।
नित्यैर्नैमित्तिकैः श्राद्धैः सत्पुत्रः पुत्रतां व्रजेत् ।। १५१

ப்ருஹ்ம யஜ்ஞும் :— நடுப்பகலில் ஸந்த்யாவந்தனம் ஜபம் உபஸ்தானம் ஆன பிறகு, முழங்கால்மீது தர்பம் தரித்த அஞ்ஜலியால் வானை நோக்கி அமர்ந்து ப்ரணவம் வியாஹ்ருதியுடன் காயத்ரியை தனித் தனிப்பாதமாக பாதி மந்த்ரமாக, ஜபித்து, நான்கு வேதங்களையும் அங்கங்களையும் முடிந்தவரை ஓத வேண்டும். நின்றும் உட்கார்ந்தும் நடந்து கொண்டும் வேதம் சொல்லலாம். வேத மோதக் கூடாத அஷ்டமி சதுர்தசி அமாவாஸ்யை பௌர்ணமி முதலிய நாட்களில் கொஞ்சமாக ஜபிக்கலாம். 'நமோ ப்ரஹ்மணே' என்ற மந்த்ரத்தை மூன்று தடவை சொல்லி அக்ஷதையுடன் கூடிய அஞ்ஜலியால் தேவர்களையும், ருஷிகளையும் எள்ளுடன் பித்ருக்களையும் தம் தம் க்ருஹ்ய ஸூத்ரம் வழிகாட்டியபடி தர்ப்பணம் செய்ய வேண்டும். தீட்டு (ஆசௌசம்) நாட்களிலும் பரணி, க்ருத்திகை, மகம், ப்ரதமை, ஷஷ்டி, ஏகாதசி, வெள்ளிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை, ஜன்ம திதி நக்ஷத்ரங்கள் இவற்றில் ப்ரஹ்ம யஜ்ஞும் தவிர மற்றவற்றை மானஸிகமாகச் செய்யலாம். விவாஹத்திற்குப் பிறகு ஓர் ஆண்டிற்கும், உபநயனத்திற்குப் பிறகு ஆறு மாதங்களுக்கும், சௌளத்திற்குப் பின் மூன்று மாதங்களும் எள்ளால் தர்ப்பணம் செய்வதில்லை. மாசி க்ருஷ்ணாஷ்டமியில் பீஷ்மருக்கும் தீபாவளியன்று யமனுக்கும், தகப்பனுள்ளவனும், தர்ப்பணம் செய்வர். இவ்வாறு நித்ய நைமித்திக ச்ராத்தங்களால் பித்ருக்களைத் திருப்தி செய்து புத்ரன் தன் கடமையைச் செய்தவனாகிறான். (நித்ய ச்ராத்தம் ஓர் ஆண்டில் 96 ச்ராத்தங்கள் (ஷண் நவதி). நைமித்திக ச்ராத்தம். கயை முதலிய புண்ய க்ஷேத்ரங்களில் செய்வது). (151).

त्रियज्ञाढ्यं वैश्वदेवं कुर्यात्सूनापनुत्तये।
ध्याते कुण्डस्थापितेऽग्नौ दीप्तेऽन्नाद्याहुतीर्हुनेत्॥ १५२

प्रातः सायं बलीन्दद्यात् पितृभ्योऽपि बहिर्बलिम्।
भूताद्युद्देशतः क्षिप्त्वा काङ्क्षेदतिथिमागतम्॥ १५३

कमप्यभ्यर्च्य शक्त्यान्नं देयमीश्वरतुष्टये।
साद्यान्ताम्ब्वन्नं यतौ तत् स्वल्पमप्यद्रिसिन्धुवत्॥ १५४

बलावनुद्धृते नाद्यान्नोद्धरेच्च स्वयं बलिम्।
नित्यं श्राद्धं चरेद्वान्नं दद्यादद्याच्च पोष्ययुक्॥ १५५

*வைச்வதேவம் - அதிதி பூஜை— தேவயஜ்ஞும், பூத யஜ்ஞும், பித்ரு யஜ்ஞும், இவற்றின் நிறைவாக வைச்வ தேவம் செய்யப்படுகிறது. க்ருஹஸ்தன் அன்ருடம் தமது பணிகளில் செய்கிற ஹிம்ஸையால் நேர்ந்த பாபம் இதனுல் நீங்குகிறது. (உயிர் வாழ் ப்ராணி மட்டும் உயிரினமல்ல. மரம் செடி கொடி முதலியவையும் உயிரினமே. அம்மி, கல்லூரல், அடுப்பு, கத்தி, விளக்குமாறு முதலியவற்ருல் இவற்றிற்கு அழிவு நேர்வதால் ஜீவ ஹிம்ஸையின்றி வாழவே இயலாது. அம்மி முதலியவற்ருல் நேர்கிற ஹிம்ஸையையும் போக்க வைச்வதேவம். குண்டத்தில் நெருப்பிட்டு தீக்கதிர் எழுந்ததும் அக்னி தேவனைக் த்யானித்து அன்னம் முதலியவற்றை ஹோமம் செய்து, வெளியில் இவர்களுக்காக முறைப்படி இடமளித்துப் பலியிடுவர். இது முடிந்ததும் அதிதிக்கு உணவளிப்பது ஈசனின் வழிபாடாக அமையும். துறவிக்கும் வேதமோதுகிற ப்ரஹ்மசாரிக்கும் பருகுநீர் - உணவளிப்பது சிறிதும் மலையும், கடலுமாகும். பலியை அகற்றச் செய்த பின்னர் தான் சாப்பிட வேண்டும். பலியைப் பிறர் அகற்ற வேண்டும். தானே அகற்றக் கூடாது. தினமும் பித்ருக்களை உத்தேசித்து அன்னமிடலாம். தன்னுல் காக்கத்தக்கவருடன் சேர்ந்தே சாப்பிட வேண்டும். (155).*

मन्त्रवत्परिषिच्यार्द्र-हस्ताङ्घ्र्यास्योऽविदिङ्मुखः।
दक्षभागे बलीन्दत्वाऽहं वैश्वानर इत्यमुम्॥ १५६

स्मृत्वापो मन्त्रवत्प्राश्य हुतप्राणाहुतीर्ग्रसेत्।
धृतपात्रः प्राणमन्त्रैरजावद्भोजनं चरेत्॥ १५७

पात्रधारणमौने तु प्राणाहुत्यूर्ध्वमैच्छिके।
तैजसे राजते हैमे ताम्रे जम्ब्वाम्रचम्पके॥ १५८

रम्भामधूककुटज-पनसोदुम्बरच्छदे।
भोक्तव्यं मण्डलोर्ध्वस्थे विधवाव्रतिभिक्षुभिः॥ १५९

न तैजसेऽखिलैर्वल्लीपलाशार्कवटादिषु।
पीठस्थोऽप्यासनारूढः प्रसृतप्रोष्ठपान्न तु॥ १६०

नार्भैर्वध्वोद्वाहमृते नाद्याद्दुष्टैकपङ्क्तिगः।
द्वार्भस्माग्र्यप्स्तम्भमार्गैर् भिन्द्यात्पङ्क्तिं तु संशये॥ १६१

नाद्यात्पाकाग्निदेवासद्गृहे सन्ध्यातिरात्रिषु।
पीतशेषं ग्रासशेषं रात्रिपर्युषितं विना॥ १६२

तैलाज्यपक्वं शूद्रान्नमुदक्यादिविलोकितम्।
केशकीटादियुक्पक्वं व्याद्युच्छिष्टं सदा त्यजेत्॥ १६३

*போஜனம் :— கைகால் - முகமலம்பிய பின் தென்கிழக்கு தென் மேற்கு முதலிய விதிக்கை நோக்காமல் அமர்ந்து இலையிலிட்ட உணவை மந்த்ரத்துடன் பரிஷேசனம் செய்து, இலையின் வலது புறத்தில் பலியிட்டு, ''அஹம் வைச்வாநரோ பூத்வா'' என்ற மந்த்ரம் சொல்லி கையில் இடப் பெற்ற நீரை ''அம்ருதோபஸ்தரணமஸி'' என்ற மந்த்ரத்தால் பருகி, ப்ராணாஹுதிகளை மந்த்ர பூர்வமாக வயிற்றிலுள்ள வைச்வாநராக்னியில் ஹோமம் செய்வதான பாவனையுடன், அன்ன பாத்திரத்தைத் தொட்டுக் கொண்டு பற்களில் படாமல் விழுங்க வேண்டும். மௌனம் அவச்யம். ப்ராணாஹுதிக்குப் பின் மௌனமும் பாத்ரதாரணமும் விருப்பம் போல். ஆடு போல் விரைவில் உண்ண வேண்டும். தங்கம், வெள்ளி, தாம்ரம்*

இவற்ருல் ஆன போஜன பாத்ரம் நல்லது. நாவல், மா, சம்பகம், வாழை இலுப்பை, வெப்பாலே, பலா, அத்தி இவற்றின் இலேகளில் சாப்பிடலாம். விதவை, ப்ரஹ்மசாரி, துறவி இவர்கள் உலோக பாத்ரத்தில் உண்ணக் கூடாது. புரசு, எருக்கு, ஆல் இவற்றின் இலேகள் உணவிட ஏற்றவையல்ல. உயர்ந்த பீடத்தின் மீதமர்ந்தும் ஆஸனப் பலகை மீது காலே வைத்தும், காலே நீட்டியும், உயர்ந்த பீடத்தில் கால்களேத் தொங்கவிட்டும் அமர்ந்து சாப்பிடக் கூடாது. சிறுவருடன் ஒரே தட்டில், திருமண நாளன்றைத் தவிர மற்ற நாட்களில் மனேவியுடன் ஒரே தட்டில் சாப்பிடக் கூடாது. துஷ்டருடன் ஒரே பங்க்தியில் உட்காரக் கூடாது. உட்கார நேரிட்டால், வாசற்படி, விபூதி, நெருப்பு, நீர், தூண், நடைபாதை இவற்ருல் பந்தியைப் பிரித்துக் கொள்ளலாம். சமையலறை, அக்னி வழிபடுமிடம், பூஜா க்ருஹம், கெட்டவனின் வீடு, இவற்றிலும் சந்த்யாகாலத்திலும் நடு நிசியிலும் சாப்பிக் கூடாது. பருகி மீந்த நீரையும் கவனமாக எடுத்து வாயிலிட்டபின் மீந்ததையும் எண்ணெய்யிலும், நெய்யிலும் பக்குவப்பட்டதைத் தவிர இரவு கடந்த மற்றதையும், மாதவிடாயுள்ள பெண்ணுல் பார்க்கப்பட்டதும், கேசம்புழு கலந்ததையும் பறவை முதலியவை உண்டு மீந்ததையும் தவிர்க்க வேண்டும். *(163)*

कुसुम्भालाबुवृन्ताक-कोविदारवटादिकम् ।
कुस्थानोत्थान्नशाकादि-पलाण्डुलशुनाद्यसत् ।। १६४

सद्गोलुलायीदुग्धादि सदन्यासां तु गर्हितम् ।
कांस्येऽसन्नारिकेलेक्षु-रसो गव्यं च ताम्रके ।। १६५

गुडः सदध्यार्द्रकोऽसन् केवलं लवणं त्वसत् ।
श्वोदक्यापतिताद्यारश्रवणे तद्विलोकने ।। १६६

भुक्तौ परस्पर स्पर्शे नाद्यात्पांक्तिस्थ उत्थिते ।
गुरून्विनोलूखलादिर्नाद्याद्यावदुध्वनि द्विज ।। १६७

नष्टे दीपे न भोक्तव्यं न मूत्राद्युत्सृतौ भुजिः ।
लेह्याद्यसद्धस्तदत्तं नोच्छिष्टं भाजने न्यसेत् ।। १६८

குசும்பா எள், சுரை, கத்திரி, மலையகத்தி, ஆல், தரமற்ற நிலத்தில் விளைந்த தானியம் காய்கறி முதலியவை, வெங்காயம் உள்ளிப் பூண்டு, இவை உணவிற்கு ஏற்றவையல்ல. இளங்கன்றுடன் நான்கு காம்புகளிலும் பால் சுரக்கிற பசு - எருமைப் பால் ஏற்றது. கழுதைப் பால் முதலியவை ஏற்றவையல்ல. வெண்கலப் பாத்திரத்திலிட்ட இளநீர், கருப்பஞ்சாறு, தாம்ரப் பாத்ரத்திலிட்ட பசுவின் பால், தயிரும் இஞ்சியும் கலந்த வெல்லம், தனித்து உப்பு மட்டும் இவை நல்லவையல்ல. நாய், ரஜஸ்வலை, புலையன் இவர்களின் குரல் கேட்டாலும் பார்வைபட்டாலும், ஒருவருக்கொருவர் தொட்டுக் கொண்டு சாப்பிடுவது, குருவைத் தவிர பந்தியின் நடுவில் ஒருவர் எழுந்துவிட்டால், உரல் உலக்கை இடிச்சத்தம் கேட்டால், உணவேற்பது நல்லதல்ல. உணவேற்கும்போது நடுவில் தீபம் அணைந்தால், சிறுநீர் கழிந்தால், உண்ணக் கூடாது. நக்கிமென்றுச் சுவைத்துச் சாப்பிடக் கூடியதைக் கையால் இட்டால் சாப்பிடக் கூடாது. வாயிலிட்ட பொருளின் மீதியை இலையில் திரும்ப வைக்கக் கூடாது. (168)

**ग्रसेदास्याविकारेण ग्रासानष्टौ यतिर्वनी।**
**षोडश द्वात्रिंशदन्यो वर्णीष्टं मधुरं द्रवम्॥ १६९**

**प्राङ्मध्येऽम्लादिकठिनं तिक्ताद्यन्ते द्रवं ह्यपि।**
**सर्वं सशेषमश्नीयात् पायसाज्याब्धिजैर्विना॥ १७०**

**नाद्यादव्रताहेऽर्कपर्वनक्तं भूताष्टमी दिवा।**
**तलप्रसृतशाखाभिर् भुक्तं फूत्कारतोऽप्यसत्॥ १७१**

முகத்தைக் கோணவிடாமல் துறவி எட்டுகவளமும் வானப் ப்ரஸ்தன் பதினாறு கவளமும், க்ருஹஸ்தன் முப்பத்திரண்டு கவளமும், ப்ரஹ்மசாரி விரும்புமளவும் சாப்பிடலாம். முதலில் இனியதும் த்ரவமுமானதையும், நடுவில் புளிப்பு முதலிய சுவையுள்ளதையும் கடினப் பொருளையும், கடைசியில் துவர்ப்பு, கசப்புள்ளதையும் த்ரவமாயுள்ளதையும் சாப்பிட மற்றதைச் சிறிது மீதம் வைத்துச் சாப்பிட வேண்டும். வ்ரத நாள், ஸூர்ய க்ரஹணம் இவற்றில் பகலிலும் இரவு முழுதும் அஷ்டமி நாளன்று இரவிலும்

சாப்பிடக் கூடாது. உள்ளங்கையில் வைத்துச் சாப்பிடக் கூடாது. ஊதி ஊதிச் சாப்பிடக் கூடாது. (171).

त्यक्त्वोच्छिष्टं क्षितौ मन्त्रात् पीतापोशनशेषकम्।
कौ सिक्त्वा रौरव इति मन्त्राच्छुद्धकरास्यपात्॥ १७२

हस्तोद्धृष्टाम्बु सिक्त्वाऽक्ष्णोर्जपेच्छर्यातिमित्यपि।
आतापिं चेति ताम्बूलं सत्पञ्चत्र्यैकपूगयुक्॥ १७३

साङ्गं प्राग्ब्रह्मणे दद्याद्द्यान्नदोऽथवा यतिः।
चूर्णाङ्घ्र्यग्रशिरोनं सत्पर्णं चाहोवशेषकम्॥ १७४

नयेत्पुराणमननात् ततो नक्तं कृतक्रियः।
स्वपेद्यामोर्ध्वं द्वियामं विष्ण्वर्पितसमक्रियः॥ १७५

உண்ட பின் மீந்தவைகளை ஒதுக்கி ஆபோசனம் ஏற்று, அந்த நீர் மீந்ததைத் தரையிலிட்டு ''ரௌரவே அபுண்ய நிலயே'' என்ற மந்த்ரம் கூறி எழுந்து கை-கால்-முகம் அலம்பி, வாயில் நீரிட்டுப் பதினாறு தடவை கொப்புளித்துத் துப்பிக் கையில் நீரெடுத்து, ''சர்யாதி ஸுகந்யா'' முதலியவர்களை நினைத்துக் கண் அலம்பி உண்ட உணவு ஜரித்து, ஆரோக்யம் தர வேண்டி, அந்தணருக்குத் தாம்பூலமளித்துத்தானும் தாம்பூலம் ஏற்கலாம். விதவையும், துறவியும் தாம்பூலம் ஏற்கக் கூடாது. வெற்றிலையைச் சுண்ணாம்பு தடவாமல், நுனியையும், காம்பையும் கிள்ளிவிட்டு பாக்கு சேர்த்துத் தர வேண்டும். வெற்றிலையைச் சுண்ணாம்பு தடவாமல் நுனியையும், காம்பையும் கிள்ளி அத்துடன் 5-3-1 என்ற கணக்கில் பாக்கு சேர்த்துத் தர வேண்டும். மீதியுள்ள பகல் பொழுதை புராண மனனம் செய்து கழித்து மாலை ஸந்த்யாவந்தனம் செய்து யாமப்பொழுது (3 மணி) இரவில் கழிந்ததும் விஷ்ணுவிடம் அன்று செய்த பணிகளை அர்ப்பணம் செய்து தூங்க வேண்டும். (175)

सुमुहूर्तकृते तल्पे स्तुवन्निद्सुखशाय्यहीन्।
त्रिसन्ध्ये न स्वपेद्भूत्यां धान्येऽह्न्यमरगोगृहे॥ १७६

न श्मशानाध्ववल्मीक-घोरदेश उदक्शिराः ।
नग्नो नोर्ध्वं देवगुर्वोः प्रवासे प्राक्पदः स्वपेत् ।। १७७

कार्या निशाद्ययामान्तं सङ्कटान्तरिता क्रिया ।
नैशा निशीथपर्यंतं प्रायश्चित्तं ततः परम् ।। १७८

कर्मवैगुण्यादिदोषे लोपादावपि सर्वशः ।
प्रायश्चित्तं चरेद्विद्वान् यथावन्नान्यथा शुचिः ।। १७९

*தூக்கம் :— இரவில் அகஸ்த்யர் முதலான ஐந்து இனிது தூங்குபவரையும், ஸர்பங்களேயும் வணங்கி 2 யாம நேரம் தூங்க வேண்டும். மூன்று ஸந்தி வேளேகளில், சாம்பல்-தானியம் மீது அக்னிசாலே, தேவாலயம், பசுத் தொழுவம் இவற்றில் மயானத்தில் நடைபாதையில், புற்றின் மீது, காரமான இடத்தில் வடக்கில் தலே வைத்து, ஆடையின்றி, ஈசன் குரு இருக்குமிடத்தைவிட உயர்ந்த இடத்தில், படுக்கக் கூடாது. வெளியூர் பயணத்தில் கிழக்கே கால் நீட்டிப் படுக்கக் கூடாது. நற் கர்மங்கள் பகலில் செய்யத் தக்கதை நெருக்கடியில் இரவின் முதல் யாமம் வரை செய்யலாம். இரவில் செய்யத் தக்கதை இரவில் மட்டும் செய்யலாம். தவறினுல் ப்ராயச்சித்த முண்டு. கர்மங்கள் முறை தவறிச் செய்யப்பட்டாலும் செய்யத் தவறினுலும் ப்ராயச்சித்தமின்றி சுத்தி கிடைக்காது. (179)*

स्वर्क्षे स्वजायामृतूर्ध्वं शुद्धामुपगमेद्रहः ।
प्राक्चतुर्निट्श्राद्धतत्प्राग् दिनाहोव्रतपर्वसु ।। १८०

जन्माहाद्यष्टमीभूत-मूलान्त्यपितृभेषु नो ।
कैश्चिदुक्तं दशाब्दोर्ध्वं वर्णी स्यादृतुगः सदा ।। १८१

द्वेषादिनोपगच्छेद्यो नर्तौ स भ्रूणहाऽप्यृतौ ।
यो विदेशं व्रजेद्वन्ध्यां कन्यापुत्रान्वितामृते ।। १८२

*உடலுறவு- நல்ல நாளில் ரகசியத்தில் மாதவிடாய் கண்ட நாள் கழித்து நான்கு நாட்கள் சென்றதும் தூய்மையடைந்த மனேவியுடன் உறவு கொள்ளலாம். ச்ராத்த நாள், அதன் முன் நாள், பகலில்*

வ்ரதமிருக்கும் நாள், அமாவாஸ்யை, பௌர்ணமி, ஜன்மதினம், அஷ்டமீ, சதுர்தசி, மூலம், மகம், ரேவதி, இந்நாட்களில் உறவு கூடாது. இவ்வாறு ருது காலத்தில் கூடுபவன் பத்தாண்டுகளுக்குப் பின் ப்ரஹ்மசாரிக்கு ஒப்பானவன். ருது காலத்தில் மனைவியிடம் வெறுப்பால் உறவு கொள்ளாதவன், பெண்ணையோ, ஆணையோ பெறுதவனை விட்டு விதேசம் செல்பவன் ப்ரூண (கருவளவில் உள்ள சிசு) ஹத்தி செய்தவனுக்கு ஒப்பானவன். (182)

षोडशाहमृतुः कन्याऽसमेऽत्राह्नि समे सुतः ।
भवेन्निषेकसमये यादृक्चित्तविकल्पना ।। १८३

भ्रूणस्तद्वदतस्ताभ्यां सत्त्वं धार्यं हिताप्तये ।
पितृत्राता हि सत्पुत्रः प्रायोऽपुत्राः पतन्त्यधः ।। १८४

पितृतारक एकोऽपि सत्पुत्रोऽत्र ध्रुवादिवत् ।
किं कार्यं बहुभिर्दुष्टैर् धार्तराष्ट्रशतोपमैः ।। १८५

तारकोऽत्रैवमाचारः प्रोक्तः शात्त्यादिसंमतः ।
विचाराचारमादाय कर्म कुर्वन्सुखी भव ।। १८६

उभयीसिद्धिभाजस्ते य आचारं चरन्त्यमुम् ।
स्वाचारहीना दण्ड्याः स्युर् ब्राह्मणास्तु विशेषतः ।। १८७

इति गुरुमुखलब्धं धर्ममेनं चरन्स
द्विज इह सुखमिष्टं साधु भुक्त्वाऽप मोक्षम् ।
तत उदित इहासौ तिष्यलुप्तोऽपि धर्मो
विभुरपि लघुसिद्ध्यै भक्तियोगं ततान ।। १८८

इति श्रीगुरुचरिते कर्मयोगे कर्मकाण्डकथनं नाम पञ्चमोध्यायः

।। आदितोऽष्टादशोऽध्यायः ।।

ருது காலம் என்பது மாதவிடாய் கண்டதிலிருந்து ஐந்தாவது நாள் முதல் பதினாறுவது நாள்வரை. அதில் ஒற்றைப்படை நாளில்

கூடிக் கருவுற்ருல் பெண், இரட்டைப் படை நாளில் கூடிக் கருவுற்ருல் பிள்ளை பிறக்கும். கூடும் நேரத்தில் தம்பதி கொள்கிற மனநிலைக்கேற்ற ஸந்ததி உண்டாகும். அதனுல் இருவரின் மனநிலையும் நல்ல இனிய மங்களமான சிந்தனையுடன் இருத்தல் நலம். ஸந்ததியற்றவன் கீழ் நிலையடைகிருன். நல்ல புதல்வன் பெற்ருேரை இம்மையிலும், மறுமையிலும் காப்பாற்றுகிருன். துருவனைப் போன்ற ஒரு நல்ல பிள்ளை போதும். துர்யோதனன் போன்று நூறு பிள்ளைகளால் ஆவதொன்றுமில்லை. இதுதான் பராசரர் முதலாஞேர் கூறிய ஸதாசாரம். இதனை ஆராய்ந்துணர்ந்து நல்வழி நடந்து இம்மையிலும் மறுமையிலும் நலம் பெறுவர். ஸதாசாரமில்லாத அந்தணர்கள் தண்டிக்கத்தக்கவரே. இவ்வாறு ஸ்ரீ குருவின் வாயிலாக உணர்ந்த அறவழியைப் பின் பற்றி அந்த அந்தணன் விரும்பிய இன்பத்தைப் பெற்றுப் பின் முக்தியடைந்தான். கலியில் இந்த கர்ம மார்க்கம் பெரிதும் மறைந்து விட்டதால் மேன்மை பெற பக்தி எனும் உபாயத்தை உலகில் ஸ்ரீகுரு பரப்பினர். *(188)*

# एकोनविंशोऽध्यायः

नामधारक उवाच—

कर्मयोगं ज्ञानयोगसहायं चित्तशोधनम्।
उक्त्वापि भगवान्कस्माद् भक्तियोगं जगौ वद ।। १

सिद्ध उवाच—

भक्तिरेवानुत्तमाऽत्र सर्वसाधनकारिणी।
कर्मज्ञस्याप्यभक्तस्य मोघं कर्मेत्यथाब्रवीत् ।। २

त्रिभिर्योगपथैरेव परस्परसहायकैः।
ब्रह्माद्वन्द्वं समं शान्तं गम्यते नैकयोगतः ।। ३

श्रद्धालुः सात्त्विको भक्तो नितरां भगवत्प्रियः।
सकार्ममपि तद्भिन्नं शश्वत्क्षिपति दुर्भवे ।। ४

कर्मण्यकर्म यः पश्येदकर्मण्यपि कर्म यः ।
स लोके भक्तिमान्धीमान् मुच्यते कर्मबन्धनात् ।। ५

भक्तियोगमयं तस्य भक्तिगम्यस्य चेष्टितम् ।
शृणु तस्मिन्दृढा भक्तिः पूता यच्छ्रवणाद्भवेत् ।। ६

*பக்தியோகம் — கர்மயோகம், சித்த சுத்தியளித்து ஜ்ஞான யோகத்திற்கு உதவும். பக்தியோகம் இந்நிலையில் எவ்வாறு உதவும் என நாமதாரகனின் கேள்விக்கு ஸித்தர் விடையளிக்கிறார். பக்தி மிகச் சிறந்த ஸாதனம். கர்மத்தைப் பக்தி உணர்வின்றி செய்தால் பலன் தராது. கர்மம், பக்தி, ஜ்ஞானம் என்ற மூன்றும் ஒன்றுக்கொன்று உதவுபவை. இவை மூன்றும் கூடினால்தான் ப்ரஹ்மானுபவம் ஏற்படும். பக்தன் ச்ரத்தை மிகுந்து ஸத்வமார்கத்தில் பகவானை அடைகிறான். அதனால் தனித்துக் கர்மமோ, ஜ்ஞானமோ, பக்தியோ உதவப் போதுமானதல்ல. கர்மத்தில் ஈடுபட்டவனும் பக்தியின் உதவியின்றி மறுபடி துன்பம் தருகிற ஸம்ஸாரத்தில் வீழ்கிறான். தான் ஈடுபடாமல், தன் அருகாமையால் அறிவு மனம்புலன் முதலிய வற்றை இயக்குபவர் ஆத்மா. அவரிடம் அறிவு மனம் முதலியவற்றால் நடைபெறுகிற செயல்களின் ஒட்டுதலில்லை. இயல்பாகச் செயலற்ற ஜடமான புத்தி முதலியவற்றில் அறிவது கேட்பது முதலான செயல்கள் உள்ளன. இதனை உணர்ந்தவன் பக்தியும், ஜ்ஞானமும் உள்ளவன். இவனை வினை கட்டுப்படுத்தாது. அவ்வாறு உணர்வதால் பக்தி திடமாகும். இதனை விளக்குகிற வரலாற்றைக் கூறுகிறேன். (6)*

भिक्षां सशिष्यगुरव एकैकः प्रत्यहं ददौ ।
भास्कराख्यो द्विजो दीन आययौ तत्र भक्तिमान् ।। ७

आदाय गुरवे भिक्षां दातुकामो गुरुप्रियः ।
स त्रिपुंभुक्तिपर्याप्तं तण्डुलादिकमाप तम् ।। ८

तद्दिने केनचिद्दत्ता भिक्षा श्रीगुरवे वरा ।
शिष्यभक्तयुजे तत्र सोऽपि भोक्तुं ययौ द्विजः ।। ९

सायमेत्य मठे भिक्षा-द्रव्यमादाय स द्विजः ।
सुष्वापैवं त्रिमासं स तत्र तस्थौ सुभाविकः ।। १०

तं तत्रोपहसन्ति स्म प्राप्य स्वल्पान्नतो गुरुम् ।
भिक्षां दातुं प्राज्यशिष्यं पुष्णाति स्वमितीतरे ।। ११

तज्ज्ञात्वा तं प्रभुः प्राह भक्तियोगविधित्सया ।
द्राङ्मे सशिष्यभक्ताय भिक्षां देह्यद्य भाविक ।। १२

तच्छ्रुत्वा हृषितः शाक-सितादुग्धघृतादिकम् ।
स आनीय स्वयं पाकं कर्तुमारेभ उत्तमम् ।। १३

दातुं तदान्यमप्युक्तं भिक्षां देहि श्व इत्यजः ।
तं निवार्याह्वयाशेषान्भोक्तुमित्याह भास्करम् ।। १४

तच्छ्रुत्वाप्याह्वयत्तान्स त ऊचुर्लज्जसे न किम् ।
पक्वान्नकणतुल्यान्नः किमाहूय करिष्यसि ।। १५

तच्छ्रुत्वैत्य गुरुं तत्स शशंस भगवांस्तदा ।
आनयित्वाऽत्र भोक्तव्यं सर्वैरित्याह तान्गुरुः ।। १६

शङ्किता अपि तद्वाक्यात् तूर्ष्णीं स्थित्वा बहूनि ते ।
निर्माय भुक्तिपात्राणि सर्वे स्नात्वाऽऽययुः पुनः ।। १७

*ஒவ்வொரு சிஷ்யனும் பிக்ஷை எடுத்து சிஷ்யர்களுடன் கூடிய குருவிடம் அதனை அர்ப்பணம் செய்வது வழக்கம். பாஸ்கரன் என்ற ஏழை அந்தணன் குருவிடம் பக்திமிகுந்தவன். பிக்ஷை எடுத்து மூவர் சாப்பிடுமளவில் உள்ள அதை குருவிடம் தரவந்தான். வேறு ஒருவர் அன்று குருவிற்குப் பிக்ஷை அளிக்கக் கூப்பிட்டதால் அங்கு குருவுடன் சாப்பிடச் சென்றான். மாலையில்தான் பிக்ஷை எடுத்ததைத் தன்னிடம் வைத்துக் கொண்டான். இவ்வாறு தினமும் நடக்க மூன்று மாதங்கள் கழிந்தன. பல சிஷ்யர்களைக் கொண்ட குருவிற்கு அல்பமான பிக்ஷை எடுத்துத் தரவந்து தன்னைப் போஷித்துக்*

கொள்கிறான் என மற்றவர் இவனைப் பரிஹஸித்தனர். அதனை உணர்ந்த குரு, எனக்கும் சிஷ்யர்களுக்கும் இன்று நீ பிக்ஷை தருவாய் என பாஸ்கரனைப் பணித்தார். அதனைக் கேட்டு மகிழ்ந்த பாஸ்கரன் காய்கறிகளைக் கொணர்ந்து. உணவு சமைத்தான். வேறொருவர் அன்று பிக்ஷை இடவந்தார். அவரைத் தடுத்த குரு பாஸ்கரனிடம் எல்லோரையும் உணவேற்க அழைப்பாய் என்றார். அவனும் எல்லோரையும் உணவேற்க அழைத்தான். மற்ற சிஷ்யர்கள் சமைத்த உணவிற்கு அதிகமாக அனைவரையும் அழைத்து என்ன செய்வாய்? வெட்கமில்லையா என பாஸ்கரனிடம் கேட்டனர். அவன் அதனைக் குருவிடம் விண்ணப்பிக்க அவர்களைவரையும் சாப்பிட அவர் அழைத்தார். எல்லோருக்கும் உணவுகிட்டாது என்ற ஸந்தேஹத்துடன் பதில் கூறாமல் உணவுக் கலன்களை வைத்துவிட்டு நீராடி வந்தனர். (17)

शाठ्येशस्याज्ञयाऽऽच्छाद्य सिद्धान्नं तीर्थमन्त्रितम् ।
सहान्यैः षड्विधं सोऽदाद् गुरवे ब्राह्मणैः सह ।। १८

भक्ताञ्छिष्यान्स तत्रत्यांस्त्र्यपत्येष्टयुजो द्विजान् ।
गुरुं चेष्टं सुखं भोक्तुं प्रार्थयामास सादरम् ।। १९

परमान्नान्नपौल्याज्य-सूपशाकादिषड्रसैः ।
षोढान्नममितं नीतं त्रिपुंपर्याप्तपाकतः ।। २०

नीत्वा नीत्वाऽपि भोक्तृभ्यो दत्तं तत्र तु पूर्ववत् ।
नाप्यल्पं दातृभिस्तष्टं चेष्टा भगवतस्त्वियम् ।। २१

भुक्तं सशेषमाकण्ठं तृप्ताः स्मोऽलमिति द्विजाः ।
उक्त्वोत्तस्थुः सहाजेन ततो गुर्वाज्ञयाऽद्विजान् ।। २२

हीनांश्चाहूय तेभ्योऽदात्कामं नान्नं व्यहीयत ।
पशुपक्षिमृगादिभ्यः प्रकामं स उपानयत् ।। २३

न शिष्टास्तत्र केऽपीति श्रुत्वा भुक्त्वा तदाज्ञया ।
यादोभ्योऽदात्स शेषान्नं तदा निःशेषतां ययौ ।। २४

माधुर्यं सुरसान्नस्य दुर्लभं ह्यमृतान्धसाम्।
स्वप्नेऽपि न श्रुतं रुच्यं तृप्तिरेषाऽप्यलौकिकी ॥ २५

प्राक्पार्थसङ्कटेऽरण्ये निशीथेऽदात्स्वमायया।
ऋषिभ्योऽन्नं हरिरिति श्रुतं दृष्टं त्वदोऽत्र तु ॥ २६

नृणां चतुःसहस्राणि भुक्तानि स्वल्पपाकतः।
जीवा अगणिता भुक्ता मायाऽतर्क्येयमीशितुः ॥ २७

भास्करोऽयं प्रियो भक्तो यत्प्रसादोऽस्य नान्यके।
त्रिमासं सर्वदा तेन पादसंवाहनादिभिः ॥ २८

श्रद्धाभक्त्यैव भगवान् सेवितस्तत्फलं त्विदम्।
इत्युक्त्वाऽन्ये नराः प्रेम्णा तुष्टुवुः श्रीगुरुं परम्॥ २९

दत्वा प्रभुर्भास्करमीप्सितं वरं प्रस्थापयामास गृहाय स द्विजः।
ईशप्रसादात्सकलार्थयुग्ययौ सायुज्यमन्ते दृढभक्तियोगतः ॥ ३०

தயாரித்த உணவை குருவின் ஆணையால் மந்திரித்துத் துணியால் மூடிக் கொணர்ந்து குருவிற்கும், சிஷ்யர்களுக்கும் மற்ற அந்தணர்க்கும் வழங்கினான். பெண்கள் குழந்தைகள் இஷ்ட உறவினர் நண்பர் என அனைவருடன் குருவும் சிஷ்யர்களும் சாப்பிட்டனர். பரமான்னம் பாயஸம் போளி நெய் பருப்பு கறிகாய் என அறுசுவை உணவு மூன்று மனிதர் சாப்பிடுமளவு கிட்டிய பிக்ஷையரிசியால் தயாரிக்கப் பெற்று போதும் போதும் என்று கழுத்தளவு சாப்பிட வழங்கப்பட்டது. திருப்தி அடைந்தோம் என்று அனைவரும் கூறி குருவும் மற்றவரும் சாப்பிட்டு எழுந்ததும், குருவின் ஆணையால் மற்ற இனத்தவருக்கும், பசு பறவை மற்றும் மிருகங்களுக்கும் வேண்டியமட்டும் உணவிட்டும் தயாரித்த உணவு குறையாமல் அப்படியே இருந்தது. வேறு உணவேற்பவர் எவருமில்லை எனக் கண்டு குருவின் அனுமதியுடன் தானும் உண்டான். நீர் வாழ் ப்ராணிகளுக்கு உணவளித்தனர். மீதமின்றி உணவு செலவழிந்தது. நற்சுவை கொண்ட உணவின் அந்த

இனிமையை தேவர்களும் இது காறும் உணர்ந்ததில்லை. கனவில் இந்த ருசி அனுபவிக்கப்படவில்லை. உலகியல்பிற்கு மாறான திருப்தி அனைவருக்கும் ஏற்பட்டது. முன்னர் ஒரு ஸமயம் பாண்டவர்களுக்கேற்பட்ட நெருக்கடியில் நள்ளிரவில் துர்வாஸரின் சாபத்திலிருந்து காப்பாற்ற ஹரி ஸ்ரீ க்ருஷ்ணன் ஒரு பருக்கை உணவைக் கொண்டு நாலாயிரம் முனிவர்களுக்கு முழு திருப்தி வருமளவிற்கு உணவிட்டார் என்று கேள்வி. இன்று அது நேரில் காணப்பட்டது. எண்ணற்ற ஜீவர்கள் வயிறுார உண்டனர். ஈசனின் மாயை ஆராய்விற்கு அப்பாற்பட்டது. பாஸ்கரன் சிறந்த குரு பக்தன். மூன்று மாதங்களாக, குருவின் சரணங்களைப் பிடித்துவிட்டுப் பணிவிடை செய்திருக்கிறான். அதனால் பெற்ற குருவருளின் பெருமை இது என்று குருவை அனைவரும் பாராட்டினர். பாஸ்கரன் விரும்பியதை அருளிய குரு இம்மையிலும் மறுமையிலும் நன்மையும், மேன்மையும் பெறும்படி வாழ்த்தினார். அவனும் நன்கு வாழ்ந்து இறுதியில் திடபக்தியால் ஈசஸாயுஜ்யம் பெற்று முக்தி அடைந்தான். (30)

शृण्वन्यदप्यद्भुतमीशचेष्टितं गङ्गाह्वया तत्र तु षष्टिवत्सरा।
साध्वी वशाऽऽनर्च परेशमन्वहं भक्त्यैकदोचे स तु तां किमिच्छसि ॥

लोकोऽपुत्रस्य न स्वस्था लुप्तपिण्डोदकक्रियाः।
पितरोऽधः पतन्तीति श्रुत्वा स्वामिन् बिभेम्यहम् ॥ ३२

भवेऽग्रे तु सुपुत्राख्या गतिर्भूयादितीच्छया।
सर्वेश तेऽर्चनं कुर्वे पाहि मां करुणानिधे ॥ ३३

श्रीगुरुरुवाच—

कर्मावर्तेन मायाब्धौ क्व भ्रमिष्यसि वेत्सि किम्।
केयं तत्र स्मृतिस्तेऽत्र पुत्रौ गङ्गे भविष्यतः ॥ ३४

तच्छ्रुत्वा पल्लवे ग्रन्थिं बध्वोचे पुत्रवत्यहो।
निष्कला जातिवन्ध्यापि भवेयं त्वत्प्रसादतः ॥ ३५

व्रततीर्थार्चने यातं वयो मे पुत्रकामया।
विशेषात्सेवितोऽश्वत्थो मौर्ख्याद्दास्यति किं स मे॥ ३६

*கங்கை என்ற அறுபது வயதுக் கிழவி, பதிவ்ரதை, பிள்ளைப் பேறற்றவள். பக்தியுடன் ஸ்ரீ குருவைத் தினந்தோறும் வழிபட்டாள். நீ என்ன வேண்டுகிருய்? என அவளைக் குரு கேட்டார்'' எனக்கு மக்களில்லை. புண்ய லோகம் சென்ற பித்ருக்களும் இதனுல் கீழே விழுகின்றனர் என்று அடுத்த பிறவியில் நல்ல புதல்வர்களைப் பெற்று, நற்கதி பெறக் கருதி, உம்மை வழிபட்டேன. காப்பாற்றுவீர் என்ருள். ''மாயைக் கடலில் வினை என்ற சுழற் காற்ருல் எங்கு அடித்துச் செல்லப் போகிருயோ' அப்போது இதன் நினைவு வருமா? அதனுல் இப்பிறவியிலேயே இரு புதல்வர்களைப் பெறுவாய்'' என்று ஸ்ரீ குரு சொல்ல, நான் பிறவி மலடி, மாதவிடாய் நின்றவள். நான் பிள்ளை பெறுவேனு என் மேலாடையில் முடிப்பு போட்டுக் கொண்டே ''பிள்ளை பெற வேண்டி வ்ரதமும் தீர்த்த யாத்ரையும் வழிபாடும் செய்து கொண்டே வந்தவளுக்கு வயது ஆகிவிட்டது. முட்டாள் தனத்தால் தனித்து வலம் வந்து வழிபட்ட அரசமரம் பிள்ளை கொடுக்கப் போகிறதா? என்று புலம்பினுள் (36).*

श्रीगुरुरुवाच—

ब्रह्मनारदसंवादं शृण्वात्थ यदसत्तु तत्।
नारदाश्वत्थमूलेऽहं मध्येऽजोऽग्रे शिवः पुनः॥ ३७

अवाक्प्रत्यगुदक्शाखास् त्रयाणां प्राक्समाः सुराः।
तीर्थाब्धयश्चाङ्कुरेषु गोयज्ञर्षिश्रुतिद्विजाः॥ ३८

ओङ्कारोऽङ्घ्र्यन्तशीर्षस्थ इत्यश्वत्थोऽस्त्यसंस्कृतः।
नार्च्यः संस्कृत्य मौञ्ज्युक्तकालेऽस्मिन्सत्क्षणेऽर्चयेत्॥ ३९

नार्कारशुक्रनिट्सन्ध्या-कुयुक्पर्वादिषु स्पृशेत्।
वर्णित्वमौनसत्त्वाढ्यो भजेन्नामुं वधूरपि॥ ४०

तत्तले गोविशा लिप्ते रञ्जिते स्वस्ति वाचयेत्।
संस्नाप्य सप्तकलशैः पूजयेत्स्वाधिकारतः ।। ४१

ध्यात्वाऽष्टबाहुं श्रीविष्णुरूपमावेष्ट्य वाससा।
नाममन्त्रैर्मन्दगत्या शक्त्या कार्याः प्रदक्षिणाः ।। ४२

नमेत्प्रदक्षिणायास्तु भक्त्याद्यन्तसमाप्तिषु।
पदे पदे मेधफलं दैन्यर्णार्त्यघतापहृत्।। ४३

ग्रहार्तिघ्नं सौरिवारे तन्नामोच्चारणं तरोः ।
सदेशोऽपैति नुः काल-मृत्यू रौद्रमनोर्जपात्।। ४४

तत्रातिफलदा ब्रह्मभुज्याप्लुतिजपाध्वराः ।
पुत्रादिकामसिद्ध्यै नो विलम्बोऽक्षय्यपुण्यदात्।। ४५

येनेह स्थापितोऽश्वत्थस्तेन स्वः स्थापितं कुलम्।
येन च्छिन्नोऽपि वंशः स्वस्तेन च्छिन्नो न संशयः ।। ४६

प्रदक्षिणादशांशेन हवनं तद्दशांशतः ।
कृत्वा ब्रह्मभुजिं दद्याद्धैमाश्वत्थार्थगोतिलान्।। ४७

सद्ब्रह्मभ्यो लभेदिष्टमित्यूचे नारदं विधिः ।
तस्मात्त्वं विधिना साध्वी भज द्राक्सिद्धिदोऽस्ति सः ।। ४८

त्वं भीमामरजायोगे स्नात्वा षट्कूल उत्तमम्।
संगमस्थं भजाश्वत्थं सत्यं पुत्रौ भविष्यतः ।। ४९

तथा कुर्वेऽपि षष्ट्यब्दा मत्वोक्तिं तव वेदवत्।
इत्युक्त्वा सेश्वराश्वत्थं पत्या भेजे यथाविधि ।। ५०

चतुर्थेऽह्न्याह तत्स्वप्ने कृत्वाऽश्वत्थप्रदक्षिणाः ।
यद्दास्यति गुरुर्भुङ्क्ष्व भवेत्पुत्र इति द्विजः ।। ५१

ஸ்ரீ குரு கூறினார் :— கங்கையே ! ப்ரஹ்மாவிற்கும் நாரதருக்கும் இடையே நடந்த ஸம்வாதத்தைக் கேள். ப்ரஹ்மா கூறினார். அரச மரத்தின் வேரில் நான், நடுவில் விஷ்ணு, நுனியில் சிவன். தெற்கு மேற்கு வடக்கு திக்குகளில் அனைத்து தேவர்களும், விதையின் முளைகளில் தீர்த்தங்களும் கடல்களும், பசுக்களும் வேள்விகளும் ருஷிகளும் வேதங்களும் அந்தணர்களும் உள்ளனர். வேரிலிருந்து தலைவரை ஓங்காரம் உள்ளது. இதற்கு உபநயனம் செய்து வைத்த பிறகே இதனை வழிபட வேண்டும். குறிப்பிட்ட வேளையில் மௌஞ்ஜீ பந்தனம் செய்வித்து உத்யாபன முறையில் பண்படுத்தி நல்ல வேளையில் வழிபட வேண்டும். ஞாயிறு செவ்வாய், இரவு, வியதீபாதம் முதலிய கெட்ட நாட்கள் இவற்றில் இதனைத் தொடக் கூடாது. ப்ரஹ்மசர்யம், மௌனம், ஸாத்விகப் போக்கு உள்ளவனே இதனை வழிபடலாம். அதன் வேரடியில் கோமயத்தால் மெழுகி, ஸ்வஸ்தி வாசனம் செய்து ஏழு கலச நீரால் நீராட்டி, தன் தன் நிலைமையை ஒட்டி வழிபட வேண்டும். எட்டு கைகளுள்ள விஷ்ணுவாக த்யானம் செய்து வஸ்த்ரத்தாலோ நூலாலோ சுற்றி, நாம மந்த்ரங்களைக் கூறி மெள்ள மெள்ள வலம் வர வேண்டும். ஒவ்வொரு ப்ரதக்ஷிண முடிவிலும் நமஸ்காரம் செய்ய வேண்டும். ப்ரதக்ஷிணத்தின் ஒவ்வொரு அடியும் அச்வமேத பலன் தரும். ஏழ்மை, கடன், நோய், பாபம், தாபம் இவற்றை நீக்கும். அப்போது சனியின் பெயர் கூறுவது க்ரஹ தோஷத்தை நீக்கும். வலம் வந்தபின் அந்தணருக்கு உணவிடுதல், நீராடுதல், ஜபம், வேள்விகள் செய்வது வற்றாத புண்யம் தரும். பிள்ளைப் பேறு பெறத் தடை இராது. அரசமரத்தை நடுபவன் தன் குலத்தை ஸ்வர்க்கமடையச் செய்வான். அதனை வெட்டினவரின் வம்சம் வெட்டப் பெறும். ப்ரதக்ஷிணத்தின் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கு ஹோமம், அதன் பத்தில் ஒரு பங்கு ப்ராஹ்மண போஜனம், பின் தங்கத்தாலான அரசமரம், தக்ஷிணை, பசு, எள் இவற்றை நல்ல அந்தணர்களுக்குத் தானம் செய்தால் விரும்பியதைப் பெறலாம். இவ்வாறு நாரதருக்கு அரசமர வழிபாட்டைப் ப்ரஹ்மா விளக்கினார். அதனால் முறைப்படி அரசமரத்தை வழிபட்டு ஸித்தியைப் பெறுவாய். பீமா - அமரஜா கூடலில் நீராடி, ஆறு கரைகள் கூடுமிடத்தில் உள்ள அரசமரத்தை வழிபடுவாய். ஒரு

மகளையும், மகளையும் பெறுவாய் என்று குரு வழிகாட்டினார். அறுபது வயதான கங்கை உமது வாக்கை வேதமாக நம்பி, அவ்வாறே செய்வேன் எனக் கூறிக் கணவருடன் ஸ்ரீ குருவுடன் கூடிய அரசமரத்தை வழிபட்டு வலம் வந்தாள். நான்காவது நாளில் கனவில் குரு தோன்றி அரசை வழிபடுகிற உனக்கு குரு தருவதை உண்பாய் ! உனக்கு மகன் பிறப்பான் என்றார். (51)

साऽप्युत्थाय ततः स्नात्वा सङ्गमं प्राप्य सद्गुरुम् ।
भक्त्या प्रदक्षिणीकृत्य साश्वत्थं प्रणनाम ह ।। ५२

दत्वा फले स तां प्राह दानं देहि समाप्य सत् ।
व्रतं प्रदक्षिणारूपं फले भुंक्ष्वेष्टकामदे ।। ५३

प्राग्युगेऽनेकपुत्राः स्युरौरसो दत्तकस्त्विह ।
औरसस्तूत्तमोऽस्यास्यदर्शनं पितृमुक्तिदम् ।। ५४

तत्साध्वीहौरसौ पुत्रौ तारकौ ते भविष्यतः ।
मदर्चनफलं त्वेतन्न सन्देहोऽत्र शोभने ।। ५५

तथेत्युक्त्वाऽपि सा गेहं गत्वा चक्रे यथोदितम् ।
निष्कलाऽप्यृतुमत्यासीन् निःसीममहिमा प्रभोः ।। ५६

शुद्ध्यूर्ध्वं सह पत्येत्य सा प्रपूज्य गुरुं मुदा ।
गृहं गत्वा दधौ गर्भं तन्निशीशप्रसादतः ।। ५७

स्वतन्त्रसंविद्भगवान् लीलां को वेत्ति यत्स्तुतौ ।
द्विसहस्ररसज्ञोऽपि कुण्ठितश्चकिता श्रुतिः ।। ५८

वलीपलितवेपैर्यद्देहो विद्धो जराकृशः ।
साऽऽधत्त गर्भमित्यन्ये प्रशशंसुः परस्परम् ।। ५९

तद्भर्ता सोमनाथस्तु प्रीत्या पुंसवनादिकाः ।
क्रिया व्यधात्क्रमात्पुत्रीं कालेऽसौषीत्ततः सती ।। ६०

तदेयं कन्यका साध्वी सच्छीलगुणशालिनी ।
भविष्यति कुलोद्धर्त्री पुत्राढ्येत्याह दैववित् ॥ ६१

அவளும் கிளம்பி ஸங்கமத்திற்கு வந்து நீராடி ஸ்ரீ குருவையும், அரசமரத்தையும் வணங்கி வலம் வந்தாள். ஸ்ரீ குரு அவளுக்கு இரு பழங்களைத் தந்தார். வ்ரதத்தை முடித்தபின் அந்தணருக்கு தானம் தந்து விரும்பியதையளிக்கிற இந்தப் பழங்களைச் சாப்பிடுவாய். முன் யுகங்களில் பல வகையில் புத்ரர்களைப் பெறலாம். கலியில் ஔரஸன் (தன் வயிறறில் பிறந்தவன்) தத்தன் (தத்தெடுத்துக் கொண்டவன்) என்ற இருவகை மட்டுமே. இவர்களுள் ஔரஸன் சிறந்தவன். ஔரஸனைக் காண்பவர் தன் பித்ருக்களுக்கு முக்தி தருவர். அதனால் ஔரஸ புத்ரர்கள் (புத்ரனும், புத்ரியும்) இருவர் உண்டாவர். இது என்னை வழிபட்டதன் பலனாகும் என்று கூறினார். அதனை ஏற்று வீட்டுக்கு வந்த கங்கை அவ்வாறே செய்தாள். மாதவிடாய் நின்றுவிட்ட அவள் மறுபடி அதனை அடைந்தாள். அதன் சுத்திக்குப் பிறகு கணவருடன் ஸ்ரீ குருவை வணங்கி வீடு சென்றாள், அன்றிரவு கருத்தரித்தாள். தன் விருப்பப்படி செயல்படுகிற ஈசனான குருவின் விளையாட்டை யார் அறிவர்? அவரைப் பாராட்ட முனைந்த ஆதிசேஷன் குன்றிப் போனான். வேதம் பயப்படுகிறது. உடல் முழுவதும் தோல் சுருங்கி நரைத்து நடுக்கத்துடன் இளைத்த கங்கையின் உடல் கருவைத் தரிப்பது விசித்ரமானதென மக்கள் கூறினர். கணவர் பும்ஸவனம் முதலியவற்றால் பண்படுத்தினார். உரிய காலத்தில் பெண் பிறந்தாள். இந்தக் கன்னிகை நல்ல ஸந்ததி பெற்று குலமேன்மை தருபவளாவாள் என ஜாதகம் கணிப்பவர் கூறினர். (61)

तच्छ्रुत्वा स द्विजेभ्योऽदादर्थवस्त्रादिकं द्विजः ।
प्रापतुर्द्वादशेऽह्नीशं कन्यामादाय जम्पती ॥ ६२

तत्पादाब्जान्तिकं कन्यां संस्थाप्योचे प्रणम्य सा ।
संसृतिस्थजरद्वन्ध्यद्रुमस्ते फलितो दृशा ॥ ६३

सेव्यते फलितोऽपि द्रुः पान्थैश्चेत्सुफलो वरम् ।
वन्ध्योऽपि मोघफलत इति भातीश वेत्सि तत् ॥ ६४

तच्छ्रुत्वा सस्मितं कन्यामादायेशो जगाद तौ ।
शीलधीगुणपुत्राढ्या भवेत्साध्व्यखिलार्चिता ।। ६५

कन्या लब्धोत्तमेयं वां पुत्रेच्छा चेद्भवेत्सुतः ।
मूर्खः शतायुर्वाल्पायुर्विद्वान्वां कतरः प्रियः ।। ६६

सार्भो विद्वान् प्रियोऽल्पायुरपीत्यूचतुरप्युभौ ।

तथेत्युक्त्वा स सापत्यौ गमयामास तौ प्रभुः ।। ६७

गर्भं साप्यल्पकालेन धृत्वाऽसूत सुतं शुभम् ।
श्रद्धया निष्कलाप्येवं पुत्रौ लेभेऽथ किं वद ।। ६८

विद्याविनयवान् भूत्वा पितृशुश्रूषणोद्यतः ।
धार्मिकः पञ्च पुत्रांस्तत्पुत्रो लब्ध्वाऽमृतं ययौ ।। ६९

कन्याऽपीशप्रसादात्सा दीक्षितस्य सती शुभा ।
भूत्वा गुरूक्तवद्ब्रह्मवादिनी प्राप सद्गतिम् ।। ७०

एवं गुरुप्रभावोऽयं श्रद्धादृष्टचैव दृश्यते ।
सद्भक्तैर्न त्वभक्तैः स जन्मान्धैरिव भास्करः ।। ७१

दण्डकुण्डीकरं शान्तं काषायाच्छादनं सदा ।
ध्यायन्तौ यतिरूपं तं दम्पती मुक्तिमापतुः ।। ७२

श्रद्धाभक्त्यैव सुलभा गुरुवाक्यानुवर्तिनाम् ।
उभयी सिद्धिरप्यन्यच्चित्रं तच्चेष्टितं शृणु ।। ७३

*ஸோமநாதன் (கங்கையின் கணவன்) கணித்துச் சொன்னவருக்குப் பொருள் அளித்தான். பன்னிரண்டாம் நாள் தம்பதி புத்ரியை ஸ்ரீ குருவிடம் சென்று அவரிடம் காட்டிக் காலடியிலிட்டு வணங்கினர். கங்கை விண்ணப்பித்தாள். ''ஈசனே! ஸம்ஸார பந்தத்தில் சிக்கிய கிழட்டு மலட்டு மரம் உம் கடாக்ஷத்தால் பூத்துக் காய்த்தது. காய்த்த பழம் நல்லதாயிருந்தால்*

வழிப்போக்கன் அதன் கீழ் தங்குவான். எதற்கும் உதவாத பழமாயின் வழிப் போக்கன் தவிர்ப்பான். பலனற்ற காய்ப்புள்ள மரத்தைவிட மலட்டு மரமே சிறந்தது. நீர் இதனை உணர்வீர் என்றாள். குரு அந்தப் பெண் சிசுவைக் கையிலேந்தி நல்லொழுக்கமும் நற்சந்ததியும் கொண்ட இவள் மக்களால் மதிக்கப் பெறுவாள். குலம் இவளால் மேனிலை பெறும். உங்களுக்குப் பெண் கிட்டினாள். பிள்ளை வேண்டுமெனில் அவன் நூறாயுளுள்ள முட்டாளா அல்லது ஆயுள் குறைந்த அறிஞனா? எவன் வேண்டும் என்று கேட்டார். அல்பாயுளாயிருந்தாலும் நல்லறிஞனே வேண்டுமென இருவரும் வேண்ட குரு பகவானும் அவ்வாறே ஆகட்டும் என ஆசி வழங்கினார். கங்கை மறுபடி கருத்தரித்து பிள்ளையைப் பெற்றாள். அவன் கல்வி பெற்று அடக்கத்துடன் வாழ்ந்து புதல் வர்களைப் பெற்று நற்கதி பெற்றான். பெண்ணும் சிறந்த ப்ரஹ்மவாதினியாகிக் கணவருடன் வாழ்ந்து நற்கதி பெற்றாள். ச்ரத்தையும், குருபக்தியும் கொண்டவரிடம் இந்த யோகம் காணப்படுகிறது. பிறவியிலேயே குருடர் போன்ற ச்ரத்தா பக்தி யற்றவரிடம் இந்த யோகம் காணப் பெறுவதில்லை. தண்டம் கமண்டலு ஏந்தி காஷாயம் தரித்த ஸ்ரீ குருவை வழிபட்ட தம்பதி நற்கதியடைந்தனர். குருவின் சொல்லில் நம்பிக்கையே இம்மையிலும் மறுமையிலும் நன்மை தருகிறது. (73)

तत्रैत्य नरहर्याख्यो विप्रः कुष्ठी जगद्गुरुम् ।
प्रणतः शरणं प्राप्य प्रावोचद् गद्गदाक्षरः ।। ७४

हरे शम्भो परानन्दमूर्ते जय जयाच्युत ।
भक्तवत्सल ते कीर्तिं श्रुत्वात्रासोऽस्मि सद्गुरो ।। ७५

यजुर्विदोऽपि मे तुण्डं केऽपि नेक्षन्ति कुष्ठिनः ।
तीर्थार्चनजपैः कुष्ठं तन्मे नापैत्यघात्मनः ।। ७६

कृपया तेऽपयायात् तदिति मत्वागतोऽस्म्यहम् ।
नास्ति चेत्तत्प्रतीकारः शंसाग्रेऽसूंस्त्यजामि ते ।। ७७

तच्छ्रुत्वा प्राक्तनाघोत्थं कुष्ठं नश्येदिति प्रभुः ।
प्रोक्त्वा शुष्कौदुम्बरैधो दृष्ट्वाऽवोचत्स कुष्ठिनम् ।। ७८

मद्वाक्ये भक्तिमांश्चेत् तत्काष्ठमारोप्य सङ्गमे ।
भज पल्लविते तस्मिञ्छुद्धोऽकुष्ठो भविष्यसि ।। ७९

ओमित्युक्त्वा तदारोप्य श्रद्धाभक्त्या स सङ्गमे ।
भेजे दत्वाऽऽधारबन्धं परितोऽम्बुनिषेचनैः ।। ८०

कृपाऽस्य सद्यस्तव शुद्ध्यभावादुक्तं फलं कष्टमिदं कुतोऽस्मिन् ।
शङ्कांकुरस्यात इदं त्यजेति जनैर्निषिद्धोऽप्यभजत्सदेध्मम् ।।

तदैत्य ते गुरुं प्राहुर्भवद्वाक्याद्विजो जरत् ।
भजतीध्मं बोधय तं मरिष्यत्युपवासतः ।। ८२

श्रीगुरुरुवाच—

करोति साधु तद्विप्रो दृढभक्त्या तरिष्यति ।
भक्तिर्हि तारकात्रैव भवसिन्धुनिमज्जतः ।। ८३

मन्त्रे तीर्थे द्विजे देवे दैवज्ञे भि(भे)षजे गुरौ ।
यादृशी भावना यस्य तस्य सिद्धिस्तु तादृशी ।। ८४

அங்கேயே நரஹரி என்ற அந்தணன் குஷ்டரோகமுள்ளவன் ஸ்ரீ குருவை வணங்கிச் சரணடைந்தான். பக்தவத்ஸலனுன ஈசனே! உமது புகழைக் கேட்டு இங்கு வந்தேன். குஷ்டநோயுள்ளவனுதலால் யஜுர்வேதம் முழுதும் ஓதிவருகிற என் முகத்தை எவரும் பார்ப்பதில்லை. தீர்த்தாடனம், ஈசனின் வழிபாடு, ஜபம் இவற்றுல் இந்த பாபிக்குவந்த குஷ்டம் நீங்கவில்லை. உமது க்ருபையால் இது விலகும் என வந்தேன். இதற்குப் பரிஹாரம் கிடையாதெனில் உமது எதிரில் உயிர் விடுவேன் என்றுன். எதிரில் ஒரு காய்ந்த அத்திக் குச்சி இருந்தது. ''என் சொல்லை நீ நம்பினுல் இதை எடுத்துச் சென்று ஸங்கமத்தருகே நட்டு நீர் வார்த்து வளர்ப்பாய். இது முளைத்துத் துளிர் விட்டதும் உன் குஷ்டம் நீங்கி விடும் என்றுர் ஸ்ரீ குரு. நரஹரி உடனே அதனை எடுத்துச் சென்று நட்டுப் பாத்தி கட்டி நீர் வார்த்தான். அருகில்

உள்ளவர், அவனிடம் "நீ குருவிடம் சுத்தியில்லாதபடி சென்றதால் உன் பாபம் நீங்க இவ்வாறு செய்யச் சொல்லியிருக்கிறார். அத்திச் சுள்ளி துளிர் விடுமா" எனத் தடுத்தும் அவன் செடி வளர்த்தான். அவர்கள் குருவிடம் சென்று அந்தக் கிழவன் உம் சொல்லால் சுள்ளியை நீர் வார்த்து முளைக்க உழைக்கிறான். உபவாஸத்துடன் செய்வதால் அவன் மரித்து விடுவான். அவனுக்கு உணர்த்துவீர் என்று சொன்னார். ஸ்ரீ குருவோ "அவன் நல்லதைச் செய்கிறான். திடமான பக்தி இருப்பதால் அவன் இதனை ஸாதிப்பான். பக்தி ஒன்றே ஸம்ஸாரக் கடலைத் தாண்ட உதவுகிற ஓடம். மந்த்ரத்திலும், தீர்த்தத்திலும், அந்தணரிடமும் தேவனிடமும், சோதிடனிடமும், வைத்யனிடமும் கொள்கிற நம்பிக்கைக்கேற்ப ஸித்தி ஏற்படும். (84)

वच्मि सूतर्षिसंवादं प्राग्वृत्तं दृढभक्तिदम् ।
ऋषीन्सूतो जगादेदं सिहंकेतुनृपात्मजः ।। ८५

धनञ्जयाख्यः पाञ्चाल एकदा वनमभ्यगात् ।
दृष्ट्वा स मृगयाश्रान्तस् तत्र जीर्णं शिवालयम् ।। ८६

तस्थौ तत्र क्षणं साकं शबरेणानुयायिना ।
दृष्ट्वा लिङ्गानि रम्याणि दूतः प्राह नृपं गृहे ।। ८७

लिङ्गं नीत्वा पूजयितुं कांक्षेऽज्ञोऽस्म्यनुशाधि माम् ।
यदाज्ञापयसे देव दृढभक्त्या करोमि तत् ।। ८८

राजपुत्र उवाच——

संस्थाप्य सत्स्थले लिङ्गं शुचिर्भूत्वा क्रियान्वितः ।
भक्त्या पूजय मत्वेशमुपचारैर्यथाविधि ।। ८९

चिताभस्मान्वहं देयं दत्तान्नं भुङ्क्ष्व भार्यया ।
प्रसादबुद्ध्येत्युक्त्वा स पूजाविधिमुपादिशत् ।। ९०

सोऽपि तृष्टो गृहीत्वैकं लिङ्गं गत्वा गृहं स्त्रिया।
भेजे यथोपदेशं तद् भस्मादात्प्रत्यहं मुदा ।। ९१

भस्मैकस्मिन्दिने क्वापि न लेभेऽभूत्स दुर्मनाः ।
तद्भार्या प्राह मां दग्ध्वा शम्भवेऽर्पय भस्म तत् ।। ९२

शरीरं कृमिविड्भस्मरूपान्तं क्षणभङ्गुरम् ।
तत्साफल्यं कुरु हरे भस्मार्पणनिमित्ततः ।। ९३

ஸூதரும் முனிவர்களும் பேசும்போது ஸூதர் இந்த பழைய வரலாற்றைச் சொன்னார். பாஞ்சால தேசத்தரச குமாரன் தனஞ்ஜயன் என்பவன், காட்டில் வேட்டையாடிக் களைத்தவன் ஒரு பழைய சிவாலயத்தைக் கண்டான். அவனுக்குத்துணை வந்த வேடனும் அங்குள்ள சிவலிங்கங்களைக் கண்டு ''இவற்றில் ஒன்றை நான் எடுத்துச் சென்று வழிபட விரும்புகிறேன். நீர் அனுமதி தந்தால் திடபக்தியுடன் இதனைச் செய்வேன்'' என்றான். ''நல்ல இடத்தில் லிங்கத்தை ஊன்றித் தூய்மையுடன் மனைவியுடன் ஈசனை உபசாரங்கள் செய்து வழிபடுவாய். மயானச் சாம்பல் தினமும் பூசிப்பூ சித்து நிவேதித்த அன்னத்தை இருவரும் சாப்பிடுவீர் என்று அரச குமாரன் பூஜையை விளக்கினான். வேடன் மகிழ்ந்து வீட்டிற்கு ஒரு லிங்கத்தை எடுத்துச் சென்று வழிபட்டான். ஒருநாள் மயானச் சாம்பல் கிட்டவில்லை. அவன் மனைவி தன்னை எரித்தெடுத்த சாம்பலைச் சிவனுக்கு அர்பணம் செய்யச் சொன்னாள். க்ரிமியும், மலமும் கொண்ட இவ்வுடல் இறுதியில் பஸ்மமாகப் போகிறது. நொடியில் சிதையக் கூடியது. இதனை பஸ்மமாக்கிச் சிவனிடம் அர்ப்பணம் செய்து இதனைப் பயனுள்ளதாக்குவீர் என்றாள். (93)

शबर उवाच——

तिष्ठत्स्विनक्ष्माग्निषु साक्षिषु प्रिये भर्तृत्वमाश्रुत्य वृतास्यदोऽन्यथा ।
कुर्यां कथं तन्वि किशोरि बालिके भो साध्व्यलब्धैहिकसौख्य उत्तमे ।। ९४

सा प्राह मोहो वितथोऽयमध्रुवे येन ध्रुवं साहजिकं प्रसाध्यते ।
तत्साधयास्मिन्परकीयकल्पना नास्त्येव तेऽर्धाङ्गविभाग्यदो वपुः ।।

प्रोक्ते सुयुक्ते प्रियया तथेत्यसौ प्रोक्त्वा गृहे तामवरुद्ध्य सालयाम्।
दग्ध्वार्पयद्भस्म शिवाय नित्यवद् भ्रान्त्या प्रसादक्षण आह्वयत्प्रियाम्॥

दग्धापि साह्वानत आप पूर्ववत् तां सद्म चालोक्य स शङ्कितोऽब्रवीत्।
दग्धापि गेहेन सहागता कथं सुप्तोत्थितास्मीति शबर्युवाच तम्॥ ९७

शम्भुप्रभावोऽस्त्विति तेन भाषिते द्राक्प्रादुरासीन्निजरूपधृक् शिवः।
दौष्कुल्यदोषं परिहृत्य दर्शनात् ताभ्यां शिवोऽदादुभयत्र कांक्षितम्॥

भक्तेः प्रभावोऽयमियान्न किञ्चित् फलत्यृते भक्तिमतोऽस्य सिद्ध्येत्।
भक्त्येष्टमित्याह स तान्कदाचिद् गच्छन्प्रभुः स्नातुममुं ददर्श॥ ९९

तं तादृशं प्रेक्ष्य कमण्डलुस्थक्षीरेण तत्प्रोक्ष्य स शुष्ककाष्ठम्।
ददर्श सद्दिव्यदृशा तदेध्मे सद्योङ्कुरा भूरिश आविरासन्॥ १००

ஸூர்யன், பூமி, அக்னி இவர்களை ஸாக்ஷியாக்கிக் கணவனுயிருக்க ஒப்பந்தம் செய்து என்னை மணந்த உன்னை இன்று எப்படி சாம்பலாக்குவேன்? உனக்கு இந்த வாழ்வில் என்ன ஸௌக்யம் கிட்டியது? என்று கணவன் வருந்த மனைவி அவனுக்கு ஆறுதல் கூறினாள். ''நிலைக்காத ஒன்றைக் கொண்டு நிலைத்த ஒன்றைப் பெறும் முயற்சி இது. இந்த உடலும் உம்முடையதே. ஈருயிர் ஓருடல் அல்லவா? என்றதும் வேடன் அமைதியுற்று வீட்டினுள் அவளைப் பூட்டி வீட்டுடன் அவளைக் கொளுத்திச் சாம்பலை சிவனுக்கு வழக்கம் போல் அர்ப்பணம் செய்து வழிபாடு முடிந்ததும் ப்ரஸாதம் ஏற்க வரும்படி வழக்கம்போல் நினைவின்றி மனைவியைக் கூப்பிட்டான். எரிந்த சாம்பலான அவள் அவன் முன் வந்தாள். வீடும் முன் நிலையில் காணப்பட்டது. எப்படி வந்தாய் எனக் கேட்டதும் தூங்கி விழித்தெழுந்ததாகச் சொன்னாள். இது சிவனின் பெருமை என அவன் கூறியதும் தன் நிஜ உருவத்தில் சிவன் அவன் முன் தோன்றினார். ஈனப்பிறவி என்ற குறையைத் தன் பார்வையால் அகற்றி இம்மையிலும், மறுமையிலும் நன்மை பெறச் செய்தார். பக்தயின் பெருமை இது. பக்தி இன்றி எதுவும் பலிக்காது' என்று கூறிக் கொண்டே குரு ஸங்கமத்தில் அத்திக்

*குச்சியை முளைக்கச் செய்வதில் ஈடுபட்டவனருகே சென்றார். தன் கமண்டலுவிலிருந்த பாலை அவன் மீது தெளித்தார். இவர் பார்வை பட்டதும் அந்தக் குச்சியிலிருந்து துளிர்கள் வெளிப்பட்டன. (100)*

दिव्यं स्वधामाङ्कुरितं च काष्ठमदृष्टकुष्ठोऽग्रत आस्थितं तम्।
दृष्ट्वा स काष्ठार्पितदृष्टिमीशं तुष्टाव सत्प्रेमभरानताङ्गः ॥ १०१

कोट्यर्कभं कोटिसुचन्द्रशान्तं विश्वाश्रयं देवगणार्चिताङ्घ्रिम्।
भक्तप्रियं त्वाऽत्रिसुतं वरेण्यं वन्दे नृसिंहेश्वर पाहि मां त्वम्॥ १०२

मायातमोऽर्कं विगुणं गुणाढ्यं श्रीवल्लभं स्वीकृतभिक्षुवेषं।
सद्भक्तसेव्यं वरदं वरिष्ठं वन्दे नृसिंहेश्वर पाहि मां त्वम्॥ १०३

कामादिषण्मत्तगजाङ्कुशं त्वामानन्दकन्दं परतत्त्वरूपं।
सद्धर्मगुप्त्यै विधृतावतारं वन्दे नृसिंहेश्वर पाहि मां त्वम्॥ १०४

सूर्येन्दुगुं सज्जनकामधेनुं मृषोद्यपश्चात्मकविश्वमस्मात्।
उदेति यस्मिन्नमतेऽस्तमेति वन्दे नृसिंहेश्वर पाहि मां त्वम्॥ १०५

रक्ताब्जपत्रायतकान्तनेत्रं सद्दण्डकुण्डीपरिहापिताघम्।
श्रितस्मितज्योत्स्नमुखेन्दुशोभं वन्दे नृसिंहेश्वर पाहि मां त्वम्॥ १०६

नित्यं त्रयीमृग्यपदाब्जधूलिं निनादसद्बिन्दुकलास्वरूपं।
त्रितापतप्ताश्रितकल्पवृक्षं वन्दे नृसिंहेश्वर पाहि मां त्वम्॥ १०७

दैन्याधिभीकष्टदवाग्निमीड्यं योगाष्टकज्ञानसमर्पणोत्कम्।
कृष्णानदीपञ्चसरिद्युतिस्थं वन्दे नृसिंहेश्वर पाहि मां त्वम्॥ १०८

अनादिमध्यान्तमनन्तशक्तिमतर्क्यभावं परमात्मसंज्ञम्।
व्यतीतवाग्हृत्पथमद्वितीयं वन्दे नृसिंहेश्वर पाहि मां त्वम्॥ १०९

स्तोत्रे क्व ते मेऽस्त्युरुगाय शक्तिश्चतुर्मुखो वै विमुखोऽत्र जातः।
स्तुवन्द्विजिह्वोऽभवदीश्वर त्वां सहस्रवक्त्रश्चकितोऽपि वेदः॥ ११०

स्तुत्वैवं प्रणतीश्चक्रे तमाश्वास्याब्रवीद्विभुः ।
मत्प्रसादान्महत्त्वश्रीकीर्तिसत्पुत्रवान्भव ।। १११

शिष्योत्तम त्वं योगज्ञो भविष्यसि कुलं च ते ।
त्वद्वद्भविष्यत्यानीय वधूं तिष्ठ ध्रुवं त्विह ।। ११२

तथेत्युक्त्वा द्विजो भार्यामानीय स तया सह ।
तत्र तस्थौ ततो लेभे पुत्रान्पुत्रीं स सत्तमान् ।। ११३

विद्यासरस्वतीमन्त्रं गुरुदत्तं जपन्वरम् ।
भेजे गुरुं भवासक्तो जीवन्मुक्तोऽभवद्विजः ।। ११४

तत्कुलं चापि तत्तुल्यं तद्भक्तिमहिमा त्वियान् ।
त्वत्पूर्वजोऽपि तत्तुल्यस् तस्मात्ते मतिरीदृशी ।। ११५

सद्गुरोस्तु प्रसादोऽयं भविष्यत्यपि ते कुले ।
वर्धमानः सदैवेति संविन्मे ब्राह्मण ध्रुवा ।। ११६

इति श्रीगुरुचरिते भक्तियोगे भक्तिमहिमावर्णनं नाम प्रथमोऽध्यायः
आदित एकोनविंशोऽध्यायः
सप्ताहपारायणे पञ्चमः । अन्ते 'रसज्ञा वशा' स्तोत्रं पठनीयम् ।
द्वितीयदिनारम्भे गुरुस्तुतिः ।

*அத்திக் குச்சி துளிர்த்ததையும், தன் உடலிலிருந்த குஷ்டம் மறைந்ததையும் குரு அந்த அத்திக் குச்சியையே பார்த்துக் கொண்டிருப்பதையும் கண்ட அந்தணன் குருவைத் துதித்தான். ந்ருஸிம்ஹேச்வர ! கோடி ஸூர்ய ஒளிகொண்ட நீர் அத்திரியின் புதல்வரான தத்தரே. உம்மை வணங்குகிறேன். என்னைக் காப்பாற்றுவீர். மாயையெனும் இருளை நீக்குகிற ஸூர்யன் நீர். கோடி சந்த்ரர்களைப் போன்று அமைதி தருபவர். ஸன்யாஸி வேஷத்திலுள்ள விஷ்ணு. விரும்பியதைத் தருபவர். காமம் முதலிய மதம் பிடித்த ஆறு யானைகளைத் துரட்டியால் அடக்குபவர். ஆனந்தக் கிழங்கு. நல்லறக் காப்பிற்காக அவதரித்தவர். ஸூர்யனையும்,*

சந்த்ரனையும் கண்களாகக் கொண்டவர். நல்லோரின் விருப்பத்தைத் தருகிற காமதேனு. ஐந்து பூதக் கலவையான உலகம் உம்மிடமிருந்து வெளியாகிறது. உம்மில் வாழ்ந்து உம்மில் மறைகிறது. தாமரை போன்று சிவந்த அழகிய கண்களுள்ளவரும், தண்டமும், கமண்டலுவும் கொண்டு பாபத்தை நீக்குபவரும் நிலவு போன்று குளிர்ந்த புன் சிரிப்புள்ளவரும், வேதம் தேடும் பாத தூளி கொண்டவரும் நாத பிந்து கலாவடிவினரும், அண்டியவரின் தாபத்தை நீக்குகிற கற்பக மரமும், ஏழ்மை, நோய் பயம், கஷ்டம் இவற்றைக் காட்டுத் தீயாகி அழிப்பவரும் எட்டு விதயோக முறைகளைப் போதிப்பவரும் க்ருஷ்ணை - பஞ்ச நதிக் கரைகளில் வசிப்பவரும், ஆதியும் நடுவும் முடிவு மற்றவரும், எல்லையற்ற சக்தி கொண்டவரும், வாக்குக்கும், மனத்திற்கும் எட்டாதவருமான ஈடிணையற்ற பரமாத்மாவான ந்ருஸிம்ஹேச்வர என்னைக் காப்பீர். நீர் பெரும் புகழ் பெற்றவர். உம்மைப் பாட எனக்கேது சக்தி? நான்முகனும் தலை குனிந்தான். ஆயிரம் தலையுள்ள ஆதிசேஷனும் இரு நாக்குள்ள பாம்பாகக் குறுகுகிறான். இவ்வாறு துதித்தெழுந்த அவனுக்கு ஸ்ரீ குரு ஆறுதலளித்தார். என் அருளால் எல்லாப் பெருமைகளையும் பெறுவாய். யோக முறை அறிவாய். உன் குலம் பெருகும். உன் மனைவியை அழைத்து வந்து இங்கு வசிப்பாய் என்று ஆசி அளித்தார். அப்படியே மனைவியை அழைத்து இங்கு வசித்தான். மக்களைப் பெற்று நன்கு வாழ்ந்தான். குரு உபதேசித்த வித்யா ஸரஸ்வதீ மந்த்ரத்தை ஜபித்துக் கொண்டு பற்றற்று ஜீவன் முக்தனானான். அவனது குலமும் அவ்வாறே வாழ்ந்தது. இது பக்தியின் பெருமை. உன் முன்னோரும் அவரைப் போன்று வாழ்ந்தவர்களே. அதனால் தான் உன் சித்தப் போக்கும் இவ்வாறு அமைந்தது. உன் குலத்தை ஸத்குருவின் அருள் பாலனம் செய்யும். இது என் நிலைத்த கருத்து என்று ஸித்தர் நாமதாரகனிடம் கூறினார். (116)

# अथ विंशोऽध्यायः

**नामधारक उवाच—**

**को मत्पूर्वः कथं तेन सेवितो भगवान्प्रभुः।**
**यत्प्रभावान्ममेदृग्धीस् तच्छ्रोतुं सादरोऽस्म्यहम्।। १**

सिद्ध उवाच—

प्रागुक्तं यवनात् त्रातः सायंदेव इति प्रिय।
पूर्वः स एव तेऽश्रौषीद्गुरुं गन्धर्वपूःस्थितम्॥ २

तत्रैत्य प्रणतो विप्रो मठे दृष्ट्वा परात्परम्।
नत्वा दण्डवदस्तौषीदुपसंगृह्य पद्द्वयम्॥ ३

परमात्मन्परञ्ज्योतिः श्रीनृसिंहसरस्वति।
भक्तेश श्रुतिचिन्त्यं ते सर्वतीर्थाश्रयं पदम्॥ ४

न मर्त्यस्त्वं महेशोऽसि त्र्य्यात्मा मानवाकृतिः।
प्राणदानक्षमाम्ब्वाढ्यकमण्डलुकरोऽसि कः॥ ५

दुष्टनिग्रहसद्रक्षाक्षमदण्डकरोऽस्यजः।
शिवोऽसि मुक्तिदः पापतापनाशक्षमोग्रदृक्॥ ६

मृतो जीवितो येन दुग्धा लुलायी
वशा शुष्ककाष्ठं तरुत्वं प्रणीतम्।
क्षणादन्त्यजोऽप्युद्धृतस्तेऽनुभावं
क्षितौ कोऽर्हति ज्ञातुमन्यत्तवापि॥ ७

*அத்தியாயம்—20*

*என் முன்னோரில் எவர் ஸ்ரீ குருவை வழிபட்டார்? அவரது பெருமையால் எனக்கு இவ்வாறு சித்தப் போக்கு அமைந்ததெனில் அதனைத் தெரிந்து கொள்ளவிரும்புகிறேன் என நாமதாரகன் கேட்டதும் ஸித்தர் கூறுகிறார். "ஸாயந்தேவனை ஸ்ரீ குரு யவனனிடமிருந்து காப்பாற்றினார் என்று முன்னர் கூறினேனல்லவா? (அத்.9) அவர்தான் உன் முன்னோர். கந்தர்வ புரத்திலிருந்த ஸ்ரீ குருவைப் பற்றி அறிந்த அவர், ஸ்ரீ குரு இருக்குமிடம் சென்று அவரை தரிசித்து வணங்கி, தழதழத்த குரலுடன் விண்ணப்பித்தார். "பரமாத்மாவே! பேரொளியாகிய ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஸரஸ்வதியே! மேலோர்களின் ஆசிரயமான உமது நிலை த்யானத்திற்கு ஏற்றது. நீர் மானுடப் பிறவியல்ல. நீர் மஹேசன்,*

மும்மூர்த்தி வடிவினர். உயிரை வழங்கும் நீர் கொண்ட கமண்டலுவைக் கையில் ஏந்திய ப்ரஹ்மா நீர். கெட்டவரை அடக்கி நல்லோரைப் பாதுகாப்பதற்காக தண்டம் ஏந்திய விஷ்ணு. பாபத்தையும், தாபத்தையும் போக்குகிற உக்ரப் பார்வை கொண்ட சிவன். செத்தவனை உயிர்ப்பித்தவர். மலடி எருமையைப் பால் தரச் செய்தவர். காய்ந்த கிளையை மரமாக்கியவர்- புலையனைத் தூக்கி விட்டவர். உமது பெருமையை உணரவோ சொல்லவோ தகுந்தவர் இவ்வுலகில் இல்லை. (7)

श्रीगुरुरुवाच—

स्तुत्याऽनयाऽस्मि ते विप्र भृशं तोषमुपागतः ।
भूयात्ते वंशमात्रस्य श्रद्धा भक्तिर्मयि ध्रुवा ॥ ८

कच्चित्क्षेमं युवत्यादेस् तव ब्रूहि क्व तिष्ठसि ।
कालेन बहुना विप्र संगतोऽस्यद्य मत्प्रिय ॥ ९

सायंदेव उवाच—

देवदेव जगन्नाथ भगवन्त्वत्प्रसादतः ।
सर्वेषां क्षेममस्तीश काञ्च्यां तिष्ठाम्यहं स्वकैः ॥ १०

योगक्षेमेक्षका भ्रातृ-पुत्रा मे तेऽनुकम्पया ।
त्वत्पादाब्जरसं पातुमलिप्रायोऽस्मि सम्प्रति ॥ ११

श्रीगुरुरुवाच—

कष्टं मे सेवनं नाज्ञ कोऽपि ज्ञातुं न शक्यते ।
ग्रामे नदीतटेऽरण्ये दुर्गमेऽपि वसाम्यहम् ॥ १२

तच्छ्रुत्वा सोऽनुयास्यामि यत्र कापीत्थमाददे ।
तथेत्युक्त्वैकदा शम्भुस् तेनागात्सह संगमम् ॥ १३

निवार्यान्यान्समं तेन स्थित्वाऽश्वत्थतले निशि ।
वृष्ट्यै तदादिदेशाब्दमकालेऽपि परीक्षितुम् ॥ १४

गर्जिताब्दो ववर्षारं झञ्झावातसखस्तदा।
क्षणप्रभाऽपि मुष्णन्ती दृष्टिमासीदनुक्षणम्॥ १५

उपर्युपरि वस्त्रैस्तं समन्तात्स प्रकम्पितम्।
सहिष्णुः श्रीगुरुं भेज आसारार्तिरणद् द्विजः॥ १६

ஸ்ரீ குரு இந்தத் துதியால் மகிழ்ந்து ஸாயந்தேவனின் வம்சத்தினர், தன்னிடம் ச்ரத்தையும் பக்தியும், நிலைத்து வாழ்வர் என வாழ்த்தி, "உனது மனைவி மக்கள் நலமா? எங்குள்ளனர்? வெகு நாட்களுக்குப் பிறகு வந்துள்ளாய் எனக் குசலம் விசாரித்தார். ஸாயந்தேவர் கூறினார். எல்லோரும் நலமே. என்னைச் சார்ந்தவருடன் காஞ்சியில் வசிக்கிறேன். உமது கருணையால் என் ஸஹோதரன், புத்திரன் முதலானோர் குடும்ப நலனைப் பார்த்துக் கொள்கின்றனர். உமது திருவடிகளில் பணிவிடை செய்ய விரும்புகிறேன் எனத் தெரிவித்தான். ஸ்ரீ குரு காட்டிலும், ஆற்றங்கரையிலும், க்ராமத்திலும் வசிப்பதால் தனக்குப் பணிவிடை செய்வது கஷ்டம்தரும் என்றார். எங்கிருந்தாலும் பணிவிடை புரிவேன் என ஸாயந்தேவன் கூறினதும், குரு அவனைச் சோதிக்க மற்றவர்களைத் தடுத்து நிறுத்திவிட்டுத் தன்னுடன் ஸாயந்தேவனையும் அழைத்துக் கொண்டு ஸங்கமத்தில் அரசமரத்தடியில் இரவில் தங்கி எதிர் பாராதவிதமாக அகாலத்தில் பெரு மழை பொழியச் செய்தார். பேய்க் காற்றும் இடி முழக்கமும், மின்னலும் பயங்கரமாகத் தோன்றின. ஸாயந்தேவன் மழைக் குளிரால் பற்கள் நடுங்கியும் குளிரைத் தாங்கி ஸ்ரீ குருவின் மீது ஆடைமேல் ஆடையாகப் போர்த்திக் காப்பாற்றினான். (16).

यामाभ्यां खण्डितं वर्षं दृष्ट्वोचे तं गुरुः पुरम्।
गत्वाऽग्निमानयात्यन्तं क्लिन्नाङ्गे शीतमुत्थितम्॥ १७

कुत्रापीतस्ततोऽपश्यन् याहि मामनुचिन्तयन्।
तच्छ्रुत्वागात्स करकचूर्णिताङ्गोऽपि शीकरैः॥ १८

क्लेदितात्माप्यनुध्यायन् चञ्चलातेजसोऽयनम्।
प्रविश्य गोपुराद् द्वाःस्थदत्तमार्गः पुरं स तु॥ १९

गृहीतभाजन न्यस्तवह्निः शीघ्रं न्यवर्तत ।
ज्ञातुं गुरूक्तिहेतुं स व्यधाद् दृष्टिमितस्ततः ।। २०

पार्श्वद्वयतलस्थोग्रसर्पौ दृष्ट्वाऽगमज्जवात् ।
दृष्ट्वानुयातावपि तौ भीतो दध्यौ हरेः पदम् ।। २१

तदोच्चैः सङ्गमे वेदध्वनिं श्रुत्वा विलोक्य च ।
द्योतं भ्रान्तो द्रुतं प्राप्य दृष्ट्वैकं स्वगतं द्विजः ।। २२

कैः कृतोऽयं ध्वनिर्द्योतः केत्यभूच्छङ्कितः स तम् ।
भीतं प्राह गुरुर्मा भीस्त्वद्रुस्यै तौ प्रचोदितौ ।। २३

तदाप्यही गुरुं नत्वा जग्मतुस्तं प्रभुर्द्विजम् ।
प्राहेदृशी गुरोः सेवा मरुतामपि दुष्करा ।। २४

இரு யாமங்கள் தொடர்ந்த மழையைக் கண்ட ஸ்ரீ குரு நகருக்குச் சென்று நெருப்பைக் கொணர்வாய். உடல் நனைந்துவிட்டதால் குளிர் கிளம்பிவிட்டது. என்னை நினைத்துக் கொண்டே இங்குமங்கும் பாராமல் எங்காவது சென்று வா என்று கூற, குளிரால் நடுங்கியபடி ஆலங்கட்டி விழுவதால் அடிபட்டு, குருவை நினைத்துக் கொண்டே, மின்னல் ஒளியால் வழியைக் கண்டு, வாசற் காப்போன் வழி விட வீட்டினுள் நுழைந்து பானையில் நெருப்பை எடுத்துக் கொண்டு திரும்பினான். குரு ஏன் இவ்வாறு உத்தரவிட்டார் எனச் சிந்தித்துக் கொண்டே இங்குமங்கும் பார்வையைச் செலுத்தினான். இரு ஓரங்களிலும் உக்ரப் பாம்புகள் தொடர்வதைக் கண்டு வேகமாக ஓடினான். பாம்புகள் தன்னைத் தொடர்வதைக் கண்டு பயந்து குருவை நினைத்துக் கொண்டே ஓடினான். அப்போது ஸங்கமத்தில் வேத ஒலி கேட்டது, ஒரு ஒளி தென்பட்டது. அதனை நோக்கி வேகமாக ஓடினான். அங்கு தனித்திருந்த குரு ''பயப்படாதே! உன்னைக் காக்கவே அவ்விரு பாம்புகளும் அனுப்பப்பட்டன என்றார். அந்த வேத ஒலி எங்கிருந்து வந்தது? அந்த ஒளி எங்கே! என்ற கலக்கத்துடன் பயந்து நின்றான். அந்தப் பாம்புகள் இரண்டும் குருவை வணங்கிவிட்டுச்

சென்றன. இவ்வகைப் பணிவிடை தேவர்களுக்கும் கிட்டாதென குரு சொன்னார். (24)

सायंदेव उवाच——

भगवन्ननुकम्पाब्धे शरणागतवत्सल ।
सेवातत्त्वमुपाख्याहि श्रीगुरोस्तारकं परम् ।। २५

श्रीगुरुरुवाच——

छायौपम्येन संसेव्यो गुरुस्तत्त्वमिदं परम् ।
प्रार्पयेन्नियतं देहं सार्थं तस्मै परात्मदृक् ।। २६

सर्वभावेन बुद्ध्वेशं तं भजेत्तत्प्रसादभुक् ।
तद्ध्यानजीवनस्तत्पत्तीर्थपस्तत्कथारतिः ।। २७

दुःसाध्येऽपि यदादिष्टं कार्ये भक्त्या तदारभेत् ।
आरब्धं स नयेत्सिद्धिं भीतः कालोऽप्यपैत्यतः ।। २८

ஸ்ரீ குருவின் ஸேவையின் உண்மை நிலை என்ன என்று ஸாயந்தேவன் கேட்க ஸ்ரீ குரு சொன்னார். நிழல் போல் குருவைத் தொடர்ந்து நிற்க வேண்டும். உடலும், பொருளும் குருவிடம் அர்ப்பணம் செய்ய வேண்டும். பரமாத்மாவாக அவரைக் காணவேண்டும். ஈசனாக முழுவதும் நம்பி உணர்ந்து அவர் உண்ட மீதியை உண்பவனாக, அவரையே நினைத்து அவரது திருவடி நீர் பருகி, அவரைப் பற்றியே பேசி, அவர் உத்தரவிட்டது எளிதில் நிறை வேற்ற முடியாதிருந்தும் அதனை குரு சொன்னபடி உடன் தொடங்கி, நிறைவுறச் செய்ய வேண்டும். காலம் பயந்து தானே இவனைவிட்டகலும் (28)

शृणु गौरीशसंवादं ब्राह्मस्त्वष्टाऽभजद् गुरुम् ।
विद्यार्थी सर्वभावात्तद् दार्ढ्यं ज्ञातुं गुरुर्जगौ ।। २९

वर्षास्वापः पतन्त्यत्र प्रत्यब्दमुटजे त्वतः ।
रचयैकं गृहं रम्यं सुखदं नूत्नवत्सदा ।। ३०

शिष्यं तदाश्रुत्य यान्तं गुरुस्त्रीः प्राह कञ्चुकम्।
देहि मेऽङ्गमितं चित्रं मनोहरमकृत्रिमम्।। ३१

पुत्रोऽप्याहाङ्घ्रियोग्ये मे पादुके देहि येऽम्भसि।
गर्तेऽपि यातुः सुखदे चिन्तितस्थलनायके।। ३२

कन्याऽऽह कुण्डले दन्ति-दन्तभूतं प्रदेहि मे।
लसत्क्रीडागृहं चैकस्तम्भं पुत्तलिका अपि।। ३३

सचेतनाः सदा येषु पाकः शैत्यं न यास्यति।
अनञ्जनस्पृग्भाण्डानीत्याकर्ण्य स ययौ वनम्।। ३४

*ஸாயந்தேவனே? கௌரிக்கும் ஈசனுக்குமிடையே நடந்த ஸம்பாஷணையைக் கேட்பாய். ப்ரஹ்ம புத்திரனுன த்வஷ்டா வித்யையைப் பெற குருவை வழிபட்டான். அவனது முழு மனத்திடத்தையும் அறிய குரு அவனிடம் கூறினுர். ''ஒவ்வொரு ஆண்டிலும் இந்தக் குடிசையில் மழை காலத்தில் மழை பெய்கிறது. நீ புதிய அழகியதும் ஸுகம் தருவதுமான வீட்டைக் கட்டுவாய்'' என. அவ்வாறு செய்வதாக வாக்குக் கொடுத்து வெளியேறுகிற சிஷ்யனிடம் குருவின் பத்தினி என் உடலுக்கேற்ற அழகிய புள்ளிகள் வைத்த செயற்கை நூலாலாகாத ரவிக்கையைக் கொணர்வாய் என்ருள். மழையிலும் பள்ளத்திலும் நடமாட என் கால்களுக்கேற்ற நினைத்த இடத்திற்குச் செல்லத்தக்க பாதுகை கொணர்வாய் எனக் குரு புத்திரன் கூறினுன். குருவின் பெண் யானைத் தந்தத்தாலான இரு காதணிகளும் ஒரே தூணுள்ள விளையாட்டு வீடும். உயிருள்ள பொம்மைகளும், சமைத்ததும் சூடாற விடாத எண்ணெய்ப் பிசுக்கு ஒட்டாத சமையல் பாத்திரங்களையும் கொணர்வாய் என்ருள். இதனைக் கேட்ட அவன் காட்டிற்குச் சென்ருன் (34).*

अज्ञोऽस्म्यप्यत्र गुर्वर्थं मर्तव्यमिति तं वने।
निर्विण्णमाययौ कश्चिदवधूतो दयार्द्रधीः।। ३५

व्यपेतभीः प्रहृष्टात्मा गुरुभावनया स तम्।
उपसंगृह्य तत्तस्मै शशंस गुरुभाषितम्॥ ३६

तमाश्वास्याब्रवीत्साधुः काशीक्षेत्रे त्वभीष्टदे।
सति जाग्रति विश्वेशे किं केषां दुर्लभं वद॥ ३७

तत्रत्यपुण्यं को वेत्ति तद्वास्युद्वीक्षणादपि।
अपैत्यघौघः किं वाच्यं सुखमानन्दकानने॥ ३८

पुमर्थदोऽपि विश्वेशः प्राणिमात्रं मृतं क्षणात्।
स तारकोपदेशेन दत्ते मुक्तिमनुक्षणम्॥ ३९

"ஏது மறியேன். குருவின் பொருட்டுச் செத்தாலும் நல்லதே எனக் காட்டிலும் மனம் நொந்து நிற்கிற அவனிடம் ஒரு அவதூதர் பரிவுமிக்கவராக அணுகினார். பயம் நீங்கியவனாக மகிழ்ச்சியுடன் குருவாகவே அவரை நினைத்துத் திருவடிகளின் வணங்கித் தன் குரு உத்தரவிட்டதை அவரிடம் கூறினான். "விருப்பமனைத்தையும் வழங்குகிற காசியும், விச்வேச்வரரும் உள்ளபோது எதுவும் கிடைப்பதற்கரிதல்ல. அங்கு வசிப்பதால் ஏற்படுகிற புண்யம் கணக்கிடமுடியாது. அங்கு வசிப்பவர்களைக் கண்டால் பாபம் விலகும். அது ஆனந்த வனம். புருஷார்த்தங்களனைத்தையும் தருபவர் விச்வேசர். எந்த உயிரினமும் அவரிடமிருந்து தாரகோபதேசம் பெறுவதால் இறுதியில் முக்திபெறுவர் என ஸாது கூறினார்.

शिष्य उवाच—

क्वास्ते काशी क्व विश्वेशो जाने स्वर्भुवि वा न तत्।
प्रार्थये तारकं त्वां मे दर्शयाज्ञोऽस्मि केवलम्॥ ४०

स प्राह त्वां नयाम्यद्य त्वद्योगात् क्षेत्रदर्शनम्।
स्यान्मेऽप्ययत्नतो जन्मसाफल्यं यद्यदीक्षणात्॥ ४१

तमादाय ततो योगगत्या शीघ्रं महामुनिः।
काशीं गत्वा क्षेत्रयात्रां यथाक्रममुपादिशत्॥ ४२

विश्वेशदर्शनं चान्तर् गृहयात्रां यथाक्रमम् ।
दक्षिणोदङ्मानसाख्यां पञ्चक्रोशीं च विस्तरात् ।। ४३

स्नानदानार्चनश्राद्ध युक्तां यात्रां च पाक्षिकीम् ।
भवानीशो हरिर्धुण्डि र्दण्डपाणिश्च भैरवः ।। ४४

गुहः (हा) काशी च गङ्गाद्या देवा लिङ्गानि सर्वशः ।
इत्यादीनां पूजनं च निवेद्य स्थापनं तथा ।। ४५

स्वनामाङ्कितलिङ्गस्य कथयित्वा यथोक्तवत् ।
कुरु प्रसीदेद्विश्वेश इत्युक्त्वान्तर्दधे स्वयम् ।। ४६

मद्भावस्य परीक्षायै गुरू रूपान्तरादयम् ।
प्राप्तः किलेति मत्वा स यथानिर्दिष्टमाचरत् ।। ४७

चरित्वा क्षेत्रयात्रां स लिङ्गं संस्थापयत्तदा ।
विश्वेशो दर्शयित्वा स्वं रूपं प्रीतोऽब्रवीदिदम् ।। ४८

वत्स वत्स पवित्रोऽसि गुरुभक्त्या विशुद्धया ।
धन्योऽस्यनुगृहीतोऽसि वृणीष्वाभीप्सितं वरम् ।। ४९

शिष्योऽपि गुरुतत्पत्नीपुत्रोक्तीस्तं तथाब्रवीत् ।
कलाविद्यापटुर्भूत्वा ज्ञानविज्ञानवानिह ।। ५०

प्रसार्य कापि चातुर्यं लोकख्यातो भविष्यसि ।
इत्युक्त्वान्तर्दधे विश्वेट् ततः सोऽप्याययौ गुरुम् ।। ५१

*காசியும், விச்வேச்வரரும் இருக்குமிடம் எது ? பூமியிலா ? ஸ்வர்கத்திலா? நீரே வழிகாட்ட வேண்டும் என த்வஷ்டா கேட்க, யோக முறையில் ஸாது அவனைக் காசிக்கு அழைத்துச் சென்று க்ஷேத்ர தரிசன முறையை விளக்கினார். விச்வேச்வரைத் தரிசித்தல், உள்ளே சுற்றி வருதல், தக்ஷிண மானஸ - உத்தர மானஸ யாத்ரை, பஞ்சக்ரோசயாத்திரை, ஈசன், ஹரி, டுண்டி, தண்டபாணி, பைரவர்,*

குஹன், (குகை) காசீ, கங்கை மற்றும் தேவர்கள், லிங்கங்கள் அனைவரையும் தரிசித்து வழி படுதல், கங்கா ஸ்நானம், லிங்க ப்ரதிஷ்டை, இவற்றைச் செய்து ஈசனின் அருள் பெறச் சொன்னார். என்னைச் சோதிக்க குருவே வேறு வேஷத்தில் வந்து உதவுவதாகக் கருதி அவர் கூறியபடி வழிபட்டான். விச்வேசர் நேரில் தோன்றினார். குரு பக்தியால் தூய்மை பெற்றுப் பாக்யம் பெற்றாய். வேண்டியதைக் கேள் என்றார். சீடனும், குருவும் அவரது பத்னி முதலானோரும் விரும்பியதை அவரிடம் சொன்னான். எல்லா கலைகளிலும் வித்யைகளிலும் தேர்ச்சி பெறுவாய். உலகியலிலும் அக அறிவிலும் சிறந்த தேர்ச்சி பெற்று உன் திறமைகளை வெளிப்படுத்திப் புகழ் பெறுவாய் என அருள் புரிந்து மறைந்தார். த்வஷ்டாவும் தன் குரு இருக்குமிடம் வந்தான். *(51)*

याचिताखिलवस्तूनि श्रीविश्वेशप्रसादतः ।
निर्मायादात्कृती तेन गुरुस्तुष्टस्तमब्रवीत् ।। ५२

भूत्वा ज्योतींषि यावत्त्वं चिरजीवी प्रसार्य सत् ।
चातुर्यं सर्वलोकेषु त्वं स्रष्टेवापरो भव ।। ५३

तव सर्वर्धिनिधयो वशाश्चिंताव्यथादिकाः ।
न स्पृशन्ति कदापि त्वां प्रसादोऽयं मम ध्रुवः ।। ५४

ततः प्रस्थापयामास तं स्वस्थानमुपेत्य सः ।
भूत्वा गुरूक्तवद्ध्यास्ते श्रीमांस्त्वष्टाऽखिलश्रुतः ।। ५५

इति गौर्यै शिवेनोक्तं सेवातत्त्वं त्विदं गुरोः ।
तदुक्ताचरणं भक्त्या सर्वभावात्तदर्चनम् ।। ५६

एतावदुक्त्वा विरते गुरौ द्विजो नत्वाब्रवीदद्य विचित्रमीक्षितम् ।
काशीपुरं वै भवता सहाखिलं यद्यत्समाख्यातमवेक्षितं समम् ।। ५७

काहं क्व काशी क्व भवांस्तथापि वा अदृष्टपूर्वं सकलं प्रदर्शितम् ।
न त्वं नरो नासि सुरो न चेतरो नूनं परात्मैव परावरोऽस्यजः ।। ५८

प्राग्ब्रह्म त्वमजोऽक्रियोऽपि बहुलं स्यामित्यभूद्धीस्तया
सृष्ट्वैवाण्डभुवं ततो जगदिदं सृष्टं सधर्मं गुणैः।
स्वैः स्वं भो रमयन्विहंसि सदरीनत्रावतीर्यानिशं
वन्दे श्रीनृहरे सरस्वति वरं ते श्रीपदाब्जद्वयम् ।। ५९

குருவும் அவரது பத்னி முதலானோரும் விரும்பியதனைத்தையும் விச்வேசனின் அருளால் உருவாக்கித் தந்து அதனால் சொன்னதைச் செய்த நிறைவைப் பெற்றான். குரு மகிழ்ந்து சொன்னார். சந்த்ர சூர்யர் உள்ளவரை வாழ்வாய். உன் செயல் திறனைக் காட்டி மற்றொரு ப்ரஹ்மாவாவாய், நவநிதிகள் உன் வசப்படும். கவலையும், வேதனையும் நேராது. "என குருவின் ஆசி பெற்று த்வஷ்டா தேவ சிற்பியாக எல்லாமறிந்தவனாக உள்ளான். சிவன் இந்த வரலாற்றைப் பார்வதிக்குக் கூறினார். குரு ஸேவையின் பயன் இது. குரு அனைத்து தேவர்களும் என்ற பாவனையால் அவரை வழிபட்டு அவர் கூறியபடி நடக்க வேண்டும் என்று குரு கூறியதும் அவரை ஸாயந்தேவன் வணங்கினான். குருவே, காசி பற்றி நீர் விளக்கியதனைத்தையும் நேரில் கண்டேன். நான் எங்கே ! காசி எங்கே ! இதுவரை காணாததனைத்தையும் கண்டேன். நீர் மானுடப் பிறவியல்ல. தேவரோ மற்றவரோ அல்ல. நீரே பரமாத்மா. மேலும் கீழுமனைத்துமானவர். பிறப்பற்றவர். பரம் பொருளாகச் செயலற்றிருந்தவர். பலவாக ஆவேன் என்ற ஸங்கல்பத்தால் இந்த பேரண்டத்தையும் ப்ரஹ்மாவையும் படைத்து அதில் இவ்வுலகை குணதர்மங்களால் பலவாக ஆக்கி அவற்றில் தங்கித் தன்னவர்களை இனிது வாழச் செய்தீர். ஸ்ரீ ஹரே ! ந்ருஸிம்ஹ ஸரஸ்வதி பகவானே! உமது திருவடிகளை வணங்குகிறேன். (59)

कल्याकृष्टहृदुज्झितक्रतुनर त्रस्ताध्वराशीर्मुदे
प्रातः सूर्य इवोदितोऽस्यज महामोहान्धकारं ग्रसन्।
सद्धर्माश्रमसेतुमत्र शिथिलप्रायं सुदार्ढ्यं नयन्
वन्दे श्रीनृहरे सरस्वति वरं ते श्रीपदाब्जद्वयम्।। ६०

सर्वानन्दनिधानरूपममलं स त्वं सुखं मूर्तिमत्
प्रादुष्कृत्य जनत्रयान्तरमृगक्रीडावनं पावनम्।

संसारावटमग्नमुद्धरसि भो स्वीकृत्य तुर्याश्रमं
वन्दे श्रीनृहरे सरस्वति वरं ते श्रीपदाब्जद्वयम् ।। ६१

मूके गां दृशमन्धके सुतनयं वन्ध्यासु चासून्मृते
सौभाग्यं विधवासु पल्लवमहो दत्तं सुशुष्केन्धने ।
एवंभूत इयान्तवैष महिमा त्रैलोक्यसंस्थाक्षमो
वन्दे श्रीनृहरे सरस्वति वरं ते श्रीपदाब्जद्वयम् ।। ६२

मुक्तावास मुमुक्षुकल्पविटपिन् भो कामिनां कामधुग्
दारिद्र्यानलमेघ दुष्कृतदवाग्ने तापिताराम ते ।
श्रुत्यन्विष्टरजःपदं श्रुतविवादातीततत्त्वं महत्
वन्दे श्रीनृहरे सरस्वति वरं ते श्रीपदाब्जद्वयम् ।। ६३

भो योगीश्वरभावितं तव पदं तीर्थाश्रयं सज्जनाः
जीवं कामिसुदैवतं च कमलालीलास्थलं निर्मलम् ।
विद्वद्वादकरण्डकं सुकृतसंस्थानं महत्पावनं
वन्दे श्रीनृहरे सरस्वति वरं ते श्रीपदाब्जद्वयम् ।। ६४

*''மக்கள் கலியால் வசப்படுத்தப்பட்டதால் வேள்வி முதலியவற்றை விட்டனர். வேள்விகள் மூலம் உணவு பெற்ற தேவர்கள் பயந்தனர். அவர்கள் மகிழ, காலையில் ஸூர்யன் போல் பிறப்பற்ற நீர் தோன்றினீர். பெரும் மயக்கம் என்ற இருளை விழுங்கினீர். தளர்ந்திருந்த நல்ல வேள்வி முதலிய பணிகளாலான அணையைத் திடப்படுத்தினீர். பேரானந்தமயமான உமது நிர்மலவடிவம் ஸுகமே வடிவெடுத்தது போன்றது. அவ்வடிவுடன் தோன்றித் துறவி நிலைபெற்று, ஸம்ஸாரக் குழியில் விழுந்தவனை தூக்கிவிடுகிறீர். ஊமைக்கு வாக்குவன்மையும், குருடனுக்குப் பார்வையும், மலடிக்கு நற்புதல்வனும், இறந்தவனுக்கு உயிரும், விதவைக்கு ஸௌபாக்யமும், காய்ந்து விறகான மரத்திற்குத் தளிரும் தந்தீர். மூவுலகையும் திடப்படுத்திய பெருமை உம்முடையது. முக்தர்களின் தங்குமிடமும் முக்திபெற விரும்புவரின் கற்பகமுமாகி பொருள்நாட்டமுள்ளவருக்கு நாடிய பொருளும் தந்தீர். ஏழ்மையெனும் நெருப்பை அணைக்கிற மேக மாகி, பாபத்தை எரிக்கிற காட்டுத் தீயாகி*

நொந்தவருக்கு அமைதி தந்த உமது திருவடித் தூளியை வேதம் தேடுகிறது. கேட்டறிந்து ஆராய்வதற்கு உட்படாதது உம் பெருமை. உமது திருவடி யோகீச்வரர்களால் த்யானிக்கப் பெற்றது. நல்லோருக்குத் தங்குமிடம் நல்லவரை வாழ்விப்பது. பொருள் நாட்டமுள்ளவரின் தெய்வம், லக்ஷ்மீ விளையாடுமிடம். அப்பழுக்கற்றது. அறிஞர்கள் ஆராய்வதற்கு உரியது. புண்யத்தின் இருப்பிடம். தூய்மை தருவது. ஸ்ரீ நரஸிம்ஹ ஸரஸ்வதியே உமது திருவடித்தாமரைகளை வணங்குகிறேன். *(64)*

वेदागोचर ते चरित्रममलं शक्तोऽत्र कः कृत्स्नशो
वक्तुं वह्न्यबिनेन्दुभूखपवनात्मेतीह मूर्त्यष्टकम्।
एतद्विश्वमयं न चान्यदिह वा ओंकाररूपेशिताः
वन्दे श्रीनृहरे सरस्वति वरं ते श्रीपदाब्जद्वयम्॥ ६५

कुण्डीदण्डकरं प्रशान्तममलं संन्यासिरूपं तव
श्रीभीमामरजायुतिस्थितमज ध्येयं शरण्यं मयि।
ज्ञातं तारकमीश सत्यमनिशं ब्रह्मन्स्थिरीकुर्वदो
वन्दे श्रीनृहरे सरस्वति वरं ते श्रीपदाब्जद्वयम्॥ ६६

एवं स्तुवन्तं प्रभुराह तेऽर्पिता तुष्टेन भक्तिर्मयि खल्वहैतुकी।
भो पुत्रपौत्रादिसमस्तवंशजा भक्ता भविष्यन्ति ममैव निश्चितम्॥ ६७

इतःपरं म्लेच्छनिषेवणं जहि स्त्रिया सुतैश्चात्र सदैव तिष्ठ भोः।
द्विजोऽपि गत्वा गृहमानयत्स्त्रियं सुतांश्च तुष्टाव जगद्गुरुं पुनः॥ ६८

त्वं वाच्यवाचकतयेश जगन्मयो वा
ओंकारवाच्य भगवन् त्रिगुणात्मकोऽसि।
आद्यन्तवर्जित पुराकृतभागधेयाद्
दृष्टं त्विदन्तव परात्परसत्त्व रूपम्॥ ६९

पापोऽपि पूतोऽस्मि तवाङ्घ्रिसंश्रयात्
स्पर्शाश्रयाल्लोहमपीव काञ्चनम्।

तप्तोऽपि शान्तोऽस्मि मुखेन्दुदर्शनाद्
दीनोऽपि धन्योऽस्मि तव प्रसादतः ।। ७०

स्तुत्वैवं श्रीगुरुं हृष्टः कारनाटकभाषया ।
आवतारकथोद्घातं जगौ तस्य यथाक्रमम् ।। ७१

வேதத்திற்கும் புலப்படாதவரே! உமக்கு அக்னி, ஜலம், ஸூர்யன், சந்த்ரன், பூமி, ஆகாயம், வாயு, ஜீவன் என்ற எட்டும் உடல்கள். உலகமே உம் உருவம். ஓங்கார ரூபஞன ஈச ! உமது சரிதத்தை முழுவதும் கூற இயலாது. கமண்டலுவும், தண்டமும் கைகளில் ஏந்தியவர், அமைதிமிக்கவர், தூயவர், பீமா-அமரஜா நதிக் கரையில் இருப்பவர், சரணடையத் தக்கவர். இந்த உருவத்தை என் சித்தத்தில் நிலைத்திருக்கச் செய்வீர். ஸ்ரீ நிருஸிம்ஹஸரஸ்வதியே ! உமது உயர்ந்த இரு திருவடித் தாமரைகளையும் வணங்குகிறேன்.'' என்று துதிக்கிற ஸாயந்தேவனை ஸ்ரீ குரு அழைத்தார். ''எதிர்பார்ப்பற்ற உன் பக்தி என்னிடம் அர்ப்பணம் செய்யப்பட்டது. உன் புதல்வன் முதலிய வம்சபரம்பரை என் பக்தர்களாக இருப்பர். இதற்குப் பிறகு யவனனை ஸேவிப்பதை விட்டுவிடு. உன் மனைவி மக்களுடன் இங்கேயே இருப்பாய்'' என்றார். ஸாயந்தேவனும் மனைவி மக்களை அழைத்து வந்து அவர்களுடன் குருவை வணங்கினான். நீர் உலகின் உருவமும் உட்பொருளுமாயுள்ளீர். ஓங்கார வடிவினர், முக்குணங்களாயிருப்பவர். ஆதியுமந்தமுமில்லாதவர். உமது இந்த மேலானதற்கும் மேலான ஸத்வ வடிவை முன்பிறவிகளில் செய்த புண்யத்தால் கண்டேன். பாபியான நான் உம் திருவடித் தொடர்பால தூய்மை பெற்றேன். ஸ்பர்ச வேதியால் இரும்பும் தங்கமாகும். உமது முகதரிசனத்தால் பாபியான நான் அமைதி பெற்றேன். எளியவனாயினும் பாக்யசாலியானேன்''. குருவை இவ்வாறு துதித்த ஸாயந்தேவன் கர்நாடக மொழியில் ஸ்ரீ குருவின் அவதாரம் முதல் உள்ள வரலாற்றைப் பாடினார். (71)

भगवांस्तेन तुष्टः सन् दत्वेष्टं वरमाह तम् ।
अयं ज्येष्ठसुतो मान्यो धन्यस्ते मेऽतिवल्लभः ७२

इत्युक्त्वा नागनाथस्य मूर्ध्न्यधाच्छंकरं करम् ।
तदैव गीष्पतिसमो वक्ता ज्ञाता बभूव सः ।। ७३

सद्गुरुः प्राह विप्रं ते भार्येयं सुभगा सती।
चतुरश्चतुरान्पुत्रान् लभेत्त्वमपि भाग्यभाक् ।। ७४

इतः परं म्लेच्छलब्ध-वृत्तिं हित्वा कुटुम्बयुक्।
तिष्ठात्रैव तव श्रेयो भवेन्मे सुप्रसादतः ।। ७५

स्नात्वा स्वकैः सह तिथौ भाद्रशुद्धचतुर्दशे।
अनन्तव्रतमस्त्यद्य तारकं तत्त्वमाचर ।। ७६

धर्मः कृष्णोपदेशेन चरित्वा यद्व्रतं महत्।
दिव्यं सौख्यं सार्वभौमं भुक्त्वाऽगात्सतनुर्दिवम् ।। ७७

सायंदेव उवाच—

भवान्देवोऽस्ति नोऽनन्तो भवत्सेवाव्रतं परम्।
तथापि श्रोतुमिच्छामि को धर्मः कीदृशं व्रतम् ।। ७८

*குருபகவான் அதனைக் கேட்டு மகிழ்ந்தார். விரும்பியதை அளித்தபின் "உனது இந்த மூத்த பிள்ளை நாகநாதன் என் அன்புக்குரியவன் எனக் கூறி அவன் சிரஸில் தன் மங்களகரமான கைவைத்து ஆசி வழங்கினார். அவன் பேரறிவாளனாக பக்தனாக ஆவான். உன் மனைவி நான்கு சிறந்த புதல்வர்களை பெறுவாள். நீயும் பாக்யசாலியாவாய். இனி மிலேச்சனிடம் ஊழியம் செய்வதைவிட்டு குடும்பத்துடன் இங்கே வசிப்பாய். தன் உற்றார் உறவினருடன் நதியில் நீராடி புரட்டாசி சுக்ல சதுர்தசியில் அநந்த வ்ரதமிருப்பாய். க்ருஷ்ணரிடம் உபதேசம் பெற்றுத் தர்மபுத்திரர் இதனைச் செய்து சக்ரவர்த்தியாகிச் சரீரத்துடன் ஸ்வர்கம் சென்றார் என்று ஸ்ரீ குரு வழிகாட்டியதும் ஸாயந்தேவன் அனந்தவ்ரத முறையையும் தர்மர் அதனைச் செய்த முறையையும் விளக்க வேண்டினார். (78)*

श्रीगुरुरुवाच—

धर्मोऽभूत्पाण्डवो राजा तत्सदस्यां सुयोधनः।
मायाभ्रान्त्याऽपतन्मौनी व्रीडितो जनहास्यतः ।। ७९

जित्वा द्यूतमिषाद्धर्मं हृततच्छ्रीः स सानुजम् ।
वनाय प्रेरयत्सोऽपि तत्र गत्वा सुदुःखितः ॥ ८०

स एकदागतं कृष्णं नत्वा सस्त्र्यनुजोऽब्रवीत् ।
त्वन्नस्त्रातेति बिरुदं वहन्नोऽकं न वेत्सि किम् ॥ ८१

श्रीकृष्ण उवाच—

बलवद्दैवमपि मां भजतां नेक्षते सदा ।
त्वं मद्भक्तोऽपि मद्वाक्यात् कुर्वनन्तव्रतं महत् ॥ ८२

कोऽनन्तस्तद्व्रतं कीदृक् पुरा केन कृतं वद ।
इति धर्मानुयोगं स श्रुत्वा वक्तुं प्रचक्रमे ॥ ८३

*தர்ம புத்திரரின் ஸபையில் துர்யோதனன் ஏமார்ந்து தடுக்கி விழுந்தான். அதனைப் பரிகசித்ததால். சூதாடிப் பாண்டவர்களை வென்று காட்டிற்கு அனுப்பித்தான். காட்டில் பாண்டவரிருக்குமிடத்திற்கு க்ருஷ்ணன் சென்றபோது த்ரௌபதியுடனும், தம்பிகளுடனும் வணங்கி, தர்மர் !' 'எங்களைக் காக்கிற பொறுப்பை ஏற்ற நீ எங்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை அறியாயோ ! என்று கேட்டார். அவர் விதி வலிய தெனினும் என் பக்தர்களை அது அண்டுவதில்லை. அதனால் அனந்த வ்ரதமிருப்பாய். எனக் கூறி அனந்த வ்ரதமுறையை விளக்கிறார். (83)*

चराचरजगत्कालभूताद्यात्माप्यहं विभुः ।
कर्मप्रयोजनगुणैर्भूपानन्तोऽस्म्यहं पृथक् ॥ ८४

भाद्रशुक्लचतुर्दश्यामनन्तव्रतमुत्तमम् ।
व्रतिनोऽनन्तफलदं तत्कुर्विष्टमवाप्स्यसि ॥ ८५

ऋषिः सुमन्तुः प्रागासीद् वासिष्ठो गौतमीपतिः ।
तत्स्त्रीः कन्यां प्रसूयैकां मृतान्योद्वाहितामुना ॥ ८६

सा दुःशीला कलिद्वेष-प्रिया चण्डी पतिं सुताम् ।
क्रूरा तौ त्रासयामास कन्यापि ववृधे शुभा ॥ ८७

चित्रक्रियापटुं सोऽदात् सच्छीलगुणलक्षणाम् ।
कौण्डिण्याय स्वगृह्योक्तब्राह्मोद्वाहविधानतः ।।८८

तत्र श्वशुरवात्सल्यात् स्थित्वा मासद्वयं मुनिः ।
श्वश्रूत्रस्तो ययौ वध्वा कौण्डिण्यः श्वशुराज्ञया ।। ८९

चण्ड्याररं दृढं बध्वा पाथेयं नार्पितं स तु ।
प्रादाद्बहिःस्थगोधूम-पुलाकं तौ ततो गतौ ।। ९०

मध्याह्ने तस्थतुर्नद्यां चिरण्टीः प्रेक्ष्य तत्र सा ।
गत्वार्चयन्तीः प्राहेदं युष्माभिः क्रियते किमु ।। ९१

*அநந்த வ்ரதம் :— அசைவதும், அசையாததுமான இந்த உலகம் காலம், பஞ்ச பூதங்கள் என அனைத்தும் நான். நான் எல்லையற்ற பரம்பொருளானதால் அநந்தன். ஆவணி (சாந்த்ரமானத்தில் பாத்ரபத) மாதத்து சுக்ல சதுர்தசியில் அனந்தனை வேண்டி வ்ரதம் செய்வாய். வஸிஷ்ட கோத்ரத்தில் பிறந்த ஸுமந்து ருஷி கௌதமியின் கணவர். கௌதமி ஒரு பெண் குழந்தை பெற்றபின் இறந்தாள். ஸுமந்து வேறொரு பெண்ணை மணந்தார். சண்டீ என்ற அவள் கெட்ட போக்குள்ளவள். முன் கோபம் மிக்கவள். அவள் கணவரையும், அவரது பெண்ணையும் கொடுமைப்படுத்தினாள். பெண் வளர்ந்தாள். அவள் சித்திரம் வரைவதில் பழக்கம் உள்ளவள். நல்லொழுக்க மிக்கவள். ப்ராஹ்ம முறைப்படி அவளை கௌண்டின்யருக்கு ஸுமந்து மணம் செய்வித்தார். கௌண்டின்யர் மாமனார் வீட்டில் அவரது அன்பின் காரணமாக இரண்டுமாதம் தங்கினார். ஆனால் மாமியாரான இளையாளிடம் பயந்து மாமனாரின் அனுமதியுடன் மனைவியுடன் தன் வீட்டிற்கு வந்தார். சண்டி வழியுணவு தராமல் வெளியேற்றிக் கதவைச் சாத்தி வீட்டிற்கு வெளியே குவிந்திருந்த கோதுமைக் கருக் காய்களைத் தந்தாள். நடுப் பகலில் ஆற்றங்கரையில் ஸுமங்கலிப் பெண்கள் கூடி வழிபடுவதைக் கண்டு அந்தப் பெண் விசாரிக்க இன்று அநந்த வ்ரதம் செய்கிறோம் என்றனர். (91).*

स्त्रिय ऊचुः—
भाद्रशुद्धचतुर्दश्यामद्यानन्तव्रतं शृणु ।
स्नात्वा रक्ताम्बरं धृत्वा रक्तसूत्रे चतुर्दश ।। ९२

ग्रन्थीन्बध्वा सप्तफणदर्भशेषे निधाय तम्।
कुम्भोपरि चतुर्बाहुं ध्यात्वाऽनन्तं प्रपूज्य च ।। ९३
दत्वा चतुर्दशापूपान् ब्रह्मणे जीर्णदोरकम्।
विसृज्य दत्वा नूत्नं स्वे बध्वा हस्ते च दम्पती ।। ९४
संतर्प्याब्दे घटान्दद्यात् चतुर्दश चतुर्दशे।
प्रत्यब्दं पूजयेद् भक्त्या वरं नातः परं व्रतम् ।। ९५
कुर्वदोऽभीष्टदमपि प्रोक्त्वास्यै दोरकं ददुः ।
सापि तत्र व्रतं कृत्वा पतिं प्राप सदोरका ।। ९६

ततो यान्तौ धनी कश्चिद् ग्रामं नीत्वा श्रियं ददौ।
तत्रानन्तप्रसादात्तौ श्रीमानाढ्यौ बभूवतुः ।। ९७

*பாத்ரபத (ஆவணி-புரட்டாசி) சுக்ல சதுர்தசியில் நதியில் நீராடி, சிவப்பு ஆடை உடுத்தி பதினன்கு முடிப்புள்ள சரடை தர்ப்பத்தாலான ஏழு படங்களுள்ள அநந்த (ஆதிசேஷ)ருடன் ஜல கும்பத்தின் மீது வைத்து நான்கு கைகளுள்ள அநந்தரைத் த்யானித்து ஆவாஹனம் செய்து பாத்யம் முதலிய உபசாரங்கள் செய்து வழிபடவேண்டும். பின் பதினன்கு அப்பங்களை அந்தணர்களுக்குத் தானம் செய்து முன் கட்டியிருந்த சரடை அவிழ்த்துப் போட்டு இன்று வழிபட்ட சரடைத் தன் கையில் கட்டிக் கொண்டு, அநந்தருக்கு அர்க்யம் தந்து பதினன்கு கலசங்களைத் தானம் செய்ய வேண்டும். இவ்வாறு பதினன்கு ஆண்டுகள் நியமத்துடன் வ்ரதம் செய்து பூர்த்தி செய்ய வேண்டும். இதனை விடச் சிறந்த வ்ரதமில்லை. இதனைச் செய்வாய் எனக் கூறிச் சரடைத் தந்தார்கள். அவளும் அந்த வ்ரதத்தை நியமத்துடன் செய்த பின் சரடு கட்டிக் கொண்டு தன் பதியுடன் கிளம்பினள். அங்கு வந்த தனிகன் ஒருவன் அவர்களைத் தன் க்ராமத்திற்கு அழைத்துச் சென்று பெருஞ் செல்வமளித்தான். அவர்கள் மதிப்புள்ள செல்வந்தர்களானர்கள். (97)*

दोरं दृष्ट्वैकदाग्नौ स जहौ मत्वा वशीकृतिम्।
श्रीदानन्तं न त्यजेति वारितोऽपि तया ऋषिः ।। ९८

तदाहृताग्र्यरिभ्यः श्रीस् ततोऽनन्तं स्मरन्नटन्।
वनेऽनन्तः केति स गोद्रुगाः पृष्ट्वाप कश्मलम्।। ९९

तस्मै नीत्वा वृद्धविप्ररूपेण पुरमद्भुतम् ।
स्वं रूपं दर्शयामास तुष्टावानन्तमप्यसौ ।। १००

जय सर्वेश्वरानन्त विश्वव्यापिन्जनार्दन ।
त्वन्मायामोहितधिया कृतान्मन्तून्क्षमस्व मे ।। १०१

श्रीमदनन्त उवाच——

न दैन्यं दुष्कृतं तेऽत्र श्रियं भुक्त्वा पुनर्वसुः ।
नक्षत्रेषु प्रसादान्मे भविष्यसि महामुने ।। १०२

கணவனுக்கு ஒருநாள் தன் மனைவி கட்டிக் கொண்டுள்ள சரடு தன்னை வசப்படுத்துவதற்காக இருக்கும் என்று ஸந்தேகப்பட்டு ஒருநாள் செல்வம் தந்த அநந்தரே சரடு வடிவிலுள்ளதால் அதனை அவிழ்க்காதே என மனைவி தடுத்தும் அதனை அவிழ்த்து நெருப்பிலிட்டான். உடன் அவனது செல்வம் நெருப்பால் அழிந்தது. திருடர்கள் பறித்துச் சென்றனர். பின்னர் அது அநந்தரிடம் தவறுல் நடந்த தென உணர்ந்து வருந்தி காட்டில் அநந்தர் எங்கே எனத் தேடி அலைந்தான். வழியிலிருந்த மாமரத்தையும், காளையையும், பசுவையும் அநந்தர் எங்குள்ளார் எனக் கேட்டான். ஒரு அந்தணக் கிழவர் வேஷத்தில் வந்த அநந்தர் ஒரு அற்புதத் தோற்றமுள்ள நகருக்கு இட்டுச் சென்று அந்தணக் கிழவர் வேஷத்தை அகற்றித் தன்னைக் காட்டிக் கொண்டார். இவன் அவரது திருவடிகளில் வணங்கி உம்மாயையால் நிலைமையை உணராது நான் செய்த தவற்றைப் பொறுத்தருள்வீர் என வேண்ட, அநந்தர் இப்பிறவியில் தன் தரிசனம் பெற்றதால் புனர்வஸு நக்ஷத்ரமாவாய் என அருள் செய்தார். (102)

ऋषिरुवाच——

केऽपि सत्फलिताम्रस्य फलं नाश्नन्ति गोर्मुखे ।
तृणं नैति पशोश्चापि स्वाद्वप्पूर्णे सरोवरे ।। १०३

जीवास्पृष्टेऽग्रतो दीनौ खरेभौ च द्विजो जरन् ।
एते दृष्टा मयैतेषां कुतोऽभूदीदृशी स्थितिः ।। १०४

श्रीमदनन्त उवाच—

शिष्यान्नापाठयन्मत्तो विद्वांस्तेनाम्र ईदृशः ।
गौर्जाता मोघभूदानाद् वृषोऽदाताऽभवद्धनी ।। १०५

अन्योन्यदानग्रहणादीदृश्यौ स्तः सरस्युभे ।
खरः क्रोधीभो मदी च द्विजोऽहं तेऽपि मोचिताः ।। १०६

इति लब्धवरोऽनन्तं नत्वैत्य स तथाभवत् ।
तस्माद्व्रतोत्तमं धर्मं व्रतं चर हितं भवेत् ।। १०७

इति कृष्णोऽब्रवीत्सोऽपि व्रतं कृत्वा हताहितः ।
अकण्टकं चिरं राज्यमृद्धं भुक्त्वाऽमृतं ययौ ।। १०८

त्वमप्याचर विप्रेदमत्रामुत्रापि सौख्यदम् ।
इत्युक्तः प्रभुणानन्त-व्रतं चक्रे द्विजोत्तमः ।। १०९

तत्र स्थित्वा स्वकैः सार्धं प्रेत्य सायुज्यमाप्तवान् ।
तद्वंशजा अपि गुरोः प्रसादात्तादृशोऽभवन् ।। ११०

त्वमपीदृक्तत्प्रसादाद् भक्तिमानसि सद्गुरौ ।
मा भीस्तरिष्यसि भवं मृगतृष्णोपमं द्रुतम् ।। १११

इति श्रीगुरुचरिते भक्तियोगे भक्तिवर्णनं नाम द्वितीयोऽध्यायः
आदितः विंशोऽध्यायः

*அநந்தரிடம் அவன் கேட்டான். நன்கு காய்த்துத் தொங்குகிற இந்த மாமரத்தின் பழத்தை எவரும் தின்பதில்லையே ? இந்தப் பசுவின் வாயில் புல்லைத் திணித்தாலும் அது புல்லை விழுங்கவில்லையே ? இனிய தண்ணீர் நிறைந்த இந்த இரு குளங்களின் நீரை எவரும் பருகுவதில்லையே? உம் எதிரில் ஒரு கழுதையும், யானையும் ஏங்கி நிற்கின்றனவே ? ஒரு முதிர்ந்து தளர்ந்த கிழவன் நிற்கிறாரே? ஏன் எனக் கேட்டான். தன்னை அணுகிய*

சீடனுக்குப் பாடம் போதிக்காத குரு மாமரமானார். அதனால் எவரும் அவரை அணுகுவதில்லை. வரண்ட மலட்டுப் பூமியைத் தானம் செய்தவர் பசுவானார். செல்வ மிருந்தும் தானம் செய்யாதவர் காளையானார். இவர் அவருக்குத் தானம் கொடுக்க, பண்ட மாற்றாக அவர் இவருக்குத் தானம் கொடுக்க இருவரும் குளங்களாயினர். முன் கோபி கழுதையாகவும், மதம் பிடித்தவன் யானையுமாயினர். அந்தக் கிழவன் நானே. அவர்களும் வினைப் பிடிப்பிலிருந்து விடுபட்டுத் தம் தம் நிலையை பெறுகிறார்கள் என அநந்தர் விளக்கினார். இதுதான் அநந்த வ்ரதத் தொடர்புள்ள வரலாறு. தர்மரே ! நீரும் இதனைச் செய்வீர் எனக் க்ருஷ்ணன் கூற, தர்மர் அந்த வ்ரதத்தைப் பதினான்கு ஆண்டுகள் தொடர்ந்து செய்ய இழந்த அரசை மீட்டு அமர நிலை பெற்றார் என வரலாற்றைக் கேட்ட ஸாயந்தேவன் தானும் ஸ்ரீ குரு காட்டிய வழியில் வ்ரதத்தை நிறைவு செய்து இனிது வாழ்ந்தான். குருவின் அருளால் அவனது வம்சத்தினரும் இதனைத் தொடர்ந்து செய்து மேனிலை பெற்றனர். நாமதாரகரே ! ஸ்ரீ குருவை பக்தியுடன் வழிபட்டு அவரது அருளால் நன்னிலை பெறவீர் என ஸித்தர் கூறினார். *(111)*

# अथैकविंशोऽध्यायः

नामधारक उवाच—
साधूदितं चरित्रं भो प्रभोर्धन्यं दिनं त्विदम्।
क्षणमात्रोऽपि कालोऽद्य नातीतस्तत्कथामृते ।। १

सिद्ध उवाच—
तन्तुको नाम भक्तोऽभूत् त्रियामं भगवत्प्रियः ।
संसारयात्रां निस्तीर्य याममात्रं तमाभजत् ।। २

तद्बन्धुता कदाचित्तं श्रीशैलं गन्तुमाह्वयत्।
स प्राह मे मठः शैलः श्रीगुरुर्मल्लिकार्जुनः ।। ३

सा तं निषिध्य मूर्खोऽयमिति मत्वा ययौ नगम्।
कुतो नेतोऽसीत्यजेन पृष्टोऽपि प्राह पूर्ववत् ।। ४

ततो माघेऽल्पकालेन शिवरात्रिरुपस्थिता।
मध्याह्ने तद्दिनेऽजस्तं प्राह शैलोत्सवोऽद्य सन्।। ५

तन्तुक उवाच—

त्वत्पादाब्जोत्सवान्मन्ये क्वापि नास्त्यधिकोत्सवः।
इदं प्रत्यक्षमज्ञाय मुधा मुग्धा भ्रमन्ति कौ।। ६

तच्छ्रुत्वा प्राह भगवान्मा ब्रूहीदं जगत्प्रभुः।
सर्वत्रावस्थितोऽप्येष सत्क्षेत्रमहिमा वरः।। ७

महातपस्विभिः क्षेत्रं पवित्रीकृतमस्ति तत्।
परमात्मा तत्प्रभावात् तत्र जागर्त्यनारतम्।। ८

अतस्तत्रैव भजतां कार्यसिद्धिर्भवत्यरम्।
महातपस्विनो धन्याः स्वयं मुक्ता अपीतरान्।। ९

मोचयन्ति स्वतपसा जन्मसंसारबन्धनात्।
लोकोद्धृत्यै प्रजायन्ते सत्तपस्विविभूतयः।। १०

तत्संचारस्थलरजःसंस्पर्शोऽप्यत्र मुक्तये।
अतस्तत्सेवितक्षेत्रे लोको यास्यति सादरम्।। ११

एह्यद्य योगगत्यद्रिं गत्वा ते दर्शयामि तत्।
इत्युक्त्वा पादुके दिव्ये धारयित्वा दृढं दृशौ।। १२

निमीलयित्वा श्रीशैलं सह तेन ययौ क्षणात्।
प्राहोन्मील्य दृशौ पश्य श्रीशैलममुमित्यजः।। १३

सोऽप्युन्मीलितदृग्दृष्ट्वा श्रीगिरिं तदनुज्ञया।
क्षौरस्नानादि कृत्वाऽगाद् द्रष्टुं श्रीमल्लिकार्जुनम्।।१४

**அத்தியாயம்—21**

நாமதாரகன் மேன்மேலும் ஆர்வத்துடன் ஸ்ரீ குரு சரிதம் கேட்க விரும்ப ஸித்தர் மற்ெருரு வரலாற்றைக் கூறிஞர். 'தந்துகன்' என்ற ஸ்ரீ குரு பக்தன் குடும்பப் பணிகளை முடித்துவிட்டு மூன்று வேளைகளிலும் ஒரு யாமப் பொழுது குருவோடு இருந்தான். அவனது உறவினர் ஸ்ரீசைலம் செல்ல விரும்பி அவனையும் அழைத்தனர். அவனே இந்த மடமே ஸ்ரீசைலம். ஸ்ரீ குருவே மல்லிகேச்வரர் எனக் கூற, அவர்கள் இவனை மூர்க்கன் எனக் கருதி ஸ்ரீசைலம் சென்றனர். ஸ்ரீ குரு அவன் ஸ்ரீசைலம் செல்லாததற்குக் காரணம் கேட்க, முன் உறவினரிடம் சொன்னதையே சொன்னன். சில நாட்களுக்குள் மாசி மாதத்துச் சிவராத்ரி நாள் வந்தது. அன்று நடுப்பகலில் ஸ்ரீ குரு அவனிடம் அன்று ஸ்ரீசைலத்தில் பெருவிழா நடப்பதைச் சொன்ஞர். தந்துகனே, ''உமது திருவடி வழிபாட்டைவிட எந்த விழாவும் பெரிதல்ல. இதனை நேரில் உணராதவரே வீணே உலகில் அலைகின்றனர்'' என்ருன். அவ்வாறு சொல்லாதே எனத் தடுத்து ஸ்ரீ குரு ''எல்லாம் ஈசனின் இடம் தானெனினும் நல்ல க்ஷேத்ரம் சிறந்த இடம். பெரும் தவமியற்றுபவர்கள் அங்கு தங்கி அதனை மேலும் புனிதப் படுத்தியுள்ளனர். ஈசன் அங்கு எப்போதும் ப்ரஸன்னர். அதனுல் அங்கு விரும்பியது எளிதில் கிட்டுகிறது. தவம் புரிபவர்கள் தான் ஜீவன் முக்தராகித் தன் தவத்தால் மற்றவரையும் முக்திபெறச் செய்கின்றனர். அந்த இடத்துத் தூசியும் முக்தி தரும். அதனுல் மக்கள் அங்கு செல்கின்றனர். நான் உன்னை யோக முறையால் அங்கு அழைத்துச் செல்கிறேன் எனக் கூறி யோக பாதுகையைத் தரித்து தந்துகனைக் கண்மூடியபடி தன்னுடன் வரச் செய்து நொடிப் பொழுதில் ஸ்ரீசைலம் சென்ருர். அங்கு தந்துகன் அவரது அனுமதியுடன் கண்களைத் திறந்து முடி திருத்தி நீராடி ஸ்ரீமல்லிகார்ஜுனரைக் காணச் சென்ருன். (14)

**यान्तं स्वकः प्रेक्ष्य तमाह नोऽनु**
**यातोऽसि कस्मान्न युतिं करोषि ।**
**अद्य क्षणाच्छ्रीगुरुणाऽऽहृतोऽस्मी**
**त्युक्तोऽपि तेनोक्तममंस्त मिथ्या ।। १५**

**तस्मै यथास्वं स निवेद्य भक्तो गुर्वङ्घ्रिपद्मद्वय एकतानः ।**
**प्रासादमेत्यान्तरनेकलोक-व्याप्तं विवेशेश्वरदर्शनाय ।। १६**

तत्रोपविष्टं गुरुमर्चयन्ति सर्वेऽपि कश्चिन्न हि तत्र देवः ।
इत्थं विलोक्यापि गुरुं प्रपूज्य पुनर्गुरुं प्राप्य तदुक्तवान्सः ।। १७

अत्र त्वमेवासि कुतोऽज्ञलोका
आयान्ति हित्वा निकटस्थितं त्वाम् ।
व्याप्याखिलं त्वं परिपूर्णविश्वं
दशाङ्गुलं तिष्ठसि वक्ति वेदः ।। १८

*தந்துகனை முன் அழைத்தவர் இப்போது ஸ்ரீ சைலத்தில் இவனைக் கண்டதும், எப்படி வந்தாய் எனக் கேட்டதும் ஸ்ரீ குரு அழைத்து வந்ததாக இவன் கூற அதனை அவர் நம்பவில்லை. அவருக்கு நடந்ததைத் தந்துகன் விளக்கினான். தன் குருவின் திருவடிகளில் தன்னை ஒப்படைத்து அந்தப் பெரும் ஆலயத்தில் ஈச்ரவனைக் காண உள்ளே வந்தவன், தன் குரு அங்கு அமர்ந்து அனைவரது வழிபாட்டையும் ஏற்றுக் கொள்வதைக் கண்டான். அங்கு அவரைத் தவிர வேறு ஈசன் காணப்படவில்லை. குருவின் அருகில் சென்று, "இங்கும் நீரே உள்ளீர். ஏன் இந்த அறிவிலிகள் அருகில் உள்ள உம்மைப் புறக்கணித்து விட்டு இவ்வளவு தூரம் வருகின்றனர் ? முழு உலகையும், சூழ்ந்துள்ள நீர் அதற்கு அப்பாலும் பத்தங்குலம் பரப்பளவு உள்ளீர் என வேதம் கூறுகிறதே" என்றான். (18)*

श्रीगुरुरुवाच——

एकः परात्मा भजतां तथापि स्थानप्रभावः प्रिय भिन्न एव ।
स्थानं त्विदं सर्वजनाश्रयं सन्मुक्तिप्रदं शृण्विह पूर्ववृत्तम् ।। १९

विमर्षणो नाम नृपः किरातदेशे कृती क्षात्रवृषप्रवीणः ।
द्विजातिभक्तोऽपि च भूतमात्रहिते रतः साधुजनानुयायी ।। २०

स्त्रीलम्पटः प्राग्गुणतो निषिद्धभुक्
शैवोत्तमः शङ्कररूपचिन्तकः ।
तं प्राह साध्वी महिषी कथं शिवे
भक्तिर्दृढा धर्मविरुद्धचेष्ट ते ।। २१

राजोवाच—

पम्पापुरे श्वाभवमाद्यजन्या-
मुच्छिष्टमत्तुं शिवसद्म यातम्।
हन्युर्जना द्वारि मृतिक्षणेऽजो
दृष्टोऽर्चितः प्रोज्वलिताश्च दीपाः ॥

प्रदक्षिणं तं हि परीत्य शैवे
दिने मृतस्तेन नृपोऽत्र शैवः।
ये दुर्गुणास्ते श्वनिसर्गजोत्थाः
स्युः पूर्वसंस्कृत्यनुगो हि जीवः ॥ २३

प्राङ्मे जनिः केति तयाह पृष्टः
प्राक्त्वां कपोतीं सति चञ्चुमांसाम्।
चिल्लोऽहनच्छ्रीमदगे शिवाग्रे
प्राणार्पणान्मे महिषीह जाता ॥ २४

केतो भवान् यास्यसि चाप्यहं क
शंसेति पृष्टः स तु सिन्धुदेशे।
राजा भविष्याम्यपि सृञ्जयोत्था
मत्स्त्री त्वमग्रेऽपि कलिङ्गजा त्वम् ॥ २५

सौराष्ट्रकेऽहं खलु मागधी त्वं
गन्धारजावन्तिदशार्णजौ च।
नृपोऽप्यनन्तोऽपि ययातिजा त्वं
पाण्ड्योऽहमग्रेऽपि विदर्भजा त्वम् ॥ २६

स्मरोपमो धीगुणशीलशाल्यहं
वृत्त्वा तदा त्वां रतिभां स्वयंवरे।

त्वया सहेष्ट्वा पुरुदक्षिणान्मखान्
सम्राट्तया प्राप्य सुतान्सुभोगयुक् ॥ २७

लब्ध्वात्मतत्त्वं घटजाच्च जीवन्-
मुक्तो भविष्यामि सह त्वयैवम् ।
राड्दम्पती वै प्रतिजन्म भूत्वा
मुक्तौ भविष्याव इति ह्यवोचत् ॥ २८

शम्भोः पुरः साहजिकासुदानादेवं
तिरश्चोऽपि गतिस्तु लोकाः ।
बुद्ध्वेदमायान्त्यपि देवता तु
स्थलानुमानात् खलु जागरूका ॥ २९

इत्युक्त्वा धारयित्वेशः पादुके सङ्गमं क्षणात् ।
तमानीयेरयत् ग्रामं प्रहृष्टः प्रययौ स तु ॥ ३०

ஸ்ரீ குரு சொன்னார் - பரமாத்மா ஒருவரே. இடத்தின் பெருமையும் மக்களின் பக்தியும் அவ்விடத்தில் தனித்துச் சிறந்து காண்பதால், க்ஷேத்ரம் தனிச் சிறப்பு பெறுகிறது. இந்த இடம் (ஸ்ரீசைலம்) அனைத்து மக்களும் பக்தியுடன் கூடுமிடம். கிராத தேசத்ததிபன் விமர்ஷணன் என்ற அரசன், தயை மிக்கவன், சிறந்த ஈசபக்தன். சிறந்த சைவமுறைப்படி நடப்பவனாயினும் முன் வாஸனையால், தடை செய்யப்பட்ட உணவை ஏற்றான். பெண் சபலம் அதிகம் கொண்டான். அவனது மனைவி இத்தயை கெட்ட நடைமுறை கொண்டவனுக்குச் சிவபக்தி எப்படி தோன்றியது? என அவனிடம் கேட்டாள். முன் பிறவியில் பம்பாபுரத்தில் நாயாக இருந்தேன். ஒரு சிவராத்ரி யன்று சிவாலயத்தினுட் சென்று சிவனை வலம் வந்து சிவனது வழிபாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தபோது எச்சிலை உண்ணும் நான் உள்ளே வந்ததைக் கண்டு கோபமடைந்த மக்கள் கல்லாலடித்துக் கொன்றனர். சிவனைக் கண்டதாலும் வலம் வந்ததாலும் சிவராத்ரியில் சிவனைப் பார்த்துக் கொண்டே செத்ததாலும் இப்பிறவியில் அரசனானேன். ஆனால்

நாயின் இயல்பு என்னை இப்பிறவியிலும் தொடர்ந்தது என்முன். என் முன் பிறவி என்ன என்று மனைவி கேட்க அரசன் சொன்னன். நீ முன் பிறவியில் பெண் புரு. மூக்கில் மாம்சத் துண்டைக் கவ்விக் கொண்டு ஸ்ரீசைலத்தில் சிவனெதிரே சுற்றி வந்தபோது மீன் குத்திப் பறவை தாக்கி உன்னைக் கொன்றது. ஸ்ரீ சைலத்தில் சிவனெதிரில் இறந்ததால் எனக்குப் பட்டமஹிஷியானய். அடுத்த பிறவியில் நான் ஸிந்து தேசத்தில் அரசனுவேன். நீ ஸ்ருஞ்சயத்தில் பிறந்து என் மனைவியாவாய். அதன் பின் ஸௌராஷ்ட்ரத்தில் நானும் கலிங்கத்தில் நீயும், அதன் பின் காந்தாரத்தில் நானும் மகதத்தில் நீயும், பின் அவந்தியில் நானும் தசார்ணத்தில் நீயும் நான் அனந்த ராஜனுகவும் யயாதியின் பெண்ணுக நீயும் பாண்டிய தேசத்தில் நானும் விதர்பத்தில் நீயும் பிறந்து ஒருவரையொருவர் மணப்போம். உன் உதவியுடன் வேள்விகளைச் செய்து பேரரசனுகி நன் மக்களைப் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்து அகஸ்த்யரின் உபதேசத்தால் முக்தி பெறுவோம். இப்பிறவிகளில் நான் அரசனுகவும் நீ அரசியாக என் மனைவியாகவும் வாழ்வோம். பறவைகளாகப் பிறந்தாலும் அறிந்தோ அறியாமலோ சிவ வழிபாட்டைக் கண்டதாலும் இங்கு சிவ ஸந்நிதியில் உயிர் நீத்ததாலும் நற் பிறவி பெற்ருேம் என்றனர். இதனை உணர்ந்து அனைவரும் சிவராத்ரியன்று இங்கு கூடுகின்றனர். க்ஷேத்ர தேவதையும் அருள் வழங்க ஆயத்தமாயுள்ளார். இவ்வாறு கூறி யோக பாதுகையில் நின்று கணநேரத்தில் தந்துகனுடன் ஸங்கமம் வந்து சேர்ந்தார். தந்துகனும் தன்னிருப்பிடம் சென்முன். *(30)*

**तत्रत्याः सङ्गमेऽदृष्ट्वा गुरुं खिन्ना अवेक्ष्य तम् ।**
**आयान्तमब्रुवन्यान्तः कस्मात् क्षौरं कृतं त्वया ।। ३१**

**स प्राह मां क्षणान्नीत्वा श्रीशैलं भो यथाविधि ।**
**क्षेत्राचारं कारयित्वा सम्प्रत्यत्रानयत्प्रभुः ।। ३२**

**तच्छ्रुत्वात्रैष मध्याह्ने दृष्टो ब्रूते मृषेति ते ।**
**मत्वैत्य सङ्गमे तत्र निशि सर्वे उपोषिताः ।। ३३**

चक्रुर्जागरणं शैवनामोच्चारणपूर्वकम्।
ततः शैलाज्जनः प्राप्तः पश्चात्स प्राह विस्मितः ॥ ३४

श्रीशैलेऽयं शिवद्वारि तन्तुकः सकृदीक्षितः ।
तदा सप्रत्ययाः सर्वे ननन्दुर्विस्मिता भृशम् ॥ ३५

सद्गुरोः सेवया बाढं कर्मबन्धं निहत्य सः ।
सिषेवे परमानन्दं यत्र नो द्वन्द्वसाध्वसम् ॥ ३६

एकैकयापि भक्त्यैवं मुक्ताः कति न वेद तान्।
कवी शिष्यावभूतां तौ मुक्तौ श्रीगुरुकीर्तनात् ॥ ३७

गुरुलीलामयास्ताभ्यां प्रभूता ग्रथिताः कथाः ।
तल्लीला वक्ति कः कात्स्न्याद्यत्र वेदोऽपि शङ्कितः ॥ ३८

*சிவ ராத்ரியன்று மாலையில் குருவைக் காணவந்த மக்கள் குருவைக் காணுமல் வருந்திப் பின் வந்தவரைக் கண்டு வணங்கினர். தன் ஊருக்குக் கிளம்பிய தந்துகனைக் கண்ட அவர்கள் அவனிடம் முடி திருத்தம் செய்த காரணம் கேட்டனர். ஸ்ரீ குரு தன்னை ஸ்ரீசைலம் அழைத்துச் சென்று தல முறைப்படி வபனம் செய்யச் செய்து ஈசனைக் காணச் செய்து திருப்பி அழைத்து வந்த விவரத்தைச் சொன்னுன். நடுப்பகலில் இங்கிருந்தவன் ஸ்ரீசைலம் சென்று வருவது இயலாததெ்தன அவன் பொய் சொல்கிருன் என்றனர். அன்றிரவு உபவாஸமிருந்து சிவ நாம ஜபம் செய்து கொண்டிருந்தனர். ஸ்ரீசைலத்தில் சிவதர் சனம் செய்து திரும்பிய மக்கள் இந்த தந்துகன் ஸ்ரீசைலத்தில் ஆலயவாசலில் காணப் பட்டதாகச் சொன்னதும், வியந்து குரு ஸேவையால் அவன் சிறப்புற்றதைப் பாராட்டினர். இவ்வாறு பலர் குரு பக்தியால் சிறப்புற்றனர். இரு கவிகள் குருவின் சிஷ்யராகி, குரு கீர்த்தனத்தால் முக்திபெற்றனர். குருவின் லீலைகளை அவர்களது நூல்கள் தொகுத்துத் தந்துள்ளன. குருவின் எல்லா லீலைகளையும் எவரும் அறிந்தாரில்லை. (38)*

नामधारक उवाच—

कौ शिष्यौ सद्गुरोर्जातौ तन्मे कथय सादरम्।
वक्ता हि श्रोतृपृच्छाशीः स्मृतिमेति यतः कथा ।। ३९

सिद्ध उवाच—

नन्दिशर्मा द्विजः कश्चित् कुष्ठार्तः तुलजापुरि।
त्र्यब्दं तेपे तपः स्वप्ने देव्योक्तं गच्छ चेश्वरीम्।। ४०

स चन्दलेश्वरीं प्राप्य सप्तमासं तपोऽतपत्।
तयाऽप्युक्तं यतिं गच्छ स्थितं भीमामरायुतौ ।। ४१

स प्राह तां गच्छ मर्त्यमिति वक्तुं न लज्जसे।
परीक्षितं त ऐश्वर्यमियत्कष्टं कुतोऽर्पितम्।। ४२

इत्युक्त्वा स तपस्तेपे भक्तैर्देव्या स हापितः ।
यद्द्रव्यं तद्धवत्वेव कष्टमेतावदर्जितम्।। ४३

देव्याज्ञया तथैवाल्पं सह भोग्यमिति द्विजः ।
मत्वा स्वगतमानम्य देवीं भुक्तो ययौ यतिम्।। ४४

गन्धर्वपुरमासाद्य स यतिः केत्यपृच्छत।
पापं मत्वार्जुनाभं तं कुष्ठिनं नोत्तरं ददुः ।। ४५

तं कश्चिदाह स्नात्वारं शिवरात्रिव्रतस्य च।
पारणायै मठे देव आयास्यत्र तिष्ठ भोः। ४६

*நந்திசர்மா என்ற குஷ்டநோயுள்ள அந்தணன் துளஜாபூரில் மூன்று ஆண்டுகள் தவம் புரிந்தான். சந்தளா தேவியை வழிபடும்படி கனவில் தேவி அவனுக்கு உத்தரவிட்டாள். சந்தளேச்வரியின் எதிரில் ஏழு மாதங்கள் தவமிருந்ததும் தேவி பீமா அமரஜா ஸங்கமத்தில் உள்ள துறவியைக் காணச் சொன்னாள். நந்தி சர்மா தேவியைக் கேட்டான். உன்னைச் சரணடைந்தவனை ஒரு*

மனிதனைச் சென்றடைவாய் எனக் கூற வெட்கப்படவில்லையா? இவ்வளவு கஷ்டத்தை ஏன் தந்தாய்? உன் சக்தியை உணர்ந்தேன் என்று கூறி மறுபடி தவமிருந்தான். தேவியால் ஆலயத்திலிருந்து வெளியேற்றப்பட்டதும் தேவியின் ஆணைப்படி நடந்து பார்ப்போம் எனக் கருதி, வ்ரதத்தை முடித்து கந்தர்வ புரம் சென்று அந்தத் துறவி எங்குள்ளார் என அங்குள்ள மக்களைக் கேட்டார். அவர்களோ குஷ்ட நோய் பற்றிய இவனைக் கண்டு அருவருப்புடன் பேச மறுத்தனர். அவர்களில் ஒருவன் நீராடி சிவராத்ரி வ்ரதம் நிறைவு செய்ய மடத்திற்கு இப்போது குரு வரக் கூடும். இங்கு நில் என்றான். (46)

अत्रान्तरे प्रभुः प्राप मठं भक्तास्तमब्रुवन् ।
द्विजोऽर्जुनश्वेतदेह इदानीं कश्चिदागतः ।। ४७

विश्वसाक्षी तमाहूय प्राह हित्वाऽऽमरान्नरम् ।
आयातोऽसि कुतोऽर्हः किं दोषोत्थस्थास्तुरुग्हतौ ।। ४८

तच्छ्रुत्वा मत्कृतं ज्ञातमनेनैष न मानुषः ।
प्रत्यक्षः परमात्मेति मत्वोचे तं क्षमाप्य सः ।। ४९

मूढोऽहं कुत्सितमतिः पापात्मा पापसम्भवः ।
शरण्यं त्वां प्रपन्नोऽस्मि दयाब्धिं भक्तवत्सलम् ।। ५०

मयि कुष्ठं समुत्पन्नं विवाहोर्ध्वं तदैव तु ।
पितृदारैरपि परित्यक्तं मां कोऽपि नेक्षते ।। ५१

नाङ्गीकुर्वन्त्यपि सुरा भात्यतोऽपि मृतिर्वरम् ।
परात्मना त्वया नोचेत्स्वीकृतोऽत्र जहाम्यसून् ।। ५२

இதற்குள் மடத்திற்கு வந்த ஸ்ரீ குருவிடம் மருதமரம் போன்று வெளுத்த குஷ்ட நோயாளியைக் காட்டினர். அவரோ நந்திசர்மாவிடம் ஈசனை விட்டு மனிதனிடம் ஏன் வந்தாய் எனக் கேட்டார். முன் பிறவியின் வினைப்பயனாக வந்த குஷ்டநோய் நீக்க, மனிதன் ஏற்றவனா? என்று கேட்டார். தான் நினைத்ததை அப்படியே கூறும் இவர் மனிதரல்ல. பரமாத்மாவே நேரில் வந்துள்ளார் என

உணர்ந்து பிழை பொறுக்கக் கோரிய நந்திசர்மா, ''நான் முட்டாள், அறிவு கெட்டவன், பாபி, தயைக் கடலும் பக்தர்களின் அன்பனுமான உம்மைச் சரணடைந்தேன். நான் மணம் புரிந்து கொண்டதும் குஷ்டநோய் பற்றியது. பெற்றோரும் மனைவியும் கைவிட்டனர். என்னை ஒருவரும் கண்கொண்டு பார்ப்பதில்லை. தேவர்களும் என் வேண்டுகோளை ஏற்பதில்லை. இந்நிலையில் மரணமே ஏற்கத் தக்கது. பரமாத்மாவான நீரும் கைவிட்டால் உயிரை விடுவேன் என்றான் (52).

श्रीगुरुरुवाच—

मा भीः पापोत्थरोगोऽयमियत्कालमनेन तु ।
भुक्तं पापमतो भक्तिर्मयि जाताऽचलाऽमला ।। ५३

अत्रास्ते सङ्गमे तीर्थराजोऽघौघविनाशनः ।
तत्र स्नाहीति संभाष्य सोमनाथमथाब्रवीत् ।। ५४

विधिवत्कारयित्वा षट्- कूलतीर्थे सचैलकम् ।
अश्वत्थमर्चयित्वा द्राक् सोमनाथामुमानय ।। ५५

सोऽप्युक्तवत् कारयित्वा तमानीय गुरोः पदे ।
उपानयत्तमाहेशः पश्योत्तिष्ठाखिलं वपुः ।। ५६

स्वर्णीभूतं स तु स्वाङ्गमुत्थायोद्वीक्ष्य विस्मितः ।
किञ्चित्कुष्ठाङ्किताष्ठीवद् गुरुं प्राञ्जलिरब्रवीत् ।। ५७

भगवन्किं कृतं त्वेतत् कुष्ठं शिष्टं कुतोऽल्पकम् ।
तच्छ्रुत्वा सस्मितं प्राह त्वत्संशयफलं त्विदम् ।। ५८

इत्याश्राव्य गुरोर्वाक्यं प्रणिपत्याब्रवीद्वचः ।
सुधाऽप्यम्बुधिया पीता मृतिं नयति किं दवः ।। ५९

स्पष्टृवित्त्वाद्दहत्यल्पं स्वभावं परिहृत्य किम् ।
हरे स्वभावः पूर्णत्वं तवानेनैति किं वद ।। ६०

ஸ்ரீ குரு கூறினர் - வினைப் பயனுக வந்த நோய் இது. இத்தனை நாள் இந்த நோய்க்குக் காரணமான பாபத்தை அனுபவித்துத் தீர்த்தாய். இந்த ஸங்கமம் சிறந்த தீர்த்தம். இதில் நீராடி வா எனக் கூறி ஸோமநாதனிடம் ''மூன்று நதிகள் கூடுமிடமான ஆறு கரைகளில் ஆடையுடன் நீராடச் செய்து, அரசமரத்தை வழிபட்டதும் இங்கு அழைத்து வா'' என உத்தரவிட்டார். அவ்வாறே செய்து திரும்பிய நந்தி சர்மாவிடம் ஸ்ரீ குரு உன் உடல் முழுவதும் தங்க நிறம் பெற்றுள்ளது என்ருர். முழங்கால்களில் மட்டும் நோயின் சின்னம் தெரிவதை நந்தி சர்மா காட்டி, என் நோயின் சின்னம் முழுவதும் மறையாதுள்ளதென விண்ணப்பிக்க, உன் ஸந்தேஹத்தின் பலன் இது என்ருர் குரு. ஐயனே! அமுதத்தை நீரெனப் பருகியதற்காக அது கொல்லுமா? அறியாமையால் தொட்டதால் நெருப்பு சுடாதா? ஸந்தேகப்பட்டதால் இயல்பு மாறுமா? உமது இயல்பு இதனுல் நிறைவுற்றதா என நந்தி சர்மன் கேட்டான். (60).

श्रीगुरुरुवाच——

यद्भावो यादृशः क्वापि नान्यथा स्यात्स्वदोषतः ।
ग्रहीतुर्भात्यन्यथार्के जन्मान्धस्येव शून्यता ।। ६१

मर्त्येन मम किं भूयादिति शङ्कोदिता त्वयि ।
तत्फलं त्विदमस्त्येकः प्रतीकारोऽत्र तं कुरु ।। ६२

श्रुतिबृंहितया सिद्ध्येत् पुरुष्टुत्या त्वमर्त्यता ।
भविष्यत्यनया शुद्धिस् त्वं कृतार्थो भविष्यसि ।। ६३

तच्छ्रुत्वा दीनवाग्लोलत्सर्वापघन आह तम् ।
स्वामिन् सर्वान्तरस्थस्त्वं किं वाच्यं तेऽग्रतः प्रभो ।। ६४

लिपिमप्यक्षमो ज्ञातुं कथं स्तौमि पुरुष्टुत ।
अन्यत्किमपि कर्तुं मां यथास्वं विनियोजय ।। ६५

प्रभुः प्राह सकृद्वक्त्रान् निर्गतं न पुनर्वचः ।
ममान्तः प्रविशत्येव दन्तावलरदोपमम् ।। ६६

उक्तमेव त्वया कार्यमित्युक्त्वा भस्म मन्त्रितम्।
प्रक्षिप्य तन्मुखे प्राह स्तुहि नानाविधोक्तिभिः ॥ ६७

सोऽपि गीष्पतिवद्भूत्वा तं स्तोतुमुपचक्रमे।
प्रेमगौरवनम्राङ्गो हर्षगद्गदया गिरा ॥ ६८

''இயல்பு மாறுது. பார்ப்பவன் குருடனுனல் ஸூர்யன் சூன்யமாகத் தெரிவான். மனிதனுல் ஆவது என்ன என்று என்னிடம் உனக்கு ஸந்தேஹம் ஏற்பட்டது. அதன் பயன் இது. இது நீங்க வழி உண்டு. குரு மனிதரல்ல என்பதை வேதக் கோட்பாடுகளுடன் விளக்குவாய். அதனுல் நோய் நீங்கப் பெறுவாய் என்று குரு சொன்னுர். நந்தி சர்மனே, குரல் கம்மி உடல் நடுங்கி, ''நீர் அனைவரது உள்ளத்திலும் இருப்பவர். எழுத்தறிவு கூட இல்லாத நான் உம்மைப் புகழ்வது எப்படி? வேறு ஏதேனும் பணிபுரிய உத்தரவிடுவீர் என வேண்டினுன். குருவோ, என் சொல் பொய்ப்பதில்லை. யானையின் தந்தம் போல் வாயிலிருந்து ஒரு தடவை வெளியான சொல் மறுபடி வாயினுள்ள நுழைவதில்லை. சொன்னதைச் செய்வாய் எனக் கூறி வாயினுள் மந்த்ரித்த விபூதியைப் போட்டு இப்போது துதிப்பாய் என்ருர். அவனும் ப்ருஹஸ்பதி போன்றுகி அன்பும் பக்தியும் ஆனந்தமும் பொங்கும் குரலில் பாடினுன். (68)

साक्षात्तत्त्वमसीश त्वं कर्ता भर्ताऽव्ययो ध्रुवः।
त्वं सर्वं खल्विदं ब्रह्मास्यात्मा साक्षी जगन्मयः ॥ ६९

धिया गुणैस्त्रिधाभूतात् स्वभेदात् सत्त्वलक्षणात्।
भूतान्युद्भाव्य सर्वात्मन् विश्वं सृष्टं चराचरम् ॥ ७०

मायामयं ह्यस्वतन्त्रं वित्पात्रं कल्पितोऽत्र ना।
सोऽपि त्वन्मायया भ्रान्तो भूत्वा संकल्पवान्सदा ॥ ७१

यात्यधो विस्मृतात्मा सत्कर्मायत्तो वियोनिषु।
भ्रमते भुक्तनिरयः कल्पेऽपि वासनाहृदा ॥ ७२

स्थित्वोद्भवति कल्पादौ प्राग्वत्सत्कर्मवानपि ।
गत्वोर्ध्वं पतति क्षीण-पुण्योऽधश्चन्द्रमण्डले ।। ७३

ततोऽप्योषधिगो भूत्वा पुंसि रेतस्ततोऽप्यसौ ।
स्त्रीपुंयोगाच्छुक्ररक्तमयो गर्भत्वमेत्यहो ।। ७४

कललं प्राक् पञ्चरात्राद् बुद्बुदः सप्तरात्रतः ।
पेशी पक्षादर्बुदोऽथ भवति स्वस्थितो घनः ।। ७५

मासाङ्कुरः शिरो द्वाभ्यां ग्रीवाद्यङ्गानि च त्रिभिः ।
चतुर्भिस्त्वग्रोमनखाः पञ्चभिः षड्भिरप्यथ ।। ७६

नासास्याक्ष्यादिरन्ध्राणि सप्तभिश्चलनं च धीः ।
अष्टभिर्नवभिः पूर्णो देही भूत्वेश्वरं जगौ ।। ७७

ஈச ! நீரே அந்தப் பரம்பொருள். உலகை உண்டாக்கியவர். உலகைத் தாங்குபவர், எங்கிருந்தும் அகலாதவர், நிலைத்தவர், எல்லா மானவர், அனைத்துப் பொருளின் ஆத்மா, அனைத்தின் ஸாக்ஷி, உலகமானவர், ப்ரக்ருதியின் மூன்று குணங்களான ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களால் ஐந்து பூதங்களைத் தோற்றுவித்தவர். மாயையால் அசைவதும் அசையாததுமான உலகைப் படைத்து அதனுள் உணர்வுள்ள புருஷனாக நுழைந்தீர். அந்தப் புருஷனும் மாயைக்கு வசப்பட்டு திட்டம் (ஸங்கல்பம்) இட்டுச் செயல் புரிந்தான். பாபச் செயலால் நரகத்தில் சுழல்கிறான். கல்ப காலத்தின் இறுதியில் வினையால் கட்டுண்டுள்ளான். புண்யம் செய்து மேனிலை யடைந்தாலும் புண்யம் அழிந்ததும் சந்த்ர மண்டலத்திலிருந்து கீழே வீழ்கிறான். கீழே உள்ள தான்யப் பயிர்களில் நுழைந்து உணவாகி ஆணின் சுக்லத்தில் இடம் பெற்று ருது காலத்தில் உடலுறவால் பெண்ணின் சோணிதத்துடன் கூடிக் கருவாகி, மைபோன்று திரண்டும் கொப்புளமாகி சதையாகி இறுகிக் கடினமாகி கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து இரண்டாவது மாதத்தில் தலையும், மூன்றாவது மாதத்தில் கழுத்தும், நான்காவதில் தோலும் ஐந்தாவதில் உரோமமும் நகமும் ஆறாவதில் நவ த்வாரங்களும், ஏழாவதில்

அசைவும், எட்டாவதில் உணர்வும், ஒன்பதாவதில் நிறைவும் பெற்று, ஈசனிடம் பாடி வேண்டுகிறுன் (77).

जातो मृतः शश्वदहं वियोनीर्- मयोषिता भक्तिपराङ्मुखेन ।
अवाङ्मुखं देव जरायुवीतं मामुद्धर त्रस्तमितो भजे त्वाम् ।। ७८

एवं स्तुत्वा सूतिवायु-त्यक्तो विस्मृतलब्धधीः ।
रोरूयति जनुर्लब्ध्वा मोहितो माययेश ते ।। ७९

अनभिप्रेतमापन्न आसनोत्थानचेष्टने ।
पराधीनतया भुङ्क्ते स व्यथां वक्तुमक्षमः ।। ८०

ततोऽपि क्रीडनासक्तो वयस्यैरज्ञभावगः ।
तारुण्ये विषयासक्तो मत्तो दुर्जनसङ्गतः ।। ८१

देवमायां स्त्रियं प्रेक्ष्य तद्भावैरजितेन्द्रियः ।
भोगोत्सुकः खलोऽज्ञातकार्याकार्यो दुरध्वगः ।। ८२

वार्धक्ये स्वजनत्रस्तो रुग्णोऽस्वस्थो जराकृशः ।
श्वासकासकफाविष्टः सम्भवत्यजितेन्द्रियः ।। ८३

शतायुरपि रात्र्यार्धं हृतं शिष्टमपीदृशाम् ।
कथङ्कारं नृजन्मापि श्रेष्ठ भक्त्या विना त्वयि ।। ८४

"அடிக்கடி பிறந்தும் இறந்தும் பல இனங்களில் தோன்றியும் இன்று மறுபடி பிறக்க இருப்பவன் தலைகீழாக, தொப்புள் கொடியும் ஜவ்வும் மூடி நடுங்கி வெளியேறுகிறேன். என்னைத் தூக்கி மேனிலை பெறச் செய்வீர். அதற்காக மறுபடி வேண்டுகிறேன்." இவ்வாறு துதித்தவன் ப்ரஸவ நேரத்துக் காற்றழுத்தம் வெளியேற்றியதும் உள்ளே நிகழ்ந்ததையும் முன் நினைத்ததையும் மறந்து மாயையால் மயங்கி அழுகிறுன். பிறரை அண்டி வாழ்பவனுகி தன் வேதனையைக் கூற இயலாதவனுகி எழவோ நடக்கவோ இயலாதவனுகிறுன். பால்யத்தில் விளையாட்டில் நண்பர்களாலும் உணர இயலாத உள்ளத்துடன் ஈடுபடுகிறுன்.

யௌவனத்தில் வெளிப் பொருள் நாட்டம் மிகுந்து, மமதை அதிகமாகி கெட்டவருடன் இணைந்து தேவமாயை போன்ற பெண்ணிடம் மயங்கி இந்திரியங்களைக் கட்டுப்படுத்த இயலாதவனுகி, சிற்றின்பத்தில் ஆர்வம் கொண்டு, தக்கது தகாதது அறியாதவனுகி, கெட்ட வழியில் செல்கிருன். வயது முதிர்ந்தவன், தன் மக்களிடமே பயந்து, நோயுற்று, தன் நிலை இழந்து உடல் தளர்ந்து, புலன்களைக் கட்டுப்படுத்த இயலாதவனுகிருன். நூருண்டுகள் வாழ்ந்தாலும் பாதிப் பொழுதை தூக்கத்தில் கழிக்கிருன். பக்தியில்லாததால் மனிதப் பிறவி பெற்றும் இதனைப் பயனுள்ளதாகக் கழிக்கத் தவறுகிருன். (84).

**तत्साफल्यं नवविध-त्वद्भक्त्यासक्तसङ्गतिः ।**
**त्वयि भक्तिः साधने द्वे त्वां याचे भक्तवत्सल ।। ८५**

**भो जनात्रावतीर्णोऽयं सद्धर्मत्राणकारणः ।**
**परमात्मा परं ब्रह्म लीलाधाम्नैष नो नरः ।। ८६**

**सेव्यताममृतत्वाय योगैर्वा श्रवणादिना ।**
**भजतोऽनुभजत्येष भगवान् भक्तिभावनः ।। ८७**

**यथा तृणौघोऽग्निस्पर्शाद् भस्मसाज्जायते तथा ।**
**निःशेषाघं कृपांशेन निर्दग्धं मेऽमुना तथा ।। ८८**

**भगवन् कति ते वाच्या वाङ्मनोऽविषया गुणाः ।**
**श्रुत्या नेतीति सिद्धेपि श्रद्धावद्योगिगोचर ।। ८९**

எடுத்த பிறவியைப் பயனுள்ளதாக்க உம்மிடம் பக்தி கொள்வதே வழி. ஒன்பது வகையான பக்தி முறைகளால் உம்மிடம் மனத்தைப் பதிக்கலாம். உம் பக்தர்களின் கூட்டுறவும் உம்மிடம் பக்தியும் இரு ஸாதனங்கள். மக்களே ! நல்லறத்தைக் காப்பாற்ற பரமாத்மாவான பரப்ரஹ்மம் லீலையால் எடுத்த வடிவுடன் இங்கு தோன்றியுள்ளார். யோக வழியிலோ, சிரவணம் முதலிய பக்தி வழியிலோ அவரை அணுகுவீர். தம்மை அணுகுபவரை அவர் பக்திக்கு மதிப்பளித்து அவரே அணுகுகிருர். நெருப்பு பட்டவுடன்

*காய்ந்த புல் எரிந்து சாம்பலாவதுபோல, அவரது கருணைத் துளியால் பாபம் மீதமின்றி எரிந்து விடுகிறது. பகவானே ! உம் குணச் சிறப்புகள் வாக்கிற்கும் எண்ணத்திற்கும் அப்பாற்பட்டவை. வேதமும் அவ்வாறல்ல இவ்வாறல்ல என விளக்குகிறது. ச்ரத்தையுடன் யோகத்தால் உள்ளத்தால் உம்முடன் இணைந்தவருக்கு மட்டுமே நீர் புலப்படுவீர். (89)*

**इत्यादिना बहु स्तुत्वा पदोः प्रणिपपात सः ।**
**शिष्टं कुष्ठं तदा नष्टं विशिष्टेष्टसुतुष्टितः ।। ९०**

**तत्रैव स्थापयामास तं दत्त्वेष्टं वरं प्रभुः ।**
**सोऽप्यानीय वधूं स्थित्वा व्यरचद्विविधाः कथाः ।। ९१**

**कवितां प्रसृतां लोके तस्य ज्ञात्वा नृकेसरी ।**
**कश्चित्कविरमंस्तेयं गर्ह्योदारापि नृस्तुतिः ।। ९२**

**तद्ग्रामे केनचिन्नीतो गुरुस्तस्मै व्यदर्शयत् ।**
**उपास्यकल्लेशलिङ्गस्थं स्वं रूपं हृदर्चने ।। ९३**

**पञ्चभिस्तं नवैः श्लोकैर् नित्यवन्मानसार्चने ।**
**स्तुवन्तं श्रीगुरुः प्राह क्वास्ते कल्लेश्वरो वद ।। ९४**

**तच्छ्रुत्वा स तदा ध्यानं विसृज्य भगवान्स्वयम् ।**
**नृरूपेणावतीर्णोऽयमिति मत्वाऽन्वगाद्गुरुम् ।। ९५**

**नृकेसरिर्गुरुं प्राप्य रचितैः पञ्चभिः शुभैः ।**
**श्लोकैस्तुष्टाव तं प्राह हित्वेशं स्तौषि किं नरम् ।। ९६**

*இவ்வாறு பலவகையில் துதித்தெழுந்த நந்திசர்மா, ஸ்ரீ குருவின் திருவடிகளில் வணங்கி எழுந்தான். முழங்கால்களில் வெளிப்பட்டிருந்த குஷ்ட நோயும் மறைந்தது. இங்கேயே அவனைத் தங்கவைத்தார். அவனும் மனைவியை அழைத்து வந்து தங்கினான். ஸ்ரீ குருவைப் பற்றிப் பலவாறு பாடினான். அவனது கவிதை*

